ஸ்ரீமத்ராமாநுஜாயநம:

# ஸ்ரீமத் கம்பராமாயணம்.

## ஆரணியகாண்டம்

மூலமும்





சேற்றூர் சமஸ்தான வித்துவான

மகா-௱-ஸ்ரீ, இராமசாமிக்கவிராய ரவர்களது

கனிஷ்ட குமாரர்

உடுமலைப்பேட்டை

எம். ஆர். கந்தசாமிக்கவிராய ரவர்களும்,

ஷை ஊர்

எஸ். வெங்கடராயலு நாயுடுகாரும்

இயற்றிய

உரையும்.

இவை

சேற்றூர் சமஸ்தான வித்துவான

மு. ரா. அருணாசலக்கவிராயரால்

பரிசோதிக்கப்பெற்று

சென்னை.

அலபினியன் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1900.



இதன் விலை, ரூ 3—8—0.

லாண்டுபழகிய நண்பரும் கல்வித்திறத்திற் சிறந்தவரும் உடுமலையிற்றானே என்னோ டுறைபவருமாகிய கனம் எஸ் வெங்கடராயலுநாயுடுவையுந் துணைக்கொண்டு, தொடங்கிய பணியை முற்றுவித்தேன் இடையிடையே சில கவிகளில் ஐயப்பாடெய்துழி இராமநாதபுரம் சமஸ்தான வித்வான் ஸ்ரீமத் ரா ராகவையங்கார் அவர்கள் முதலிய சில வித்துவான்கள் உரைதந்தார்கள் அன்னோர் செய்த நன்றியை என்று மறவேன் முற்றக்கற்ற வல்லுநர் நிறைவேற்றற் குரிய இப்பணியைச் சிற்றறிவுடையேன் செய்து முடித்தமையானே ஆங்காங்குச் சிற்சில வழுக்கள் பொதிந்து கிடக்குமாயினும் நீரைப்பிரித்துப் பாலைக்கொள்ளும் அன்னத்தையொத்த நன்னயக் கவிஞர்கள், குற்றத்தை நீக்கிக் குணத்தைக்கொண்டு மகிழ்வார்களென்று நம்புகின்றேன் அசூயைக் கோட்பாடுடையார் கூற்று நிற்கக அன்னோர் வாய்வல்லபம் இறகுப்பற்றி யெழுதப் புகுந்தாலன்றே வெளிப்படும்'

சிற்சில கவிகளில் உள்ளபொருள் காண்டற்குப் பட்டபாடு மிகவும் பெரிதென்பதைக் கல்விமான்க ளறியாமற்போகார்கள். ஆயிரத்துக்கு மேற்பட்ட கவிகள் உரை யெழுதப்பட்டிருக்கின்றன இவற்றில் ஏதேனும் தவறுளதாயின் அதனையே பெரிதும் பாராட்டி மற்றவற்றின் வியப்பை மறந்து வாளாக் கழிப்பார் பலர் "குற்றமே தெரிவார் குறுமாமுனி, சொற்றபாவினும் போர்க்குறை சொல்வரால்" என்பர் ஆகலின் அன்னோர் பண்டே தவறு கூறுதல் பெரிதன்றே

இக்காண்டத்துள் முதல் 4-படலங்கட்குச் சென்னை ஸ்ரீமான் வை. மு. சடகோப ராமாநுஜாசாரியர் அவர்கள், ஸ்ரீமான் கோபாலாசாரியர் அவர்கள் முதலானவர்களால் வரையப்பட்ட உரைகள் கிடைத்தன, அவற்றை நோக்கி எனது சிற்றறிவிற்கேற்ப மாற்றுவன மாற்றி நானும், நண்பர் வெ. நாயுடுகாருமாக எழுதிவைத்த வுரையை இப்போது மன்னார்குடி காலேஜ் தமிழ்ப் பண்டிதராயிருக்கிற ம-ள-ள-ஸ்ரீ, கிருஷ்ணமாசாரியரவர்கள் அச்சாபீசு [illegible] என்னுடனிருந்து எழுதி யுதவிபுரிந்தார்கள். இவர் பெரிதாகக் கருக்கப்பாராட்டினும் அதன்பின்னர் 300-கவிகளின் உரையைப் பிரதியெழுதியனுப்புவதாகச் சொல்லிக்கொண்டுபோய் 1-மாதவரை வாளாவிருந்ததன்றி எழுதிய கடிதங்கட்கும் பதில் வரையாதிருந்தனர். இதனால் அச்சுவேலை 1-மாதம் தடைப்பட்டது. அப்பால் மன்னார்கோவிற்கு நேராய்ச்சென்று வாங்கிவந்து பிரதி யெழுதியனுப்பினேன் இவ்வாறு காலந்தாழ்ந்து செய்வித்ததால் நேர்ந்த வருத்தம் இன்னம் என்மனத்தைவிட்டுப் போயிற்றில்லை [illegible],

கடுகிலேனும் நம்புமை பாட்டியார் இவ்வுரையிலுள்ள குற்றங்களையேனும் வேறு விசேட வுரையையேனும் அன்புடன் எனக்குத் தெரிவிப்பார்களாயின் அவர்கட்கு நன்றிகூறிப் பிழையைத் திருத்தி விசேடவுரை

யை விளக்கி அடுத்த பதிப்பில் வெளியிடுத்துடன் அப்பெருபகாரிகட்கு ஏவலோர் புஸ்தகமு மனுப்புவேன்

இதனை அச்சிடுதற்குத் திரவிய சகாயத்தை விரும்பிப் பல இடங்கட்கும் யான் சென்றபோது எனக்குப் பெரிதும் உதவியாயிருந்து ஆதரித்த கல்விச் செல்வக் கனவான்களின் பெயர்திப்பவற்றை அடியில் வருமாறு விவரித்திருக்கிறேன் அவையாவன —

1 திருநெல்வேலி அனவரததானநாதர் கோயில்பரம்பரை விசவகுலதிலகரும் எனது குலாசிரியனாப் பண்பருமாகிய ம-ா-ா-ஸ்ரீ, நெல்லையப்பன் கவிராஜரவர்கள்.

2 ஷை ம-ா-ா-ஸ்ரீ, ஈசுரமூர்த்திக் கவிராஜரவர்கள்

3 ஷை யூர் வாசியும் வித்வகுல சேகரராகிய ஸ்ரீமான் ஆறுமுக நாவலரவர்கள் மாணக்கரும் வித்வசிகாமணியும் ஆகிய ம-ா-ா-ஸ்ரீ, அம்பலவாண நாவலரவர்கள்

4 திருநெல்வேலியில் தமிழை விருத்திசெய்தற்காகவே மிகவும் உழைத்துச் சரஸ்வதிவிலாசம் என்னும் புஸ்தகசாலை ஸ்தாபித்து நடாத்திவருபவரும் சித்தாந்த சாஸ்திரப் பயிற்சியிற் சிறந்தவருமாகிய ம-ா-ா-ஸ்ரீ, பாலவண்ணமுதலியாரவர்கள்.

5 மேலகரம் குறுநாலநாதர் கோயில் பரம்பரை விசவகுல திலகரும் எனது தந்தைப் திலபரம்பரை நடபாளருமாகிய ம-ா-ா-ஸ்ரீ, திரிகூடராஜப்பன் கவிராயரவர்கள்

6 ஷை யார் சகோதரர் புத்திரசிகாமணியும் எனது சகபாடியுமாகிய சுப்பிரமணியக் கவிராயரவர்கள்

7. மதுரை சேதுபதி ஞானகுல தமிழ்ப்பண்டிதரும் சித்திரக்கவி வல்லுநரும் ஆகிய ம-ா-ா-ஸ்ரீ, சண்முகம்பிள்ளை யவர்கள்

8 முறையூர் சப்டிவிஷன் ஜமீன்தார் ம-ா-ா-ஸ்ரீ, பழ சி சண்முகஞ்செட்டியாரவர்கள் சமுக வித்துவானும், கொட்டாம்பட்டி வாசியும், கலம்பகம் திரிபு யமக அந்தாதி முதலிய பனுவல் வியற்றியவருமான ம-ா-ா-ஸ்ரீ, எம். கருப்பையாப் பாவலரவர்கள்

9 காரைக்குடி வித்துவானும் தலைமைப்பாடுள்ள புராணங்களுள் ஒன்றாகக் கருதப்படும் வண்ணம் திருப்புத்தூர்த் தலபுராணமும் வேறு பனுவல்களு மியற்றிய வரும் சைவாபிமானியுமாகிய ம-ா-ா-ஸ்ரீ, ராம கு சொக்கலிங்கஞ் செட்டியார்

இந்த நவமணிகளும் எனக்குச்செய்த அருமையும் பெருமையும் என் மனத்தில் என்றும் நின்று நிலவுமென்பது திண்ணம்

இங்ஙனம் பலரோர் துணைகொண்டு பல இடத்தும் அலைந்து சிந்து சிறிதாகப் பொருளீட்டியபின் சென்னைக்குச்சென்று அச்சிடுதற்குப்படி எனது சேஷ்டசகோதரரும் சிவரகசியம் முதலிய பனுவல்களை யச்சிடு

20 ஸ்ரீ வைகுண்டம் வக்கீல் ம-ா-ா-ஸ்ரீ முத்தையாசுப்பெருமாள் பிள்ளையவர்கள்.

21 மதுரை வக்கீல் ம-ா-ா-ஸ்ரீ பி. எஸ் சுப்பிரமணிய ... ர்.

22. ஷை யூர் வக்கீல் ம-ா-ா-ஸ்ரீ பி. நாராயணையரவர்கள்.

23. ஷை யூர் ம-ா-ா-ஸ்ரீ பாஷ்யாசாரியார் அவர்கள்.

24 மூறையூர் சப்டிவிஷன் ஜமீன்தாரும் செழுநதமி ... செல்வருமாகிய கனம் ம-ா-ா-ஸ்ரீ பழ சி சண்முகஞ் செட்டியாரவர்கள் (இவர்கள் செய்த அருமை மிகவும் பெரிது).

25 காரைக்குடி வாசியும் யாணியறிந்த பரோபகாரிய ... அச்சிடுவித்த பேருபகாரியும் ஆகிய ம-ா-ா-ஸ்ரீ தி அ ரு அ ரா ... செட்டியாரவர்கள்

26 ஷை யூர் ம-ா-ா-ஸ்ரீ கா. லெ கா நாராயண செட்டியாரவர்கள்.

27 ஷை யூர் ம-ா-ா-ஸ்ரீ அ. முத்துக்கருப்பன் செட்டியார் ...

28 ஷை யூர் ம-ா-ா-ஸ்ரீ சா கா அ கா. அருணசலஞ் செட்டியார் ...

29 ஷை யூர் ம-ா-ா-ஸ்ரீ பெரி. கா கா நாராயண செட்டியாரவர்கள்.

30 தேவகோட்டை ம-ா-ா-ஸ்ரீ சுந்திரம் அருணசலஞ் செட்டியார் அவர்கள் குமாரரும் திருவாடானை கும்பாபிஷேகம் நடாத்திய சிவ ... மாகிய ம-ா-ா-ஸ்ரீ ராம - அரு - அரு - சோமசுந்தரஞ் செட்டியார் அவர்கள்.

31 ஷை யூர் சப்டிவிஷன் ஜமீன்தாரும் காளையார் கோவில் ... நடாத்திய தனவானுமாகிய ம-ா-ா-ஸ்ரீ, அள அரு. ராம. அருணசலஞ் செட்டியார் அவர்கள்

32 ஷை யூர் ம-ா-ா-ஸ்ரீ, அ பெரி அருணசலஞ் செட்டியார் அவர்கள்.

33 ஷை யூர் ம-ா-ா-ஸ்ரீ, அ ராம அண்ணாமலை செட்டியார் அவர்கள்

34 ஷை யூர் ம-ா-ா-ஸ்ரீ, மெ அரு அ சாமிநாத செட்டியார் அவர்கள்

35 தஞ்சாவூர் வக்கீல் ம-ா-ா-ஸ்ரீ, சீநிவாச பிள்ளையவர்கள்

36 கொழும்பு அட்வக்கேட் ஜனரல் ம-ா-ா-ஸ்ரீ, ஆனரபில் ராமநாத புரியாரவர்கள்

37 ஆத்தங்குடி ம-ா-ா-ஸ்ரீ, வி கண ப்பிள்ளையவர்கள்

38 ஷை யூர் ம-ா-ா-ஸ்ரீ, குப்புசாமி நாயுடுகாரு

39 சேலம் ஜில்லா காட்டுப்பாளையம் மிட்டா ஜமீன்தாரும் முன்பு சிவரகசியம் அச்சிடுதற்குப் பேருதவி செய்தவரும் எனது நெடுநாட் சிநேகரும் ஆகிய ம-ா-ா-ஸ்ரீ, கே ராஜாக் கவுண்டரவர்கள்

40 ஷை யூர் மாணத்தி வகையரா மிட்டா ஜமீன்தார் ம-ா-ா-ஸ்ரீ, என. ராஜாக்கவுண்டரவர்கள்

41 சித்தளந்தூர் மிட்டா ஜமீன்தாரும் முன்பு சிவரகசியத்துக்குதவிபுரிந்தவருமாகிய ம-ா-ா-ஸ்ரீ, எம சுப்பராயக் கவுண்டரவர்கள்

42 உடுமலைப்பேட்டை வக்கீல் ம-ா-ா-ஸ்ரீ, வி எஸ். இராமசாமியையரவர்கள்.

43 ஷை யூர் போர்டு ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் ம-ா-ா ஸ்ரீ, பி எஸ் இராமசாமியையரவர்கள்,

44 ஷை ஊர் டி பி டபினயு ஓவர்சியர் ம-ா-ா-ஸ்ரீ, இராமசசந்திரையரவாகள்
45 ஷை ஊர் வககில ம-ா-ா-ஸ்ரீ, எம மீனாட்சி சுநதரமபிளளையவாகள.
46 ஷை ஊர் ம-ா-ா-ஸ்ரீ, நா கநதசாமி செடடியாரவாகள
47 ஷை ஊர் ம-ா-ா-ஸ்ரீ, நா. ஆ சுபபிரமணியன செடடியார அவாகள
48 ஷை ஊர் ம-ா-ா-ஸ்ரீ, அ சணமுகவேலு நாடாரவாகள.

இககனவானகள செயத பேருதவிககு அவாகளை இடைவிடாது வாழ்ததுதலனறி வேறு யாது கைமமாறு செயவேன, இனி யசசிடும அடுததகாணட வுரையையும வெளிபபடுததறகு உதவிபுரிநது புகழ பெறுவாாகளெனறு நமபுகிறேன

---

## புஸதக விலையை
## முனபணமாககொடுதத கனவானகள.

1 ம-ா-ா-ஸ்ரீ திருநெலவேலி முனிசிபல சேர்மேன பி. எம கயிலாசமபிளளையவாகள
2 ,, ,, தேவஸதான கமிட்டியார என பிரமநாயகம பிளளையவாகள
3 ,, , வக்கில ஜி எஸ சுபபிரமணிய பிளளையவாகள
4 ,, , ,, டி எஸ் சுபபிரமணிய பிளளையவாகள
5 , , கொலலம டோாமில ஏஜணடு பழநிககுமாரபிளளையாகள
6 , , சிநதாமணி புசுசியநதிரசாலை என. எஸ சஙகரநாராயண பிளளையவாகள
7 ,, மேடைதளவாய திருமலையபப முதலியார அவாகள.
8 , டி எஸ முததைய பிளளையவாகள
9 ,, , வககில எ வி ராமசாமி பிளளையவாகள
10 ,, , புதூர ஜமீனதார பி எ பி எல ரெகுநாதராயரவாகள.
11 , , மாரனெரிமிட்டாதார டி எ சிவசுபபிரமணிய பிளளையவாகள
12 , , நா பெ நா மு முததுராமன செடடியார அவாகள
13 , வீரராகவபுரம வககில சுநதர சாஸதிரிகள
14 ,, கலெகடா ஆபீஸ ஹெட்கிளார்கு ஐயர் அவாகள.
15 , வணணாரபேடடை அதிகாரி சஙகரவடிவேல பிளளையவாகள
16 ,, சேரைகுளம பணணையார அமபலவாண பிளளையவாகள
17 ,, வெளளூர வீரவாகு பிளளையவாகள
18 ,, வாசுதேவநல்லூர சிவாநலல கணணுபபிளளையவாகள
19 , ஆததூர்குடி வககில சினனசசாமியையரவாகள.
20 , , ,, அணணாசாமியையரவாகள
21 ,, ,, குருநாதையரவாகள
22 ,, , ,, முததுசாமி பிளளையவாகள
23 , , காஷ்யபபா கிருஷ்ணமாசாரியாரவாகள

24 ம-ா-ா-ஸ்ரீ, தூததுககுடி புரோககர் சீதாராமையரவாகள
25 ,, ,, கோரலமில கிளாககு எம கலலகணணுப்பிளளையவாகள
26 ,, ,, வேயினற முததுபபிளளையவாகள
27 ,, ,, போஸடு மாஸடா அமிாதலிஙகம பிளளையவாகள
28 , ஸ்ரீ வைகுணடம மைனா இரிகேஷன ஓவாசியா டி சுப்பிரமணிய பிளளையவாகள
29 ,, ,, வககில சுபபராய முதலியாா அவாகள
30 ,, ,, சபமேஜிஸதிரேட தாமரஙகராஜு அவாகள
31 ,, ,, வககில முததுசாமி பிளளையவாகள
32 ,, குலசேகரபடடினம சபமேஜிஸதிரேட பி. எம சுபபிரமணிய ஐயரவாகள,
33 ,, , எஸ. சிதமபரம பிளளையவாகள
34 , ,, அ. மு மணிய பிளளையவாகள
35 , அமபாசமுததிரம வககில டி எஸ சேஷையரவாகள
36 ,, ,, ,, பாலகிருஷணையரவாகள
37 , கடையம சாவடி நாராயணசாமி பிளளையவாகள
38 ,, ,, காசிநாத பிளளையவாகள.
39 , ,, வி எஸ சஙகரராமசாமி பிளளையவாகள
40 ,, ,, சே. சிவசுபபிரமணிய பிளளையவாகள
41 ,, தெனகாசி சபமேஜிஸதிரேட காளததியபப முதலியாா அவாகள
42 ,, வககில ஆா தமபா பிளளையவாகள
43 , ,, மிராசுதாா சிதமபர குமாரசாமி முதலியாரவாகள
44 ,, , சபரிஜிஸ்தராா ஜி ராஜகோபால கிருஷணையரவாகள
45 ,, சாததூா தாசிலதாா மகாராஜ பிளளையவாகள
46 , , டி முனசிபு ஆதிநாராயணையரவாகள
47 ,, ,, வககில செலலம பிளளையவாகள
48 , ,, ,, எஸ சுபபிரமணிய நயினாா அவாகள
49 ,, ,, பகவநதராய அவாகள
50 ,, ,, , ராமசேஷ சாஸ்திரிகள
51 , புரோககா எஸ அபபாசாமி பிளளையவாகள
52 ,, ,, செகநாதையரவாகள
53 முனசிபு கோாடடு எட கிளாககு அவாகள
54 ,, விருதுபடடி ஜி. சுநதரமையரவாகள
55 , மதுரை உததம பாளையம சுபபிரமணிய முதலியாரவாகள
56 ,, , கோவிநத செடடியாரவாகள
57 ,, ,, ஆதபப செடடியாரவாகள
58 , காரைககுடி அ. ரு அ வே அவாகள
59 ,, ,, கொழுமபுராம சரவணபபெருமாளையரவாகள
60 ,, ,, சுபபிரிஙகோாடடு சுநதரம பிளளையவாகள
61 , மரபபரை மிட்டா ஜமீனதாா எஸ் சுபபராயககவுணடரவாகள
62 ,, சோமணமபடடி செஙகோடடு வேலககவுணடரவாகள
63 ,, உடுமலைபபேடடை வாததகம கருபபுசாமி செடடியாா அவாகள
64 ,, ,, கணடிராகட சபாபதி பிளளையவாகள

65 ம-ா-ா-ஸ்ரீ, 565 கெ கானிஸ்டேபில் முகமமதுகாஸிம்கான சாயபு அவாகள்
66 ,, பொனனாசசி முதது ஷணமுகக காலிஙகராயகவுணடரவாகள
67 ,, உடுமலைப்பேடடை முததுககவுணடா குமாரா பெரியணணகவுணடரவாகள
68 ,, முருஙகபபடடி மு. கெ. வெஙகடசுப்பு நாயகரவாகள
69 ,, உடுமலைபபேடடை ஆ. சுலதான அகமது ராவுததரவாகள.
70 ,, ,, ஆ திருமூாததி கவுணடரவாகள
71 ,, ,, சொ மு அ. அருணாசலஞ செட்டியாரவாகள.
72 ,, ,, அ சொ. மு ராமன செடடியாரவாகள.
73 ,, அஙகலககுறிசசி மலையாககவுணடரவாகள
74 ,, ,, சினன செலலபப கவுணடரவாகள.
75 ,, ,, குழநதைய கவுணடரவாகள
76 ,, மானுபபடடி ஆ. வி. மே இராமசாமிக கவுணடரவாகள
77 ,, கீரனூா மகிமை சேலகாதா ராவுததரவாகள.
78 ,, பூளமேடு மூததுநாயுடு குமாரா பொனனிநாயுடு அவாகள
79 ,, கணககமபாளையம கணககு ஆா ராமசாமிமுதலியாா அவாகள.
80 ,, உடுமலைபபேட்டை வ. சுபபிரமணிய நாடாரவாகள
81 ,, ,, வ திருமூாததி நாடாரவாகள
82 ,, ,, சையததிவான அசனசாயபு அவாகள

இநதக கனவானகள இதுபோலவே அடுததகாணட வுரையையும ஆதரவு செயவாாகளெனறு நமபுகிறேன நீடூழிவாழக சுபம

எம் ஆர் கநதசாமிக் கவிராயன்,

உடுமலைப்பேட்டை

ஓம்.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் கம்பராமாயணம்.

## ஆரணிய காண்டம்

மூலமும் உரையும்

## முதலாவது: விராதன் வதைப்படலம்.

### கடவுள் வாழ்த்து.

கலி விருத்தம்

பேதியாது நிமிர் பேதவுருவம் பிறழ்கிலா
வோதியோதி யுணருந்தொறு முணர்ச்சி யுதவும்
வேதமும்வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா
வாதி தேவரவ ரெம்மறிவி னுக்கறிவரோ.

இ - ள். பேதியாது - (தந்தன்மை) வேறுபடாமல், நிமிர்பேத உருவம் - தோன்றி வளர்கின்ற பல வேறுவகையினவாகிய வடிவங்களினின்றும், பிறழ்கிலா வேறாகாமலும் [அவற்றுட் கலந்து நின்றும்], ஓதி ஓதி - பலமுறை பாராயணஞ் செய்து, உணருந்தொறும் - (ஆசார்யோபதேசத்தாலே உள்ளங்கொண்ட பொருள்களை) சிந்தித்துத் தெளியும்பொழுதெல்லாம், உணர்ச்சி உதவும் - மெய்யுணர்வை மேலுமேலுங் கொடுக்கின்ற, வேதம் - வேதங்களாலும், வேதியர் - அவ்வேதங்களை யுணர்ந்த அந்தணர்களாலும், விரிஞ்சன் முதலோர் - பிரமன் முதலானோர்களாலும் தெரிகிலா - ஆராய்ந்தறியப்படாமலும் நின்ற, ஆதிதேவர் அவர் - (எல்லாப்பொருள் கட்கும்) ஆதிபகவானாகிய ஸ்ரீராமபிரானே, எம் அறிவினுக்கு அறிவு - எமது அறிவுக்கு அறியப்படுபொருள்,

கருத்து,—'அயர்வறு மமரர்க ளதிபதி' யாய்ப் 'பையர வின்னணைப் பாற்கடலுட் பள்ளிகொள்கின்ற பரஞ்சோதி' யாய் நின்ற எம்பெருமானே, 'கொதிகொள் வேலரக்கர்தங் கொடுமை' கூறிய விண்ணவர் முனிவர் மகிழ 'வருந்தல் வஞ்சகர் தந்தலை யறுத்திடர் தணிப்பென்' எனக் கூறிக் 'கசரத துரகமாக் கடல்கொள் காவ

லன் தசரதன் மதலையாய்த் தரணியில் ஸ்ரீராமனாகத் திருவவதரித்து வாழ்ந்தமையி னாலே தனிச்சிறப்பிலனா அத்தனிநாயகன் விஷயமாகத் தெய்வப்புலமைக் கம்ப நாட்டாழ்வார் செயப்புகுந்த இப்பெருங்காப்பிய மினிது முடிதற்கு, கவி, தான் வழிபடு கடவுளும் எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளுமாகிய அவனையே வாழ்த்தல் வேண்டுமாதலின், காண்டந்தோறும் அவன் விஷயமாகவே கடவுள் வாழ்த்துக் கூறப்புகுந்து, பாலகாண்டத்தில் "உலகம் யாவையும்" என்னுங் கவியால் ஸ்வரூப நிலைமையையும், "சிறகுணத்தார்" என்னுங் கவியால் பரத்துவமறியும் உபாயமும், "ஆதியந்தம்" என்னுங் கவியால் புருஷார்த்தமும், அயோத்தியா காண்டத்தில் "வானின்றிழிந்து" என்னுங் கவியால் சர்வேஸ்வரனாகிய அவன் ஜகச் சரீரகனென்பதுங் கூறி, இக்கவியில் அவனை வேதங்களாலும் பிரமன் முதலோர்களாலும் உணர்ந்தறிதற்கரிய பரவஸ்துவென்று கூறுகிறார். இவ்வாழ்த்தினால் எடுத்த கருமம் இனிது முடியுமென்பதாம்.

இவ்வாழ்த்து, புறப்பொருட் பாடாண் படலத்துக் கடவுள்வாழ்த்து என்னுந் துறைப்பாற்படும். இதனை, "காவல் கணிச்சிக் கழலோன் கைதொழு, மூவரி லொருவனை யெடுத்துரைத் தன்று" எனவும், "வையகம் வளையத் தடிப்படுத்தாய் வையகத்தார், உய்ய வுருவம் வெளிப்படுத்தாய்—வெய்ய, வடுந்திற லாழி யரவணையா யென்று, நெடுந்தகை நின்னையே யாம்" எனவும் போதரும் புறப்பொருள் வெண்பாமாலையிற் காண்க.

குறிப்பு—பேதியாது 'பேதம்' என்னும் ஆரியச்சொற் பெயரடியாகப் பிறந்த எதிர்மறைத் தெரிநிலை வினையெச்சம். இது, 'நிமிர்' என்பதைக்கொண்டு முடிகின்றது. 'நிமிர்' என்னுங் காலங்கரந்த பெயரெச்சம் 'உருவம்' என்னும் பெயர்கொண்டு முடிகின்றது. நிமிர் உருவம் வினைத்தொகை; "காலங்கரந்த பெயரெச்சம் வினைத்தொகை." இவ்வினைத்தொகைக் கிடையில் "பெயர்வினை யிடைப்பிற வரலுமா மேற்பன" என்றவாறு 'பேதம்' என்னுஞ் சொல் இடைப்பிறவரலாய் நின்று 'உருவம்' என்பதைத் தழுவி நிற்கின்றது.

நிமிர்பேதம் அல்வழித் தழாத்தொடர். இத்தொடர் "யரழ முன்னர்க் கசதப வல்வழி யியல்பு மிகலு மாகும்" என்றபடி வலிமிகாது இயல்பாயிற்று. பேதம் உருவம் என்பது "மவ்வீறொற்றழிந் துயிரீறொப்ப" 'பேதவுருவம்' என நின்றது. பேதியாது நிமிர்தலாவது தீயின் வெம்மையும் நீரின் தண்மையும்போல அவ்வப் பொருள்களின் தன்மை அவ்வவற்றினின்றும் வேறுபடாதிருத்தலாம். பேதவுருவம் என்றது தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரமென்று சொல்லப்பட்ட சராசர ரூபமாயிருக்கிற எண்பத்து நான்குலக்ஷம் யோனிபேதங்களை. உருவம் ரூபமென்னும் வடசொல்லின் திரிபு. இது, சாதியொருமைப் பெயர். 'பிறழ்கிலா,' 'தெரிகிலா' என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்களிரண்டும் 'ஆதிதேவர்' என்னும் வினைமுதற் பெயர்கொண்டன. உருவம் பிறழ்கிலாமையாவது எல்லாப் பொருள்களுள்ளும் உடலுக்குள் உயிர்போல, உயிருள்ளும் உயிராய் அந்தர்யாமியாயிருக்குந் தன்மையாம்.

"திடவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசைப்
படர்பொரு ளுருவது மாயவை யவைதொறு
முடன்மிசை யுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியு ளிவையுண்ட சுரனே."

என்றார் பெரியாரும். ஓதி ஓதி என்னும் அடுக்கு மிகுதிப் பொருளின்கண் வந்தது. வேதம் எழுதப்படாமலே ஒருவர்பாலொருவர் கேட்டுக் கற்றுப் பிறர்க்குக் கற்பித்து இவ்விதமாகவே அன்னமாய்ப் பிரான் அருமறைகளுரைத்த நாள்முதலாக நீடித்துப் பாராயணஞ் செய்யப்பட்டு வருவதென்பதும், படிக்கப்படிக்கப் புதிது புதிதாக ஞானமுண்டாக்க வல்லதென்பதும், அதனை, ஸ்வரலய பேதங்களும் உச்சரிப்புத் தவறுகளுமில்லாது கற்பதற்குப் பலதரமோதித் தெளியவேண்டுமென்பதும் விளங்க 'ஓதியோதி யுணருந்தோறு முணர்ச்சியுதவும், வேதம்' என்றார். 'தோறும்' பன்மைப்பொருளைக் காட்டுமோர் இடைச்சொல். உணர்ச்சி - மெய்ஞ்ஞானம், அஃதாவது, பிறப்பு வினைகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களானன்றி உண்மையானுணர்தல், இதனை வடநூலார் தத்துவஞானமென்பர். உணர்ச்சிக்கும் என்றது 'உணர்ச்சியுதவும்' என்றது பகவானது நிலைமையை வேதங்களே நன்கு விளக்கவல்லவையல்லனவாயின் அவ்வேதங்களைத் துணையாகக்கொண்டு அறியத் தெய்வமென்பது விளங்கற்கு, இதுபற்றியே 'வேதம் வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலர்' என்றார். மேல்வருஞ் சரபங்கர் பிறப்பு நீங்கு படலத்தும் பகவானது மகிமைகளைப் பிரமன் முதலோராலும் அறிவதருமையென்பது விளங்க "நாழி நவைதீருலகெலா மாக்களினைத்து நீக்கந்த நான்முகனார் தாமே, யூழிபலபலவு நின்றளந்தாலொன்று முலவாப் பெருங்குணத்த வத்தமனே" என்கின்றார். 'வேத' மென்பதற்குச் செய்யவேண்டிய விதிகளையும் விலக்கவேண்டிய விலக்குக்களையும் அறிவிப்பதென்பது பொருள். வேதங்களாவன தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமம் என்பன, இனி, வேதவியாசரால் வரையறைப்படுத்திய காலத்து ஓதுகின்ற இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்குமாம். வேதியர் என்பவர் வேதங்களைக் கற்றுக் கற்றபடி அவை விதிக்கின்ற நெறிக்கண்ணே ஒழுகுவோர். அவ்வேதங்களைப் பகவானையே ஆசாரியனாகக்கொண்டு முதலிற் கற்றுணர்ந்தோனாதலின் விரிஞ்சனை முதலாகக் கூறினார். ஆதிதேவர் ஆதியாகிய தேவரென விரிதலால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை, இது வடநூன் முடிபாதலின் வலிமிகாதாயிற்று, "ஆதிபகவன்" என்பதுபோல. ஆதிதேவரவர் என்றது திரிமூர்த்திகளுள் முதன் மூர்த்தியாகிய ஸ்ரீமந்நாராயணனது சப்தாவதாரமாகிய ஸ்ரீராமபிரானை "முதலாவார் மூவரே யம்மூவருள்ளும், முதலாவான் மூரிநீர் வண்ணன்—முதலாய, நல்லான்" என்றார் பெரியாரும். 'எம்' என்றது தனித்தன்மைப் பன்மை, கவிஞர் இங்ஙனங் கூறுதல் மரபு. இனி, உலகினரையுந் தம்மொடு கூட்டியுரைத்தாரெனினும் அமையும். எம்மறிவினுக்கறிவென்றது "பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்" என்ற திருக்குருகைப்பிரான் கூறியாங்கு பக்தராகிய எமக்கு அறியப்படுமவன் என்றபடி. அறியப்படுபொருளை 'அறிவு' என்றது தொழிலாகுபெயர். அரோ - அசை. இனி, பேதியாது - (தாம்) வேறுபடாதிருந்துகொண்டே, நிமிர் - நெருங்கிய, பேதவுருவம் - வேற்றுமைப்பட்ட வுருவங்கடோறும், பிறழ்கிலா - வேறுபடாத, என்றும் பொருள்கோடலாம், இப்பொருளில், தான் பலவகையாகிய சேதநா சேதநங்களோடு கலந்திருக்கையில் அவற்றின் தன்மை தன்னிடத்தே தட்டித் தன் தன்மை வேறுபடாதிருப்போன் என்பது போதருங்கருத்து. இக்கருத்துப்பற்றியே "தோயந்தும் பொருளனைத்துந் தோயாதுநின்ற சுடர்" எனச் சரபங்கர் பிறப்பு நீங்குபடலத்திற் கூறினார். "யாவையு மெவருந் தானா யவரவர் சமயந் தோறுந், தோய்விலன் புலனைந் துக்குஞ் சொலப்படா னுணர்வின் மூர்த்தி, யாவிசே ருயிரி னுள்ளால் யாதுமோர் பற்றிலாத, பாவனை யதனைக் கூடி லவனையுங் கூடலாமே" என்னும் **திருவாய்மொழிப்பாசுரத்தின் விசேஷார்த்தங்களை இங்கே விசாரித்தறிக, இனி**

'ஓதியோதி யுணருந் தோறுமுணாச்சியுதவும்' என்பதனை 'ஆதிதேவா' என்பதோடு கூட்டிமுடித்துத் தமது திருநாமங்களைப் பலமுறை யுச்சரித்துத் தியானஞ் செய்யும்போதெல்லாம் மெய்யுணர்வினை அளித்தருளுகின்ற (ஆதிதேவா) என்றுமாம் இனி, 'வேதவேதியா' என்னும் பாடத்திற்கு வேதங்களால் அறியப்படுபவரும் ஆதிதேவருமாகிய அவா எனக் கூட்டிப் பொருள்காணக 'அறிவரோ' என்பதற்கு வேதமவேதியா விரிஞ்சன முதலோராலும் அறிதற்கரிய ஆதிதேவா சிற்றறிவுடையேமாகிய எமதறிவுக்கு அறியப்படுவரோ? படார், என, அறிவா ஓ எனக் கண்ணழித்து ஓகாரத்தை எதிர்மறையாகக்கொண்டு பொருள்கூறுதலு மியலும்

## நூல்.

"நூலெனப்படுவது நுவலுங் காலை, முதலிய பொருளைமுதலிற கூறி, முதனடு விறுதி மாறுகோளின்றித், தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி, யுண்ணின் றமைந்த வுரையொடு பொருந்தி, நுண்ணிதின் விளக்க லதுவதன் பண்பே" என்றதனால் நூலினிலக்கணத்தையும், "பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச் செஞ்சொற் புலவனே சேயிழையா—வெஞ்சாத, கையே வாயாகக் கதிரே மதியாக, மையிலா நூன்முடியு மாறு," "உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப், புரத்தின் வளமுருக்கிப் பொல்லா—மரத்தின், கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் மாந் தா, மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு" என்றதனால் நூற்பெயர்க் காரணத்தையு முணர்க. இனியாசிரியர் நக்கீரதேவா 'நூலென்றசொற்குப் பொருளுரைக்கப்படும் நூல்போறலின் நூலெனப், பாவைபோல்வாளைப் பாவையென்றதுபோல நூல் போற லென்பது—நுண்ணிய பலவாய பஞ்சின் நுனிகளாற் கைவன் மகடூஉத் தன்து செய்றகை நலந்தோன்ற ஓரிழைப்படுத்தலாம் உலகத்து நூனூற்ற லென்பது, அவ்வாறு சுகிர்ந்து பரந்த சொற்பரவைகளாற் பெரும்புலவன் தனது உணர்வுமாட்சியிற் பிண்டம் படலம் ஓத்துச் சூத்திர மென்னும் யாப்பு நடைபடக் கோத்தலாயிற்று நூல் செய்தலாவது அவ்வகை நூற்கப்படுதலின் நூலெனப் பட்டது. இனியொரு சாரார் நூல்போலச் செப்பஞ்செய்தலின் நூலெனப. இனித் தந்திரமென்னும் வடமொழிப்பொருளை நூலென வழங்குதல் தமிழ்வழக்கெனக் கொள்க இது நூலென்ற சொற்குப்பொருள்" என இறையனாரகப் பொருளுரையின்கட் கூறுதலுங்காண்க

முத்திருத்தி யவ்விருந்தனைய மொய்ம்ந் கையொடுஞ்
சித்திரக்குனி சிலைக்குமரர் சென்ற ணுகினா
ரத்திரிப்பெய ரருந்தவ னிருந்த வமைதிப்
பத்திரப்பழு மரப்பொழி லுவன்ற பழுவம்.

இ-ள் சித்திரம் - அழகுபொருந்திய, குனிசிலை - வளைந்த வில்லினையுடைய, குமரர் - ஸ்ரீராமலக்குமணர்கள், முத்து - முத்துக்களை, இருத்தி - (ஒழுங்காயப்) பதித்துவைக்க, அவ் - அம்முத்துக்கள், இருந்தனைய - இருந்தாற்போன்ற, மொய்ம்நகையொடும் - நெருங்கிய பற்களையுடைய சீதாபிராட்டியுடனே, அத்திரிப்பெயர் - அத்திரியென்னுந் திருநாமத்தினையுடைய, அருந்தவன் - அரியதவத்தினையுடைய மகாமுனிவர், இருந்த - (எழுந்தருளி) யிருந்த, அமைதி - இடமாகிய, பத்திரம் பழுமரம் பொழில் உவன்ற - இலைகளையுடைய பழுத்தமரங்களையுடைய சோலைகள் நெருங்கிய, பழுவம் - வனத்தினை [ஆச்சிரமத்தினை], சென்று அணுகினார் - போய்க் கிட்டினார்கள்.

குறிப்பு—முத்து முக்தா என்னும் வடமொழிச்சிதைவு, இப்பியினின்றும் விடுபட்டதென்னும் பொருளினதென்ப. இருந்தி—இருக்க வென்னுஞ் செயவெனெச்சத்தின் விகாரம். அவ—சுட்டடியாகப்பிறந்த அஃறிணைப் பன்மைப்பெயர். இருந்தனைய—'இருந்தால் அனைய' எனவும், 'இருந்தது அனைய' எனவும் இருவகையாக விரிக்கப்படும். முற்றுகட்கூறி யாங்கு வினையெச்ச வுவமமாக விரித்தலே யாசிரியர் நச்சினார்க்கினியார்க்குக் கருத்தாதல் 'பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு" என்னுந் திருமுருகாற்றுப்படையி னுரையிற் காண்க. இனி, 'இருந்தியவிருந்தனைய' என்னும் பாடத்திற்கு—பதித்தனவாகிய முத்துக்கள் பதிந்திருந்தாற் போன்றனவென்றுவது, முத்துக்களை, இருந்தி - தாழ்வடையச்செய்து, அவிரும் - (அவற்றினுஞ் சிறந்தனவாய்) விளங்குகின்ற, தனைய - (தந்த விலக்கணத்திற்கூறிய) அளவினையுடைய என்றுவது, பொருள் கூறுக. மொய்ந்நகை—வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை, குறில்வழி யகரத்துமுன் மெலிமிகுந்தது. நகை—பற்களையுணர்த்துதலின் தொழிலாகுபெயர். ஈடு மெடுப்புமில்லாத தமது தலைவராகிய சக்கரவர்த்தித் திருமகனாரோடு திருவயோத்தி துறந்து போந்தமைக்கு இரங்காமையேயன்றி வனத்தின்கட் சேறலினும் பிராட்டி மனமகிழ்ச்சி யுடையாளென்பார் 'முத்திருத்தியவவிருந்தனைய மொய்ந்நகை' என்றார். யாவராலுமியற்றற்பாலவல்லனவாய விநோத விற்றொழிலுடைமை விளங்கச் சிலைக்குச் 'சித்திரம்' என்ற அடைமொழிதந்தார். அவ்விற்றொழிலழகு—"வைத்தவைவின் மராமர மேழுந்தொளையெய்த" எனவும், "உற்பத்தியயனே யொக்குமோடும்போதரியே யொக்கும்" எனவும் 'குடக்கதோகுணக்கதேயோ கோணத்தின்பாலதேயோ, தடத்த பேருலகத்தேயோ விசும்பதோ வெங்குந்தானே, வடக்கதோ தெற்கதோவென் றுணர்ந்திலன் மனிதன் வல்வில், இடத்ததோவலத்ததோ வென்றுணர்ந்திலன்" எனவும் பின்னர்ப்போதருஞ்செய்யுண் முக்கத்துவருகையறிக. "இமைப்பளவிலமூன்றுலகங் கொள்ளவென்னையில, அகைத்தனுவுஞ்சந்தமையுங் கண்டாய்" என்னும் பாரதச்செய்யுளையும் அதனுரையையுங் காண்க. குனிசிலை—வினைத்தொகை, இதனை இறந்தகாலத்துவிரித்துப், பெண்டிரொடு வனத்தின்கட் செலவுழிவந்த விற்கொடுஞ் செல்ல வியலுமெனக் குமரர்—குமாரர் என்பதின் குறுக்கல், இதற்கு, மன்மதனையுங் குற்சிதரூபமாக்குபவர் என மிக்க அழகினையுடையவரென்பது பொருள். சிலவலாளரேயாயினும் வழிநடக்கலாற்றாராய்ப் பூப்பட்டாற் கொப்புளிக்குந் தமது திருவடிகளான் மெள்ளமெள்ளச்சென்று சேர்ந்தாரென்பார் அவர்களது சௌகுமார்யந் தோன்றச் 'சென்றணுகினார்' என்றார், "சுகுமாரௌ மஹாபலௌ" என்றார் முனிவரும், "மைவாய்களிறொழிந்து தேரொழிந்துமாவொழிந்து வனமேமேவி, நெய்வாய வேனெடுங்கணேரிழையும் இளங்கோவும் பின்புபோக, எவ்வாறு நடந்தனை..." என்றும், "வேலநுதிபோற் பரற்பாயமெல்லடிகள் குருதிசோர விரும்பாத கானவிரும்பி...போயினாய்" என்றும் ஏடுபடுவர் கோழியர் கோன். அருந்தவமாவது—மனம் பொறிவழிபோகாது நிற்றற்பொருட்டு விரதங்களா லுண்டிசுருக்கலும், கோடைக்கண் வெயினிலைநிற்றலும், மாரியினும் பனியினும் நீர்நிலைநிற்றலு முதலியசெயல்களை மேற்கொண்டு அவற்றால் தமதுயிர்க்குவருந் துன்பங்களைப் பொறுத்துப் பிறவுயிர்களையோம்புதல், "ஓவாதிரண்டுவேவுமட்டமியும் பட்டினிவிட்டொழுக்கங்காத்த, ரூவாத்தவம்" என்றார் சிந்தாமணியினும். 'அத்திரிப்பெயரருந்தவன்' என்பதனை, அத்திரி+பெயர்அரும்+தவன் எனப்பிரித்து, அத்திரியாகிய பெயர்தலில்லாத [அழிவில்லாத] தவத்தினையுடையானென்று பொருள்கொள்ளலுமமையும். இங்கே, அருமை இன்மைகுறித்து நின்றது, "தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால், மனக்கவலை மாற்ற லரிது" என்பதிற்போல. நல்வினையானது பயனையுய்ப்,

ருக்கிற, கண் - பெருமையையுடைய, மலைபோல் - மலைபோலக் குமராபுக்கென்று பொருள்கோடலுஞ் சிறக்கும், இங்கே, மலையை யுவமைகூறியது:—அணுவினுக்கு மணுவாய்க் காண்டற்கரியனாய் நின்ற வெம்பெருமான் மலையிலக்காகவந்து சேவை சாதித்தான் என அடியார்க்கெளியனாந்தன்மை விளங்கற்கு என்க. மூக்குறும்பு — காமம் வெகுளி மயக்கமென்பன. அநாதியாய அவிச்சையும் அதுபற்றி யானென மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கிது வேண்டுமென்னும் அவாவும் அது பற்றி அப்பொருட்கட்செல்லும் ஆசையும், அதுபற்றி அதன் மறுதலைக்கட் செல்லுங் கோபமுமென வடநூலார் குற்றம் ஐந்தென்பர். அவற்றுள் அகங்காரம் அவிச்சைக்கண்ணும் அவாவுதல் ஆசைக்கண்ணும் அடங்குதலான் மூன்றென்றார் "காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன், நாமங் கெடக்கெடு நோய்" என்றார் நாயனாரும். குறும்பு என்றமையாற் காமமுதலாகிய அரண்களை யென்பப் பொருள் கோடலுஞ் சிறக்கும். குறும்பும் என்பதின்கண் உம்மை விகாரத்தாற்றொக்கது. இடையறாத ஞானயோகங்களின் முன்னர் அக்காமமுதலிய குற்றங்களைத்தும், காட்டுத்தீ முன்னர்ப் பஞ்சுத்துய்போல அழிவுறுமாதலின் 'அறவெறிந்த' என்றார். 'மூக்குறும் பற வெறிந்த வினைவான முனிவன்' என்றதினால், அத்திரியென்னுஞ் சொற்பொருளை யுய்த்துணரவைத்தார், (அ+திரி- மூன்றின்மை) 'வானமுனிவன்' என்பதற்கு —கடவுட்டன்மைபொருந்திய முனிவரெனவும், சிறந்த முனிவரெனவும், மேகம்போன்ற முனிவரெனவும் பொருள்கொள்ளுதல் இழுக்காது. உலகிற்கு அறமுதற்பொருள்களை யுள்ளவாறுணர்த்தி யுய்விக்கும் அருளுடையாராதலின் ஈண்டு அவர்போன்று, உலகமுய்தற்கும், அதற்குறுதியாகிய அறப்பொருளின்பங்கள் நடத்தற்கும் ஏதுவாகிய மேகம் முனிவர்க்கு உவமைகூறப்பட்டது. 'முனிவன்' என்பதற்கு —பகவத்தியானமுடையவனென்றும், தத்துவஞானமுடையவனென்றும், திரிகாலஞானமுடையவனென்றும் பொருள். இனி, அகப்பற்றையும் புறப்பற்றையும் முனிந்தகாரணத்தான் முனியென்பார்க்கு இது வடசொல்லென்று மறுக்க. 'அருந்தவன்' என்பது அவனென்னுஞ்சுட்டு மாத்திரையாய்நின்றது. "பல்லோர் படர்க்கைமுன்னிலை தன்மை, யவ்வயின் மூன்று நிகழுங்காலத்துச், செய்யுமென்னுங் கிளவியொடு கொள்ளா" என்பவாகலின் ஒழிந்த ஆண்பாலில் 'புகலும்' என வந்தது.

"செய்யுமென்னும் பெயரெச்சக்கிளவிக்கு, மெய்யொடுங்கெடுமே யீற்றுமிசையுகரம், அவ்விட னறிக வென்மனார் புலவர்" என்னும் தொல்காப்பியச்சூத்திரவிதிப்படி 'ஆம்' என உயிருமெய்யுங் கெட்டுவந்தது வினைத்தொகையாமெனின் அது பொருந்தாது என்னை? "முந்நிலைக்காலமுந் தோன்று மியற்கை, யெம்முறைச் சொல்லு நிகழுங்காலத்து, மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல்வேண்டும்" என்னுஞ் சூத்திரத்தாற்பெற்ற 'செய்யும்' என்னுஞ்சொல்லின் மகரங்கெடுதலானென்க. ()

குமரா நீரிவ ணடைந்ததவு கொள்கை யெளிதோ
வமரர் யாவரொடு மெவ்வுலகும் வந்தவளவே
யெமரின் யாரதவ முயன்றவர்க ளென்றுருகினன்
றமரெலாம் வரவுகந்தனைய தன்மை முனிவன்.

இ - ள் தமரெலாம்வர - சுற்றத்தார் யாவரும் (தம்பால்) வந்துசேர, அதனால், உகந்தனைய தன்மை முனிவன் - மகிழ்ந்தாற் போன்ற தன்மையையுடைய (அம்) முனிவர், (ஸ்ரீராமலக்ஷ்மணர்களைநோக்கி) குமரா - சக்கரவர்த்தி திருமகா

இ - ள் அன்ன மா முனியொடு - அத்தகைய பெருமை பொருந்திய அத்திரி மகாமுனிவருடன், அன்று அவண் உறைந்து - அற்றைநாள் அவ்விடத்தில் வசித்து, அவன் - அம்முனிவரது, அரும்பன்னி - அருமைவாய்ந்த பத்தினியாகிய, கற்பின் அருந்ததி - கற்புநிலையினையுடைய அநசூயை யென்பவளது, பணியால் - கட்டளையினால், அணிகலன் - அழகிய ஆபரணங்களும், துன்னு தூசினொடு - (மேலானதாய்) விளங்குகின்ற வஸ்திரத்துடன், சந்து - சந்தனமுமாகிய, இவை - இவற்றை, சுமந்த - (அணிந்து) தாங்கிய, சனகன் பொன்னொடு - சானகிப் பிராட்டியுடனே, ஏகி - (மற்றைநாள் அவ்வாச்சிரமத்தினின்றும் புறப்பட்டுச்) சென்று, உயர் தண்டகவனம் புகுதலும் - சிறந்த தண்டகாரணியத்துட் பிரவேசித்த வளவில்

குறிப்பு — அன்ன 'அன்' என்னும் உவம விடைச்சொல் லடியாகப் பிறந்த பெயரெச்சம், இஃதீண்டுச் சுட்டளவாய் நின்றதெனினு மேற்கும். பன்னி — பத்தி யென்னும் ஆரிய மொழிச்சிதைவு. கற்பு — பதிவிரதாதர்மம், அஃதாவது — தனது மணாளனையே தெய்வமென்றுணர்வதோர் மேற்கோள், "அதுகொண்டானிற் சிறந்த தெய்வமின்றெனவும், அவனை யின்னவாறே வழிபடுகவெனவும், அவற்கின்னவாறே குற்றேவல் செய்தொழுக வெனவும் இருமுது குரவரும் அந்தியங்கடவுள் அறிகரியாக மந்திரவகையாற் கற்பித்தலானும், அந்தணர் திறத்துஞ் சான்றோர் தேஎத்தும் ஐயர் பாங்கினும் அமரர்ச்சுட்டியும் ஒழுகுமொழுக்கந் தலைமகன் கற்பித்தலானுங் கற்பாயிற்று" இது தொல்காப்பியப் பொருளதிகார வுரையிற்கண்டது. இக்கற் பினைப்பற்றி "சாமெனிற் சாதலேயு நம்மனவன் றணந்த காலைப், பூமனும் புனைதல் இன்றிப் பொற்புடன் புலம்ப வைகிக், காமனைப் பெண்பாலுஞ் சொல்லார் கணவற்கைத் தொழுது வாழ்வார், தேமலர்த் திருவோ டொப்பார் சோர்ந்தவன் செலல் நீப்பார்" என்பர் திருத்தக்கதேவர். 'கற்பினருந்ததி' என்றதனால், பிராட்டிக்கு அநசூயை கற்பிலக்கண முபதேசித்ததாக வான்மீககிற் கூறிய விருத்தாந்தங் குறிப்பிக்கப் பட்டது. அநசூயை — அசூயையில்லாதவள், அசூயை - அழுக்காறு. கலன் — ஈற்றுப்போலி. சந்து — சந்தனமென்னும் வடசொற்சிதைவு. 'இவை' என்றதனாற் புஷ்ப முதலியன கொள்க. கலன் பூணுதலும், தூசுடுத்தலும், சந்தனம் பூசுதலும் மற்றும் அடங்கச் 'சுமந்த' வென்னும் பொதுவினையாற் கூறினார். பிராட்டியினது திருமேனியின் சௌந்தரியத்தைத் தோன்றுதபடி மறைத்தலன்றி, அவை சுமந்த காரணமாக அழகுமுன்னினுஞ் சிறந்ததாகாமையின், அவை பாரமேயாயிற் றென்பார் 'சுமந்த' என்றார். "அகிலாற் சாந்தணியாள் பூச்சாரச் செல்லாள்" எனச் சிந்தாமணியிற் கூறியவாறு பிராட்டியின் மெல்லியலுக்கு அவை பெரும்பொறை யென்று சொல்ல வேண்டாவாறே. 'சனகன் பொன்' — ஜனகமகாராஜன் பெற்றெடுத்த மகள், பொன் - இலக்குமி. பெருமாள் ஸ்ரீராமபிரானாகத் திருவவதாரஞ் செய்தருளியபொழுது பிராட்டி சீதையாகத் திருவவதரித்தமைபற்றி, 'பொன்' என்றார். சீரைசுற்றிவந்த திருமகட்கு அப்பொழுது ருஷிபத்நியாற் சமர்ப்பிக்கப் பட்ட திருக்கோலம் பாணிக்கிரகண மஹோற்சவ காலத்து ஜனகமகாராஜனால் "இயம்சீதா மமசுதா" எனச் சொல்லப்பெற்று விளங்கிய திருக்கோலத்தோ டொத்திருந்த தென்பார் 'சனகன் பொன்' என்றார்.

தண்டகவனம் — இக்ஷ்வாகுவினது கடைப்புத்திரனான தண்டகனென்பவனுடைய வருகையிற், சுக்கிரசாபத்தினாற் காடான இடம் (ச)

எட்டொ டெட்டுமெத்த மாகரி யிரட்டியரிமா

வட்ட வெங்கண்வரை யாளிபதி னறுவகையிற்

கிட்ட விட்டிடைகிடந்தன செறிந்த வொருகைத்
தொட்ட முத்தலை யயிற்றொகை மிடற்கழுவொடே

இ – ள். எட்டொடு எட்டுமா மதம் கரி – பதினாறு பெரிய மதயானைகளுக்கும், இரட்டி அரிமா - (அவ்யானைகளிலும்) இருமடங்காகிய (முப்பத்திரண்டு) சிங்கங்களும், வரை – மலையின்கண்ணுள்ள, வட்டம் வெங்கண் - வட்டவடிவாகிய கொடியகண்களையுடைய, பதினாறுயாளி - பதினாறு யாளிகளும், வகையின் - ஒழுங்காக, கிட்ட இட்டு – நெருங்கக் கோக்கப்பட்டு, இடைகிடந்தன செறிந்த - இடையேகிடந்தனவாகி (இடைவெளியில்லாது) நெருங்கியிருக்கப்பெற்ற, அயில்தொகை முத்தலை – மிக்க கூர்மையுள்ள மூன்றுதலைகளையுடையதும், மிடல் - வலிமையையுடையதுமாகிய, ஒருகைதொட்ட கழுவொடு - ஒருகரத்திற்பிடித்த சூலாயுதத்தொடும்.

குறிப்பு—எட்டொடு, ஒடு —எண்ணுப்பொருளது. கரி —கரத்தினையுடையது, கரிய நிறமுடைத்தாதல்பற்றிக் கரியென்னும் பெயர்த்தோ? எனின், இந்திரனது வெண்ணிறத்த ஐராவதமுங் கரியென நூலுட் பயின்றுவருதலுடைமையான் அங்ஙனங் கோடலியையாதெனக். இரட்டி —இரட்டியது, 'இரட்டு' பகுதி 'இ' வினைமுதற் பொருள்விகுதி. அரி —யானை முதலிய பெரிய மிருகங்களையும் அரிக்குந்திறனுடைமைபற்றி அரியெனச் சிங்கத்துக்குப்பெயர். [அரித்தல்—கொல்லுதல்], முதனிலைத்தொழிலாகுபெயர். அரிமா —அரியாகிய மா வென விரித்தலின் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. வரை —கணு, இது அதனையுடைய மூங்கிலுக்குச் சினையாகுபெயராய்ப் பின் தானியாகுபெயராய் மலைக்குவருதலின் இருமடியாகுபெயர். யாளி —துதிக்கையுடைமையால் யானைபோல்வதும், யானையைக் கொல்லவல்ல கூரிய நகமுதலியன வுடைமையாற் சிங்கம்போல்வதுமாகிய ஒருமிருகம், இஃது இப்பெற்றித்தாதலை "கொல் சினையானைபாய்க்குங் கூருகிர்த்தறுகணாளி" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளானறிக. கிடந்தன —முற்றெச்சம். 'தொட்ட' வென்னுஞ் சொல்லாற்றலான் மிக அலட்சியமாக வெளிதிற் பிடித்துக்கொண்டுவந்தானென்பது போதரும். ஏ —ஈற்றசை.

கருத்து —யானைகளொருபுறமும் யாளிகள் ஒருபுறமும் நடுவே சிங்கங்களுமாகக் கோக்கப்பட்ட திரிசூலமொன்றைக் கையிலேந்திக்கொண்டு (விராதன் எதிரே வந்தான்) என்பதாம். (௫)

செஞ்சுடர்ச்செறி மயிர்ச்சுருள் செறிந்த சென்னிய
னஞ்சு வெற்புருவு பெற்றிடை நடந்ததெனமா
மஞ்சுசுற்றிய வயங்குகிரி பாத விசையிற்
பஞ்சுபட்டது படப்படியின் மேன்முடுகியே

இ - ள் செஞ்சுடர் - சிவந்த ஒளியையுடைய, செறிசுருள்மயிர் - மிகுந்த சுருட்டைமயிர்கள், செறிந்த - நெருங்கியிருக்கப்பெற்ற, சென்னியன் - தலையையுடைய அரக்கன், நஞ்சு - விஷமானது, வெற்பு உருவுபெற்று - மலைபோன்ற வடிவத்தையடைந்து, இடைநடந்தது என- (வனத்தின்) இடையே நடந்துவந்ததென்னும்படி, மா - கரிய, மஞ்சு - மேகங்கள், சுற்றிய - சூழ்ந்து தங்கப்பெற்ற, வயங்கு கிரி - விளங்குகின்ற மலைகள், பாதம் விசையின் - கால்களின் நடைவேகத்தால் (உண்டான காற்றினால்), பஞ்சுபட்டது பட - பஞ்சுபட்டபாட்டினையடைய, படியின்மேல் - பூமியின்மேல், முடுகி - விரைந்துநடந்து.

குறிப்பு:—அரக்கரெல்லாம் செம்பட்டமயிர்த்தலையினராகவே யாண்டும் வருணிக்கப்படுதலை யுணர்க. அரக்கியரும் செம்பட்டமயிர்த்தலையினரே. "வெந்த முலபோற கூந்தலாளை" என்த திருமங்கைமன்னன் பணித்ததுகாண்க. செறிவு—மிகுதியும் நெருக்கமுமாம். செனனியன—செனியனென்ன இடை குறைந்துநின்றது. அரக்கனது கரிய நிறமும், கொடுமையும் பருத்தவுருவும் விளங்க, 'நஞ்சுவெற புருவ' என்றோ நஞ்சுதட்டுருவ' என்னும் பாடபேதத்திற்கு, விஷமானது வலிய தொருவடிவத்தைக்கொண்டு எனப் பொருளுரைத்துக்கொள்க. மா - கருமையாதலை "மாக்கடனிவந் தெழுதருஞ-செஞ்ஞாயிறு," "மாக்கழிமலர்ந்தநெய்தல," என்னும் புறப்பாட்டினைக்கண்டு தெளிக."மஞ்செனத்திரண்ட கோலமேனிய" "மஞ்சொக்கு மளகவோதி" எனப் பயின்றுவருதலுங்காண்க மா - பெருமையெனக்கொண்டு. மஞ்சு (செலவதற்கு நோவழியின்றிச) சுற்ற (மேகமண்டலத்திற்கு மேற்படவளாந்து) விளங்குகின்ற கிரியெனப் பொருள்கோடலுமென்று. பஞ்சுபட்டதுபடல அஃதாவது பொடிப்பொடியாய இலவம்பஞ்சு காற்றிற்பறந்துபோவதுபோறபோதல படி—இறைவனுற்றபடிப வமைக்கப்பட்டது, எனவே காரணக்குறியாயிற்று. வைப்பு என வழங்கலு மிதுபற்றியே. (சு)

புண்டுளங்கியன கண்கள கனலபொங்க மழைசூழ
விண்டுளங்கிட விலங்கலகள குலுங்க வெயிலும
கண்டுளங்கதிர் குறைந்திட நெடுங்கடல சுலாம்
மண்டுளங்கவய வந்தகன மனந் தளரவே

இ - ள் புண் துளங்கியன - புண்கள் விளங்குவனபோலச் (சிவந்து) ஒளி செய்கின்றனவாகிய, கண்கள் கனலபொங்க - (தன்) கண்களினின்றும் அக்கினிப் பொறிகள் பறக்க, (அதனால்), மழைசூழவிண் துளங்கிட - மேகங்கள் சூழ்ந்துள்ள வானம் நடுங்கவும், விலங்கலகள் குலுங்க - மலைகள் அசையவும், வெயிலும் - சூரியனும், கண்டு - பார்த்து, உள்ள கதிர் குறைந்திட - (தனது) மனங் குறைதலோடு ஒளிகுறையவும், நெடுங்கடல் சுலாம் - பெரியகடல் சூழ்ந்த, மண் துளங்க - பூமிநடுங்கவும், வய அந்தகன் மனம் தளர - வலிமையுடைய யமனும் மனத்தளர்ச்சியடையவும்.

குறிப்பு—புண் பாலபகாவஃறிணைப்பெயர் துலங்கியன—லகரளகரப்போலி பற்றியும், எதுகைபற்றியும் 'துளங்கியன' எனத்திரிந்து நின்றது. மழை—மேகத்திற்கு ஆகுபெயர் விலங்கல (ஊருக்கு ஒருபுறத்தே) விலகி நிற்பதென்ற காரணம்பற்றிய பெயரென்பர், இடையறாதி ஒருபுடைபடாதல மலைக்குவாயப்பென்று பரிமேலழகியார் உரையாலுந் தெரிகின்றது, 'அல' கருத்தாப் பொருள் விகுதியென்றுவது, தொழிலாகு பெயரென்றுவது இலக்கணங் காண்க. வெயில—வெம்மையெனும் பண்படியாகப் பிறந்த பெயர், அஃதீண்டுப் பண்பாகுபெயராயச் சூரியனை யுணர்த்திற்று உளகதிர்,—உளமுங் கதிருமென வும்மைத்தொகை. கடல—கள + தல, தோண்டப்பட்டது எனபது அவயவப்பொருள் கடத்தற்கருமையிற் கடலெனபாருமுளர் முற்றேல, "செய்யுமெனனும் பெயரெஞ்சு கிளவிக்கு, மெய்யொடு கெடுமே யீற்றுமிசையுகர, மவ்விடனறிதலென்மனார் புலவர்" என்னுந் தோல்காப்பியச் சூத்திர விதிபற்றிச 'சுலாம்' என நின்றது. வய—வலி, "வயவலியாகும்" எனபது சூத்திரம். இனி, வயம் அந்தகன் எனப்பிரித்து, வெற்றியையுடைய அந்தகனெனனனுமாம். அந்தகன்.—எல்லாப் பிராணிகளுக்கும் முடி

வினைசெய்வோனென்பது உறுப்புப்பொருள் 'அந்தகன் மனந்தளர' — இதில் உள்ள 'அந்தகன்மனம்' என்னும் இரண்டு எழுவாய் "உயர்திணை தொடர்ந்தபொருண் முதலாறு, மதனொடு சார்த்தினத்திணை முடிபின" என்னும் நன்னூற் பொதுவியற் சூத்திர விதிபற்றித் 'தளர' என்பதனொடு முடிந்தது (எ)

புக்கு வாளரிமுழங்கு செவியின் பொறிபுறப்
பக்கமின்னு மணிமேரு சிகரங் குழைபடச்
செக்கர்வான மழைநிகர்த்த வெதிருற்ற செருவத்
துக்கவீர ருதிரத்தி னொளிர் செச்சையினொடே.

இ-ள் வாள் அரி - ஒளிய சிங்கங்கள், புக்கு - புகுந்து, முழங்கு - பேரொலிசெய்கின்ற, செவியின்பொறி - (குகைபோன்ற) செவிப்பொறியினிடத்தே, பக்கம் உற மின்னும் - எல்லாப்பக்கங்களிலும் (ஒளி) பொருந்த விளங்குகின்ற, மணிமேருசிகரம் - அழகிய மகாமேருமலையினது கொடுமுடிகள், குழைபட - குண்டலங்களாகித் திகழவும், செக்கர் வான மழை நிகர்த்த - செவ்வானத்தையும் மேகத்தையும் ஒத்த, எதிர் உற்ற செருவத்து - எதிர்த்துப்பொருத போரினிடத்தே, உக்கவீரர் - இறந்துபட்ட வீரர்களது, உதிரத்தின் ஒளிர் - அரத்தத்தினால் விளங்குகின்ற, செச்சையினொடு - செஞ்சந்தனக் குழம்பு பூசப்பெற்றும்

குறிப்பு — விராதனது விஷம்போன்ற கரிய வுடலின்கண்ணே பூசிய அரத்தப் பூச்சு கரிய ஆகாயத்தினிடத்தே தோன்றுஞ் செவ்வானத்தினை யொக்குமாறும், அப்பூச்சினிலும் அவன் முழுகியேகுந்தோறும் உதிரத்துளிகள் மழையெனப் பெய்யுமாறும் ஆராய்ந்தறிக. செருவத்து, அத்து — சாரியை (அ)

படையொ டாடவர்கள் பாய்புரவி மாக்களிறுதேர்
நடைய வாளரிகள் கோளுழுவை நண்ணியவெலா
மடைய வாரிபர வாலசைய நேகவிதவந்
தொடையல் மாலைதுயல் வந்துலவு தோள்பொலியவே

இ-ள் படையொடு ஆடவர்கள் - ஆயுதங்களோடு கூடிய வீரர்களையும், பாய புரவி - தாவிச்செல்கின்ற குதிரைகளையும், மாக்களிறு - பெரியயானைகளையும், தேர் - இரதங்களையும், நடைய - (கம்பீரமான) நடையினையுடைய, வாள் அரிகள் - ஒளிய சிங்கங்களையும், கோள் - கொலைத்தொழிலையுடைய, உழுவை - புலிகளையும், நண்ணிய எலாம் - (மற்றும்) அகப்பட்ட எல்லாவற்றையும், அடைய வாரி - முழுவதும் வாரிக்கொண்டுவந்து, (அவற்றை), அரவால் - (மலைப்) பாம்புகளால், அசை - கட்டப்பட்ட, அநேகவிதம் - பலவகையாகிய அம்தொடையல்மாலை - அழகிய தொடுக்கப்பட்ட மாலைகள், துயல்வந்து - (தொங்கி) அசைந்து, உலவு தோள் - (வீசிநடப்பதால்) அசைகின்ற தோள்களினிடத்தே, பொலிய - விளங்கவும்

குறிப்பு — படை படுக்கவல்லது எனவே ஆயுதமாம், 'ஐ' வினை முதற்பொருள் விகுதி. மால் மதம் மயக்கமெனவுமாம். களிறு — களிப்பினையுடையது, ஆண்யானை இதன் பெண்பால் பிடியெனப்படும். பெருமித முடையானுக்குச் சிங்கம் நடையா லுவமைகூறப்படுதலின் 'நடையவாளரி' என்றார், இதனை "மாகமடங்கலு மால்விடையும் பொன்னனுகமு நாகமு நாண நடந்தான்" என்னும் பால்காண்டச்

செய்யுளானறிக "சிங்கநடப்பதுபோற் சோர்ந்து" என்றார் சிந்தாமணியிலும். இனி, நடு+ஐய, எனப்பிரித்து, இடையழகினையுடைய என்ப் பொருள் கூறுவாருமுளர், "முற்றுமற்றொரோவழி" என்பவாகலின் 'நடு' என்பதன் கண்ணுள்ள உகரங்கெட்டது. ஐய - உரிச்சொல் ஈறுதிரிந்ததெனினுமாம் "வாளெயிற்றையவரிமான்" என்றவிடத்து 'ஐய உரிச்சொல், ஈறுதிரிந்தது.' என்றார் ஆசிரியர் நச்சினார்க்கினியரும். பெண்களினது நுண்ணிய இடைபோன்று அழகிய இடையை யுடைத்தாதல்பற்றி 'நடையவாளரிகள்' என்று விசேடிக்கப்பட்டது. "இந்தக் கன்னி மதிமுழுநோக்கு எய்திச் செவ்வாய் வலியடைந்து, சக்கச் சிங்கந் தனையடுத்துத் தக்க வரவின் வலி சார்ந்து, மூங்கைக் கொடிமீனத்தலைவன் முனிவராகும் பகைவெல்லக், கற்பப் பகழி பலவேழக் கருப்புச் சிலையிற் றொடுத்தனனால்" என்னும் பிரபுலிங்க லீலைச் செய்யுளில் மாதரிடைக்குச் சிங்கத்தினிடையை யுவமைகூறியது காண்க. கோள் - வலிமையுமாம். அநேகம் — ஒன்றல்லாதது. கோத்தமாலையை நீக்கத் 'தொடையலமாலை' என்றார், ஒருபொருட் பன்மொழியுமாம். துயல்வந்து, 'வா' — துணைவினை. தோள் — 'தோஸ்' என்னும் வடசொற் சிதைவென்பர். (௯)

குன்றுகுன்றின் வென்கக் குமுறு கோப மதமா
வொன்றி னொன்றி டையடுக்கின் தடக்கை யுதவப்
பின்றுகின்ற பிலனிற் பெரியவாயி னொருபால்
மென்றுநின்று விளியாது விரியும் பசியோடே.

இ - ள். குன்றின்குன்று என - நெருங்கின மலைகள், இடை அடுக்கின் - (தன் சூலப்படையி)னிடையே யடுக்கிவைக்கப்பட்டனவாகிய, குமுறு கோபம் மதமமா - பிளிறுகின்ற சினத்தினையுடைய மதயானைகளை, ஒன்றின் ஒன்று - ஒன்றின்மேலொன்றாக, தட கை உதவ - (எடுத்துப்) பெரியகைகள் கொடுத்துக்கொண்டுவர, பின்றுகின்ற பிலனின் பெரியவாயின் - (செல்லச்செல்லப்) பின்னிடுகின்ற குகைபோன்ற பெரியவாயின்கண், ஒருபால் மென்று நின்று - ஒருபக்கத்தில் மென்றுகொண்டிருந்தும், விளியாது விரியும் பசியொடு - அடங்காமல் (மேன்மேலும்) மிகுகின்ற பசியோடுமே.

குறிப்பு — மதமா - மதத்தையுடைய மாவென்வே யானையாயிற்று. தட - உரிச்சொல், "தடவுங்கயவு நளியும்பெருமை" என்பது தொல்காப்பியம். பிலனின் என்பதில் 'இன்' ஒப்புப்பொருளது. நின்றும் என்பதன்கண்ணுள்ள உம்மை விகாரத்தாற் றொக்கது (௪0)

பன்னகாதிபர் பணுமணி பறித்த வைபகுத்
தென்ன விண்ணவர் விமானமி டையிட்டரவிடைத்
துன்னு கோளினொடு தாரகைதொடுத்த துழனிச்
சன்ன வீரமிடை மின்னுதட மார்பினொடுமே.

இ - ள். பன்னகாதிபர் - பாம்புகளுக்குத் தலைவர் (ஆகிய அஷ்டநாகங்க)ளினுடைய, பணு மணிபறித்து - படங்களிலுள்ள இரத்தினங்களைப் பிடுங்கிக்கொண்டுவந்து, அவை பகுத்தென்ன - அவ்விரத்தினங்களைப் பிரித்துப் பதித்தாற்போல, (அவ்விரத்தினங்களொடு), விண்ணவர் விமானம் - (திக்குப்பாலகராகிய) தேவர்களது விமானங்களை, அரவு இடை - (ராகுகேதுவென்னும்) பாம்பினுடலில், (தொ

கொக்கப்பட்டு), துன்னு - விளங்குகின்ற, கோளினொடு - (மற்றையேழு) கிரகங்களொடு, (கூடிய) தாரகை - நட்சத்திரங்களுக்கு, இடை இட்டு நடுவே அமைந்து, தொடுத்த - கட்டப்பட்ட, துழனி சன்னவீரம் — ஒலியினையுடைய வெற்றிமாலை, இடைமின்னு - (அணியப்பெற்று) நடுவேவிளங்குகின்ற, தடமார்பினொடும் - பரந்த மார்பினொடும்

குறிப்பு — பன்னகம் பத்+ந+கம், கால்களால் நடவாதது என்பது உறுப்புப்பொருள். ஈண்டுப் பன்னகாதிபர் என்றது வாசுகி, அனந்தன், தக்ஷன், சங்கபாலன், குளிகன், பதுமன், மஹாபதுமன், கார்க்கோடகனென்னும் அஷ்டநாகங்களை, இவற்றைக் கட்டுட்பாம்பெனவுஞ் சொல்லுப. இவை முறையே கிழக்கு முதல் எண்டிக்கில் பூமியைத் தாங்குவதன்றியே நடுவே சேஷனென்னும் நாகம் பூமியைத் தாங்குகின்றதும், இந்நவநாகமும் காசிபப்பிரமாவுக்கும் அவன் மனைவிகள் பதின்மூவருட் கத்துருவைக்கும் பிறந்தன. விண்ணவர் திக்குப்பாலகர், அவர் இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானனென்ன இவர். விமானம் தேவரூர்தி. கோள் என்றது ஈண்டு கேதுவொழிந்த மற்றை எட்டுக்கிரகங்களை, அவையாவன, ஆதித்தன், சோமன், அங்காரகன், புதன், பிருகற்பதி, சுக்கிரன், சனி, ராகு என்னுமிவை. தாரகையென்றது ஈண்டு அசுவினிமுதலிய இருபானேழ் நக்ஷத்திரங்களை. விராதன் தனது வெற்றிவிளங்க அஷ்டநாகங்களை வென்று அவற்றின் மணிகளையும், திக்குப்பாலகரை வென்று, அதற்குக் குறியாக அவர்கள் விமானங்களையும், கோளும் நாளும் தத்தநிலையிற் சரித்துத் தனக்கோர் ஏதமும் விளைக்கும் வலியும் அல்லவென்பதற் குறிகுறியாகக் கோள்களையும் அக்கோள்களொடுகூடிய நக்ஷத்திரங்களையும் கேதுவென்னும் பாம்பின் உடலில் தொடுத்து மாலையாக அணிந்துகொண்டு வந்தானென்பது கருத்து. அரவு என்பதற்கு மலைப்பாம்பென்ப பொருள்கூறுவாருமுளர். அப்பாம்பிற்குக் கோள்முதலாயவற்றைத் தொடுத்தற்குத் தக்க உரம் இல்லையாகலான் அது பொருந்தாதெனக். இனி இக்கவிக்குப் பலபலவாப் பொருள்கூறுவர் அவையெல்லாம் இதிற் சிறவாமையுய்த்துணர்க. (கக)

பம்பு செக்கரெரி யொக்குமயிர் பக்கமெரியக்
கும்ப முற்றவுயர் நெற்றியின்விசித் தொளிகுலா
மும்பருக்கரசன் மால்கரியி னோடை யெயிற்றின்
கிம்புரிப் பெரிய தோள்வளையொடுங் கிளரவே.

இ-ள். பம்பு - பரவிய, செக்கர் எரி - செவ்வானம் நெருப்பு, (என்னும் இவற்றை) ஒக்கும் - நிகர்க்கின்ற, மயிர் - (அவனது செம்பட்ட) மயிர்கள், பக்கம் எரிய - பக்கங்களில் விளங்காநிற்பவும், கும்பம் உற்ற - பானையையொத்த, உயர்நெற்றியின் - (தனது) உயர்ந்த நெற்றியிலே, விசித்து - கட்டப்பட்டு, ஒளிகுலாம் - ஒளிவீசுகின்ற, உம்பருக்கு அரசன் - தேவேந்திரனது, மால் - பெரிய, கரியின் ஓடை - (ஐராவதம் என்னும்) யானையினது நெற்றிப்பட்டமானது, எயிற்றின் - (அவ்யானையினது) தந்தங்களிற் கட்டிய, கிம்புரி - பூண்களாகிய, பெரிய தோள்வளையொடும் - பெரிய வாகு வலயங்களுடன், கிளர - விளங்காநிற்கவும்.

குறிப்பு — செக்கர் எரி செவ்வெண். இது உம்மைத்தொகையன்றுதலை "உம்மையெண்ணி னுருபுதொகல் வரையார்" என்னுந் தொல்காப்பியவிடையியற்

சூத்திரத்தின்கீழ் 'குன்றி கோபங் கொடிவிடு பவள, மொண்செங்காந்தளொக்கு நிறம்' எனப்பிற வெண்ணின்கண் உருபுதொக்கதாலெனின்,—அற்றன்று செவ்வெண் தொகையின்றி நில்லாமையின் அவற்றை யெண் ஒருசொல் விரிக்கப் படும், விரிக்கவே, குன்றி முதலாயின எழுவாயாய் நின்றனவாமென்பது" என ஆசிரியர் சேனாவரையர் கூறுமாற்றானறிக. "உற்று—உவமவாசகம் 'செப்புறழ் கொங்கை' என்றார் பிறரும்" என "நாளுற்றநம்பி" என்னும் சிந்தாமணிப்பதிகச் செய்யுளின்கீழ் உரைகூறிப் போந்தார் ஆசிரியர் நச்சினார்க்கினியர் உம்பர்- இடவாகுபெயரென்பர். ஓடை யானை நெற்றிப்பட்டம், "பொன்னோடைப் புக ரணிநுதல்" "ஒன்னார் 'யானையோடைப் பொன்கொண்டு", "நோன்பகட்டொளிதிக ழோடைபொலிய" என்பன புறநானூற்றில், வருதல்காண்க. "தூர் வட்டவெண் டிசைகளைத் தனித்தனி சுமக்கும், பார வெட்டினோ டிரண்டினி னொன்று பார்புரக் 'கப் பேர விட்டவ னுதலணி யோடையிற் பிறழும், வீரபட்டிகைபட்டன விண்ண வர் வெருவ" என்வருஞ் செய்யுளானும் 'ஓடை' நெற்றிப்பட்டமேயாதலை யுணர்க, இதனையறியாதார் ஓடை முகபடாமமென மயங்குவர். எயிற்றின் "நெடிலோ டுயிர்த்தொடர்" என்னுஞ் சூத்திரத்து 'மிகவே' என்றதனான் வேற்றுமையின்கண் இரட்டாது வந்தது, சந்தவின்பநோக்கியுமாம் "கறைமிடறணியலு மணிந்தன் றக்கறை" என்பது புறநானூற்றிலும் வருதல்காண்க. வளை தொழிலாகுபெயர், வளையலென விகுதி புணர்ந்தும்வரும். (கஉ)

தங்கு திண்கரிய காளிமை தழைந்து தவழப்
பொங்கு வெங்கொடுமை யென்பது புழுங்கியெழமா
மங்கு பாதகம்விடங்கனல் வயங்கி நிமிரக்
கங்கு பூசிவரு கின்றகலி காலமெனவே.

இ—ள். தங்கு - (விராதன் உடலிற்) பொருந்திய, திண் - வலிய, கரியகா ளிமை - கறுப்புநிறமானது, தழைந்து தவழ - செழிப்பினையடைந்து விளங்கலா லும், ([illegible]), பொங்குவெங் கொடுமையென்பது - மிகுகின்ற வெவ்விய கொடுமையென்கிற தீக்குணமானது, புழுங்கி எழ - கொதித்துக் கிளம்புதலானும், மா மங்குபாதகம் - செல்வம் மங்கிப்போதற்குக் காரணமாகிய கொடிய பாவமா னது, விடம் கனல் (இவ) வயங்கி நிமிர - விஷம் நெருப்பென்னும் இவற்றைப் போல விளங்கி யோங்கும்படி, கங்குபூசிவருகின்ற - (தாமசகுணமாகிய) இருளைப் பூசிக்கொண்டு வருகின்ற, கலிகாலம் என - கலிகாலம் (ஆம் இவனது உருவம்) என்று சொல்லவும்.

குறிப்பு— காளிமை கறுப்பு கரிய காளிமை சிறப்பினின் வந்தது, "ஒரு பொருட் பன்மொழிசிறப்பினின் வழா" என்பது சூத்திரம், சிறப்பு - செவிக்குச் சொல்லின்பந்தோன்ற நிற்றல். இனி, சிறப்பினென்றதற்குப் பொருளைச் சிறப் பித்தலினென்பப் பொருள் கூறுவாருமுளர் அச்சொற்கு அப்பொருளின்மையாமை யானும் அக்காரணத்தால் வந்தனவேல் ஈண்டு ஒருபொருட் பன்மொழியாய்வரும் பெயர்கள் ஒருபொருட் பலபெயருளடங்கு மாதலானும் 'மீமிசை' என்றல் மேலென் றே பொருளன்றி விசேடித்ததோர் சிறப்பின்மையானும், உண்டேலஃதிஃதென விதந்துகூறுவா ராதலானும், "ஒருபொருளிருசொற் பிரிவிலவரையார்" என்னுந் தொல்காப்பிய வெச்சவியற் சூத்திரத்திற்குப் 'பொருள் வேறுபாடின்றி ஒருபொ ருண்மேல் வரும், இரண்டுசொற் பிரிவின்றித் தொடர்ந்துவரின், அவற்றைக் கடி

யார்' என வுரைகூறி 'சிவந்தோங்குபெருமலை.' எனவும், 'துறுகண்மீமிசையுறு கண்' எனவும் ஆசிரியர் சேனாவரையர் உதாரணங்காட்டின ராதலானும் அது பொருளன்றென மறுக்க 'மாமங்கு' என்பதனைக் கலிகாலத்துக்கு அடையாக்கிப், பெருமைகுறைந்தவென்ப பொருள்கோடலுமாம். மங்கு மங்குலென்பதன் விகாரம் தாமதகுண மேலிட்டிருத்தலின் 'மங்குபூசிவருகின்ற' என்றார் கலிகாலத்தின் நிறத்தைக் கருமையாகக்கூறுதல் கவிமரபாதலுயத்துணர்க கரியநிறமுங் தீய செய்கையுமுடைய இவ்வரக்கனுக்கு, அஞ்ஞானமும் கொடியபாவமும் மேலிட்டிருக்கிற கலிகாலத்தை உவமித்தார் 'காளிமை தவழ, மங்குபூசி' எனக்கிடந்த சொல்லாற்றலான இராக்கதரூபமும் கலிதோஷமும், கந்தருவனுக்குங் காலத்துக்கும் இடையே வந்தனவென்வும், இவை எம்பெருமான் திருவவதாரத்தில் நிவிர்த்தியடைய முன்னைய நிலைமைக்கூடுமெனவும் பொருள்கொள்ள நிற்குமாறறிக ()

செற்ற வாளுழுவை வன்செறியதட் டிருக்குறச்
சுற்றி வாரண வுரித்தொகுதி நீவிதொடரக்
கொற்ற மேவுதிசை யானையின் மணிக்குலமுடைக்
கற்றை மாசுணம் விரித்துவரி கச்சொளிரவே

இ - ள். செற்ற - (தான்) கொன்ற, வாள் உழுவை - வாள்போலும் வரிகளையுடைய புலிகளினது, வல்செறிஅதள் - வலிய நெருங்கியதோல்கள், திருக்குஉற - அரையினக்கண் ஆடையாக விளங்கித்திருக்குமாறும், (செற்ற) வாரணம் உரி தொகுதி நீவி தொடர சுற்றி - தான்கொன்றயானைகளினது தோலின் கூட்டத்தை அங்கவஸ்திரமாகப் பொருந்துமாறும் உடுத்துக்கொண்டு, கொற்றம் மேவு திசையானையின் மணி குலம் உடை - வெற்றிபொருந்திய திக்கயங்களின் மணிக்கூட்டத்தைச் சதங்கைக்கொன்னும் உறுப்பாகக்கொண்ட, மாசுணம் கற்றைவிரித்து வரிக்கச்சு ஒளிர - மலைப்பாம்புகள் பலவற்றினைப் பிணித்தகயிற்றினை, விரித்துக்கட்டிய இடைக்கச்சு விளங்கவும்

குறிப்பு —'செற்ற' என்பது வாரணத்தொடுங் கூட்டியுரைக்கப்பட்டது, செற்றம் கோபமுமாம் வாள் உழுவை - வாள்போலும் வரியினையுடைய உழுவை வாள் - உவமவாகுபெயர், "வாளரிவேங்கை" யென்றார் பிறரும் இனி, 'செற்ற வாள உழுவை' யென்பதற்கு மற்றைப்பிராணிகளைக்கொன்ற நகங்களாகிய வாளினையுடைய உழுவையுமாம் "குறிலசெறியாலள" என்னும் சூத்திரவிதிப்பற்றி 'அதட்டிருக்குற' என்றுகறபாலது 'அதட்டிருக்குற' என நின்றது சந்தவின்பநோக்கியெனக உரி முதனிலைத்தொழிலாகுபெயர், செய்யப்படுபொருள்விகுதி புணர்ந்துகெட்டதெனினுமாம், இவ்வரக்கன் புலித்தோலை யரைக்கசைத்தும், யானைத்தோலை மேற்போர்த்தும், பாம்பைக்கச்சாகவீக்கியும், நிணமுண்ட சூலமேந்தியும் காலருத்திரன் போல விளங்கினனென்பதாம் (௧௪)

செங்கணங்கவர வின்பொருவில செம்மணிவிராய
வெங்கணங்கவல யங்களும விலங்கவிரவிச
சங்க ணங்கிய சலஞ்சல மலம்புதவளக
சங்க ணங்களு மிலங்கியகரம பிறழவே.

இ - ள். செங்கண் அங்கம் அரவின் - சிவந்தகண்களையும் (நீண்ட) உடலினையுமுடைய பாம்புகளின், பொருவு இல - ஒப்பில்லாத, செம்மணிவிராய் -

வேந்த மாணிக்கங்கள் இடையிடையேவைத்துப் பதிக்கப்பட்டு, வெங்கண் அங்க வலயங்களும் விலங்க - வெவ்விய இடங்களையுடைய அங்கத்திலே அணியப்படு கின்ற வளைகளும் (ஒளியினை) வீசாநிற்பவும், சங்கு - கூட்டமாகிய, அணங்கிய சல ஞ்சலம் - அழகிய வலம்புரியாயிரஞ்சூழ்ந்த சலஞ்சலமென்னுஞ் சங்குகள், விரவி அலம்பு - (ஒன்றுடனொன்று) தாக்கி ஒலிசெய்கின்ற, தவளம் கங்கணங்களும் இலங் கிய கரம் - வெண்மைபொருந்திய கடகங்களும் விளங்குகின்ற கைகள், பிறழ - (வீசுந்தோறும்) ஒளிசெய்யாநிற்பவும்

குறிப்பு — அரவுக்குச் செவியும் பாதமும் சிரமே கண்ணும் அங்கமுமாக இருத் தலின் 'செங்கணங்கவரவு' என்று விசேடித்துக் கூறினார், கட்செவி, பன்னகம் என்பனக்கண்டு தெளிக 'விலங்க' என்பதற்கு விளங்கவென்று பொருள்கூறுமி டத்து, லகர ளகரப் போலியென்றுரைக்க இனி, 'சங்கு அணங்கிய' என்பதற்கு வலம்புரிச்சங்குகள் வருந்திப்பெற்ற, என்னலுமாம் (கரு)

மூந்து வெள்ளிமலை பொன்னின்மலை யோடுமுரணப்
பந்து மூந்துகழல் பாடுபட வூடுபடர்வோன்
வந்து மண்ணிடை யோனெனினும் வானினிமையோர்
சிந்தை யுள்ளும்விழி யுள்ளுமுள னென்றதிறலோன்.

இ - ள் மூந்து வெள்ளிமலை பொன்னின்மலையோடு முரண - (மலைகளுடன்) முறைபடுகின்ற கைலையும் மகாமேருவும் ஒன்றோடொன்று மலைந்து மோதும்படி, (அவற்றை), பந்து மூந்து கழல் - பந்துகளாக முன்னே தள்ளவல்ல கால்கள், பாடு பட - பெருமையை யடைய, ஊடு படர்வோன் - (அவற்றின்) இடையே செல்ப வன், வந்து மண்ணிடையோன் எனினும் - பூமியில்வந்து சஞ்சரிப்பவனாயினும், வானின் இமையோர் - தேவலோகத்திலிருக்கிற தேவர்களது, சிந்தையுள்ளும் - மன த்தினிடத்தும், விழியுள்ளும் - கண்களினிடத்தும், உளன் என்ற திறலோன் - உளனென்று சொல்லப்படுகிற வலிமையையுடையவன்.

குறிப்பு — சிவபிரான் இருக்குமிடமாதலால் 'மூந்து வெள்ளிமலை' என்றார். பொன்னின்மலை' என்னுமிடத்து 'இன்' என்பது தவிர்வழிவந்த சாரியை இது வேண்டாவழிச்சாரியை யென்றும், அல்வழிச் சாரியை யென்றும் பெயர்பெறும் 'கழல்'—தானியாகுபெயர், இனி, வெள்ளிமலையும் பொன்மலையும் (மாறுபட்டு ஆடப் பெறும்) பந்து கழற்காய் இவற்றின் தன்மையை யடையவென்று கூறினும் பொரு ந்தும் இமையோர் இமையையுடையவர், இஃது இமைத்தலில்லாத தேவரை எதிர் மறையிலக்கணையாற் குறித்தது, அழுக்காறு, நல்குரவு என்பதுபோல இனி, எதிர் மறை ஆகாரம் புணர்ந்து கெட்டதெனினும் பொருந்தும் இவ்விரக்கனிடத்தேயுள்ள அச்சத்தால் தேவர்கள் இவனை எப்போதும் நினைத்துக்கொண்டிருப்பதாலும், அவர் கண்களுக்கு முன்னர் அவ்வச்சத்தால் அவன் உருவங்காணப்படுதலாலும் 'இமையோர் சிந்தையுள்ளும் விழியுள்ளுமுளன்' என்றார் (கசு)

பூத மத்தனையு மோர்வடிவு கொண்டுபுதிதென்
றேத வொத்தவுரு வத்தனுரு மொத்தகுரலன்
காதலித்தய னளித்தகடை யிட்டகணிதப்
பாதலக்கமத வெற்பிடை படைத்தவலியான்.

இ-ள். பூதம் அத்தனையும் - பஞ்சபூதங்களையும், ஓர் வடிவுகொண்டு-ஒரே உருவத்தையெடுத்து, புதிது என்று - (இவ்வுருவம்) புதுமையது என்று, ஓத - சொல்வதற்கு, ஒத்த - பொருந்திய, உருவத்தன் - வடிவத்தையுடையவன், உருமு ஒத்த குரலன் - இடியையொத்த குரலினையுடையவன், அயன்-பிரமதேவன், காதலித்து-(தான்செய்த தவத்திற்கு) மகிழ்ந்து, அளித்த - கொடுத்த, பாதம் கணிதம் - கால் என்னும் கணக்கை, கடை இட்ட - கடைசியில் வைத்த, லக்கம் மதவெற்பு - லக்ஷம் மதயானைகளை, இடைபடைத்த - தம்மிடத்தே கொண்ட, வலியான் - வலிமையையுடையவன்.

குறிப்பு—பஞ்சபூதமாவன நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்பனவாம். இவற்றை வடநூலார் முறையே பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்பர். 'அத்தனையும்' உம்மை முற்றும்மை. 'அஜன்' என்னும் வடசொல் அயன் எனச் சிதைந்து வந்தது, ஸ்ரீமகாவிஷ்ணுவினிடத்தினின்றும் தோன்றியவனென்பது உற்பத்திப்பொருள். கடையிட்ட கணிதப் பாதலக்கமெனவே ஒன்றேகால் லக்ஷம் அதாவது நூற்றிருபத்தையாயிரம், "அரையிட்ட முக்கோடி" யென்பார் மேலும். 'மதவெற்பு' எனவே யானையாயிற்று உவமவாகுபெயர். (கஎ)

சாரவந்தயல் விலங்கின மரங்கடரையிற்
பேர வன்கிரி பிளந்துக வளர்ந்திகல்பெரு
வீர வெஞ்சிலையி னேறிரு விராதனென்னுமக்
கோர வெங்கணுருமேறன்ன கொடுந்தொழிலினான்

இ-ள். விராதன் என்னும்-விராதனென்கின்ற, அ-அந்த, கோரம்-அச்சத்தை யுண்டாக்குகின்ற, வெங்கண் - கொடிய கண்களையுடைய, உருமு ஏறு அன்ன - ஆணியிடி போன்ற, கொடுந்தொழிலினான் - கொடிய செய்கையையுடையவன், சார வந்து - கிட்டவந்து, மரங்கள் - விருக்ஷங்கள், அயல் விலங்கின - பக்கத்தே விலகினவாகி, தரையில் பேர - பூமியினின்றும் பெயர்ந்துபோகவும், வன்கிரி - வலிய மலைகள், பிளந்து உக - பிளவுபட்டுப் பொடியாகவும், வளர்ந்து - வளர்ச்சியையுடையவனாகி, இகல்பெரு - போர்செய்யப் பெரிய, வீரம் - வீரச்செறிவாய்ந்த, வெஞ்சிலையின் ஏறு இரு வீரர் - வெவ்விய வில்லினையுடைய ஸ்ரீராமலக்குமணர்களிருவர் முன்னர்

குறிப்பு - விலங்கின முற்றெச்சம். நனி, இனிவிலங்கும், இனமரங்களும் தரையிற் பேரக் கிரிபிளந்துக என்றுமாம். 'விலங்கினம்' என்னும் பாடத்திற்குக் கொடுந்தொழிலினை சாரவந்து அயல் விலங்கினமென்னக் கூட்டிமுடிக்க. தரை எல்லாப்பொருள்களையுந் தாங்குதலால், ஆதாரமாயிற்று. பேர பெயர என்பதன் மரூஉ. உகவென்னும் செயவென்னெச்சம் காரியப்பொருட்டாகலின் எதிர்காலம். 'இகல்பெரு'—"இயல்பின் விகாரம்" என்னும் சூத்திரவிதிப்படி இயல்பாயிற்று. பாமரர் சாமானியர் எதிர்த்துப் போர்செய்தற்கொண்ணாத வீரர்களின்மையின் 'இகல்பெரு வீரவெஞ்சிலையினேறிரு' என்று, 'தோளினைத் தின்னுகின்ற சோம்பினைத் துடைக்கின்றான்' என்பார் மேலும். வெஞ்சிலை விருப்பத்தக்க வில்லென்றுமாம். "வெம்மை வேண்டல்"—இது தொல்காப்பியம். "வாகைசூடிய சிலையிராமன்" என்பதற்குத் திருவிடமாபாடிய கர்த்தராகிய சிவஞானயோகிகள் செய்த வுரையை இவ்விடத்து விசாரித்தறியத்தக்கது. (கஅ)

நிணத்து நிணனுமென வந்துநிறை முண்டநெடுவெண்
பல்லும் வல்லெயிறு மின்னுபகு வாய்முழை திறந்து

அல்லி புல்லுமலர் அன்னமனை யாளையொருகைச்
சொல்லு மெல்லையின் முகந்துயர் விசும்புதொடர.

இ - ள். நிணம் உண்ட - மாமிசத்தைப் புசித்த, நெடுவெண்பல்லும் - நீண்ட வெள்ளிய பற்களும், வல் எயிறும் - வலிய வக்கிரதந்தங்களும், மின்னு - விளங்குகின்ற முழைப்பகுவாய் - மலைக்குகைபோன்ற பிளந்தவாயினை, திறந்து - அங்காந்து, நில்லும் நில்லும் என வந்து - (ஸ்ரீராமலக்ஷ்மணரை நோக்கி) நில்லுங்கள் நில்லுங்கள் என்று சொல்லிக்கொண்டே வந்து, அல்லிபுல்லும் மலர் அன்னம் அனையாளை - அகவிதழ்கள் செறிந்த தாமரைப்பூவில் வீற்றிருக்கும் அன்னப்பேடைபோன்ற சீதாபிராட்டியை, சொல்லும் எல்லையில் - ஒருவார்த்தை சொல்லுமளவில், ஒருகை - ஒருகையினாலே, முகந்து - வாரியெடுத்துக்கொண்டு, உயர்விசும்பு தொடர - உயர்ந்த ஆகாயவழியாய்ச் செல்லுதலும்,

குறிப்பு — நில்லும் நில்லும் - உம்மீற்று ஏவற்பன்மை வினைமுற்று, இவ்வடுக்கு வெகுளிப்பொருளது தேவருந் தன்பெயர் கேட்டுத் திகிலடைந்து நிற்கவும், இம்மானிடர்கள் சற்றும் பயமில்லாமற் செல்கின்றனரே என்பதுபற்றி உண்டான வெகுளியாம். 'நிணமுண்ட நெடுவெண்பல்லு' மெனக்கூறிப்பின்னரும் 'வல்லெயிறு' மெனக்கூறியது, வலிய வக்கிரதந்தங்களைப் பெற்றமை தற்கென வறிக. 'மின்னு பகுவாய்' வினைத்தொகை, "முன்றுருபெண் வினைத்தொகை" என்னும் விதிபற்றி யியல்பாயிற்று. அல்லி - அகவிதழ் புல்லி - புறவிதழ் எல்லாமலர்களினுஞ் சிறப்புடைத்தாதல்பற்றித் தாமரையே ஈண்டுக்கொள்ளப்பட்டது. "பூவிற்குத் தாமரையே," "பூவெனப்படுவது பொறிவாழ்பூவே," "பூவினிற் கமலம்போலும்," என்பன காண்க. நடையும், மென்மையும் அழகும், குற்றத்தைநீக்கிக் குணத்தைக் கோடலு முதலிய சாமானியதர்மங்களால் அன்னம் பிராட்டிக்குவமைகூறப்பட்டது. இனி, 'அல்லிபுல்லு மலரன்னமனையாள்' என்பதற்கு இருணிறத்திராமபிரான் தழுவும் மெல்லியதன்மையிற் றாமரையைப்போத்த மனைவியாகிய சீதாபிராட்டியை யென்ப பொருள்கோடலுமொன்று 'அல்லி' என்பதினிகரம் ஆண்பாற் படர்க்கை விகுதி, வில்லி, மாணி என்பதிற்போல. (௧௯)

காளை மைந்தர் கண்டுகதம் வந்து கதுவத்
தோளின் வெரிநிலை யிடங்கொடு தொடர்ந்து சுடர்வாய
வாளி தங்கிய வலங்கையவர் வஞ்சனையடா
மீளு தெங்ககதி யென்பது விளம்பவவனும

இ - ள். காளைமைந்தர் - இளவெருதுபோன்ற ஸ்ரீராமலக்ஷ்மணர்கள், அது கண்டு - அங்ஙனம் அவன் பிராட்டியைத் தூக்கிச் செல்லாநிற்பதைப்பார்த்து, கதம் வந்து கதுவ - கோபம்பிறந்துவளர, தோளின் வெரிநிலை - தோளின்மேல் தரித்திருந்த வெவ்விய வில்லை, இடம்கொடு - இடத்துகையிற் பிடித்துக்கொண்டு, சுடர்வாய - தீயுமிழும் வாயினையுடைய, வாளி தங்கிய - பாணத்தைப்பெற்ற, வலங்கையவர் - வலத்துகையையுடையவராகி, தொடர்ந்து - அவ்வரக்கனைப் பின்தொடர்ந்து, [யுத்தசன்னத்தராய்], வஞ்சனையடா! - வஞ்சகத்தன்மையையுடைய அடா பேதையே! எங்கு அகதி - (நீ) எங்கே செல்கின்றாய்? மீளுதி - திரும்புவாயாக, என்பது - என்கிறவார்த்தையை, விளம்ப - சொல்ல, அவனும் - அந்த இராக்கதனும்

குறிப்பு — அழகு, கம்பீரம், வன்மை, நடைமுதலிய குணவிசேடங்களுடைமையால் காளை மைந்தர்க்கு உவமையாயிற்று. மைந்து இளமை, அழகு, வன்மை

களைக குறிப்பதோர் பண்பு. இடம - இடததைககு ஆகுபெயா. கொடு கொணடு எனபதின விகாரம. "மெலலெழுததுறழு மொழியுமாருளவே" எனனும தோல காப்பியப் புளளிமயஙகியறசூததிரவிதிபறறி 'வலஙகையவா' எனநினறது "செல வழியறிதல வழககததான" எனறு கூறினமையிற சணபகஙகோடென முடிததது உம பிறவும பொதுவிதியனறிச சிறப்பினறென உணாக. அடா இழிவு கணணிய ஆணபாலவிளி 'மீளுக' எனபதினகரம விகாரததாற றொககது (உ0)

ஆதிநானமுகன வரததினெனன தாவியகலே
னேதி யாவது மினறியுல கியாவுமிகலிற
சாதி யாதனவு மிலலையுயி ரநதனனடா
போதி மாதிவளை யுநதியினி தெனறுபுகல

இ - ள ஆதி நானமுகன வரததின- முதனமையாகிய பிரமதேவன கொடுதத வரததினாலே, எனது ஆவி அகலேன - எனது உயிர நீஙகபபெறேன, உலகுயாவும- எலலாவுலகததவரும, இகலின உம - எதிரததுப்போாசெயதாலும, எதியாவதுவும இனறி - ஆயுத மொனறுமிலலாமலே, சாதியாதன இலலை - வெலலககூடாதன (எவையும) இலலை, அடா—'உயிாதநதனன - (யான உஙகளுககு) உயிாபபிசசை கொடுததேன, மாது இவளை உநதி - இபபெணமணியை (எனனிடததில) விடடு விடடு, இனிது போதி எனறு புகல - சுகமாயபபோயச சேருமின எனறு சொலல.

குறிபபு —நானமுகன நானகுமுகஙகளையுடையவன, எனதாவி ஆறனுருபு உடைமையும உடையதும வேறாகாத ஒறறுமைக கிழமைபபொருளில வநதது' யாது எனறபாலது 'யாவது' என விரிததல விகாரமபெறறது 'யாவதும' என நினறது, "உயிாவரினுக குறளமெயவிடடோடும" எனனுஞ் சூததிரததுக கெடு மெனறது ஒடும எனற இலேசானெனக உலகு இடவாகுபெயா உம்மை இக லின எனபகொடு கூட்டியுரைததாம 'தநதனன' இதில 'அன' எனனுந தனமை யொருமைவிகுதி புதியனபுகுதல 'அடா போதி' எனபது ஒருமைப பனமைமயக கம அலலாஉம, திரிகரணததிலும விகாரமுடையாெனனபாா காயவிகாரததையும மனோவிகாரததையு முறகூறி வாககுவிகாரததையும அடைவே கூறுவான இனன ணங கூறினா ரெனனலுமாம. ஆசைப பொருணமையுணாததும மாதா எனனும உரிசசொல ஈணடு ஆவிகுதிகுனறி ஆகுபெயராயப பெணணினை உணாததிறறு.

இனி, இச செயயுளுககு, எகியா- ஆயுதபாணியே! ஆதி நானமுகன வரததின பிரமதேவன கொடுததவரததினாலே, எனது ஆவி அகலேன - எனது உயிா நீஙகப பெறேன, (நீ), வதுவும - மனைவியும, உலகு யாவம-உலகவினபமெதுவும, இனறி - இலலாமல, இகலின சாதியா - யுததததிற சாகவாபோகிறாய? தனம - அறபமா கிய, உம - உஙகளுடைய, இலலை உயிா - (எனனைககணடாலும) இலலையெனறான உயிரை, தநதனன - கொடுததேன, அடா—, மாது இவளை உநதி இனிது போதி எனறுபுகல-இபபெணமணியை (எனனிடததில) விடடுவிடடுச சுகமாயபபோயச சேருமின எனறு சொலல, என்ப பொருளகோடலுமாம.

குறிபபு —மாாிடனாகிய நீ ஆதியஙகடவுளாலே அழிவிலா ஆயுபபெறற எனனோடு போாசெயயவலலானபோல ஆயுதமுங கைபபிடிததனையே எனபான அவ விகழசசிதோனற 'எதியா' எனறான. உலகம இனபததுககு ஆகுபெயா. "அருளில

லாக இவ்வுலகமில்லை பொருளில்லார்க் கிவ்வுலக மில்லாகியாங்கு" எனபுழிப்போல. தன்னம் அறப்பம், இங்ஙனே, இடைக்குறையாயது 'தனம்' என்னின்றது மாதுக்குமணு ளனுக்கலாநு் தலைவனுக்கலானும் ஸ்ரீராமபிரானை முன்னாகக்கூறிப் பின் இளையபெ ருமாளையுஞ் சேர்க்கக் கூறலின், ஒருமையும் பன்மையும் விரவிவந்தன ஸ்திரீரத்தினத் தைத் கொடுத்தீராகலின் உங்களைக் கொன்றிலேன் என்பான் 'உயிர்தந்தனன்' என வும், 'இனிதுபோதிர்' எனவுங் கூறினன் "பதவிய மனித ரேனும் பைந்தொடி நின்னைத் தந்த, வுதவியை யுணர் சோகத்தி னுயிர்க்கொலைக் குரிய ரல்லர்" எனப் பின்னுமோர் செவியலியர்க்கன் கூறியது காண்க

இனியோரறவரை — ஆதி - முதல்வனே! நான - யான், முகன - (உங்களுக்கு) முனனே, வரத்தின் - வருதலினாலே, எனது ஆவி அகலேன - எனது உயிர் நீடி திருக்கப் பெற்றேன், உலகுயாவும - யாவரிடத்தும், எதுயாவதுவும இன்றி - காரண மொன்று மில்லாமல், இகலின் சாதியாதனவும் இல்லை - பகைத்திறங்கொண்டு செய்யாத அக்கிருத்தியங்களேயில்லை, அடா - (இவைகள் என்க்கு) அடாதனவே யாம், உயிர்தந்தனன - (என்) உயிரைக் கொடுத்து விடுகின்றேன், (என உயிரை வாங்கிப் பின்பு), மாது இப்பெண் உந்தி இனிது போதிர் என்று புகல - இப்பெண் மணியை அழைத்துக்கொண்டு சுகமாய்ப் போய்ச் சேருமின் என்றுகூற.

குறிப்பு — ஆதி அண்மைவிளி. எம்பெருமானை அடுத்திருந்து வாழவேண்டு வான் ஆதியின் அடியில் தன்னைவைத்து ஆதி நான்'என்றான் "அஹம்பிரம்மமாஸ்மி" என்னும் மாவாக்கியப் பொருள்கொண்டு 'ஆதி நான்' என்றுனெனலுமாம், இப்பொ ருளில் 'ஆதி' ஆன்னறவனே எனத் தொழிற்பெயராம் இங்ஙனம் ஞானபரமாகப் பொருள்செய்யுங்கால 'எனதாவியகலேன்' என்பதற்கு, எனது எனகிற புறப்பற றும், ஆவி எனகிற அகப்பற்றும் நீடித்திருக்கப் பெற்றேன் எனவும், 'உயிர்தந்தனன் அடா' என்பதற்கு, ஆத்ம சமர்ப்பணஞ் செய்துவிட்டேன் (ஆகலின் காரணமின் றி யாவர்மாட்டுஞ் சினந்து செய்த தீயசெய்கைகள் இனி என்னைவந்து) சாரா வெனவும் பொருள்கொள்க இனி, வரத்தின் எனதாவி அகலேன் எனக் கண ணழித்து, வருதலின் என்னபயன் கடந்து அப்புறஞ் செல்லகிலேன் என்றும், இடையிரண்டடிக்கட்குச் சருவலோகங்களையும் ஆயுதமின்றியே யுத்தத்தில் வென்ற வனுயிருந்தும் (இப்போது என்) னுயிரை உங்களுக்குக் கொடுக்கின்றேன் (தீயசெய் கைகள் செய்வார்க்கு வெற்றியென்றும் வந்து) சேரா என்றும் பொருள்கொள்ளலு மாம், இங்ஙனே, "ஈசலகுலனுடையார் கண்ணேயுள்" என புழிப்போல அடா என்று பன்மை வினைகொண்டது. முகன, முகமென்பதின் போலி, துணிபுபற்றி 'உயிர் தந்தனன்' என இறந்தகாலத்தாற் கூறினனெனக் பின்னும பலவாறு பொருளுரைக் கப்படுமே விரிவஞ்சி விடுத்தாம் (௨௧)

வீரனுஞ் சிறிது வெண்முறுவல் வெண்ணிலவுகப்
போர றிந்தில னிவன்றனது பொற்புமுரனும்
தீரு மெஞ்சியென நெஞ்சினுறு சிந்தைதெரியாப்
பார வெஞ்சிலையி னுன்னெலி படைத்தபொழுதே.

இ - ள் வீரனும் - ஸ்ரீராமசந்திரனும், வெண்முறுவல் வெண்ணிலவு - (தனது) வெண்மையாகிய பற்களால் வெள்ளிய நிலவினை, சிறிது உக - சிறிது வீசும்படி புன்னகைபுரிந்து, போர அறிந்திலன - (இவன்) போர் செய்யுமுறை அறிந்தவன அல்லன், இவன தனது பொற்பும் முரணும் - இவனுடைய பொலிவும் வலிமையும், எஞ்சி தீரும் என-குறைவுபட்டழிந்துவிடும் என்று, நெஞ்சின உறுசிந்தை தெரியா-

(தன்) மனத்தினிடத்தே பொருந்திய ஆலோசனையினாலறிந்து, பாரம் வெஞ்சிலையின்-கனத்த வெவ்விய (கோதண்டமென்னும்) வில்லினுடைய, நாண் ஒலிபடைத்த பொழுதே - நாணோசையை விளைத்த அக்கணத்திலேயே.

குறிப்பு — புன்னகை புரியும்பொழுது வெளியே தோன்றும் பற்களின் ஒளி நிலவுபோலிருத்தலின் 'எறித்த வெண்ணிலவுக' என்றார். 'வெண்ணிலவுக' என்றமையால் நிகழ்ந்த உருவகத்தினைப் பூர்த்திசெய்ய வீரனை ஸ்ரீராமசந்திரனென்று கூறினும். (உஉ)

இலைகொள் வேலட லிராமனெழு மேகவுருவன்
சிலைகொ ணாணெடிய கோதையொலி யேறுதிரைநீர்
மலைக ணீடுதல நாகாபிலம் வானமுதலா
முலக மேழுமுரு மேறென வொலித்துரறவே.

இ-ள். எழுமேகம் உருவன் - (கருக்கொண்டு) எழுகின்ற மேக நிறமுடையனாகிய, இலைகொள்வேல் - அரசிலைபோலுந் தலைவடிவுகொண்ட வேலினையும், அடல் - வலிமையையுமுடைய, இராமன் - ஸ்ரீராமபிரானது, சிலைகொள் - கோதண்டத்தின்கண் ஏறிட்ட, நாண்நெடியகோதை ஒலி ஏறு - நாணாகிய நீண்ட கயிற்றினது பேரொலியானது, திரை நீர் மலைகள் நீடுதலம் - அலைகளையுடைய சமுத்திரம் புடைசூழ்ந்ததும் மலைகளை உபாந்திருக்கப்பெற்றதுமாகிய பூலோகமும், நாகாபிலம் வானம் முதல் ஆம் உலகம் ஏழும் - சாபசாதியார் வசிக்குமிடமாகிய பாதாளலோகமும் சுவர்க்கலோகமு முதலாகிய ஏழுலகங்களிலும், உரும் ஏறு என - இடியேறுபோல, ஒலித்து உரற - ஒலிசெய்து முழங்காநிற்ப.

குறிப்பு — இலை வெற்றிலையுமாம். வேல் வெல்வது, இந்த முதனிலை நீண்டு கருவிப்பொருள் விகுதிபுணர்ந்து கெட்டுநின்ற தொழிலாகுபெயராகக் காரணக்குறியாயினது "வென்றவாளின் மண்ணோடொன்ற" என்றுபிறருமியம்ப, "மாறுசூடிய வாண்மங்கலமும்" என்று பாடாண்டிணையிலுங் கூறியவாற்றின் வாகைத்திணையிற் கூறாது "பெரும்பகை தாங்கும் வேலினானும்" என்று வேறுபடுத்தே வாகைகூறியது, காத்தற்றொழில் பூண்டமாயோன் ஐம்படையும் போலாது அழித்தற்றொழிலோர்க்கே யுரித்தாய முக்கட்கடவுள் முருகனுங் கூறுமேற்றி வெற்றிபெறுதற்குச் சிறந்த தென்பது பற்றியென்பர். இனியுடன் கூறினமையால் எண்மை 'இலைகொள் வேலட லிராமன்' என்றார். அடல் தொழிலாகுபெயர். இராமன் - யாவர் மனத்தையும் ரமிப்பிக்கச்செய்பவன் [இன்பமெய்தும்படி செய்பவன்] என்பதுபொருள். மேகம் மழைபொழிதல்போலச் சரமழை பொழியும் ஆற்றல் உடையான் என்பது விளங்க, 'எழுமேகவுருவன்' என்றார். இனி, எழுமேக உருவன் சிலை எனப் பிரித்து ஏழுமேகத்தின் உருவினைக்கொண்ட வலியசிலை என்றுமாம் "சுற்றணிகொடுஞ்சிலை மேகந் தாவிய" என்ச் சிந்தாமணியிலும் சிலையை மேகமென்பப் புனைந்துரைத்தது காண்க. அருகு நாணாதலின் 'நாணெடியகோதை' என்றார். இலக்கணை வழக்குப்பற்றி 'உருமேறு' என்றாம்போல 'ஒலியேறு' என்றார். இனி, 'ஏறுதிரை' எனக்கொண்டு எறிகின்ற அலைகளென்றுமாம். 'நாகா' என்பதை வானத்தொடுங்கூட்டி அதற்குத்தேவர் என்று பொருள் கூறுதலுமியையும். 'தலம் நாகா பிலம் வானம்' என்னும் மூவுலகங்களையுங் கூறி மற்றையுலகங்களை 'முதலாம்' என்ற சொல்லாற்பெறவைத்தார். உலகமேழாவன, பூலோகம், புவலோகம், சுவலோகம், ஜனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம் என்னும் மேலுலகேழும், அதலம், விதலம், சுதலம், தராதலம், இரசாதலம், மகாதலம், பாதாளமென்னுங் கீழுலகேழுமாம். (உ௩)

வஞ்சகக் கொடிய பூசைநெடு வாயின்மறுகும்
பஞ்சரக் கிளியெ னகத்தறு பாவையைவிடா
நெஞ்சு நெக்கினெ னெனச்சிறிது நின்றுநினையா
அஞ்ச னக்கிரிய னானெதி ரரக்கனழலா.

இ-ள். அரக்கன் - அவ்விராதன், வஞ்சகம் கொடிய பூசை நெடுவாயின் மறுகும் - வஞ்சனைத்தன்மையையுடைய கொடிய பூனையினது பெரிய வாயினகத்தே (அகப்பட்டு) மனங் கலங்குகின்ற, பஞ்சரம் கிளி என அகத்து உறு பாவையை விடா - கூட்டினகத்தே இருந்த கிளியைப்போல வாயில் அகப்பட்டு வருந்தி அழுகின்ற சீதாபிராட்டியைத் (தரையின்கண்) விடுத்து, நெஞ்சு உளுக்கினன் என - மனஞ் சிதைந்தவனைப்போல, சிறிது நின்று நினையா - சற்றே நின்று ஆலோசனைசெய்து, அஞ்சனம் கிரி அன்ன எதிர் அழலா - மைம்மலைபோன்ற ஸ்ரீராமபிரானுக்கு முன்னே (வந்துநின்று) கோபித்து.

குறிப்பு — பூனை பிறரறியாவாறு பதுங்கியிருந்து சமையங்கண்டு கிளியைக் கவர்ந்துகொண்டு செல்லுதல்போல விராதனும் பிராட்டியைக் கள்ளத்தனமாகக் கவர்ந்துகொண்டு ஆகாயமார்க்கமாகச் செல்லத் தலைப்பட்டானென்று உவமையை விரித்துப் பொருள்கூறுக. அருமைபெருமை பாராட்டிப் பாலூட்டி இன்மொழிபயிற்றிக் கூட்டிலடைத்து ஆதரித்து வளர்க்கப்பட்டுவரும் கிளி தன்னிலைமை நாடாது ஆதரிப்போனை மகிழ்வித்துத் தானும் மகிழ்வுடன் அவனிடத்தே யிருத்தலை விழையுமாதலின் அதுபோன்று பிராட்டியும் தான் சுதந்தரமுறுவதை மறந்து தன்நாயகனில்லின்கண் வாழ்க்கைப்பட்டிருந்து தன் நாயகனுடைய அன்புடன் ஆதரிக்கப்பெற்றுத் தன் நாயகனை மகிழ்வித்துத் தானும் மகிழ்ந்து தன் நாயகனைப் பிரியாதிருந்து வாழ்பவள் என்பது விளங்கப் பிராட்டிக்குப் பஞ்சரக்கிளியை உவமைகூறினார். பாவை, சித்திரப்பதுமை, அப்போன்றவருக்கு ஆகுபெயர். நிறமும், கம்பீரத்தோற்றமும், பெருமையும்பற்றி 'அஞ்சனக்கிரி' ஸ்ரீராமபிரானுக்கு உவமையாயிற்று. அஞ்சனமென்னுமொரு மைம்மலை பொன்னிலில்லாமையால் அஃது இல்பொருளுவமை. 'அன்னான்' என்பது 'அனான்' என இடைக்குறையாய் நின்றது. அஞ்சனம் சிறிதுகொண்டவளவில் உலகின் மறைந்துகிடக்கும் நிதியெல்லாந் தெரியுமெனின் அஞ்சனமே திருவுருவான எம்பெருமானுக்குத் தெரியாததென்னவென்றுவைக்கற்பாற்றன்றென்பார் 'அஞ்சனக்கிரியனான்' என்றார். சர்வஞ்ஞனென்றபடி. 'அரக்கன்' ராக்ஷஸ் என்னும் வடமொழிச் சிதைவென்பார். (உச)

பேய்மு கம்பிணி யறப்பகைஞ ரொட்டினுதிரந்
தோய்மு கத்தத னகத்தது சுடாக்குதிரையின்
வாய்மு கத்திடை நிமிர்ந்துவட வேலைபருகுந்
தீமு கத்திரி சிகைப்படை திரித்தெறிபவே

இ-ள். பேய்முகம் பிணி அற - பேய்களினிடத்தேயுள்ள (பசியாகிய) நோய் நீங்குமாறு, பகைஞர் உதிரம் பட்டபின் தோய்முகத்தது - விரோதிகளினது இரத்தத்திலே விருப்பத்தொடு தோய்ந்த நுதியினையுடையதும், கனத்தது - பாரமுடையதும், சுடாக்குதிரையின் - வடவையென்னும் பெண்குதிரையினது, வாய்முகத்திடை நிமிர்ந்து - வாயினிடையே தோன்றி வளர்ந்து, வடம் வேலை பருகும் - வட்டமாகிய கடல்நீரைக் குடிக்கின்ற, தீமுகம் திரிசிகைப்படை - நெருப்புப்போன்ற

நெருப்பினைத் தனக்கட்கொண்டிருக்கிற மூன்றுதலைகளையுடையதுமாகிய சூலப்படையை, திரித்து எறிய - சுழற்றி (ஸ்ரீராமபிரான்மீது) விசையுடன் விடுக்க.

குறிப்பு — பகைஞரைக் குத்தி அவர்களுடைய கவந்தங்களைப் பேய்கள் தின்று இரத்தவெள்ளத்தைக் குடித்துப் பசிநோய் தணியும்படி கொடுத்தலால் உதிரந்தோய்ந்த வேலெனக. பிணி-பீடித்தல்செய்வது 'வலி' என்பதும் இப்பொருட்டே. 'அற' என்னும் செயவெனெச்சம் காரியப்பொருட்டாகலின் எதிர்கால முணர்த்தும். 'பகைஞர்' பிரிவினையுடையார், 'ஞ்' பெயரிடைநிலை. பகை - பகு + ஐ பிரிவினையென்பது பொருள். பகையெனவே விரோதிகளாயின் அங்குத் தொழிலாகுபெயரெனக. பகைவரைக்கோறலில் அரக்கனுக்கிருக்கும் விருப்பை அவன் படைமேலேற்றி, 'பெட்பினுதிரந்தோய்முகத்தது' என்றார். 'சினஞ்சுகிர்வேல்' 'குருதி கொப்புளிக்கும்வேல்' எனப் பிறாண்டும் வருதல்காண்க. 'முகத்தது, கனத்தது' இவற்றைக் குறிப்பு முற்றெச்சமாக்கிக் கூறுவாருமுளர். வடவையென்னும் பெண்குதிரையின் முகத்துநின்றும் வெளிப்படுந் தீ கடனீரை மழைமுதலியவற்றால் மிகாது வற்றச்செய்கின்றது என்பது நூற்கொள்கை. இனி வடவைகுதிரையின்வாய் முகத்திடை நிமிர்ந்து வேலைபருகுந்தீ, எனக்கொண்டு கூட்டியுரைப்பாருமுளர். அங்கு 'படவா' என்னும் வடசொற்சிதைவாகிய 'வடவை' என்பது கடைகுறைந்து 'வட' என்னுமா, திரியாய் நின்றதெனக. (உ௬)

திசையும் வானவரு நின்றதிசை மாவுமுலகு
மசையு மாலமென வன்னயிலின் மின்னிவரவும்
வசையின் மேருமுதன் மால்வரைக ளேழினவலிசால்
விசைய வார்சிலை யிராமனொரு வாளிவிடவே.

இ - ள். அன்ன அயில் - அந்தச் சூலப்படையானது, திசையும் - எட்டுத் திசைகளும், வானவரும் - (அவ்வத்திசைகளிலுள்ளார்) அஷ்டதிக்குப் பாலகர்களும், திசைநின்றமாவும் - அவ்வத் திசைகளிலேநின்ற அஷ்டகஜங்களும், உலகும் - பல லோகங்களும், அசையும் - நடுங்குதற்குக் காரணமாகிய, ஆலம் என - ஆலகால மென்னும் விடத்தினைப்போல, மின்னிவரலும் - மின்னிக்கொண்டுவந்த வளவில், இராமன் - ஸ்ரீராமபிரான், வசையில் - குற்றமில்லாத, மேரு (இன்)—மாமேருமலையைப்போலவும், முதல்மால் வரைகள் ஏழின் - சிறப்புவாய்ந்த சகுல பர்வதங்களைப் போலவும், வலிசால் - வலிமைமிகுந்த, விசையவார்சிலை - வெற்றியைத்தருகின்ற நீண்ட கோதண்டத்தின், ஒருவாளிவிட - ஒரு ஒப்பற்ற கணையைத் தொடுத்துவிட்டவுடனே.

குறிப்பு — திசை கிழக்குமுதல் வடகிழக்கிறுதியாக வுள்ளன. அஷ்டதிக்குப் பாலகராவாரிவரென்பதைப் 'பன்னகாதிபர்' என்னும் கக-ம் செய்யுளிலுரைக்கக் கூறினும் அஷ்டதிக்கயங்களும் அவற்றின் பிடிகளும், ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீபம், என்பனவும், அப்பிரமை, கபிலை, பிங்கலை, அநுபமை, தாமிரபருணி, சுப்பிரதந்தி, அஞ்சனை, அஞ்சனாவதி என்பனவுமாம். முன்னும் பின்னும் 'திசையும்' 'திசையுமாவும்' எனக் கூறியதனுன், அவற்றிற்கேற்ப, நடுநின்ற 'வானவர்' என்பதற்கும் திசைக்காவல ரென்றுரைக்கப்பட்டது. இனி, 'திசைநின்ற' என்பதனை இடைநிலைத் தீவகமாகக் கொண்டு 'வானவ' ரோடுங் கூட்டியுரைத்தலுமாம். அசையும் என்னும் காரியப்பொருளினின்றபெயரெச்சம் 'ஆலம்' என்னுங் காரணப்பெயர்கொண்டது. ஆலம் 'ஹலா

ஹாலம்' என்னும் வடசொற்சிதைவு. அது, திருப்பாற்கடல் கடைந்தகாலத்தில் அதிலிருந்து தோன்றியது, பயங்கரமாகக் கடுகியெழுந்த ஹாலா ஹாலம் சிவபிரானால் உண்ணப்பட்டடங்கியதுபோல மிகக்கொடிய விராதனது முத்தலைச் சூலமும் இராமபாணத்தால் எதிர்ப்புண்டொடுங்குமெனக் அன்ன வயின் எனப்பிரித்து அவ்விடத்தில் என்ப் பொருள்கொண்டு 'அச்சூலம்' என வருவித்துரைத்தலும் பொருந்தும். மால்வரைகள் ஏழாவன கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலம் என்பனவாம். விஜயம் என்னும் வடசொல் விசயமென்றதிரிந்து, விசையம் என மொழியிடைப் போலிபெற்று நின்றது. (உசு)

இற்ற தின்றொடி வரக்கர்குல மென்றுபகலே
வெற்ற விண்ணினிடை நின்றுநெடு மீன்விழுவபோற்
சுற்ற மைந்தசுட ரெஃகமி ரண்டுதுணியா
வற்ற கண்டமவை யாசையின் றந்தமுறவே

இ-ள். இ அரக்கர் குலம் - இந்த இராக்கதக்கூட்டம், இன்றொடு - இற்றைநாள் முடிவோடு, இற்றது - முடிந்தது, என்று - என்று குறிப்பித்து, பகலே - பகற்காலத்திலே, வெற்ற - வெறுமையாகிய, விண்ணினிடைநின்று - ஆகாயத்தினிடத்தினின்றும், நெடுமீன் - பெரிய நக்ஷத்திரங்கள், விழுவதுபோல - விழுவன போல, சுற்று அமைந்த சுடர் எஃகம் - சுற்றிலும் பொருந்திய ஒளியினையுடைய அந்தச் சூலமானது, இரண்டு துணியா - துண்டு துண்டாக, அற்ற கண்டமவை - அறுந்து விழுந்த துண்டங்கள், ஆசையின் அந்தம் - திக்குக்களின் எல்லையை, உற - அடைய.

குறிப்பு —'இற்றது' என இறந்தகாலத்தாற் கூறியது விரைவினானுந் தெளிவினானும் வந்தகால வழுவமைதி. பகற்போதில் நக்ஷத்திரங்கள் வீழக்காணல், பின்னா நிகழுங்கேட்டை முன்னர்த்தெரிவிக்கும் அபசகுனமாகிய உற்பாதம். மீன் மின்னுந்தலையுடையதெனக் காரணப்பெயர். கருத்தாப் பொருள்விகுதி புணர்ந்து கெட்டது. எஃகு அசறலாகிய சூலத்தைக் கருவியாகுபெயரா லுணர்த்திற்று. எஃகம் இதில் அ சாரியை. அது, அவை இவ்விரண்டும் பகுதிப்பொருள் விகுதிகள். துணி துணிக்கப்பட்டது, செயப்படுபொருள் விகுதி புணர்ந்துகெட்ட தொழிலடியாகப் பிறந்த பெயர், முதனிலைத் தொழிலாகுபெயருமாம். ஆசையினந்தமுறுதல் - வலப்புறமும் இடப்புறமுமாகிய இருபுறத்திலும் வேகத்தோடு நெடுந்தூரம் போய் விழுதல். (உஎ)

சூரொ டுங்கயி றுணிந்திறுதல் கண்டுசிறிதும்
போரொ டுங்கிலன் மறங்கொடு புழுங்கிநிருதன்
பாரொ டுங்குறு கரங்கொடு பருப்பதமெலாம்
வேரொ டுங்கடி தெடுத்தெதிர் விசைத்துவிடலும்.

இ-ள். நிருதன் - அவ்வரக்கன், சூர் ஒடுங்கு அயில் - தேவர்களு மடங்குதற்குக் காரணமான தனது சூலாயுதம், துணிந்து இறுதல் - துணிபட்டுவிழுந்ததனை, கண்டு - பார்த்தும், போர்சிறிதும் ஒடுங்கிலன் - போர்செய்தலிற் சற்றும் தளர்ச்சியில்லாதவனாய், மறம்கொடு புழுங்கி - அஞ்சாமை மேற்கொண்டு கோபித்து, பார் ஒடுங்குறு கரம் கொடு - பூமியும் ஒடுக்கமடையத்தக்க (நீண்ட தனது) கைகளால், பருப்பதமெலாம் - மலைகள் பலவற்றையும், வேரொடும் - வேரோடு, கடிது எடுத்து-

விரைவாய்ப் பிடுங்கியெடுத்து, எதிர் - ஸ்ரீராமபிரானுக்கெதிரே, விசைத்து விடலும் - வேகமாய் எறிந்தவளவில்.

குறிப்பு — சூர் ஒடுங்கயில் என்பதில் சிறப்பும்மையை வருவித்துத் தேவர்களும் ஒடுங்குதற்குக் காரணமான தனது சூலம் என்க. கொள்ளினும் சிறப்புடைத்தே. கண்டும் என்பதன் உம்மைவிகாரத்தாற் றொக்கது. மறம் - வீரம், மறு - பகுதி, அம் விகுதி. தனக்குமேற்பட்டானை மறுத்துரைப்பவனிடத்தில் அஞ்சாமையும் வீரமுடைமைபற்றி வந்தது. நிருதன் 'நைருதன்' என்னும் ஆரியமொழிச் சிதைவு. நிருதியென்னுந் திக்குப்பாலகனது மரபிற் றோன்றியவனென்பது பொருள். பார் - பருமையையுடையது, பண்பாகுபெயர். பாரகப்படுவதுமாம். 'பாரோங்கு குறுகரம்' இந்நிலவுலகிலுள்ளார் ஒடுங்குதற்குக் காரணமான கரம் என்னு மொன்றும். பருப்பதம் 'பர்வதம்' என்னும் வடமொழித்திரிவு, 'பார்வதி' யென்னுந் தத்திதாந்தப் பெயருக்குப் 'பர்ப்பதி' யென வருதலுங் காண்க. எல்லாம் இடைக்குறை. விடலும் உம்மீற்று வினையெச்சம். (உ௭)

வட்டமிட்டகிரி யற்றுக வயங்குவயிரக்
கட்டமைந்தகதிர் வாளியெதிரேகடவலான்
விட்ட விட்டமலை மீளவவன் மெய்யின்விசையாற்
பட்ட பட்டவிட மெங்குமுடல் லூறுபடலும்

இ - ள். (ஸ்ரீராமபிரான்), வட்டமிட்ட - (விராதனால் எறியப்பட்டுத் தன்னைச்) சூழ்ந்துவருகிற, கிரி அற்று உக - பர்வதங்கள் பிளவுண்டு விழும்படி, வயங்கு வயிரம் கட்டு அமைந்த - விளங்குகின்ற உறுதியாகிய கட்டுப்பொருந்திய, கதிர் வாளி - கூர்மையையுடைய பாணங்களை, எதிர்கடவலான் - (அப்பர்வதங்களுக்கு) எதிராக எய்ததனால், விட்ட விட்டமலை - அவன் ஓயாமல் விட்டமலைகளெல்லாம், மீள - திரும்பி, அவன் மெய்யில் - அவ்வரக்கனுடலில், விசையால் பட்ட பட்ட இடம் எங்கும் - வேகத்தோடு பட்ட பட்ட இடங்களிலெல்லாம், உடல் ஊறுபடலும் - உடம்பு காயப்பட்டவளவில்.

குறிப்பு — வயிரக்கட்டு வச்சிரத்தாலாகிய கட்டென்றுமாம். கட்டு புங்கம். கதிர் ஒளியுமாம். நிலையின்மைபற்றிப் பொய்யாகிய இவ்யாக்கையை மெய்யென்றல் மங்கலமென்னுந் தகுதி வழக்குப்பற்றியென்க. அசத்திரமாகிய மெய்யைக் காயமென்னும் இக்கருத்தானேயாமெனக. ஊறு உறுவது முதனிலை நீண்ட தொழிலாகுபெயர். (உஅ)

ஓம ராமரை யொருங்கு முணர்வோ ருணர்வுறும்
நாம ராமவரை நல்லற நிறுத்த நணுகிந்
தாம ராவணை துறந்து தரைநின்ற வரையோர்
மாம ராமர மிறுத்ததுகொ டெற்றவரலும்

இ - ள். (பின்னு மவ்வரக்கன்) ஓர் மராமரம் - ஓர் பெரிய மராமரத்தை, இறுத்து - பிடுங்கி, அதுகொடு - அதனால், ஒருங்கும் உணர்வோர் - முற்றுமறிந்த தத்துவஞானிகள், உணர்வு உறும் - அறிந்து தியானிக்கின்ற, நாமர் ஆம் அவரை - திருநாமங்களையுடையவரும், நல் அறம் நிறுத்த - நல்ல தருமத்தை நிலைநிறுத்துவதற்காக, அரா அணை துறந்து - சேஷசயனத்தைவிட்டு, தரை நணுகின்றவரை - பூமியில்வந்து திருவவதாரஞ் செய்தருளியவருமாகிய, ஓம் ராமரை - பிரணவ மந்திரத்தின் பொருளாகிய ஸ்ரீராமரை, எற்றவரலும் - மோதவந்தவளவில்.

குறிப்பு:—ஓமம் என்பதனை 'ஹோமம்' என்னும் வடமொழி திரிந்தபெயரெனக் கொண்டு, யாகத்தின் சொரூபமாகிய ஸ்ரீராமர் எனப் பொருள்கோடலுமாம். "வேள்வியுந் தானாய் நின்ற வெம்பெருமான்" எனப் பெரியார் பணித்ததுங் காண்க. ஒருங்குணர்வோர் ஓதாதுணர்ந்த சாமுசித்தர், திரிகாலஞானிகள். "முப்பொழுதாய ஞான முனிவர்தந் நாயகமாய—எப்பொழுதுங் கோயில் விடங் கொண்டான் போய்" என்பர் பாரதம் பாடிய பெருந்தேவனாரும். 'உணர்வுறூஉம்' என இன்னிசை யளபெடுத்த பாடமுமுண்டு. மராமரம் ஆச்சாமரம். கொடு மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு; "கருவியிட்டாற்றுவார்" என 'இட்டு' என்பதும் அவ்வேற்றுமை யுருபாக வரும். (௩௦)

ஏறு சேவக னிரண்டினொ டிரண்டுகணையால்
வேறு வேறுதுணி செய்து விழுந்துவிசையான
மாறு மாறுதிமிர் தோளிடையு மார்பினிடையு
மாறு மாறுமயில் வெங்கணை யழுத்தவனும்.

இ-ள். ஏறுசேவகன் - உயர்ந்த (மகா) வீரனாகிய ஸ்ரீராமபிரான், இரண்டினொடு இரண்டுகணையால் நான்கு பாணங்களால், அது வேறு வேறு துணிசெய்து - அம்மரா மரத்தினை வெவ்வேறாகத் துணிபடச்செய்து, விழுந்து - தள்ளிவிட்டு, திமிர் தோளிடையும் - (அவனது) திமிர்ந்த தோள்களிடத்திலும், மார்பினிடையும் - மார்பிலும், மாறுமாறு விசையான ஆறும் ஆறும் அயில் வெங்கணை யழுத்த - மாறி மாறி வேகத்தோடும் அவ்வாறாகக் கூறிய கூரிய வெவ்விய அம்புகளை, அழுத்த - அழுந்தச்செய்ய, அவனும் - அவ்வரக்கனும்

குறிப்பு — இனி, 'ஏறு சேவகன்' என்பதனை, சேவக ஏறு என மாற்றிச் சேவகருக்கு ஏறு போன்றவனென்ன வுரைப்பினும் பொருந்தும். நடை, வீரம், கம்பீரம் முதலியவற்றால் சிங்கவேற்றினைப் போன்றவன் எனவும், இதுகாறும் நடந்தபோரில் கையேற்றமுடையவனெனவும் பொருள்கோடலும் ஏற்றமே. தோளினிடத்தில் ஆறுகணையும் மார்பினிடத்தில் ஆறுகணையுமென மாறிமாறிப் போயாது எய்தான் என்பதாம். அயில் என்பதனை வினைத்தொகைநிலைத் தொடராகக் கொண்டு உயிருண்ணுங் கொடிய கணையென் றுரைப்பினுமமையும். (௩௧)

மொய்த்த முட்டன் றடற்றலை தொளைப்பமுடுகிக்
கைத்தலத்து நிமிர கழற்று கன்றிவீசிறு
மெய்த்த மெய்ப்பெரிய கேழலென வெங்குமவிசையிற்
றைத்த வங்கணை தெறிப்பமெய் சிலிர்த் துதறவே.

இ-ள். மொய்த்தமுள் - மிகவும் அடர்ந்துள்ள முள்ளானது, உடலத்தலை தொளைப்ப - உடலினை (நோவுண்டாக்கி) வருத்துதலால், கைத்தலத்தின் - முன்னங்கால்களினால், (அவற்றை) முடுகி - விரைந்து, நிமிர - எடுக்கமுயன்று, கழற்றக்கன்றி - (அவை தைத்துவிட்டமையால்) மிகவும் வருந்தி, விசிறும் - வீசி யுதறுமன்றோ, மெய்த்த மெய் பெரிய கேழல் என - ஓடியிளைத்த உடலினையுடைய பெரிய (முள்ளம்) பன்றிபோல, தைத்த அங்கணைகள் - (தன்னுடலினைத்) தைத்த அவ்வம்புகள், நெருங்கும் தெறிப்ப - எப்பக்கங்களிலுஞ் சிதறிவிழுமாறு, மெய்சிலிர்த்து உதற - (தனது) உடலினை மிக்க வேகத்தினோடுஞ் சிலிர்த்து உதறுதலும்

குறிப்பு—ஓடியிளைத்த முள்ளம்பன்றி யொன்று தனது உடம்பில் முட்கள் செருகித் நோவுண்டாக்கி வருத்த அம்முட்களை முன்னங்கால்களால் எடுக்கத்

தலைப்பட்டு அவ்வகை அம்முன்னங்கால்களிலும் தைத்துக்கொண்டதலால் எடுக்க முடியாமல் கடைசியாய் மெய்யையுதறி அம்முட்களைச் சிதறுமாபோல, இவ்வரக்கனும் தனதுடலில் தைத்துக் கிடக்கின்ற ஸ்ரீ இராமனது பாணங்களைக் கைகளால் எடுக்க முயன்று, அப்பாணங்கள் கைகளிலூந் தைத்துவிடுதலால் அங்ஙனம் கைகளால் எடுக்க முடியாமல் கடைசியாய் மெய்யைச்சிலிர்த்து உதறினனென்க. தலை- ஏழனுருபு கைத்தலம் கையினது தலம், எனவே உள்ளங்கை, பன்றியின் கைத்தலம் முன்னங்கால்களின் உட்புறமாம். (கஉ)

எரியின வாளிகளை யிராமனவிட வெங்குதிலையா
துருவி யோடமற மோடுதலசெயா வுணாவினு
ணருவி பாயுமவரை போறகுருதி யாறுபெருகிச
சொரிய வேகவலி கெடடுணாவு சோாவுறுதலும்.

இ - ள். இராமன எரியினவாளிகளைவிட - ஸ்ரீராமபிரான நெருப்புப்போன்ற கொடிய பாணங்களைப் பிரயோகித்ததலும், (அவை) எங்கும நிலையாது - எங்குந்தடைபபடடு நிலலாமல, உருவி ஓட - ஊடுருவிச செலலாநிறபவும, மறம ஓடுதலசெயா உணாவினன - கொடுந்தனமை நீங்குதலில்லாத அவவரக்கன, வரைபாயும அருவி போல - மலையினின்றும இழிந்துபாயகின்ற நீரருவிபோல, குருதி ஆறு - இரததந்தி, பெருகிச்சொரிய - (தன்னுடலினின்றும்) பெருகிவழியாநிறகவும, வேகவலி கெடடு - உககிரமான பலமழிந்து, உணாவு சோாவு உறுதலும - அறிவழிந்துபோன அளவில

குறிப்பு —எரியினவாளிகளை அக்கினியஸ்திரமுமாம். செயயா வெனபது இடைகுறைந்து செயா என நின்றது வேகவலி - வேகமும வலியுமென உம்மைத தொகையுமாம உணாவு, சோாவு எனபதில 'வு' தொழிறபெயா விகுதி 'உ' விகுதியெனில 'வ' எழுததுப்பேறெனக கொளக (கங)

மெயவரத்தினன மிடறபடை விடபபடடிலன
செயயுமறறுமிக லெனறுசின வாளுருவிவா
கைதுணித்து நுமெனமுந்துககெடிப படாபுயத
தெயவின மறபொருவு தோளிருவ ரேறநிருதன

இ - ள எயவு இல - பிறராற பாணமெயயபபடுசலிலலாத, மறபொருவு - மறபோாசெயவதில வலல, தோள இருவா - தோளிணையுடைய அவவிராமலக்ஷ்மணா இருவரும, (இவவரக்கன) மெயவரத்தினன - பொயததலிலலாத வரமபெறறவன, மிடல படை விட - வலிமைதங்கிய ஆயுதங்களைப பிரயோகிப்பதினால, படடிலன - இறபபானலலன, மறறும இகலசெயயும - மீளவும போாசெயவான, எனறு-எனறு சிநதித்து, 'சினம வாள உருவி பல கை துணிததும என - (பகைஞாமாடடுக) கோபத்தினையுடைய வாளினை உறையினினறுமெடுதது (இவனது) வலியகரங்களை வெடடித்தளளுவாம' எனறு சொலலி, முந்துககெடி - மிகவுமவிரைநது, படாபுயத்து-பெரிய (அவனது) தோளகளில, ஏற—, நிருதன - அவவரக்கன.

குறிப்பு -- வரததிறகு மெயமமையாவது தவறுது பலித்தலாம. உடையவன குணத்தினை உடைமைமேலேறறிச 'சினவாள' எனறா. இகல - தொழிலாகுபெயா முந்துககெடி - முறபடடு விரைநதெனறுமாம். எயவு. தொழிறபெயா. இனி, 'எய்வில' எனபதனை வினைத்தொகை நிலைததொடாககொண்டு பாணங்களை எய்

...ன்றவில்லென்த் தோளொடு கூட்டலுமாம். 'இருவர்' [illegible] உவமை விளக்கற் கேற்றது. (கச)

உண்டெழுந் தவுணர் வவ்வயி னுணர்ந்து முடுகித்
தண்டெழுந் தனைய தோள்கொடு சுமந்து தழுவிப்
பண்டெழுந் தனது வன்கதி பதிற்றின் முடுகிக்
கொண்டெழுந் தனன் விழுந்தழி கொழுங்குருதியான்.

இ-ள். விழுந்து அழி கொழுங்குருதியான் - பெருகி வழிகின்ற மிக்க அரத்தத்தினையுடைய அவ்விராதன், அவ்வயின் - அந்த இடத்து, உண்டு எழுந்த உணர்வு உணர்ந்து - மீண்டும் உளதாகித் தோன்றிய அறிவினால் (ஸ்ரீ இராமலக்ஷ்மணர்கள் தன்னை மீதுள்ளனரென்று) அறிந்து முடுகி - மனம் விரைந்து, தண்டு எழுந்தனைய தோள்கொடு - உயர்ந்த தண்டாயுதத்தைப்போன்ற தோள்களால், தழுவி சுமந்துகொண்டு - சேர்த்துப்பிடித்துத் தாங்கிக்கொண்டு, பண்டு எழும் - முன்னேயுள்ள, தனது வன்கதி பதிற்றின் முடுகி எழுந்தனன் - தனது வலியநடை முன்னையினும் பதின்மடங்கு அதிகமாக விரைந்து எழுந்தவனானான்.

குறிப்பு — தண்டு தண்டமென்னும் வடசொற்சிதைவு. (கரு)

மூந்து வானமுக டுறக்கடிது முட்டி முடுகிச்
சிந்து சோரியொடு சாரிகை திரிந்தனனரோ
வந்து மேருவினை நாடொறும் வலஞ்செய் துழல்வோ
ரிந்து சூரியரை யொத்திரு வரும் பொலியவே.

இ-ள். மேருவினை நாள்தோறும் வந்து வலஞ்செய்து உழல்வோர் இந்து சூரியரை யொத்து - மாமேரு மலையினைத் தினந்தோறும் போந்து பிரதக்ஷிணஞ் செய்து திரிபவர்களாகிய சந்திர சூரியர்களைப்போன்று, இருவரும் பொலிய - ஸ்ரீ ராமலக்ஷ்மணர்கள் இருவரும் (இருதோள்களிலும்) விளங்கும்படி, மூந்து வான் முகடுற - உயர்ந்த வானத்தின் உச்சியை அளாவும்படி, முட்டி - முட்டி, சிந்து சோரியொடு - வழிகின்ற இரத்தத்துடனே, கடிது முடுகி - மிகவும் விரைந்து, சாரிகை திரிந்தனன் - வட்டமாய்ச் சுற்றினான்.

குறிப்பு — சிந்துசோரியொடுதிரிகின்ற அரக்கன் மேருமலைக்கும், ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் சந்திர சூரியர்களுக்கும் உவமை. கலைநிறைவினாலும், தண்ணளியினாலும், பெயராற்றலினாலும் சந்திரனை இராமபிரானுக்குவமையாகவும், பொன்னிறத்தினாலும் பிரதாபத்தினாலும் பிறரினும் மிக்க வெகுளியுடைமையாகிய வெம்மையினாலும் சூரியனை இலக்குமணனுக்குவமையாகவும் கூறினாரெனக். சாரிகை மண்டலாகாரமாக வலப்புறமேனும் இடப்புறமேனும் சுழன்று வருதல். வந்து. உரையசையுமாம். "உயர்திணை மருங்கினும்மைத் தொகையே - பலர்சொன் னடைத்தென மொழிமனார் புலவர்" என்பவாகலின் 'இந்துசூரியர்' என்றார். (கசு)

சுவண வண்ணனொடு கண்ணனுறை தோளன்விசைதோ
யவண விண்ணிடை நிமிர்ந்துபடர் கின்றவனற
சிவண தன்னசிறை முன்னவரோ டேகுசெலவத்
துவண னென்னுநெடு மன்னவனு மொத்தனனரோ.

இ-ள். சுவண வண்ணனொடு - பொன்போன்ற நிறத்தையுடைய லக்ஷ்மணனுடன், கண்ணன் - ஸ்ரீராமன், உறை - எழுந்தருளியிருக்கப்பெற்ற, தோளன் -

தோள்களையுடையவனும், விசைதோய் - வேகம்பொருந்தி, அவனை விண்ணிடை நிமிர்ந்து - அவ்விடத்தினின்றும் ஆகாயத்தினிடத்து எழும்பி, படர்கின்றவன் - செல்கின்ற அவ்வரக்கன், அறம் சிவணு அன்ன - தருமம் வடிவெடுத்ததனையொத்த, சிறை - (தன்) சிறகுகளில், முன்னவரொடு - தமையன்மாராகிய கேது ராகுகளோடு, ஏகுசெல்வத்து - செல்லுகின்ற வேகத்தினையுடைய, உவணன் எனும் - கருடன் என்கின்ற, நெடுமன்னவனும் ஒத்தான் - பெரியபக்ஷி ராஜனையும் ஒத்தனன்.

குறிப்பு.—சுவண்வண்ணன் - ஸ்வர்ணவர்ணனென்னும் அதன்றிரிபு. 'சொன்ன வண்ணன்' என வருதலுமுடைத்து. இளையபெருமாளது நிறம் பொன்னிறமாதல் "வில்லேந்துமெனிற் செம்பொற், பருவரையும் நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள், இருவர்" எனவரும் பாலகாண்டச் செய்யுளானறிக. கரியோன் என்னும் பொருளினதாகிய 'கிருஷ்ணன்' என்னும் வடசொற் பிராகிருதமாய்ச் சிதைந்து 'கண்ணன்' எனவந்தது. "கண்டனினறன்ன கண்ணன்" என்றார் இவன்கண்டு நீங்குபடலத்திலும், ஈண்டுத் திருமாலினவதாரப்பெயரன் றென்பதுணர்க. 'தோய்ந்து' என்றிருக்கற்பாலது 'தோய' எனப் பகுதியளவாய் 'வரிப்புனைபந்து' என்பதிற்போல நின்றது. அகரம் உலகறிசுட்டாகக் கொண்டுரைத்தலுமாம். கருடபகவான் தாமசொரூபி என்பார் 'அறஞ்சிவண தன்னசிறை' என்றார். வினதையும், கத்துருவும் ஐராவதத்தின் வர்ணம் காரணமாகத் தம்முள் மாறுபட்டுத் 'தோற்றாரும் தோற்றாரது மக்களும் சயித்தார்க்கும் அவர்தம் மக்களுக்கும் குற்றேவல் செய்யவேண்டும்' எனச் சபதஞ்செய்து ஒப்பிய விஷயத்தில், தோற்றுப்போன வினதையும் அவளது மக்களும், கத்துருவிற்கும், அவளது மக்களாகிய பாம்புகளுக்கும் குற்றேவல் செய்துவந்தனர். அப்போது வைனதேயன் தனது தமையன்மார்களாகிய இராகு கேதுக்களைச் சுமந்து திரிந்தானாகலின் அதுபற்றி ஈண்டு உவமை கூறப்பட்டது. செல்வத்து அத்னகணுள்ள 'அத்து' சாரியை. உவணன், ஸுபர்ணன் எனும் வடமொழிச்சிதைவு. அழகிய சிறகுகளையுடையவனென்பது பொருள். புள்ளரசாதல்பற்றி 'மன்னவ' னென்றார். (௯௭)

மாதயாவுடைய தன்கணவன் வஞ்சன்வினையிற்
போதலோடுமலமந்தனள் புலர்ந்துபொடியிற்
கோதையோடுமொசி கொம்பென வீழ்ந்தனள்குலச்
சீதை சேவல்பிடியுண்ட சிறையன்னமனையாள்.

இ - ள். குலச்சீதை - உயர்குலத்திற் றோன்றிய சீதாபிராட்டியானவள், மாதயாவுடைய தன் கணவன் - மிக்க அருளினையுடைய தனது நாயகனாகிய ஸ்ரீராமன், வஞ்சன் - வஞ்சகனாகிய விராதனது, வினையின் - கொடிய தொழிலால், போதலோடும் - (கணமாத்திரமாய்த் தன்னைப்பிரிந்து) செல்லுகின்றவளவில், அலமந்தனள் - மனங்கலங்கினவளாகி, புலர்ந்து - வாட்டமடைந்து, சேவல் பிடியுண்ட சிறையன்னமனையாள் - (தனது) ஆணன்னம் (பிறரால்) பிடிக்கப்பட்டு வருந்தும் சிறகுகளையுடைய அன்னப்பேட்டினையொத்தவளாகி, ஒசிகொம்பெனக் கோதையோடும் பொடியில் வீழ்ந்தனள் - துவண்டு விழுகின்ற பூங்கொம்புபோலத் தன் கூந்தலுடனே மட்புழுதியில் விழுந்தாள்.

குறிப்பு.—தயா - வடசொல். தன்னிமித்தம் விராதனுடன் போர்தொடுத்தமையால் 'மாதயாவுடைய தன்கணவன்' என்றாள். கணவன்: யுக்ததேயிருப்ப

வன். தன் கண்ணுள் வைத்துப் போற்றப்படுபவன் எனலுமாம்; அலமந்தனள், அலமரல் - பகுதி: அலமரல் - மனஞ்சுழலுதல். "அலமர றெருமர லாயிரண்டுஞ் சுழற்சி." என்பது தொல்காப்பியம். ஸ்ரீராமன் பிரியவே கொழுகொம்பில்லாத பூங்கொம்புபோலப் பொடியில் விழுந்தாளென்பதாம். குலச்சீதை - சிறந்த சீதையுமாம். குலம் கிமிச்சக்கரவர்த்தியின்குலம் ஆசார சீலையென்பார் 'குலச்சீதை' யென்றாரென்றுமாம். இனி, குலம் என்பதற்கு மனையென்ப பொருள்கொண்டு 'தன்கணவன்' என்றதற்கேற்ப அவன் மனைவியாகிய சீதையென்ப பொருள்கோடலும் நயமாம். சனகமகாராசன் யாகசாலை வகுப்பான் பூட்டி யுழுதவிடத்து அங்குப் படைச்சாலில் அகப்பட்டதனால் 'சீதை' யென்ற திருநாமம் பெற்றனளென்ப. சீதை உழுபடைச்சாலென்னும் பொருளினதாகிய 'ஸீதா' என்னும் வடமொழித் திரிபு. ஒரு தாயில்லாப்பெண் இங்ஙனம் அலமந்து புலர்ந்துவிழுந்தாள் என்பார் 'சீதை' என்னும் திருநாமத்தை எண்டுப் பிரயோகித்தார் அம்மா! என்று நிலத்தில் விழுந்தனள் என்பதுமாம். கொம்பொசிவதற்கு ஓர் அளப்பாரமுமுண்டென்பார் 'கோதையோடு மொசிகொம்பு' என்றார். "தானுங் குழலுந் தனிவீழ்ந்தாள்" என்றார் புகழேந்திப்புலவரும். சேவல் ஆணன்னமாதலால் "சேவற்பெயர்க்கொடை சிறைகொடு சிவணு மாயிருந்தூவி மயிலலங் கடையே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானுணர்க. அன்பாலுளதாகிய மேன்மையால், பெருமானையும் பிராட்டியையும் 'சேவல்,' 'அன்னம்' எனக் கூறினார். "ஆதரம் பெருகின்ற அன்பினுள் அன்ன மொத்தும்" என்றார் சிந்தாமணியினும். (௧௭)

பின்னை யேழுந்த வுந்துணை பெறுளுரைபெறுள்
மின்னை யேயிடை நுடங்கிட விரைந்துதொடர்வா
ளன்னை யேயனைய வன்பினற வோர்கடமைவிட்
டென்னை யேநுகர்தி யென்றனளெழுந்துவிழுவாள்.

இ - ள் (அங்ஙனம் கீழேவிழுந்தபிராட்டி), எழுந்து - (திரும்பவும்) எழுந்திருந்து, உதவுந்துணை - (தன் துன்பத்தை நீங்கி) யுதவிசெய்கின்றதுணை, பின்னை ஏதும்பெறுள் - மற்றேதுவும் பெறாதவளாய், உரைபெறுள் - ஒன்றுஞ்சொல்லப்பெறாதவளாகி, மின்னேய இடைநுடங்கிட - மின்னலையொத்த இடையானது துவளும்படி, விரைந்துதொடர்வாள் - விரைவாக அவ்விராக்கனைப் பின்தொடர்ந்து (அவனைவிளித்து), 'அன்னையேயனைய அறவோர்கடமைவிட்டு - (உலகுக்கெல்லாம்) தாயையேபோன்ற அன்பினையுடைய தர்மசொரூபிகளாகிய சக்கரவர்த்தித் திருமகார்களைவிட்டு, என்னையேநுகர்தி என்றனள் விழுவாள் - என்னையேயுண்பாய்' என்றுகூறி மீட்டும் விழுவாளாயினள்.

குறிப்பு —இனி, 'பின்னை' என்பதனுக்கு இலக்குமியாகிய சீதையென்பொருள்கொண்டு எழுவாய் வருவியா துரைத்தலுமொன்று. 'உரைபெறுள்' என்பதற்கு ஒருவார்த்தை சொல்லவும் நாவெழாதவளாய் என்றுவது, தன்னைத் தேற்றுதல் செய்யும் வார்த்தையைச் சொல்லப்பெறாளென்றுவது பொருளுரைத்துக்கொள்க. "உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினு-மிழிப்பினும் பாறிணை யிழுக்கினு மியல்பே" என்பவாகலின் எண்டுச் சிறப்பினால் ஆண்பால் பெண்பாலாகியும் பன்மை யொருமையாகவும் 'அன்னையேயனைய' எனவந்தது. "தாதாய் மூவே ழுலகுக்குந் தாயே" என்றார் மணிவாசகப்பிரபுவும் 'நுகர்தி' என்னுஞ்சொற்கு அநுபவிப்பாய் என விபரீதப்பொருள்கூறி அபசாரப்படுத்தற் கேதுவாயிருத்தலின் "என்

னையே யுணவுகொள்கென வெழுந்துவிழுவாள்" எனச் சிறசிலபிரதிகளிற் காணப்படுகின்ற பாடமே சிறப்புடைத்தெனக. (௩௯)

அழுது வாய்குழறி யாருயி ரழுங்கியலையா
வெழுது பாவையனை யாணிலை யுணர்ந்திளையவன்
றொழுது தேவிதுயர் கூரவிளை யாடறொழிலோ
பழுது வாழியென வூழிமுதல் வன்பகர்வுறும்.

இ-ள். அழுது வாய்குழறி - அழுது வாய்குழறப்பெற்று, ஆர் உயிர் அழுங்கி - அரிய உயிர்கெட்டு, அலையா - வருந்தி, எழுது பாவையனையாள் - எழுதிய சித்திரப்பதுமையைப்போன்று அசையாது வீழ்ந்துகிடக்கின்ற சீதாபிராட்டியினது, நிலை உணர்ந்து - நிலைமையினையறிந்து, இளையவன் தொழுது - இளையபெருமாளாகிய இலட்சுமணன் (ஸ்ரீராமபிரானை) அஞ்சலிசெய்து, தேவி துயர்கூர - பிராட்டி மிக்க துன்பமடையாநிற்ப, விளையாடல் - திருவிளையாடல்செய்வது, தொழிலோ - செய்யத்தக்க காரியமோ? பழுது - குற்றமுடைத்தாம், என ஊழிமுதல்வன் பகர்வுறும் - என்று விண்ணப்பஞ்செய்தலும் ஊழிக்காலத்துக்கும் முதல்வனாகிய ஸ்ரீராமபிரான் சொல்லுவான்.

குறிப்பு — வாய் குழறுதல் மொழிதடுமாறுதல். ஈண்டுவாய் கருவியாகுபெயராய் மொழியினையுணர்த்திற்று. அழுங்கல் - கெடுதல் "அழுங்கலிரக்கமுங் கேடுமாகும்" என்பது தொல்காப்பியம். மனத்திருத்தியுண்டாகுமவரை அழித்தழித் தெழுதப்படுகின்ற சித்திரப்பாவைபோல அழகுடையாள் என்பார் 'எழுதுபாவை' என்றார். இனி, 'எழுது' என்பதற்குத் தரை தழுவுகின்ற என்று பொருள்கூறுதலுங் கூடுமெனக், அங்ஙனமாகுங்கால் 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகிய 'அலையா' என்பதனை எழுது என்பதனொடு முடிபுசெய்க. எழுது என்பதற்குத் தரைதழுவுகின்ற என்று பொருள்கோடல் செய்யுங்கால், 'பாவை' என்பதற்கு 'மணியாடுபாவை' என்பது பொருள்கூறினும் மேற்கும். 'அனையாணிலை' என்பதனை அனை, ஆழ், நிலையெனப் பிரித்துப் பாவைபோல உள்ளாகிய ரணதாப துக்க சாகரத்தின் மூழ்குதலையறிந்து எனக் கொள்ளினுமமையும். இளையபெருமாளுக்குச் சீதை தாய்முறையாதல் "ஜ்யேஷ்ட ப்ராதா பித்ரு சமாந:" என்னுஞ் சுருதியுண்மையானறிக, மாகாத்த விராமனை மகனென்ன வையமீந்தும், போகாவுயிர்த்தாயர் நம்பூங்குழற்சீதையென்றே—யெண்ணாய் ' என இளையபெருமானை நோக்கிச் சுமித்திராதேவி கூறியிருத்தலையுங் காண்க. "கூப்புங் கிழவுமுளது சிறக்கும்" என்னுந் தொல்காப்பியவுரியியற் சூத்திரம்பற்றி, 'துயர்கூர' என்பதற்கு 'மிக்க துன்பமடைய' என்று பொருள் கூறிற்றும். 'தொழுது' என்பதனானே இளையபெருமாளுக்கு ஸ்ரீராமபிரானிடத்திலுள்ள பக்தியும், அடிமைத்திறமும் நன்குவிளக்கப்பட்டதுடன், மூத்தோனிடத்தில் இளையவன் விண்ணப்பஞ் செய்யவேண்டிய முறைமையையும் விளக்கினாராயிற்று. வாழி முன்னிலையசை. மியா இக முதலாகிய அசைநிலை ஒருபொருளுணர்த்தாவாயினும் முன்னிலைக்கணல்லது வாராமையான் அவ்விடமுணர்விக்குமாறுபோல, 'வாழி' என்பதூஉம் ஒருபொருளுணர்த்தாதாயினும் ஒன்றனைக்கேட்பிக்குமிடத்தலலது வாராமையான் அப்பொருள் விளக்குமென்பதறிக. (௪௦)

ஏக நின்றநெறி யெல்லைகடி தேறியினிதிற்
போக னன்றென நினைந்தன னிவன்பொருவிலோய்

சாக வின்றுபொரு ளன்றென நகுந்தகைமையோன்
வேக வெங்கழலி னுகைத்தலும் விராதனவிழவே

இ - ள். பொருவு இலோய் - ஒப்பில்லாதவனே! ஏகின்ற நெறிஎல்லை - நாம் போகவேண்டியவழியினது எல்லையை, கடிது இனிது ஏறிப்போதல் - விரைவாகவும் இனிமையாகவும் இவனமேலேறிச் செல்லுதல், நன்று என - நல்லதென்று, நினைந்தனன் - எண்ணினேன், இன்று இவன்சாதல் - இப்பொழுது இவனிறப்பது பொருளன்று - ஒரு பெரிய காரியமன்று, என - என்றருளிச்செய்து, நகுந்தகைமையோன் - இளநகைபுரிந்த தன்மையையுடையோனும், வேகம் வெங்கழலின் உகைத்தலும் - மிக்கவேகத்தோடு தனதுவலிய திருவடிகளால் உதைத்துத் தள்ளினவளவிலே, விராதன விழ - விராதனென்னும் அவ்வரக்கன் கீழேவிழாநிற்க

குறிப்பு — இனி -'ஏகின்றநெறி ....... நினைந்தனன்' என்பதற்கு இவ்விராதன் செல்லவேண்டிய பரகதியில் நன்மையுறப் போதலவேண்டுமென்று நினைந்தோமென, என்வேறோ பொருள்தோன்றுதலுங்காண்க. பொருவிலோய் என்பதற்குப் போர்செய்கின்ற வலிவினையுடையாய் எனப்பொருள் கோடலுமமையும். வெம் கழல் என்பதற்கு அடியார்களால் விரும்பப்படும் சீபாதங்களென்றுமாம். கழல் என்றது திருவடிகளைத் தானியாகுபெயரா யுணர்த்திற்று (௪௧)

தோளி ரண்டுமேவடி வாள்கொடு துணித்துவிசையால்
மீளி மொய்ம்பினர் குதித்தலும் வெகுண்டுபுருவத்
தேளி ரண்டுநெரி யச்சினவு செங்கணரவக்
கோளி ரண்டுசுட ருந்தொடர் வதிற்குறுகலும்.

இ - ள். மீளி மொய்ம்பினர் - வலிய புயங்களையுடைய ஸ்ரீராமலக்குமணர்கள், விசையால் - வேகத்தோடு, வெகுண்டு - கோபித்து, வடிவாள்கொடு தோள் இரண்டுமே துணித்து - கூரிய வாளாயுதத்தால் இரண்டு தோள்களையும் அறுத்துத் தள்ளி, குதித்தலும் - கீழே குதித்தவளவில், (அவ்விராதன்) புருவம் தேள் இரண்டு நெரிய - தேளினவடிவம் போலுமுள்ள தனது இரண்டு புருவங்களும் நெரியும்படி, (வெகுண்டு), சினவு செங்கண் அரவம் கோள் - கோபிக்கின்ற சிவந்த கண்களையுடைய பாம்பாகிய ராகுவென்னுங் கிரகம், இரண்டு சுடரும் தொடர்வதின் குறுகலும் - சூரியசந்திரராகிய இருவரையும் (ஒரேகாலத்தில் பிடித்தற்பொருட்டு) பின் தொடர்ந்து வருதல்போல (அவ்விராமலக்குமணர்களைத் தொடர்ந்து) வந்தவளவில

குறிப்பு —'அரவக்கோள் எனப் பொதுப்படக் கூறினாரேனும் விராதனோடு ஒப்புமை குறித்தமையால் கருநிறமுடைய இராகுவென்னுங் கோளையே தகுதி கருதிக்கொண்டுரைத்தாம். ஓரரவக்கோள் இருசுடரையும் ஒரேகாலத்தில் தொடர்ந்து பற்றல் யாண்டும் இன்மையின் இஃது இல்பொருளுவமை. (௪௨)

புண்ணி டைப்பொழி யுமிப்புனல் பொலிந்துவரவும்
விண்ணி டைப்படர்தல் விட்டெழு விகற்பவினையார்
'வெண்ணு டைக்குரிசி லெண்ணியினை யோயிவனையிம்
மண்ணி டைக்கடிது பொத்துதல் வழக்கெனலுமே.

இ-ள். புண்ணிடை - விரணங்களினின்றும், பொழிபுனல் - வழிகின்ற ரத்தநீரானது, பொலிதர வரவும் - மேன்மேல் மிகுதிப் பெருகி வழிந்துகொண்டிருக்கவும், (அவ்வரக்கன்), உயிர் விண்ணிடைப் படாதல்விட்டு - உயிரானது மேலுலகத்திற்குப் போகாமல் [இறவாமல்], எழு - எழுகின்ற, விகற்பம் நினையா - மாறுபாட்டை நினைந்து, எண் உடை குரிசில் - யாவர்மனத்திலும் எழுந்தருளியிருத்தலையுடைய ஸ்ரீராமன், எண்ணி - (அவன் சாகாத தன்மையை) ஆலோசித்து, இளையோய்—'தம்பி!' இவனை இ மண்ணிடைக் கடிது பொதுதல் - இவ்விராதனை இப்பூமியில் விரைவாகப் புதைத்தல், வழக்கு - முறைமை', என்னும் - என்று சொன்னவளவில்.

குறிப்பு -இனி, உயிர்ப்புனல் என்பதற்கு அரத்தமென நேரே பொருளுரைத்துக்கோடலுமாகும் 'உடைய' என்னும் குறிப்புப்பெயரெச்சம் ஈறுதொகுத்து. குரிசில் - பெருமையிற் சிறந்தோன், ஆண்பாற் சிறப்புப்பெயர், குருஸ்ரீ என்பதன் திரிபென்பர். (௪௧)

மதநல் யானையனை யானிலம் வகிர்ந்தகுழிவாய்
நதமு லாவுநளி நீர்வயி னழுந்தநவைதீ
ரதவ மாயநறுநெ யுண்டுலகி லன்பாகருதிற
றுதவு சேவடியி னாலமல னுந்துதலுமே

இ-ள் மதநல் யானை அனையான் -- சிறந்த மதயானையை ஒத்த லக்ஷுமணன், நிலம் வகிர்ந்த குழிவாய் - பூமியில் வெட்டியெடுத்த குழியினிடத்தில், நதம் உலாவும் நளி நீர் வயின் - ஆற்றினது ஓடுகின்ற மிக்க நீரின்கண், அழுந்த - அழுந்தும்படி, அமலன் - அநாதிமலமுத்தனாகிய ஸ்ரீராமபிரான், நவை தீர் - குற்றமற்ற, அதவம் ஆய - சுருவை என்னும் நெய்த்துடுப்பாய், நறுநெய் உண்டு - நல்ல (பசுவின்) நெய்யைப்பருகி, உலகில் அன்பா கருதிற்று உதவு - உலகத்திலுள்ள பத்தர்கள் எண்ணியவரங்களைக் கொடுக்கின்ற, சேவடியினால் உந்துதலும் - (தனது) சிவந்த திருவடிகளால் (அவ்வரக்கனைத்) தள்ளினவளவில்.

குறிப்பு —வாய், வயின் என்பவை ஏழனுருபு. நதம்' மேற்குமுகநோக்கிச் செல்லும்யாறு, நதி கிழக்குநோக்கிச்செல்வது. நளி உரிச்சொல் "நடவும் கயவும் நளியும் பெருமை." என்பது தொல்காப்பியம் 'நளிநீர்' என்பது பாடமாயின் குளிர்ந்தநீரென்றுரைத்துக்கொள்க. அதவம்-யாகாக்கினியில் நெய்யைச்சொரியும் அத்திக்கட்டை. யாற்செய்த அகப்பை நெருப்பெழக்கடையும் கட்டைக்கு 'அரணி'யென்று பெயர். அதம் அத்தி, அம்-சாரியை கருதிற்று சாதியொருமை சாதியொருமையாவது ஒரு சொல் ஒருமை யீறுதோன்ற நின்றும் தோன்றாது நின்றும் பின் ஒருமைபன்மை வினையீறுக மேல்வந்து முடிக்குஞ் சொற்களுமின்றித் தானே பன்மைப்பொருளுணர்த்துவது, இதனை வடநூலார் ஜாத்யேகவசனமென்பர். "ஈறுதோன்றிய சாதியொருமையு மீறுதோன்றாத சாதியொருமையு மெனவிருதிணைப்படு மிருதிணையொருமையும்." "அஞ்சுவதஞ்சாமை பேதைமை" என்புழிப்போல நிற்றலின் ஈண்டுக் கருதிற்று என்பது ஈறுதோன்றியசாதி யொருமையாம் ஒருபொருளில் நாட்டமுற்றிருப்பார்க்கு அதனிலுஞ்சிறந்த வேறொருபொருள் கைகூடின் முன்னையதில் அவர்க்கு விருப்பஞ் செல்லாதாகலின் 'கருதிற்றுதவுசேவடி.' என்றார். "வேண்டுவார் வேண்டியதே ஈவான்கண்டாய்" "மனத்திருந்த கருத்தறிந்து முடிப்பாய்நீயே" என இவையெல்லாம் இக்கருத்தே பற்றிவந்தன வென்க. (௪௨)

பட்ட தன்மையு முணர்ந்துபடா சாபமிட்டூன
கட்ட வன்பிறவி தந்தகடை யானவுடற்றூன்
விட்டு விண்ணிடை விளங்கினன் விரிஞ்சனெனவோர்
முட்டை தந்ததனில வந்தமுதன் முன்னவனினே

இ - ள். விரிஞ்சன என - பிரமதேவனது உருவமாகி, ஓர் முட்டைதந்து-ஒப்பற்ற அண்டத்தைப்படைத்து, அதனில் வந்த - அவ்வண்டத்தினிடத்தே (காத்தற் பொருட்டு) திருவவதரித்த, முதல முன்னவனின் - தேவாதிதேவனுகிய ஸ்ரீராமபிரானால, (அவ்வரக்கன), முன்படாசாபமிட - முன்னே (குபேரன) பெரியசாபத்தைக் கொடுத்ததனால,(வந்த),வல் பிறவி கட்டம் தந்த கடையான உடல்விட்டு-வலியபிறவித்துன்பங்களைக்கொடுத்த இழிவான ராக்ஷஸசரீரம் நீங்கப்பெற்று, பட்ட தன்மையும் உணர்ந்து-முன்னே நடந்ததன்மையையு முணர்ந்து, விண் இடைவிளங்கினன - ஆகாயத்தினிடத்தே (முன்னுள்ள கந்தருவசரீரத்தோடு) பிரகாசித்தான.

குறிப்பு — பட்டதன்மையுணர்தல - பூர்வஜன்மஞானம. பிறவித்துன்பங்களாவன - தன்னைப்பற்றிவருவனவும, பிறவுயிர்களைப்பற்றி வருவனவும, தெய்வத்தைப்பற்றி வருவனவுமாம இவைமுறையே ஆதியான்மிகம், ஆதிபௌதிகம, ஆதிதைவிகம எனனப்படும. முதல முன்னவன - யாவர்களுக்கும முதல்வராகிய திரிமூர்த்திகளுள்ளும முதன்மையான சர்வேசுரன. "உலகளந்த - மூர்த்தியுருவே முதல்." எனவும "முதலாவார மூவரே யம்மூவருள்ளும முதலாவான மூரிநீர்வண்ணன." எனவும பெரியோர பணித்ததுகாண்க. (௩௫)

பொறியி னொன்றியயல சென்றுதிரி புந்தியுணரா
னெறியி னொன்றிநிலை நின்றநினை வுண்டதனினும
பிறிவி லன்புதனி பண்டுடைய பெற்றிதனினு
மறிவு வந்துதவ நம்பனை யறிந்துபகர்வான.

இ - ள். (அவன), பொறியின ஒன்றி - அயல்சென்று திரிபுந்தி உணரான - பஞ்சேந்திரியங்களுக்கு வசப்பட்டு விஷயாந்திரங்களிலேபோய அலைகின்ற புத்தியை உடைத்தாகாதவனாகி, நெறியின ஒன்றி - நலவழிப்பட்டு, நிலைநின்ற நினைவு உண்டதனினும-நிலைபெற்று நின்ற எண்ணம உண்டாகியதனாலும, பிறிவு இல் - நீங்குதலில்லாத, தனி அன்பு பண்டு உடைய பெற்றிதனினும - ஒப்பற்ற அன்பு பழமையாய உடைத்தானதன்மையினாலும, அறிவு வந்து உதவ - தத்துவஞானம் வந்துகூட, (அதனால), நம்பனை - ஸ்ரீராம நம்பியை, அறிந்து பகர்வான - (ஸ்ரீவிஷ்ணுவின அம்சமென்று) தெரிந்து துதிப்பான்.

குறிப்பு — பொறி மெய், வாய், கண், மூக்கு, செவி. அயல் - அயற்புலனுக்கு ஆகுபெயர் "பிறிந்தேன பெற்றமக்கள்" என ஆழ்வாரும், "பிறியார் பிறிதென்னும்" என அயோத்தியாகாண்டத்தில் இந்நூலாசிரியர் தாமும கூறியிருத்தலால 'பிறி' என்பதோர் வினையுமுளதாகக் கொள்ளக்கிடக்கின்றது. எதுகைநோக்கித் திரித்ததெனினு மிழுக்காது. அன்பாவது - நமக்கினியவொன்று துணியப்படுவோர் மேலுள்ளதாகியகாதல், "என்னிலயாரு மெனக்கினி யாரில்லை - யென்னிலும்மினி யகனெருவ னுளன்" என்ற தேவாரத்தால் நமமிலும நமக்கினியார் கட்டுளே யாதலையறிக. அறிவார் அன்பும பத்தியும் ஒருபொருட் கிளவியென்பர்.

அன்பும பத்தியும் தமமுள் வேறுதலே "பாட்டுக்கோ வன்பினுக்கோ பத்திக்கோ வன்பாதங்க, ணீட்டுக்கெல் லாங்குறுகி நின்றாய் பராபரமே" எனனும் செய்யுளானறிக. (௪௪)

வேதங்க ளறைகின்ற வுலகெங்கும் விரிந்தனவுன
பாதஙக ளிவையெனனிற படிவஙக ளெபபடியோ
வோதஙகொள் கடலனறி யொன்றினொ டொனறுவவாப
பூதஙக டொறுமுறைநதா லவையுனனைப பொறுககுமோ.

இ - ள். வேதஙகள அறைகினற - சகல வேதங்களுந துதியாநின்ற, உன் பாதஙகள இவை - உனனுடைய இபபாதஙகள், உலகு எஙகும விரிநதன எனின். உலகஙகளெலலாம பரநதனவெனறால, படிவஙகள - மறறைத திருவவயஙகள், எப்படியோ - எததனமையனவோ? ஓதஙகொள கடல அனறி - குளிர்ச்சியைக கொணட கடலில மாததிரமே யலலாமல், ஒனறினொடு ஒனறு ஒவ்வா - ஒனறனொடொனறொததிராத, பூதஙகள தொறும உறைநதால - பஞசபூதஙகளினும தஙகினால், அவை உனனைப பொறுககுமோ - அவை உனனைத தாஙகுமோ?

குறிபபு —வேதம இதறகு (ததுவஙகளை) அறிவது அலலது அறிவிபபது எனபது அவயபபொருள. வேதஙகளிற கூறபபடுவனவெலலாம எமபெருமானது திருவடிகளின மகிமையேயாதலால "வேதஙகளறைகினற" எனறான அறைகினற பாதஙகளென வியையும - இனி, 'வேதஙகளறைகினறவெனபதனை' உலகிறகும 'உன' எனபதறகும விசேடணமாககிக கூறுதலுமொனறு இவவிராதன எமபெருமானுடைய முடிவிலாறறலுடைமையை அறியகிலலாது உருவின சிறுமைகணடெளிபபொருது வீழநதுபடடானுகவின தனனைப்போலவே யுருவின சிறுமைகணடெளி வீழநதுபடட மாவலி யெனனுமாககன வரலாறு கூறுவான "உலகெஙகும விரிநதன வுன்பாதஙகளிவையெனனில" எனறான இபபோது யான சேவிககும இவவரிய சிறியதிருவடிகளே முனனம உலகெஙகும பரநதனவென்னின, ஏனைய பெரிய திருவடிவஙகளெனகொண டெனசெயதனவோ? எனபான, "பாதஙகளிவையெனனிற படிவஙக ளெபபடியோவெனறான" அணுவாகி மேருவாகி யபபாலு மபபாலுமாகி விளஙகும எமபெருமானைப பிறரார றிவாரென றான எனபதாம "பிரானுன பெருமை பிறரா ரறிவார, உராஅ யுலகளநத ஞானறு வராகத, தெயிறறளவு போதாவா றெனகொலோ வெநதை, அடிககளவு போநத படி" எனனும அருளிசசெயலையீணடு நோககுக ஒதம கொளளுமும அலையுமாம். ஓதஙகொள கடலினுறைதல - திருபபாறகடலில யோகநித்திரை செயதலையும,பிரளய சமுததிரததில ஆலிலையிற கணவளாதலையுங குறிததது சமுததிரம உன்னைத தாஙகி நிறபதோ எனின, அதுவும உன சாமாததிய சகதியால தாஙகி நிறபதாககாணப்படும எனபான 'ஓதஙகொள கடலனறி' எனறான. "பாலன றனதுருவா யேழுலகுண டாலிலையின,மேலனறு நீதுயினற மெய்யெனபா—ஆலனறு, வேலை நீருளளதோ விணணதோ மணணதோ, சோலைசூழ் குனறெடுத்தாய சொல."என்னும் பாசுரததையுஙகாணக. பூதஙகள-பிருதிவி, அபபு, வாயு, ஆகாயம எனபன. இவையொனறினொடொனறொவவாமையாவது - பிருதிவி, நிலையாயிருததலும வாசனையுடையதாதலும்; அப்புப பாயநதோடுதலும குளிர்ந்த பரிசமுடையதாதலும்; தேயுமேனோககியெரிதலும உஷண ஸபரிசமுடையதாதலும, வாயு எவவிடத்திசையிலும் வீசுதலும் உருவினறிப் பரிசமுடையதாதலும; ஆகாயம எஙகும பரவியிருத்தலும்

சொறபொங்கு பெருமபுக ழோய்தொழின்மாய்
சிறபஙகளின வீவன சோருவெனே
யறபஙகரு தேனெ னருநதவமோ
கறபமபல சென்றது காணுதியால.

இ - ள். சொல பொங்கு - சொல மிகுதறகுக காரணமாக [சொலலசசொல்ல வளாகினற], பெருமபுகழோய - மிகக புகழினையுடையவனே! தொழிலமாய சிறபஙகளின - செயலறற சித்திரஙகளைபபோல, வீவன - அழியுநதனமையன வாய உலகஙகளை, சோருவெனோ - (யான) அடைவேனோ? அறபம கருதேன - அறபமான பதவிகளை (யான மனததினும) நினையேன, என அருநதவமோ - என னுடைய அரியதவமோ, கறபமபல் சென்றது - பல கறபகாலஙகள கழியபபெற றன, காணுதி - (நீ இதனை) அறிவாயாக

குறிப்பு —சொறபொஙகு பெரும்புகழ் - சொலலுககடஙகாத புகழெனவுஞ சொலவள மிகுநத புகழினையெ எனவுமாம சித்திரஙகள நாளடைவில உருககுலைந தழியுமாறுபோல அழியுமியல்பின தெனபாா 'சிறபஙகளின' வீவன என்றா அநேக கறபஙகளாகத தவஞசெயதுகொணடிருககிற யான கறபஙகடோறு மழிந திடுகின்ற உலகஙகளை மனததாலு நினையேன என்றா எனக அறபம - ஆகுபெயா. ஒ - உயாவுசிறபபு சிறபம - கறபம - அறபம வடசொறகள கறபம - யுகவெனபாருமுளா (கஅ)

சொறறுநதா மன்றிது சூழகழலாய
பெறறுமபெறு கிலலதொா பெறறியதே
மறறெனபல சொலலிவண வநதுதவ
முறறுமபக ருனு முதடிதனனுல

இ - ள. சூழகழலாய - கட்டிய கழலையுடையவனே! இது - இவவாாததை, சொறறும தரம அனறு-(எனனிடததில) சொலலததககதனறு, (அபபிரமலோகம), பெறறும பெறுகிலலது ஓா பெறறியது-அடைநதாலும அடையாததை யொததததனமையுடையது, (ஆதலால), மறறு பல சொல என - வேறு பல வாாததை சொலலிப்பயனெனனே? இவண வநது - (யான) இஙகு வநது, தவம முறறும பகல தானும-தவம முடியும [நிறைவேறும] காலததையும, முடிததனன - முடிததேன

குறிப்பு — பிரமலோகம புககவாககும மீணடுமபிறபபுணடாதலால 'பெற்றும பெறுகிலலதொா பெறறியது' என்றா இனி, 'இவண வநது உதவ' எனககொணடு ஸ்ரீராமன யானுள்ள இடததைத தேடிவநது மோக்ஷததைத தநதருளுமபடிக்கான தவததை முடிநதனனெனக கூறுதலுமாம. முறறும பகருனும் - அநேககாலமாக எனறலுமொனறு (கக)

சிறுகாலை யிலாகிலை யோதிரியா
குறுகா நெடுகா குணமவேறுபடா
வுறுகாலகிளா பூத மெலாமுகினும்
மறுகாநெறி யெயதுவெண வானுடையாய.

இ - ள். வான் உடையாய் - தேவலோகத்தையுடைய இந்திரனே! சிறுகாலை இலா - சிறியகாலவரையறையில்லாமலும், நிலையோதிரியா - நிலைமை மாறுபடாமலும், குறுகா - குறைதலில்லாமலும், நெடுகா - வளர்தலில்லாமலும், குணம் வேறுபடா - குணம் வேறுபடாமலும், உறுகால் - (ஊழிக்காலத்தில்) உண்டாகின்ற காற்றினாலே, கிளர்பூதம் எலாம் உகினும் - விளங்குகின்ற பூதங்களெல்லாம் அழிந்தாலும், (அக்காலத்திலும்), மறுகாநெறி - அழியாதோங்கும் பதவியை [பரமபதத்தை], எய்துவென் - (யான்) அடைவேன்.

குறிப்பு —வைகுண்டபதவியானது காலம், நிமிஷம், காஷ்டை, கலை, நாழிகை, முகூர்த்தம், நாள், பக்ஷம், மாதம், இருது, வருடம் முதலிய காலவரையறையில்லாது அகண்டமாயிருத்தலின் 'சிறுகாலையிலா' என்றார். நிலை திரியாதிருத்தல்—இளமை முதுமை யடையாதிருத்தல். முக்குணங்களும் மாறிமாறி வராமல் என்றும் சத்துவ குணமே தலைக்கொண்டிருப்பதால் 'குணம் வேறுபடா' என்றார். 'உறுகால் கிளர் பூதமெலாமுகினும்' என்பதற்கு, பெரியகாற்றுமுதலாக விளங்குகின்ற பூதமெலாம் அழியினும் எனப் பொருள்செய்தலுங் கூடும். உகுதல்- அவ்வவை தோன்றியவிடத்தே ஒடுங்குதல். இனி, கால் என்பது வழியெனக்கொண்டு பலவழிப்பட்ட பூதங்களென்றுரைத்தலுமாம். பூதமெல்லாம் அழிந்தொடுங்குங்காலத்தும் அழிவில்லாது நித்தியமாக இருத்தலின் மோக்ஷம் 'மறுகாநெறி,' எனப்பட்டது. (௨௦)

என்றின்ன விளம்பிடு மெல்லையின்வாய்
வன்றிண்சிலை வீரரும் வந்தணுகா
வொன்றுங்கிள ரோதையி னுணர்வார்
நின்றென்னைகொ லின்ன தெனுநினைவார்.

இ - ள். என்று இன்ன விளம்பிடும் எல்லையின் வாய் - என்று இப்படிப்பட்ட வார்த்தைகளைச் (சரபங்கமுனிவர்) சொல்லிமுடித்தபொழுது, வல் திண் சிலை வீரரும் - வலிய வில்லினையேந்திய ஸ்ரீராம லக்குமணரும், வந்து அணுகா - (அவ்வாச்சிரமத்தை) வந்துகிட்டி, ஒன்றும் - (அவ்விடத்துப்) பொருந்திய, கிளர் ஓதையினால் - பேரிரைச்சலினால், உணர்வார் - (அதன் காரணத்தை) அறிபவர்களாய், நின்று - (அவண் சற்றே) நின்று, இன்னது என்னை என்று - இஃதென்னவென்று, நினைவார் - ஆலோசிப்பாராயினார்.

குறிப்பு —வன்றிண் - ஒருபொருட்பன்மொழி, இனி, அடைவே சிலையோடும் வீரரோடுங்கூட்டி வலிய சிலையையுடைய திண்ணிய வீரர் என்றுரைத்தலுமாம். தனித்தனியே ஒவ்வொருவருமுரைத்த வொலி யெல்லா மொன்றாய்த்திரண்டு பேரொலியாய் உருத்தெரியா வண்ணமெழுதலின் 'ஒன்றுங் கிளரோதை' என்றார். நின்று நினைவாரென நிதானித்து யோஜித்தாரெனலுமாம். (௨௧)

கொம்பொத்தன நாலொளிர் கோள்வயிரக்
கம்பக்கரி நின்றது கண்டனமா
லிம்பர்த்தலை மாதவர் பாலிவணு
மும்பர்க்கர செய்தின னென்றுணரா.

இ - ள். ஒளிர் - பிரகாசிக்கின்ற, கோள் - வலிமையுடைய, வயிர - வயிர மிழைத்த பூணினையுடைய, ஒத்த நால் கொம்பு - (ஒன்றினையொன்று தம்மில்) ஒத்துள்ளனவாகிய நான்கு கொம்புகளையுடைய, கம்பம் கரி - கம்பத்திற் கட்டப்

படுகின்ற (ஐராவதமென்னும்) யானையானது, நின்றது கண்டனம் - நிற்கின்றதைப் பார்த்தோம், ஆல - ஆதலால், உம்பாக்கு அரசு இவன் - இந்தேவேந்திரன், இம் பாத்தலே - இவ்வுலகத்திலுள்ள, மாதவாபால - சரபங்கரிடத்து, எய்தினன் ஆம் என்று உணரா - வந்தான்போலும் என்றறிந்து.

குறிப்பு—தம்முட் சிறிதும் பெரிதுமாதலின்றி ஒரே அளவாயிருத்தலின் 'ஒத்த கொம்பு' என்றார் ஒருகொம்பு போலவே மற்றொன்றுமிருந்ததெனவுணர்க. இதுபற் றியன்றே "ஓராவிற் கிருகோடு தோன்றினாற்போலத் தம்முள் ஒத்த அன்பினராய்" என்றார் திருக்கோவையார் உரையினும் "சுகனம சுகனுகாரம்" என்றபடி தமக்குத் தாமே யிணையான கொம்புக ளென்றுமாம். இந்திரனுடைய யானையாகிய ஐராவ தத்திற்கு நான்கு கொம்புகளுண்மையை "ஈரிரு மருப்புடைய வாரணமுகத்தே யிந் திர னெதிராந்தவரை வென்றவருமோ" என்ற கலிங்கத்துப்பரணிக் கவியினானுமு ணர்க வயிரம் - கிம்புரிக்குக் கருவியாகுபெயர் கம்பக்கரி என்றதற்கு அசைந் தாடுகின்ற யானையென்றாவது, காண்போர்க்கு நடுக்கத்தைச் செய்கின்ற யானை யென்றாவது பொருளுரைத்துக் கொள்க இனி, வயிரம் என்பதனைக் கம்பத்தோடு கூட்டி யுரைத்தலுமாம். தலை மாதவா - மற்றை முனிவர்கட்கெல்லாம் தலைவராகிய மாதவரெனலுமமையும் மாதவா - உயர்வினு லொருவரைக்கூறும் பன்மை ஈண்டு ஒருமைச்சொல் பன்மைச்சொல்லோடு மயங்குதலின்மையின் "ஒருமை சுட்டிய பெ யாநிலைக்கிளவி - பன்மைக்காகு மிடனுமாருண்டே" என்புழி யடங்காமையறிக. மற்றை முனிவரையுங் கூட்டி 'மாதவா' என்றாரெனினுமிழுக்காது. அருகிருத்தல் பற்றி இவனெனச் சுட்டினார் (௨௨)

மானேயனை யாளொடு மைந்தனையும்
பூநேர்பொழி லின்புற மேநிறுவா
வானேறென வாளரி யேறிதெனத்
தானேய வகன்பொழில் சார்தலும்.

இ - ள். (அப்பொழுது ஸ்ரீராமபிரான்), மானே அனையாளொடு - மான்போ ன்ற பார்வையையுடைய சீதாபிராட்டியுடன், மைந்தனையும் - இளையபெருமானை யும், பூ நேர் பொழிலின்புறமே நிறுவா - பூக்கள்நிறைந்த அச்சோலைக்கு வெளியே நிறுத்திவிட்டு, ஆன் ஏறு என - இடபம்போலவும், ஆள் அரி ஏறு இது என - மிருகராசனாகிய ஆண்சிங்கம்போலவும், தானே - தானமாத்திரமே, அ அகன் பொ ழில் - விசாலமான அந்தச்சோலையை, சார்தலும் - அடைந்தவளவில்

குறிப்பு—ஆன், ஆளரி, மிடுக்கு நடை முதலியவற்றிற் குவமை வானேறு என்பதற்கு இடியேறெனவும் பொருள்கொள்ளலாம், "அசனியேறனைன" என்றார் பிறரும். ஆளரி - நரமடங்கலுமாம். தண்ணியதாய அழகுவாய்ந்து உலகுய்ய க் காரணமாகிய மேகத்தினிடத்தேயே தீயதாய உலகை அழிக்கும் இடியும், குடி வாழ்க்கைக்கு ஏற்றதாய்த் தாங்கிக்கொண்டிருந்த கம்பத்திடத்தேயே குடியழி வுக்கு ஏற்றதாகிய சிங்கமும் கரந்துவைத்ததுபோல ஸ்ரீராமபிரானிடத்திலும் வணங்கினார்க்குக் காமனுயத்தோன்றுங் கருணையும் பிணங்கினார்க்கு எமனுயத் தோன்றுந் தறுகண்மையும் காணப்படுமென்பார் இங்ஙனங் கூறினாரெனக் பார்த் தாற் பசுவும் பாய்ந்தாற் சிங்கமும்போலவான என்பார் 'ஆனேறென ஆளரியேறி தென' என்றார். வானேறு சிறந்த இடபமுமாம். இங்ஙனங்கொள்ளின் மோனே நயமழியாவிதம் வாளரியேறெனக்கொண்டு ஒளியுள்ள சிங்கமெனப் பொருள்காண்க

கண்டாமவை யாயிர முங்கதுவக்
கண்டாமரை போற்கரு ஞாயிறெனக்
கண்டானிமை யோரிறை காசினியின்
கண்டானரு நான்மறை யின்கனியை.

இ-ள். இமையோர் இறை - தேவராஜனாகிய இந்திரன், காசினியின்கண் - இப்பூமியினிடத்து, அரு நான்மறையின் கனியை - அறிதற்கரிய நான்குவேதங்களின் பலமாயுள்ள ஸ்ரீராமபிரானை, கருஞாயிறு என - கரிய சூரியனைப் (பார்த்தாற்) போல, கண் அவை ஆயிரமும் - (இந்திரன் தன்னுடைய) ஆயிரங்கண்களும் கண் தாமரைபோல் கதுவ - மதிப்பினையுடைய தாமரைமலர்களைப்போலப் (பொருந்தி) மலர, கண்டான் - பார்த்தான்.

குறிப்பு —"கருவரைபோல நின்றானை" என்றதிருவாலிநாடரும், "காகுத்தா கரியகோவே", "கண்புரத்தென் கருமணியே" என உறைந்தைத் திருநாடரும், "மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ" என இந்நூலாசிரியரும் ஈடுபட்டபடி எம்பெருமானது திருமேனியின் நிறம் கருமையாதலின் "கருஞாயிறென" என்பப் புணர்ந்து கூறினரெனக் "என்றுகொலோ கண்குளிரக் காணுநாளே" என்றபடி இந்திரன் கண்குளிரக்கண்டானென்பதாம். இரவும்பொலி தாமரையானென முன்னாகக் கூறியதற்கிணங்க இங்கு அத்தாமரை மலர்தற்குக் காரணமாக 'கருஞாயிறு' எனக் கூறினர். சகல வேதங்களானும் புகழப்பட்டுப் போகிய மான கனிபோல நுகரப்படுதலின் 'நான்மறையின்கனியை' என்றார். இன்கனி இனிய கனியுமாம். சாகையிற்பழுத்தபழம் (சாகை - வேதமும் கொம்புமாம்) இனியதெனச் சொல்லவும் வேண்டுமோ? "கரும்பினைக்கனியைச் சென்று நாடி" "நெய்யச்சுவைத்தேற லெனக்கோகனியென்கோ பாலெனகேனோ" "கட்டியைத் தேனை யமுதைநன் பாலைக் கனியினைக் கரும்புதன்னை" என்றார் பெரியாரும். காசினி காஸ்யபீ என்னும் வடசொற்சிதைவு. மூவேழுதலைமுறை க்ஷத்திரியவதஞ் செய்த பரசுராமரால் காசிபருக்கு யஜ்ஞதக்ஷிணையாகக் கொடுக்கப்பட்டதாகலின் பூமிக்கு இப்பெயர் வரன்முறை. தாம், தான் - அசைகள். இது யமகவணி. (௨௪)

காணுமன நொந்து கவன்றனனு
லாணுத்தனை யந்தணர் நாயகனை
நாணாளும் வணங்கிய நன்முடியாற்
றூணாகிய தோள்கொ டவற்றொழுவான்.

இ-ள். (இந்திரன்), காணு - (ஸ்ரீராமபிரானையிவ்வாறு) தரிசித்து, மனம் நொந்து - மனம் வருந்தி, கவன்றனன் - கவலைப்பட்டவனாய், ஆணுத்தனை - புருஷோத்தமனும், அந்தணர் நாயகனை - பிராமணர்கட்குத் தலைவனுமாகிய ஸ்ரீமந்நாராயணனை, நாணாளும் வணங்கிய நன்முடியால் - தினந்தோறும் வணங்கி வராநின்ற (தனது) சிறந்த தலையாலும், தூண் ஆகிய தோள்கொடு - தூண்களுக்கொப்பாகிய தோள்களாலும், அவன் - (அந்நாராயணனது திருவவதாரமாகிய) ஸ்ரீராமபிரானை தொழுவான் - வணங்கி அஞ்சலி செய்வானாயினன்.

குறிப்பு —தங்களைக் காப்பதனிமித்தம் அரவணை துறந்துபோந்து காயசருகினைறு கல்லணைதுயின்று பொற்கலையரையின் வற்கலைதரித்துப் பங்கயச்சீறடி பரன்மிசை நடந்து கோவக்கானகத்து வந்தானே என்று வருந்தினனாகலின் 'காணுமன நொந்து கவன்றனன்' என்றார். அன்றியும், இத்தகைய ஸ்ரீராமனைக்கண்டு தரி

சித்து வைகுந்தம் பெறக்கருதிய முனிவரைப் பிரமலோகத்துக்கு அழைத்தோமே யென்று கவன்றன்ன என்னனுமாம் தான் குறையிரப்ப நோக்கு தமபியாகத் திரு வவதரித்துக் காத்தமையால 'ஆனந்தனே' என்றார். ஆள்+நாதனே எனப் பிரித் துரைத்தலுமமையும் சாதிவேதியனுக்கலின் 'அந்தணா நாயகனே' என்றார். அவற றொருவான உயர்திணையில 'ஐ' உருபு தொக்கது "பொதுப்பெயருயர் திணைப் பெயர்" என்னுஞ் சூத்திரவிதிபற்றி யியலபாகாது "இயல்பின விகாரமும்" னெ னும் விதிபற்றி விகாரமாயிற்று (உரு)

## வேறு

துவசமார் தொல்லமருட னுரைச் செற்றுஞ்
சுருதிப் பெருங்கடலின் சொற்பொருள்கற் பித்துந்
திவசமா நல்லறத்தின் செந்நெறியி னுய்த்துந்
திருவளித்தும் வீடளித்துஞ் சிங்காமைத் தங்கள்
கவசமா யாருயிராய்த் தவமாய்க் கண்ணாய்க்
கடையிலா ஞானமாய்க் காப்பானைக் கண்டு
வவசமாய்ச் சிந்தையழிந் தயலே நின்று
னறியாதான் போல வறிந்தவெலாஞ் சொல்வான்.

இ - ள் துவசம் ஆர் - வெற்றிக்கொடிகள் நிறைந்த, தொல் அமருள் - பழ மையான [முன்னடந்த] யுத்தங்களில், துனுரை - பகைவரை, செற்றும் - கொன்றும், சுருதி பெருங்கடலின் - பெரிய கடல்போன்ற வேதங்களின், சொல் பொருள் - பதங்களையும் அருத்தங்களையும், கற்பித்தும் - உபதேசித்தும், திவசம் - தினந்தோறும், மா நல் அறத்தின் - சிறந்த தருமத்தின், செந்நெறியில் - நல்வழி யில், உய்த்தும் - செலுத்தியும், திரு அளித்தும் - சம்பத்தைக்கொடுத்தும், வீடு அளித்தும் - பரமபதத்தைக் கொடுத்தருளியும், சிங்காமை - அழியாதபடி, தங்கள் தங்கட்கு, கவசமாம் - மெய்க்காவற்கருவியாயும், ஆருயிராய் - அரிய உயிராகியும், தவமாய் - தவமாகியும், கண்ணாய் - கண்ணாகியும், கடையிலாஞானமாய் - முடிவில லாத தத்துவஞானமாகியும், காப்பானை - காக்கின்ற ஸ்ரீராமபிரானை, கண்டு - (இந் திரன்) கண்டு, அவசமாய் - மெய்ம்மறந்தவனாய், சிந்தை அழிந்து - மனமுருகி, அயலேநின்று - (அவனது) பக்கத்தில் நின்று, அறியாதான்போல - (அவனது மேன்மைகளைத்) தெரியாதவன்போலவே, அறிந்த எலாம் - (தான்) அறிந்த (அவ னது) திருக்கல்யாணகுணங்களை யெல்லாம், சொல்வான் - கூறித் துதிசெய்வானா யினன்.

குறிப்பு -- துவசம் தவஜமெனனும் வடசொல்லின் விகாரம் தேவாசுரயுத்தங் களிற் பலமுறையுஞ் சென்று அசுரரைவென்று அமரரைக்காத்தமையான 'துவச மார் தொல்லமருட னுரைச் செற்றும்' என்றார். 'சுருதி' என்றது, கேட்கப்பட்டு வருவதென்னும் பொருளினது, வேதம் 'எழுதாக்கிளவி' எனப்படுதலுமிதுபற்றியே ஆதியில் ஹம்ஸரூபியாய் வேதங்களையும் அவற்றின் பொருள்களையும் பிரமதேவனுக் குக் கற்பித்தமையான 'சுருதிப்பெருங்கடலின் சொற்பொருள்கற்பித்தும்' என் றார். வேதங்கள் அனந்தமாதலின் அவற்றிற்குப் பெருங்கடலை யுவமையாக்கினார். "அறங்காத்தற் குனக்கொருவ ராருமொரு துணையின்றிக், கறங்காகு மெனத்திரிய நீயேயோ கடவாயதான்" என்றும், "தருமத்தின் தனிமூர்த்தி" என்றும் விராதன் வதைப்படலத்திற் கூறியாங்கு தருமந்தவறி யுலகங் கெட்டழியுங்காலத்தில் அப்

பொழுதைக் கிப்பொழுது அநேக திருவவதாரங்களை செய்து தருமத்தை நிலைநிற்குமபடி செய்தலால் 'தவசமா நலலறத்தின செந்நெறியினுய்த்து' என்றார். இம்மை மறுமை வீடெனனும் மூன்றினும் அளவிலலாத இன்பங்களைத் தன் திருவடியடைந்தோா அனுபவிக்குமபடி திருவருள் புரிதலால (திருவளித்தும வீடளித்தும) என்றார், "சாயகொண்ட விம்மையுஞ் சாதித்து வானவாநாடடையு, நீ கண்டுகொளளென்று வீழுந்தரு நின்று நின்றே" என்றார் பெரியாரும, வீடு முதனிலை திரிந்த தொழிற்பெயா, ஸம்ஸார பந்தங்களினின்று விடுபடுவது என்பது இதன்பொருள், முத்தியென்பதறகும இதுவே பொருள் திரு செல்வம சிங்காமை வினையெஞ்சு கிளவி மஹா பிரளயகாலத்தில உலகங்கள் எல்லாவற்றையும தன வயிற்றுள் அழியாதபடி வைத்துக்காத்தலால 'சிங்காமைத் தங்கள் கவசமாய' என்றார் அருமை என்னுமபண்பு திரிந்து ஆர் என நின்றது எல்லாபபொருள்களிலும அந்தரியாமியா விருத்தலபற்றி 'ஆருயிராய' என்றார். எமபெருமானது திருவடி நிழலின கண்ணே ஜனனவிடாய தீாந்துய்தற்குத் தத்துவஞானமும அத்தத்துவஞானம பெறுதற்கு விவேகமும், அதற்குத்தவமும முறையே ஒன்றுக்கொன்று இன்றியமையாதனவாயுள்வாதலால அவையனைத்தும எமபிரானது ஸ்வரூபமே யென்பது விளங்க 'தவமாயக் கணணுய்க் கடையிலா ஞானமாய' என்றார். காப்புடைக் கடவுளாதலின, 'காப்பானே' என்றார் அவசம - சுவாதீனமின்மை, இதுவும சிந்தையழிதலும, பக்தி மிகுதியாலுண்டான மெய்ப்பாடுகள்　(௨௬)

தோயந்தும பொருளனைத்தும் தோயாது நின்ற
　　சுடரே தொடக்கறுத்தோா சுற்றமே பற்றி
நீந்த வரிய நெடுங்கருணைக் கெல்லா
　　நிலையமே வேத நெறிமுறையி னேடி
யாய்ந்த வுணர்வி னுணர்வே பகையா
　　லலைப்புண் டடியே மடிபோற்ற வந்நா
ளீந்த வரமுதவ வெய்தினையே யெந்தா
　　யிருநிலத்த வோநின் னிணையடித்தா மரைதாம்.

இ - ள் பொருள் அனைத்தும - எல்லாபபொருள்களிலும, தோய்ந்தும - (உள்ளும புறமபுங்) கலந்திருந்தும, தோயாதுநின்ற - (அவற்றின குணதோஷங்களிலேதான) சமபந்தப்படாமலே நின்ற, சுடரே - சோதியுருவமே! தொடக்கு அறுத்தோா - அகப்பற்றுப் புறப்பற்றுக்களை முற்றத்துறந்த முனிவாகட்கு, சுற்றமே - உறவானவனே! பற்றி நீந்த அரிய - (ஒன்றைப்) புணையாகக்கொண்டு கடப்பதற்கரியதாகிய, நெடுங் கருணைக்கெல்லாம நிலையமே - மிகுந்த அருளுக்கெல்லாம இருப்பிடமானவனே! வேத நெறிமுறையின - வேதங்களிற்கூறிய வழிகளின் முறைமையால, ஆய்ந்த - ஆராய்ந்தறிந்த, உணர்வின - தத்துவஞானத்திற்கு, உணர்வே - அறியப்படும் பொருளே! எந்தாய - எமக்குத் தாயும் தந்தையுமானவனே! அடியேம - அடியவர்களாகிய யாம, பகையால - (அரக்கர்முதலிய) பகைவர்களால், அலைப்புண்டு - துன்புறுத்தப்பட்டு, அடிபோற்ற - (உமது) திருவடிகளைத் துதிக்க, அந்நாள் - அப்பொழுது, ஈந்த - கொடுத்தருளிய, வரம - வரத்தின்படி, உதவ எய்தினையே - உதவிபுரிதற்கு (இங்கு) வந்தருளினையே! நின இணை அடி தாமரை - உன்னுடைய இரண்டு திருவடித்தாமரைகள், இருநிலத்தவோ - இப்பெரிய பூமியிற் பொருந்தத்தக்கனவோ?

குறிப்பு —'தோய்த்தும் பொருளனைத்தும் தோயாது நின்ற' என்றதின் விசேஷார்த்தத்தை 'பேதியாது நிமிர் பேதவுருவம் பிறழ்விலா' எனக் கீழ் உரைத்த காப்புச் செய்யுளின் விசேடவுரையிற் கண்டுணர்க. மனத்தினது அஞ்ஞான விருளை யொழித்து ஞானவொளியைத் தருதலின் 'சுடரே' என்றான். முனிவர்களைக் காத்தற்பொருட்டு மானிடராய்த் திருவவதாரஞ்செய்தருளி யனன்றோபாற்சோதத்தனால் 'தொடக்கற்றதோர் சுற்றமே' என்றான். 'சுற்றமே' என்றது: விசிஷ்டாத்துவிதக் கொள்கை, "தண்டுழாய் மாலைமார்பன் றமர்களாய்" என்றார் பெரியாரும். நினது கருணை யின்வெள்ளமின்னதென்று அளவிடுதற்கு வேதசாஸ்திரமுதலிய ஆதாரங்களைக் கொண்டேனும் மற்றெவ்விதத்தாலும் யாவரானுமியலாது என்பான் 'பற்றிநீந்தவரிய நெடுங்கருணைக் கெல்லா நிலையமே' என்றான். ஈண்டு 'நீந்த' என்னும் சொல் லாற்றலான், கருணை கடலுக்குவமிக்கப் பட்டமைபெற்றாம். பெறவே, பெரியோர் காண்பது எங்கணுங் கருணைவெள்ளமே யாகலானும், அஃதின்புருவினதாகலானும், அவ்வின்பம் கண்டமாத்திரையின் மேற்செல்லவொட்டாது வேண்டிய வேண்டியாங்களிக்குந் தன்மையதாகலானும் அதனைக்கடத்தல் இயல்பிலேயே கூடாதாயிற்று. நீந்த முயன்றோரு மவ்வெள்ளத்துக் கொழு கொம்பு பெறாது அதனூடேயாந்து தோய்ந்து மயங்குவர் என்பது 'பற்றி' யென்பதனாற் குறிக்கப்பட்டது. வேதங்களிற் கூறிய வழிகளின் முறைமையால் ஆராய்ந்தறியப்படுகின்ற மெய்ப்பொருள் எம்பிரானேயாகலின் 'வேத நெறிமுறையினேடி யாய்ந்த வுணர்வினுணர்வே' என்றான். பகை பண்பாகுபெயர். பிரமதேவன் முதலிய தேவரையும் உளப்படுத்தி 'அடியேம்' என்றான். 'அந்நாள்' என்றது அமரர்கள் மகாமேருவின் மேலிருந்து பாலாழியிற் பள்ளிகொள்ளும் பரமனைப் பிரார்த்தித்தகாலத்தினை. ஈந்த வரம் பாலகாண்டத்து "வருந்தலவஞ்சகா" என்பது முதலாகக் கூறப்பட்ட திருவவதாரப் படலச் செய்யுட்களிற் வருதல் அறிக. ஏந்தாய் இரட்டுறமொழிதல். (௨௭)

மேவாதா ரில்லை மேவினரு மில்லை
வெளியோ டிருளில்லை மேல்கீழு மில்லை
மூவாமை யில்லை மூத்தமையு மில்லை
முதலிடையோ டீறில்லை முன்னொடுபின் னில்லை
தேவாவிங் கிவையோநீ சென்றநிலை யென்றால்
சிலையேந்தி வந்தெம்மைச் சேவடிக ணோவக்
காவா தொழியிற் பழிபெரிதோ வன்றே
கருங்கடலிற் கண்வளராய் கைம்மாறு முண்டோ

இ - ள் தேவா - தேவனே! கருங்கடலில் - கருநிறமடைந்த திருப்பாற்கடலினிடத்தே, கண்வளராய் - திருக்கண்வளர்ந்தருளுகின்ற ஸ்ரீமந்நாராயணனே! (உனக்கு), மேவாதார் இல்லை - பகைவர்களில்லை, மேவினரும் இல்லை - நண்பர்களும் இல்லை, வெளியோடு இருள் இல்லை - ஒளியும் இருளும் இல்லை, மேல் கீழும் இல்லை - மேலுங்கீழும் இல்லை, மூவாமை இல்லை - இளமையில்லை, மூத்தமையும் இல்லை - முதுமையும் இல்லை, முதல் இடையோடு ஈறு இல்லை - ஆதியும் மத்தியமும் அந்தமும் இல்லை, முன்னொடுபின் இல்லை - முன்னும் பின்னும் இல்லை, நீ சென்ற நிலை - நீ யடைந்துள்ள நிலைமை, இங்கு இவையோ என்றால் - இங்கு (உரைத்த) இவைகளே என்றால், சிலை ஏந்தி - கோதண்டத்தைக் கையிலேந்திக்கொண்டு, சேவடிகள் நோவவந்து - சிவந்த (நினது) திருவடிகள் நோகு

ம்படி (இக்காட்டில் நடந்து) வந்து, காவாது ஒழியின் - (எம்மைக்) காவாமற்போ னால், பழிபெரிதோ - பெரும்பழி யுண்டாமோ? அன்றேல்-அதுவன்றியின், கைம் மாறும் உண்டோ - (எங்களாற் செய்யப்படும்) பிரதியுபகாரமும் உளதோ?

கருத்து —பகை நட்பு முதலியன இல்லாதாய்! நீ, நின்னிலையறியாது இவ்வு லகில் மனிதனாகத் திருவவதரித்துச் சிலையேந்தி யிக்காட்டையடைந்து அடியேங் களைக் காவாதொழியின் நினக்குப் பெரும்பழியுண்டாமோ? அன்றி, நீ செய்யும் உதவிக்குப் பிரதியுபகார மேதேனுமுண்டோ? இவ்விரண்டனு ளொன்றுமில்லை; ஆதலின், சரணாகதி யடைந்தோர்க்கு அபயம் அளித்தலே நின்திருவருளினியல்பு என்பதாம்.

குறிப்பு —மேவாதார் விருமபிச் சேராதவர் மேவினர் விருமபிச் சேர்ந்த வர் என்னிலென்பதன் மரூஉ. திருப்பாற்கடல் வெண்ணிறத்ததாயினும் எம் பிரானது திருமேனியின் நிழல் கதுவலாலே கரியநிறம் பெறுதலின், 'கருங்கடல்' என்றான், "நீலக்கடல் கடைந்தாய்" "நீலக்கடலு ணெடுங்காலங் கண்வளர்ந்தான்" "கருந்தண்மா கடற்கண் டுயின்றவன்" என்றார் பெரியாரும். இனி, "கருமையே பெருமையாகும் கறுப்பொடு வலியுமாமே" என்பவாகலின், 'கருங்கடல்' பெரிய கடலென்றுமாம். வளராய் செய்யுளாய் மறையாகாது வழக்காய் உடன்பாடுணர் த்திற்று, இது "வேணடுவனமபி" என்னுஞ் சீந்தாமணி நாமகளிலம்பகச் செய்யு ளில் "வல்லான்" என்பதற்கு உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினியர் உரைத்த உரையான் விளங்கும். இனி, எதிர்மறையாகவேகொண்டு கடலிற் பள்ளிகொள் ளுதலை விடுத்து இவண் திருவவதரித்து வந்தோனே என்றுங் கூறலாம். 'சேவடி கள் நோவ' என்பதூஉம் மேற்கவியில் தாமரைக்கை நோவ என்பதூஉம் பகுதி மிகுதியை விளக்காநின்றன. (உஅ)

நாழி நவைதீ ருலகெலா மாக
நளினத்து நீதந்த நான்முகனார் தாமே
ஊழி பலபல்வு நின்றளந்தா லொன்று
மூலவாப் பெருங்குணத்த வுத்தமனே மேனாட்
டாழி தரையாகத் தண்டயிர் நீராகத்
தடவரையே மத்தாகத் தாமரைக்கை நோவ
வாழி கடைந்தமுத மெங்களுக்கே யீந்தா
யவுணர்க்கா ணின்னடிமை யல்லாமை யுண்டோ.

இ - ள் நளினத்து - (உன்னுடைய) நாபிக்கமலத்து, நீ தந்த - நீ பிறப்பித்த, நான்முகனார்தாமே - நான்கு முகங்களையுடைய பிரமதேவரே, நவை தீர் உலகு எல்லாம் - குற்றமற்ற உலகங்களெல்லாவற்றையும், நாழியாக - நாழியென்னும் அ ளவுகருவியாகக்கொண்டு, ஊழி பல பல்வும் நின்று அநேக கற்பகாலமும் (ஓயா மல்) நின்று, அளந்தால் - (உனது திருக்கலியாண குணங்களைத் தானிய ராசியா கக்கொண்டு) அளவிட்டாலும், ஒன்றும் உலவா - (அவற்றுள்) சிறிதும் முடியாத, பெருங்குணத்த உத்தமனே - மிகுந்த குணங்களையுடைய உத்தமனே! (நீ), மேல நாள-முற்காலத்தில், தரை தாழி ஆக - பூமி (தயிர்ப்) பானையாகவும், நீர் தண் தயி ர் ஆக - பாற்கடனீர் குளிர்ந்த தயிராகவும், தடவரையே மத்து ஆக - பெரிய மந்த ரமலையே (தயிர்கடையும்) மத்தாகவுங்கொண்டு, தாமரை கை நோவ - (உனது) தா

மரை மலருக்கொப்பான திருக்கைகள் நோகும்படி, ஆழி கடைந்து - அத்திருப்பாற்கடலைக் கடைந்து, அமுதம் - (அதினின்றுமெடுத்த) அமிர்தத்தை, எங்களுக்கே - (தேவர்களாகிய) எங்களுக்குமாத்திரமே, ஈந்தாய் - கொடுத்தருளினாய், அவுணர்கள் - (கடலைக் கடைதற்கு எங்களோடு பாடுபட்ட) அசுரர்கள், நின் அடிமை அல்லாமை - உனக்கடியராகாமை, உண்டோ - உள்ளதோ?

குறிப்பு — எம்பிரானது அளவிடற்கரிய அனந்த கலியாண குணங்களைத் தானியமாகவும், அத்தானியத்தை அளப்பதற்குச் சகலாண்டங்களையும் நாழியென்னும் சிறிய அளவு கருவியாகவும், எம்பிரானது நாபியிற்றோன்றி அவனால் அருமறைகளை யுபதேசிக்கப்பெற்று மற்றை எல்லோரினுஞ் சற்றே தெளிவினை யடைந்திருக்கின்ற பிரமதேவனை அக்கலியாண குணங்களை யளத்தற் கருகனென்பதுபற்றி அவனை அளவுகாரனாகவும் உருவகப்படுத்தினன். உலகை நாழியாக உருவகப்படுத்தியதற்கேற்பக் குணங்களைத் தானியமெனக் கூறாது விடுத்தமையின் இஃது ஏகதேச வுருவகவணி. 'நாழி' முகத்தலளவை யாகுபெயர். உலகங்களெல்லாம் அக்கலியாண குணங்களிலீடுபட்டு உய்தலால் 'நவைதீருலகு' என்றான். மகா பிரளயந்தோறும் பிரமதேவன் இறந்து பிறக்குந் தொழிலினை யொழிந்துநின்று மகாபிரளயகாலம் இத்தனையென்று கணித்தற்கியலாத பெருங்காலத்தைச் சிறிது நேரமாகக் கொண்டு அளக்கினும் அளவிடமுடியாத நின் அனந்த கலியாண குணங்கள் எம்மனோரால் சிறிதேனும் அறியத்தக்கனவோ என்பது விளங்க 'ஊழி பல பலவு நின்றளந்தாலொன்று, மூலவாப் பெருங்குணத்த வுத்தமனை' என்றான். 'அளந்தால்' என்புழி உயர்வு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. 'தாழி தனியாக' என்பது முதலியன உருவகங்கள். 'நீர்' என்றதற்குச் சந்தர்ப்பநோக்கிப் பாலெனப் பொருள் கூறினும் 'ஆழி' ஆழ்ந்திருப்பது, இ - வினைமுதற் பொருண்மை விகுதி. அமுதம் - அமதரும்' என்பதன் சிதைவு, இஃது அமிழ்து அமிர்தம், அமுது எனவும் திரியும். எங்களுக்கே, ஏகாரம் - பிரிநிலை. அடிமை - பண்பாகுபெயர். உண்டோ, ஓகாரம் - எதிர்மறை. பாற்கடல் கடைந்த விவரம் வெளிப்படை. (உக)

ஒன்றாகி மூலத் துருவம் பலவாகி
யுணர்வு முயிரும் பிறிதாகி யூழி
சென்று சறுங்காலந் தந்நிலைய தாகித்
திறத்துலகந் தானாகிச் செஞ்செவே நின்ற
நன்றாய ஞானத் தனிக்கொழுந்தே யெங்க
ணவைதீர்க்கு நாயகமே நல்வினையே நோக்கி
நின்றாரைக் காத்தி யயற் பேரைக் காய்தி
நிலையில்லாத் தீவினையு நீந்தாத தன்றே

இ-ள். மூலத்து - ஆதிகாலத்தில், ஒன்று ஆகி - ஒன்றேயாயிருந்து, (பின்னர்), உருவம் பல ஆகி - (வெவ்வேறுவகைப்பட்ட) பல உருவங்களாய், உணர்வும் உயிரும் பிறிது (உம்) ஆகி - அறிவும் உயிரும் மற்றை உடலும் ஆகி, ஊழிசென்று ஆசறும் காலத்து - மகாபிரளயமுண்டாகி முடியுங்காலத்தில், அந்நிலையது ஆகி - அப்பொழுதுள்ள தன்மையாகி [எல்லாம் லயித்துத்தான மாத்திரமே சேஷித்திருக்குந் தன்மையாகி], திறத்து உலகம் ஆகி - (மீண்டும் படைக்கும்பொழுது) பலவகைப்பட்ட உலகங்களுமாய், செஞ்செவே நின்ற - செவ்வையாய் நின்ற, நன

று ஆயஞானம் - நலல தததுவஞானததினது, தனி கொழுந்தே - ஒப்பற்ற கொழுநதே! எஙகள நவைதீாககும நாயகமே - எஙகளுடைய குறைகளைப் போககியருளுகினற தலைமைபபொருளே! (நீ) நலவினையே நோககி நினறுரை காததி - புணணியததையே கருதி(த தருமநெறியில) நிறபவாகளைக காககினறாய்; அயல பேரை - (பாபததையே கருதித தீயநெறியில நிறபவராகிய) மறறவாகளை, காயதி - கோபிககினறாய, நிலை இலலாத தீவினையும - நிலையிலலாத அபபாவமும, நீ தநதது அனறே - நீ யுணடாககியதனறோ?

குறிபபு—ஆசறுதல முடிதல செஞ்செவே செமமை செமமை யெனபதன மரூஉ, இது 'செககச்செவேல' எனவும வழஙகும 'ஞானக கொழுநதே' எனபது ஞானஙகடகெலலாம தோனறுமிடமாயிருபபவனே எனறபடி 'நாஙகள' எனவும பாடம நலவினை தீவினைகள நிலையினறிமாறி வருதலின 'நிலையிலலாத தீவினை' எனறான தீவினையுந தானததேயாயினும அவரவா கருமஙகளுககுத தககபடி பலனளிபபது ஈசுரனது இயறகையெனபது ஈறறடியாற போதருங கருதது. (சு0)

வலலை வரமபிலலாத மாயவினைதனனுன
மயஙகின ரோடெயதி மதிமயஙகி மேனு
ளலலை யிறைவனீ யாதியெனப பேதுற
றலமருவே முனனை யறபபய னுணடாக
வெலலை வலயஙக ணினனுழையென றநநா
ளெரியோனைத தீணடி யெழுவரென நினற
தொலலை முதனமுனிவா சூளுறற போதே
தொகைகினற வையந துடைததிலையோ வெநதாய

இ - ள எநதாய—! எஙகளுககெலலாம பிதாவே மேல நாள - முறகாலததில, வரமபு இலலாத - எலலையிலலாத, மாயைவினைதனனால - மாயையின சூழச்சியினால, நீ இறைவன அலலை (என) - நீ பரததுவமா ? எனறும, (நீ இறைவன) ஆதி என - நீயே பரததுவமாகினுயெனறும, பேதுறறு - பேதபபடடு, மயஙகினரோடு- மதிமயஙகிககிடநத தேவாகளுடனும, எயதி - (உணமையுணராது) சோநது, மதிமயஙகி - புததிமயஙகி, அலமருவேம முனனை - தடுமாறுகினறவாகளாகிய எஙகடகெதிரில, அநநாள - அபபொழுது, அறம பயன உணடாக - (முனசெயத) நலவினையினபலன கைகூட (அதனால) வலலை — விரைவாக, எழுவா என நினற தொலலை முதல முனிவா-எழுபோ என நினற பழமையான சிறநத முனிவாகள, எரியோனை - அககினியினுக கததாககத மூாததியாகிய உருததிரனை, தீணடி - அடைநது, வலயஙகள எலலை - உலகஙகளினெலலையும, நினனுழை - உன்னிடததே தோனறி வளாநதுவருபவை [நீயே பரததுவம], எனறு சூளுறறபோதே - எனறு சிததாநதஞ்செயதகாலததே, தொகைகினற ஐயம - மிகுதியாகினற சநதேகததை, துடைததிலையோ - (நீ) நீககினுய அலலையோ ?

குறிப்பு—வலலை காலவிரைவையுணாததது மோரிடைச்சொல, இனி, "வல்லைகான விரைவுமைநதாம" எனபவாகலின, வலிமையெனப் பொருளகொணடு மாயவினையோடு கூடடலுமொனறு. மாயவினை : ராஜஸதாமஸபுராணஙகளை யாராயநது பரனலலாதாரைப பரனெனறுகூறுமோா பொயககொளகை. 'இறைவன'

'நீ' என்னும் இவவிரணடும் மததிமதீபம். அல்லை, ஆதி என்பன; முன்னிலை ஒருமைவினைமுற்றுகள். இனி, நீ ஆதி இறைவன் அல்லை எனப் பாகுபாடுசெய்து, நீ ஆதியாகிய கடவுள் அல்லையென்ப பொருள்கோடலுமாம். பேது, பேதமென்பதன் விகாரம். 'ஆக'—இச்செயவெனெச்சம் காரணப்பொருட்டாய் இறந்தகாலமுணாத்திற்று. வலயம் வட்டம், இது ஆகுபெயராய் உலகங்களையுணாத்தியது. தீப்போலும் நிறத்தையுடையானாதலால், 'எரியோன்' எனலுமாம். "தழனிறவண்ணன்" என்றா பெரியாரும் இனி, நெருப்புவடிவமான மழுவுடையோ னென்றலுமாம் 'எரியோனைத்தீண்டி' எனவே உபலக்கணத்தாற் பிரமதேவனைத்தீண்டியென்பதும் பெற்றாம். எழுவா முனிவா ஸப்தருஷிகள், அத்ரி, பிருகு, குத்ஸா, வஸிஷ்டா, கௌதமா, காசிபா, ஆங்கிரஸா போது பொழுதென்பதன் மரூஉ. ()

### வேறு

இன்னன பலநினைந் தேத்தினி னியம்பாத
துன்னுத லிடையுள தென்நனி துணிவான
தன்னிகா முனிவனைத் தரவிடை யென்னுப
பொன்னொளிர் நெடுமுடிப் புரந்தரன் போனான.

இ - ள் பொன்னொளிர் நெடுமுடி புரந்தரன் - பொன்மயமாகி விளங்குகின்ற நீண்ட கிரீடத்தைத்தரித்த இந்திரன், இன்னனபலநினைந்து - இத்தன்மையனவான (வார்த்தைகளை) மனத்தில் தியானித்து, இயம்பா ஏத்தினன்-(அவற்றை வாயினால்) சொல்லித் துதிப்பவனாய், இடைதுன்னுதல் உளது என - இடையிலே பொருந்தியிருக்கின்ற விசேடமொன்றிருக்கின்றதென்று, நனிதுணிவான - நன்றாய் நிச்சயிப்பவனாய் தன்னிகா முனிவனை விடைதர என்னு - தனக்குத்தானே யொப்பாகிய அச்சரபங்க முனிவரை நோக்கி (யான் போவதற்கு) விடைதந்தருளுவீராக என்று கேட்டு, (பின்) போனான் - (தன்னுலகம்) போய்ச் சோந்தான்

குறிப்பு —துன்னுதல் - தொழிலாகுபெயா தர - அகரவீற்று வியங்கோள். புரந்தரன் - (சத்துருக்களது) பட்டணங்களை அழிப்பவன் என்னும் காரணக்குறி. ()

போனவ னகநிலை புலமையி னுணாவான
வானவா தலைவனை வரவெதிர் கொண்டா
னவ னடிதொழ வருளவர வழுதான
றானட விடவகை தழுவின னுழைவான

இ - ள். (பின் சரபங்கமுனிவா) போனவன் அகநிலை-(தம்மிடத்து விடைபெற்றுச்) சென்றவனாகிய இந்திரனது மனநிலையை, புலமையின் உணாவான - (தமது) ஞானக்கண்ணால் அறிபவராகி, வானவா தலைவனை - நித்திய சூரிகளுக்குத் தலைவனான ஸ்ரீராமபிரானை, வர எதிர்கொண்டான - எழுந்தருளும்போது எதிர்கொண்டு சென்றா, (அப்பொழுது), ஆனவன் - அந்த ஸ்ரீராமன், அடிதொழ (முனிவரது) திருவடிகளில் வீழ்ந்துவணங்க, தான் நடவிடவகை - தாம் பரமபதமடைவதற்குத் தக்கபடி, உழைவான - (இங்கிருக்க) வருந்துகின்ற அம்முனிவா, அருள்வர- அன்பு மேன்மேலும் பெருகுதலால், அழுதான - அழுதாா.

குறிப்பு:—வானவா - தலைவன் தேவாகட்குத் தலைவன் எனலுமாம். அழுகை - சந்தோஷத்தின் மிகுதியாலுண்டாயது. நடவிட - இடு, துணைவினை. (கக)

ஏழையு மிளவலும வருகென வினிதா
வாழிய வவரொடும வநதனன் மகிழவா
னூழியின முதனமுனி யுறையுளை யணுகா
வாழியில விழிதுயி லவனென மகிழவான.

இ - ள. (பின சரபஙகமுனிவா ஸ்ரீராமனைநோககி நீ) இனிதாவாழிய-சுகமாய் வாழவாயாக, ஏழையும இளவலும வருக-சீதையும இலக்குமணனும இஙகு வருவா ாகளாக, என - எனறுசொலல, (ஸ்ரீராமன) அவரொடும வநதனன ஸீதாலக்ஷமண ரோடு வநது, மகிழவால - சநதோஷமாக, ஊழியின முதலமுனி உறையுளை - கற பநதொடஙகியுள்ள அமமுனிவரதாசசிரமததை, அணுகா - அடைநது, ஆழியில விழிதுயிலவனென - திருபபாறகடலில திருககண வளாநதருளுகினறவனபோல, மகிழவான - களிபபாறறியினன.

குறிபபு —ஏழை - மடமைககுணமுடையவள பணபாகுபெயா இளவல் - அல பெயாவிகுதி குணவாகுபெயருமாம இனி, "அணுக" எனனும பாடததிறகு, ஸ்ரீராமன எழுநதருள (அமமுனிவா ஸ்ரீராமனை), ஆழியில துயிலகினற எமபெருமா னென எணணி மகிழநதனரெனக உறையுள - வீடடிறகுத தொழிலாகுபெயா, உள தொழிறபெயா விகுதி, இஙகு இடபபொருளுணாததியது (கூச)

அவவயி னழகனும வைகின னறிஞன
செவவிய வறவுரை செவிவயி னுதவ
நவவியின விழியவ ளொடுநனி யிருளைக
கவவிய நிசியொரு கடையுறு மளவின.

இ - ள அழகனும் - ஸ்ரீராமனும, நவவியின் விழியவளொடு - பெண்மானி ன கணபோனற கணணையுடைய சீதையுடன, அவவயின - அவவிடதது, அறி ஞன செவ்விய அற உரை செவிவயின உதவ - தததுவஞான முடைய அசசரபங கமுனிவா நலல தருமோபதேசஙகளை (தனனுடைய) காதிறசொல்ல (ககேட்டு) நனி இருளை கவவிய நிசி - மிகக இருளையுடைய இராததிரியானது, ஒருகடையுறும அளவின - ஒரு முடிவை யடையுமவரையும (இரவு நீஙகுமளவும) வைகினன - தஙகியிருநதான

குறிப்பு —மிக்க ஹிதபரமான வாககியஙகளானாலும வகதா அறியாதவனாயின் ...வவுணமைபபொருளில கேடபோனுககு நமபிககை பிறவாதாகையால அதைநீகக அறிஞன' எனறும, வகதா எவவளவு சமாததனாயினும சொல்லும விஷயம தீதா யின அதில கேடபோன மனமபறறாதாகையால அதை நீககச 'செவவிய அறவு ரை யென்றும, வகதாவும விஷயமும சிறநதிருநதும "கேடடாாபபிணிககுந் தகை யவாயககேளாரும - வேடப மொழிவதாம சொல" எனறபடி சொல் வனமையின றெனிற் பயனபடாதாகையால் அதை நீகக 'செவிவயினுதவ' எனறுஙகூறினா. உதவ எனறதனனே பகதிசிரததையோடு கேளாரனெனக கொணடமை வெளிப் படை. "அழகனும் அவளும துஞச" எனமேறகூறிப் போநதவா ஈணடு பிராட்டியை 'நவ்வியின விழியவள' என வாணிததது எம பெருமானினும பிராட்டி கண்ணழ கிற் சிறந்தமையை விளக்குதற்கெனக. முனிவரும இவ்வாறே கூறினா. (கூரு)

விலகிடு நிழலினன் வெயில்விரி யயிலவா
ளிலகிடு சுடரவ னிசையன திசைதோ
யலகிட லரியத னவிர்கர நிரையா
லுலகிடு நிறையிரு ளுறையினை யுரிவான்.

இ - ள் விலகிடு - பரவுகின்ற, நிழலினன் - ஒளியையுடையவனும், இலகிடு சுடரவன் - விளங்குகின்ற காந்தியையுடையவனுமாகிய சூரியன், இசையன - ஒன்றோடொன்று சேர்ந்து நிறபனவான, திசைதோய - திக்குகளை தோறும் பொருந்தியுள்ள, அலகிடல அரிய-அளவிடக்கூடாத, அவிா தன் கரம நிரையால - விளங்குகின்ற தனது கிரணங்களாகிய கைகளின் கூட்டத்தால், விரிவெயில-பரவிய வெயிலாகிய, அயிலவாள - கூாமையான வாளைககொண்டு, உலகு இடுகின்ற இருள உறையினை - உலகின்கணுள்ள இருளாகிய போாவையை, உரிவான-கழறறுவானுயினுன

குறிபபு —நிழலினன - ஒளியையுடைய (இனன) சூரியன எனப பிரிததுரை ததலுமாம. இசையன என்றிருககுமிடததில ஸ்ரீராமனது புகழையொதத எனப் பொருள கோடலுமியையும். இனி, இசசெயயுளுககு வெயிலாகிய வாளையேநதிய சூரியனுகிய தலைவன தனது தலைவியாகிய பூமியினது ஊடலைத தணிககக கருதி அவளது மேறபோாவையை லீலையாக உரிவானுயினுன எனப பொருளகொளள லாம படியிருததலுமறிக. (௬௬)

ஆயிடை யறிஞனு மவனெதி ரழுவத
தீயினை நுழைவதொா தெளிவினை யுடையா
னீவிடை தருகென நிறுவின னெறியாற
காயெரி வரனமுறை கடிதினி லிடுவான

இ - ள. ஆயிடை - அப்பொழுது, அறிஞனும - ததுவஞானியாகிய சரபஙகரும, அவன எதிா-ஸ்ரீராமனுககுமுனனே, அழுவம தீயினை - மிகுநத அககினியில நுழைவது ஓா தெளிவினையுடையான - பிரவேசிப்பதாகிய ஒப்பறற துணிவையுடையராய, காய எரி - எரிகினற நெருபபை, வரனமுறைநெறியால - சாஸ்திரவிதியின முறைமைபபடி, கடிதின - சீககிரததில, இடுவான - வளாபபவராய, நீ விடை தருக என - நீ விடைதருவாயாக என்று கேட்டு, நிறுவினன - (ஸ்ரீராமனிடததில) மனததை நிறுததினா

குறிப்பு —"தூககிறசுட்டு, நீளினயகரமுந தோன்றுதனெறியே." என்றதனுல அ+இடை எனபது ஆயிடையெனப் புணாநதது. இடுவான - இடுமபொருட்டு எனவானீறறு வினையெசசமாகவுங கொளளலாம். மூனருமடியில 'நீவிடை' எ ா இனவெதுகையாக வநதது. (௬எ)

வரிசிலை யுழவனு மறையுழ வனைநீ
புரிதொழி லெனையது புகலுதி யெனலுந
திருமக டலைவசெய் திருவினை யுறயா
னெரிபுக நினைகுவெ னருளென விறைவன்.

இ - ள். வரிசிலை யுழவனும - கட்டமைந்த வில்லில் (வல்ல) ஸ்ரீராமனும், மறை உழவனை - வேதங்கள் வலல சரபங்கரை (நோக்கி) நீ புரிதொழில் எனையது-

நீர் செய்யக்கருதிய காரியம் எத்தன்மையது? புகலுதியென்னும் - சொல்லுக என்று கேட்டவுடன் (அம்முனிவர்), திருமகள் தலைவ - லக்ஷ்மிகாந்தனே! யான்செய் திருவினை உற - யான் செம்மையான மோக்ஷ சாம்ராஜ்யத்தையடையும்படி, எரிபுக நினைகுவென்-அக்கினிப்பிரவேசம் செய்யக் கருதுகின்றேன், அருள் என்- கிருபை செய்க என்றுவேண்ட, இறைவன் - ஸ்ரீராமன்.

குறிப்பு—ஸ்ரீராமனைச் சிலையுழவன் என்றதற்கேற்ப முனிவரை மறையுழவன் என்று சிலையை ஏராகவுடையவன் மறையை ஏராகவுடையவன் என்பபொருள் காணக. உழவன் - உருபகம் "வில்லேருழவர் பகைகொளினுங் கொள்ளற்க - சொல்லேருழவர் பகை" என்றார் நாயனாரும். திருமகள் தலைவன் - ஸ்ரீயபதி. அக்கினிப்பிரவேசம் தருமச்செல்வமாதலின் செய்திரு எனப்பட்டது 'உள்ளவை யாவும் செய்தவற்கே யாகுந்திரு' என்றும் பிறரும். (௨௯)

யானவரு மனைத்தியி னிற்செப் பெவ்வனோ
மானவரு தனியுரி மார்பினை யென லும்
மீனவரு கொடியவன் விறலடு மாமேவா
னூனவரு முவகையி னுரைபுரி வான்

இ - ள் ம் ஏவரு-மானினிடத்திலிருந்து உரிக்கப்பட்ட, தனி உரிமார்பினை- ஒப்பற்ற தோலைத் தரித்த முனிவரே!, யானவரும் அமைதியின் - நான்வந்த சமயத்தில், இது செயல் எவனோ என்னும் - இக்காரியஞ்செய்வது என்னே? என்று கேட்டலும், மீனவரு கொடியவன் - மீனின் உருவம் எழுதப்பட்ட கொடியையுடைய மன்மதனது, விறல் அடும் அறவோன் - ஜயத்தைக்கெடுத்த உறுதியையுடைய அம் முனிவர், ஊனவரும் - உடம்பு பூரிக்கும்படியான, தனி உவகையின் மிக்க மகிழ்ச்சியினால், உரைபுரிவான் - சொல்லுவாராயினார்.

குறிப்பு—மான உரி - ஷஷ்டீதத்புருஷ ஸமாஸம். மீனவரு கொடியவன் என்றார் அவனது 'விறலடுமறவோன்' என்கவே ஜிதேந்திரியர் என்பதாயிற்று. இதனால் 'சரபங்கர்' என்னும் பெயர்க்காரணத்தை விளக்கவைத்தமையறிக ஊன், வரும் - சரீரம் ஊனவரு முவகை யென்பதற்கு - உடல் நீங்குவதனாலுண்டாகுமகிழ்ச்சி எனலுமாம். (௩௰)

ஆயிர முகமுள தவமியா குவென
நீயிவண் வருதியெ னெனுநிலை யுடையேன்
போயின விருவினை புகலுறு விதியால்
மேயினை யினியொரு வினையிலை விறலோய.

இ - ள் விறலோய - வெற்றியையுடையோய், நான் - நான், ஆயிரம் முகம் உள - ஆயிரம்வகையான, தவம் அயாகுவென் - தவஞ்செய்து வருகின்றேன், நீ யிவண் வருதி எனும் நிலை உடையேன்- நீ இங்கே எழுந்தருள்வாய் என்னுந் துணிவுடையேனாய் இருக்கின்றேன், புகல் உறுவிதியால் மேயினை-சமபவிக்கவேண்டிய முறைப்படி (நீ) எழுந்தருளினாய், (ஆதலால்), இருவினைபோயின - நல்வினை தீவினையாகிய இரண்டும் நீங்கின, இனி ஒருவினை இலை - இனி (இங்கேசெய்யவேண்டிய) காரியம் ஒன்றுமில்லை.

குறிப்பு—ஆயிரம் - மிகுதிகுறித்துநின்றது. இனி, ஆயிரம் உகம் உளதவம் எனக்கொண்டு அநேகயுகமாகிய தவம் எனக் கோடலுமாம். விதி-முறை இப்பொருட்டாதலே 'ஊழ்' எனனும் அதிகாரமுகத்து ஆசிரியர் பரிமேலழகியார் கூறிய அவதாரிகையான் உணர்க புகலுறுவிதி-சிறப்பித்துக் கூறப்பமே விதியுமாம். (௪0)

இந்திர னருளின னிறுதிசெய் பகலா
வந்தனன் மருவுதி மலரய னுலகந்
தந்தன னெனவது சாரலெ னுரவோ
யந்தமி லுயர்பத மடைதலை முயல்வேன்

இ - ள் உரவோய - வலிமையை யுடையவனே! இறுதிசெய்பகலா - (நேற்று) மாலைப்பொழுதில், இந்திரன் வந்தனன் - இந்திரன்வந்து, மலர் அயன் - தாமரையிலே தோன்றிய பிரமன், அருளினன் - அருளையுடையவனுகி, உலகம் தந்தனன்-(தனது) சத்தியலோகத்தை (உனக்கு) கொடுத்தான்-மருவுதி எனலும்-எழுந்தருளவாய் என்றுசொல்லவும், அந்தம் இல் உயர்பதம் அடைதலைமுயல்வேன் - அழிவில்லாத பரமபதத்தை அடைவதற்கு முயற்சிசெய்பவனுகிய யான் அது சாரலென்-(அப்பதவியை) அடைந்தேனில்லை

குறிப்பு—இறுதி செய்பகல - முடிவைச்செய்த பகல் எனவே பகலின் முடிவாகிய மாலையாயிற்று அருளினன் – என்பதனை இந்திரனுடன் கூட்டி அருளையுடையான் மாலைப்போதில வந்து என ஆற்றொழுக்கிற பொருள்கோடலுமாம் இனி, இந்திரன் வந்தனன் இந்திரன்வந்து, மலரயன் உலகந்தந்தனன் - பிரமன் தனதுலோகத்தை யுனக்குக்கொடுத்தான், இறுதிசெய்பகலா மருவுதி என அருளினன்-உலகமழியுங்காலம் வரையும் அங்குவந்து தங்குவாயாக என்றான் என அந்வயித்துப் பொருள்செய்வாரு முளர் ''தாவெனுக்ளவி யொப்பபோன் கூற்றே'' என்பவாகலின் 'வந்தனன்' என்றான் உரவோய - அறிவுடையோனே? எனலுமாம் (௪க)

ஆதலி னிதுபெற வருளென வுரையாக
காதலி யவளொடு கதழெரி மூழ்கிப்
போதலை மருவின னொருநெறி புகலா
வேதமு மறிவரு மிகுபொரு ளுணர்வோன்

இ - ள் புகலா - எவராலுஞ் சொல்லப்படாத, வேதமும் அறிவு அரு - வேதங்களு மறிதற்கரிய, மிகுபொருள்-பரதத்துவத்தை, உணர்வோன் - அறிபவராகிய சரபங்கமுனிவர், ஆதலின் - ஆகையால், இதுபெற-இந்த மோக்ஷசாம்ராஜ்யத்தை அடையும்படி, அருள் என - அருள்செய்யென்று, உரையா - சொல்லி, (உடனே) காதலியவளொடு - தம்மனைவியுடன், கதழ் எரி மூழ்கி - கொடிய அக்கினியிற் பிரவேசித்து, ஒரு நெறி - ஒப்பற்ற பரமபதத்தை, போதலை மருவினன் - போய்ச் சேர்ந்தார்

குறிப்பு—ஸ்ரீராமனது கிருபை பயன்கருதாத தாகலானும் இதுவரையிலுங் கூறிப் போந்தது அதுவாகலானும் 'இது' எனச்சுட்டினார் 'அது' என்றும் பாடம். வேதம் அபௌருஷேயமாய் நித்தியமாயிருப்பதாதலின் 'புகலாவேதம்' எனச் சிறப்பித்தார். மிகுபொருள் - சிந்தையுமனமுஞ் செலலற்கரிய பரம்பொருள். (௪௨)

தேவரு முனிவரு முறுவது தெரிவோர
மாவரு நறுவிரை மலரயன முதலோ
ரேவரு மறிவினி லிருவினை யொருவிப
போவது கருதுமவ வருநெறி புககான.

இ-ள். உறுவது தெரிவோர - (பின்னே) வருவதை (முன்னே) அறிபவா களாகிய, மாவரு - வண்டுகள் வருவதறகேதுவாகிய, நறுவிரை-நலலவாசனையையுடைய, மலா - தாமரை மலரிலுள்ள, அயன முதலோ - பிரமனை முதலாகவுடைய, தேவரும - தேவாகளும, முனிவாகளும - மகரிஷிகளும, ஏவரும மறறையெலலோரும், அறிவினில - அறிவினால, இருவினை - இரணடு வினைகளையும, ஒருவி - நீககி, போவது கருதும - போயசசேர எபபொழுதும விருமபிககொணடிருககுமமாககததை எணணுமபடியான, அ அருநெறி - பெறுதறகரிய அபபரமபததை, புககான - போயச சோநதான

குறிபபு—'உறுவது தெரிவோர' எனபதை பிரமன முதலிய ஒவவொருவருககும அடையாககுக. உறுவது தெரிவோர-வருங்கால முணரவலலவர். உறுவது ஒருமை இது பூாவஞானததுககும உபலககணம, திரிகால ஞானியாகள எனறபடி மாவரு எனபதறகு அழகுபொருநதிய, பெருமை பொருநதிய எனறு பொருளகூறினுமமையும. (௬௩)

அணடமு மகிலமு மறிவரு நெறியா
லுணடவ னொருபெய ருணாகுந ருறுபே
றெணடவ நெடிதெனி னிறுதியி லவனைக
கணடவ ருறுபொருள கருதுவ தெளிதோ.

இ-ள். அணடமும - எலலா அணடஙகளையும, அகிலமும - (அவறறிற்குடபடட) எலலாச சராசரஙகளையும, அறிவு அருநெறியால அறிதறகரிய வழியால, உணடவன - (பிரளயகாலததில) வயிறறில வைதது அடககிய ஸ்ரீராமபிரானது, ஒருபெயா - (ஆயிரநாமஙகளுள) ஒரு நாமததை, உணாகுநா-அறிபவா, உறுபேறு - அடையும பெருமபாககியம, எண - நினைபபிறகும, தவநெடிது - எடடாது மிகவும பெரிது, எனின எனறால, இறுதியில - முடிவுகாலததில (பிராணன நீஙகுகையில), அவனைககணடவா - அநத எமபெருமானைக (கணணுககெதிராகச) சேவிததவா, உறுபொருள - அடையுமபதவி, கருதுவது எளிதோ- (மனததால) நினைபபதறகு எளிதோ ?

குறிபபு—மனததால நினைப்பதறகருமை கூறவே வாயினற கூறலினது அருமை கூறவேணடாதாயிறறு. தவ-உரிசசொல. ஏகாரம எதிரமறை. (௬௪)

## இரணடாவது சரபஙகர் பிறபபுநீஙகு படலம்

முறறிறறு.

ஆகபபடலம உ-ககு விருததம் ககக.

---

## மூன்றாவது அகத்தியப்படலம்.

அனையவ னிறுதியி னமைவு நோக்கலி
னினியவ ரினனலி னிரங்கு நெஞ்சினார்
குனிவரு திண்சிலைக் குமரர் கொம்பொடும்
புனிதன துறையுளி னரிதிற் போயினார்.

இ-ள். அனையவன் - அச்சரபங்க முனிவரது, இறுதியின் அமைவு - முடிவுகாலத்தின் தன்மையை, நோக்கலின் - பார்த்ததனால், இனியவர் - (யார்க்கும்) இனிமையை யளிக்கின்றவர்களும், இன்னலின் - (அச்சரபங்கர் ஹோமாக்கினியிற் பிரவேசித்ததைப் பார்த்ததனால் உண்டான) துன்பத்தினால், இரங்கும் நெஞ்சினார் - கரைகின்ற மனமுடையவர்களுமாகிய, குனிவரு திண் சிலை குமரர் - வளைந்த வலிய வில்லினையுடைய ஸ்ரீராமலக்ஷ்மணர்கள், கொம்பொடும் - சீதாபிராட்டியோடும், புனிதனது உறையுள் நின்று - பரிசுத்தராகிய அச்சரபங்கரது ஆச்சிரமத்தினின்றும், அரிதில் போயினார் - அருமையாகப் போனார்கள்.

குறிப்பு — அனையவன் சுட்டிடைச்சொல்லடியாகப்பிறந்த பெயர். நோக்கலின், இன் ஏதுப்பொருட்டு, இது 'இரங்கு' என்னும் வினைகொண்டது. குனிவரு — வளைந்தற்குரிய (வலிய வில்) என்னலுமாம். கொம்பு உவமையாகுபெயர். ஸ்ரீராமபிரானைத் தரிசித்து ஆத்மவினைப்பத்தொழிவில் விட்டடையடைந்தமையான அச்சரபங்க முனிவரைப் 'புனிதன்' என்றார். உறையுள், உள் தொழிற்பெயர் விகுதி, 'செய்யுள்' என்பதுபோலத் தொழிலாகுபெயர். அம்முனிவரது பிரிவாற்றாமையால் திரும்பிப்போதற்கு மனமில்லாராயினும், வருத்தத்தோடு சென்றார் என்பார் 'அரிதிற்போயினார்' என்றார். (௧)

மலைகளு மரங்களு மணிக்கற் பாறையு
மலைபுன னதிகளு மருவிச் சாரலு
மிலைசெறி பழுவமு மினிய சூழலு
நிலைமிகு தடங்களு மினிது நீங்கினார்.

இ-ள். மலைகளும் - மலைகளையும், மரங்களும் - விருக்ஷங்களையும், மணி கல் பாறையும் - அழகிய கற்பாறைகளையும், அலைபுனல் - அலைகின்ற நீரினையுடைய, நதிகளும் - யாறுகளையும், அருவி சாரலும் - அருவிகள் பாய்கின்ற மலைப்பக்கங்களையும், இலை செறிபழுவமும் - இலைகள் அடர்ந்த சோலைகளையும், இனிய சூழலும் - (கண்ணுக்கு) இனிமை பயக்கத்தக்க (மறைந்த) சுற்றுப் புறங்களையும், நிலைமிகு தடங்களும் - கண்ணகன்ற தடாகங்களையும், இனிது - இனிமையாக, நீங்கினார் - கடந்து சென்றார்கள்.

குறிப்பு — அருவி மலையினின்வீழ்யாறு. சாரல் மலைப்பக்கத்துக்குத் தொழிலாகுபெயர். நிலை பரப்பு, இனி, நீர் நிலைத்துள்ள மிக்க தடாகமென்னலுமாம். ஆழமெனினு மிழுக்காது. (௨)

பண்டயன் பயந்தருள் பால கில்லரு
முண்டரு மோனரு முதலி னோர்கள்தந்
தண்டக வனத்துறை தவத்து ளோர்கடாங்
கண்டன ரிராமனைக் களிக்குஞ் சிந்தையார்.

இ - ள். பண்டு அயன் பயந்து அருள் - முன்பு பிரமதேவன் பெற்றருளிய, பால கில்லரும் - வாலகில்யர் என்னும் மகருஷிகளும், முண்டரும் - மழித்த தலையுடையவர்களும், மோனரும் - மௌனவிரதமுடையவர்களும், (ஆன இவர்களை) முதலினோர்கள் - முதலாகவுடையவர்களாகிய, அத் தண்டகவனத்து உறை - அந்தத் தண்டகாரணியத்து வசிக்கின்ற, தவத்துளோர்கள் - தவநெறியிலுள்ளவர்கள், களிக்கும் சிந்தையார் - சந்தோஷிக்கும் மனமுடையாராகி, இராமனை - ஸ்ரீராமபிரானை, கண்டனர் - பார்த்தார்கள்.

குறிப்பு — 'பண்டையவயன்றரு' என்பதும் பாடம். பாலகில்லர், மோனர் வடசொற்றிரிபு. வாலகில்யர் இவர் அங்குஷ்டப்பிரமாணமுடையவர்களாய்ப் பகவானது மயிரினின்றுந் தோன்றியவர். 'முண்டர்' என்றது சந்நியாசிகளை. இராமன் மேற்கூறியாங்கு யாவரையும் ரக்ஷிப்பிக்கின்றவராதலின், அவனைக் கண்டலும் ஏற்றமெனவே களித்தனரென்றேனும், இனி அவ்விராமனால் நம்பகைவராய அரக்கர்களிறந்துபடுவாரென்னுந் துணிபுபற்றிக் களித்தனர் என்றேனும் பொருள்கொள்ளுமாறு 'கண்டனரிராமனைக் களிக்குஞ்சிந்தையார்' என்றார். (௬)

கனைவரு கடுஞ்சினத் தரக்கர் காயவோர்
வினைபிறி தின்மையின் வெதும்புகின்றன
ரனைவரு கானகத் தமுத ளாவிய
புனைவர வுயிர்வரு முலவை போல்கின்றார்.

இ - ள். கனைவரு - மிகுந்து வளர்கின்ற, கடும் சினத்து - கொடிய கோபத்தையுடைய, அரக்கர் - இராக்கதர், காய - கோபிப்பதனால், ஓர் வினை பிறிது இன்மையின் - (அவர்களை அழிக்கத்தக்க) முயற்சி வேறொன்றும் இல்லாமையால், வெதும்புகின்றனர் - வாடுகின்ற அம்முனிவர்கள், அனைவரு கானகத்து - தீப்பற்றி யெரிகின்ற காட்டில், அமுது அளாவிய புனை - அமுதத்தின் தன்மைபொருந்திய ஜலப்பிரவாகம், வர - வருதலால், உயிர்வரும் - (அழியாமல்) பிழைத்துச் செழிக்கின்ற, உலவைபோல்கின்றார் - உலர்ந்த மரங்களை யொக்கின்றவரானார்கள்.

குறிப்பு — கனை செறிவு. இனி, "கனைசெறிவொலியாமெனப்" என்பவாகலின், ஆரவாரஞ்செய்கின்ற என்றுமாம். இப்பொருள் கொள்ளுங்கால் 'கடுமையை' மிகுதி எனக். 'அனல்,' 'புனல்' என்பன எதுகைநோக்கி 'அனை' 'புனை' என நின்றன. இனி, 'புனைவர'—அலங்காரமுடைய வென்றுமாம். இப்பொருளுரைப்புழி 'அளாவிய' என்றதைச் செய்யிய வென்னும் வினையெச்சமாக்குக. உலவை தொழிற்பெயர், உல-பகுதி. ஐ-விகுதி. இஃது உலர்ந்தமரத்தினைக் குறித்தலின், தொழிலாகுபெயர். போல்கின்றார்,—போலுதல் என்னும் வினையடியாகப்பிறந்த முற்று. தாபதர்கட்கு உலர்ந்தமரங்களையும், இராக்கதர்கட்கு அனலையும், அவ்விராக்கதரது காய்வுக்கு அனலின் வெப்பத்தையும், ஸ்ரீராமபிரானது வருகைக்கு அமுதப்பிரவாகத்தின் வரவையும், அத்தாபதர் மகிழ்வுக்கு உயிர்வருமுலவையையும் உவமையாக்கினார்.

ஆய்வரு பெருவலி யரக்கர் நாமமே
வாய்வெரீஇ யலமரு மறுக்க நீங்கினார்
தீவரு வனத்திடை யிட்டுத் தீர்ந்ததோர்
தாய்வர நோக்கிய கன்றின் றன்மையார்

இ-ள். ஆய்வு அரு - ஆராய்தற்கரிய, பெருவலி அரக்கர் நாமமே - மிக்க பலத்தினையுடைய இராக்கதர்களது பெயர்களையே, வாய்வெரீஇ - வாய் தடுமாறச் சொல்லி, அலமரும் மறுக்கம் நீங்கினார் - வருந்துகின்ற மனக்குழப்பம் நீங்கப்பெற்ற அம்முனிவர்கள், தீவரு வனத்திடை - நெருப்புப் பற்றியெரியுங் காட்டில், இட்டுத் தீர்ந்தது - விட்டு நீங்கியதாகிய, ஓர் தாய் வரல் - ஒரு தாய்ப் பசுவானது மீண்டுவருதலை, நோக்கிய - கண்ட, கன்றின் தன்மையார் - கன்றினது தன்மையையுடையவரானார்கள்.

குறிப்பு — அரக்கரோடு எதிர்வரப் போர்புரிந்து அவராற்ற லறிவதருமையென்பார் 'ஆய்வரு பெருவலியரக்கர்' என்றார். இனி, அரக்கர்தாம் எடுத்த காரியமனைத்தும் முடித்துவிட வல்லுநராதலின், ஆய்வருகின்ற [கைகூடிவருகின்ற] பெருவலியரக்கரென்றுமாம், இங்கே, 'ஆய்' வினையெச்சம். மற்று, பெருவலி ஆய்வரு எனப் பிரித்துக் கூட்டிப்பொருளுரைத்தலுமாம். முனிவர் வேதமந்திரங்களை யுச்சரிக்குந் தமது நல்வாயினால் தீயராகிய அரக்கரது பெயர்களையே யெடுத்துச்சொல்லி அங்கலாய்க்கும்படி நேர்ந்ததே யென்பார் 'அரக்கர் நாமமே வாய்வெரீஇ யலமரு' என்றார். இங்ஙனம் முனிவர் அஞ்சுவானேன் அவர்க்குத் தவவலியின்றோ? எனின், "வேண்டின வேண்டியாங்கு" என்னுங் கவியிற் கூறியபடி தம் பெருமை பொறையான வெகுளியை நீக்கி அரக்கரால் அலைப்புண்டாரென்க. வெரீஇ வெருவி, சொல்லிசை யளபெடை. அலமரு அலமர் - பகுதி இஃது இறந்தகாலத்து 'அலமந்த' என வரும். மறுக்கம், மறு - பகுதி. இனவெதுகையாய 'தீவரு' என நின்றது. இனி, 'ஓர்தாய்' — கருதுகின்றதாய் [அன்புள்ளதாய்] என்றுமாம். பிரிந்த தாய்ப்பசு மீண்டுவருதலைக் கண்ட கன்று எங்ஙனம் மகிழுமோ அங்ஙனம் மகிழ்வுதுய்த்தார் என்பது ஏற்றடியாற் போதரும் கருத்து. வனம் அரக்கருக்கும், தீ அவரது கொடிய செய்கைகட்கும், தாய் ஸ்ரீராமபிரானுக்கும், கன்று தாபதருக்கும் உவமை. (ரு)

கரக்கருங் கடுந்தொழி லரக்கர் காய்தலிற்
பொரற்கிட மின்மையிற் புழுங்கிச் சோருநர்
அரக்கரென் கடலிடை யாழ்கின் றாரொரு
மரக்கலம் பெற்றென மறுக்க நீங்கினார்

இ-ள். கரக்க அரும் கடும் தொழில் - ஒளித்தலில்லாத [வெளிப்படையான] செய்கைகளையுடைய, அரக்கர் காய்தலின் - இராக்கதர்கள் வருத்துவதனால், பொரற்கு இடம் இன்மையின் - (அவர்களோடு போர்புரிதற்கு உபாயம் (இதுகாறும்) இல்லாமையால், புழுங்கி சோருநர் - (மனம்) நொந்து வாடுகின்ற அம்முனிவர்கள், அரக்கர் என் கடல் இடை ஆழ்கின்றார் - ராக்ஷஸர்களென்கிற கடலினிடையே அமிழ்கின்றவர்கள், ஒரு மரக்கலம் பெற்றென - (கரைசேர்தற்கு) ஒரு கப்பலைப் பெற்றாற்போல, மறுக்கம் நீங்கினார் - மனக்கலக்கம் நீங்கப்பெற்றார்கள்.

குறிப்பு—'கரக்கரு' அகரம்—தொகுத்தல். அரக்கர் தமக்கு ஆபத்து நேருமுன்னாத் தமது மாயப்போரைக் கையாடாரென்பதும் அங்ஙனம் மாயப்போர் புரிதற

குத் தக்கபோர் நேரிடவில்லை யென்பதும் விளங்க 'கரக்கருங் கடுந்தொழில்' என்றார். இனி, அரக்கரது மாயப்போர் மிகவுங் கொடியதாதலின் அதனை மங்கலவழக்காக வெளிப்படையான போரெனக் கூறினா ரென்னலுமொன்று. அன்றியும், விஷத்தினது பெரிய கொடிய செய்லினையுடைய அரக்க ரென்னலுமாம், இப்பொருளில் கரம் - விஷம், கருமை-பெருமை, இதனை 'அரக்கரென்கடல்' என்னும் சொல் மிகவும் வற்புறுத்துகின்றது. சேருநர் இதனக்கம் பெயரிடைநிலை இது நிகழ்காலங் காட்டுமென்பர் திராவிடசப்தத்துவமுடையார். அரக்கரது மிகுதியும், கரிய நிறமும், அவரிடத்துத் தக்கப்பட்டோர் மீள லருமையும் விளங்க அவ்வரக்கர்கட்குக் கடலையும், அவ்வரக்கரா லகப்பட்டு மீளவகையறியாது வருந்துந் தாபதர்கட்கு ஆழ்கிலுற செயலையும், அங்ஙனம் ஆழ்கின்றாரை அக்கடலினின்றுங் கரையேற்றி ஆதரிப்பான் வந்தானாதலின் ஸ்ரீராமபிரானுக்கு மரக்கலத்தையும் உவமைகூறினார். (௬)

தெரிஞ்சுற நோக்கினர் செய்த செய்தவ
மருஞ்சிறப் புதவநல் லறிவு கைதர
விரிஞ்சுறப் பற்றிய பிறவி வெந்துயர்ப்
பெருஞ்சிறை விடுபெற் றனைய பெற்றியார்.

இ - ள். தெரிஞ்சு - (ஸ்ரீராமபிரானை ஆதிமூலப்பொருள் என்று), அறிந்து உற நோக்கினர் - (தம்மனத்தினிடத்தே யன்பு) பொருந்தும்படி தரிசித்தவர்களாய், செய்த செய்தவம் - (தாம்) செய்த சிறந்த தவமானது, அருஞ்சிறப்பு உதவ - அடைதற்கரிய சிறப்பினை யளித்தலானும், நல் அறிவு கைதர - (தாம்பெற்ற) தத்துவஞானமானது (தமக்குத்) துணைசெய்வதனானும், விரிஞ்சு உற பற்றிய - மிகுதியாய (அடிக்கடி தாம்) அடையும்படி தொடர்ந்துவந்த, வெம் - கொடிய, பிறவித் துயர் - பிறவித் துன்பங்களாகிய, பெருஞ்சிறை - பெரியசிறைச்சாலையினின்றும், வீடு பெற்றனைய - விடுதலையடைந்து மோக்ஷம் பெற்றாற்போன்ற, பெற்றியார் - தன்மையுடையாரானார்கள்.

குறிப்பு — 'தெரிஞ்சு' 'விரிஞ்சு' என்பன தெரிந்து, விரிந்து என்பவற்றின் போலிகள். பத்துடை யடியவர்க் கெளியவனாய உயர்வற வுயர்நலமுடைய எம்பிரான் சேவை சாதித்தருளலும் அவனைச் சாமான்ய மானுஷ்யஸ்வரூபியென் றுணராது இவனே சர்வலோக சரண்ய பராத்பரன் என அறிந்து தரிசித்த முனிவர்களின் மகிமையை யாவராற்சொல்லமுடியும். அவர்செய்த தவமே தவமென்பார் 'செய்தவமருஞ் சிறப்புதவ' என்றார். அத்தவத்துக் கின்றியமையாத தத்துவஞானம் 'தெரிஞ்சுற நோக்கினர்' எனச் செய்ததோடு, அரக்கரா லுறுமிடுக்கண்மட்டு மொழித்தற்கு வேண்டுவாராய் அபாக்ய அசேதனராகாமே வீடுபெறுதலும் வேண்டினமை குறிக்க 'நல்லறிவு கைதர' என்றார். இப்பொருளை மூன்றுகாண்டமடிகள் மிகவும் வற்புறுத்தல் காண்க. சிறை காவல். (௭)

வேண்டின வேண்டினர்க் களிக்கு மெய்த்தவம்
பூண்டுள ராயினும் பொறையி னாற்றலான்
மூண்டெழு வெகுளியை முதலி னீக்கினா
ராண்டுறை யரக்கரா னலைப்புண் டாரரோ.

இ - ள். (அம்முனிவர்கள்), வேண்டினர்க்கு - விரும்பிச் செய் தவர்களுக்கு வேண்டின - (அவர்) வேண்டிய பயன்களை, அளிக்கும் - (வேண்டியவாறே பெற

ம்படி) கொடுக்கின்ற, மெய்த்தவம் - உண்மையான தவத்தை, பூண்டுளர் ஆயினும் - மேற்கொண்டிருக்கின்றனராயினும், பொறையின் ஆற்றலால் - பொறுமையினது வலியால், மூண்டு எழுவெகுளியை - பற்றிக் கிளம்புகின்ற கோபத்தை, முதலின் நீக்கினார் - வேரோடு களைந்தார்கள், (ஆதலின்), ஆண்டு உறை - அவ்வனத்திலே வசிக்கின்ற - அரக்கரான் - இராக்கதர்களால், அலைப்புண்டார் - வருத்தமடைந்தார்கள்.

குறிப்பு.—வேண்டின் இறந்தகால வினையாலணையும்பெயர், "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம் ஈண்டு முயலப் படும்" என்றார் நாயனாரும். கூடாவொழுக்கத்தாலெய்தும் பொய்த்தவத்தினின்றும் நீக்குதற்கு 'மெய்த்தவம்' என்றார். 'பொறை'யாவது காரணம்பற்றியாவது அறியாமையாலாவது ஒருவன் தமக்குத் தீங்குசெய்தவிடத்துத் தாமும் அதனை அவன்கட் செய்யாது பொறுத்தல். "அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை யிகழ்வார்ப் பொறுத்த றலை" தவம்பூண்டோர்க்குப் பொறுமை யின்றியமையாதாகலின் 'பொறையினாற்றலான்' என்றார். நிறைமொழி மாந்தர்க்கு வரக்கோபம் வரின் அக்கோபத்தீயை அவிப்பதரிது என்பார் 'மூண்டெழு வெகுளியை' என்றார். "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்த லரிது" என்றார் நாயனாரும் "மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய, பிறத்த லதனால் வரும்" என்பவாகலானும் தவங்கெடுமென்றஞ்சியும் வெகுளியை 'முதலினீக்கினார்' ஆகி, 'அரக்கரானலைப்புண்டார்' ஆயினார். (அ)

எழுந்தன ரெய்தின ரிருண்ட மேகத்தின்
கொழுந்தென நின்றவக் குரிசில் வீரனைப்
பொழிந்தெழு காதலிற் பொருந்தி னாரவன்
றொழுந்தொறுந் தொழுந்தொறு மாசி சொல்லுவார்.

இ-ள். (ஸ்ரீராமபிரான் வரவைக் கேள்வியுற்ற சில முனிவர்), எழுந்தனர் - (தமது ஆச்சிரமத்தினின்றும்) எழுந்திருந்து, எய்தினர் - வந்து, இருண்ட மேகத்தின் கொழுந்து என நின்ற - கறுத்தமேகத்தின் கொழுந்து என நின்ற, அக்குரிசில் வீரனை - பெருமையிற் சிறந்த வீரனாகிய அந்த ஸ்ரீராமபிரானை, பொழிந்து எழுகாதலின் - பொங்கியெழுகின்ற அன்பினால், பொருந்தினர் - அடைந்தார்கள், (அப்பொழுது), அவன் - அந்த ஸ்ரீராமபிரான், தொழுந்தொறும் தொழுந்தொறும் (தம்மைத்) தனித்தனி வணங்குந்தோறும், ஆசி சொல்லுவார் - ஆசீர்வதிப்பாராயினர்.

குறிப்பு.—எழுந்தனர், எய்தினர் என்பன - முற்றெச்சங்கள் விரைவாய்வந்தனர் என்பதுதோன்ற 'எழுந்தனர் எய்தினர்' என்றார். அரக்கர் சினம் என்னும் வெப்பத்தாலுலர்ந்துவாடும் தாபதராகிய பயிர் செழிப்புறவும் அவ்வெப்பந் தணியவும் இனிமேல் அம்புகளென்னும் மழைபொழிதற்பொருட்டுப் பாற்கடலினின்றும் வந்த கரியமேகமென்பது தோன்ற 'இருண்ட மேகத்தின்கொழுந்து' என்றார். இக்கருத்துக்கிணங்கப் 'பொழிந்து' என்றதைக் காரியப்பொருட்டுச் செயவெனெச்சத் திரிபாகக்கொண்டு அம்மேகக்கொழுந்தை மழைபொழியும்படி (செய்ய) எழுகாதலிற் பொருந்தினர்கள் என்று முடிக்க. குரிசில் 'குருஸ்ரீ' என்னும் வடசொற்றிரிபென்பர். அடுக்கு மிகுதிகுறித்தது. ஆசி ஆசீஸ் என்னும் வடசொற் றிரிபென்பர். அயாவரு மமரர்களதிபதியாகிய எம்பெருமான் இப்போது தான்கொண்ட மானுஷ்யாவதாரத்துக் கிணங்க, தன்னை வணங்குதற்குரிய முனிவரைத் தான்வணங்கினனென்க. (௯)

இனியதோ ரசாலைகொண் டேகி யிவ்வயி
னனியுறை கென்றவற் கமைய நல்கித்தாந்
தனியிடஞ் சார்ந்தனர் தங்கி மாதவ
ரனைவரு மெய்தின ரல்லல் சொல்லுவான்.

இ - ள். (பிறகு), மாதவர் அனைவரும் - அம்முனிவர்களெல்லாரும், இனியது ஓர் சாலை - வசித்தற்கினியதாகிய ஒரு பன்னசாலையில், கொண்டு ஏகி -(ஸ்ரீராமபிரானை) அழைத்துக்கொண்டுசென்று, இவ்வயின் நனி உறைக என்று இவ்விடத்தில் சுகமாகத் தங்குவாயாகவென்று சொல்லி, அவற்கு - அவ்விராமபிரானுக்கு அமைய நல்கி - ஒரு சிறந்த இடத்தை மனக்களிப்போடு பொருந்தக்கொடுத்து, தாம் - தாங்கள், தனி இடம் சார்ந்தனர் - வேறிடத்தைச் சேர்ந்தவர்களாய், தங்கி - தங்கியிருந்து, (பின்பு), அல்லல் சொல்லுவான் - (அரக்கர்களால் தங்களுக்கு நேர்ந்த) துன்பங்களைச் சொல்லும்பொருட்டு, எய்தினர் - மீண்டும் (ஸ்ரீராமபிரானிருக்கும் இடத்தை) அடைந்தார்கள்.

குறிப்பு —நனி உறைக - பலநாள் வாசஞ்செய்க என்னலுமாம். 'நனி யுறை' என்பதூஉம் பாடம். சார்ந்தனர் முற்றெச்சம். சொல்லுவான் வானீற்று எதிர்காலவினையெச்சம். (௪௦)

எய்திய முனிவரை யிறைஞ்சி யேத்துவந்
தையனு மிருந்தன னருளெ னென்றலும்
வையகங் காவலன் மதலை வந்ததோர்
வெய்யவெங் கொடுந்தொழில் விளைவு கேளென.

இ - ள் ஐயனும் - ஸ்ரீராமபிரானும், எய்திய முனிவரை - (தன்னிடத்து) வந்த முனிவர்களை, இறைஞ்சி - வணங்கி, ஏத்துவந்து - (அவர்களைத் தன்வாயில் துதிக்குந்) துதிவந்து, [துதித்து], இருந்தனன் - (அம்முனிவரிருந்தபின் தானும் அப்பால்) இருந்துகொண்டு, அருள் என என்றலும் - (எனக்குக்) கட்டளையிடுதல் யாது என்று கேட்டவளவில், (அம்முனிவர்கள்), வையகம் காவலன் மதலை - உலகத்திற்கு அரசனாகிய தசரதச்சக்கரவர்த்தியின் குழந்தாய்! வந்தது - (எங்களுக்கு) நேரிட்டதாகிய, ஓர் - ஒரு, வெய்ய வெங்கொடுந்தொழில் - கொடியசெய்கையின் விளைவு - பெருக்கத்தை, கேள் என - (நீ) கேட்பாயாக என்று,

குறிப்பு —ஏத்து முதனிலைத்தொழிற்பெயர். 'ஏத்தி' என்னாது 'ஏத்துவந்து' என்றமையால், தன்னை இறைஞ்சி யேத்தத்தக்கவரைத் தான் மானுஷாவதாரத்துக்கேற்ப இறைஞ்சியேத்துந்தன்மை புதிதாகவந்ததெனபதாம். இனி, ஏத்துவந்த ஐயன் எனப்பிரித்து, (சமயந்தோறுந் தத்தந்தெய்வமென்று வெவ்வேறுபெயரிட்டுத் துதிக்கின்ற) துதிகள் (எல்லாந் தன்னதாக) அடைந்த ஐயன் எனலுமாம், ஈண்டு அகரம் - தொகுத்தல், "தொல்லையிறென்றேயாகித் துறைதோறும் பரந்தசூழ்ச்சிப, பலபெருஞ்சமயஞ் சொல்லும்பொருள் " என்னும் பாலகாண்டச் செய்யுளை இங்கே நோக்குக. ஏத்து உவந்து எனப்பிரித்து, முனிவர்கள் வாழ்த்துதலினால் மனமகிழ்ந்து எனப் பொருள்கோடலு மியையும். இருந்தனன் முற்றெச்சம். 'அருள் என்': பெரியோரிடத்துக் கூறும் மரியாதைச்சொல். மதலை அண்மைவிளி. "மைந்த' என்பதூஉம் பாடம். 'வெய்யவெங் கொடுந்தொழில்'—ஒருபொருட்பன்மொழி; மனத்துக்குச் சஞ்சலமும் வாக்குக்குத் தடுமாற்றமும் விளைத்த கொடிய செய்கை.

கள் என்பது குறிக்க 'வெய்யவெங்கொடுமை' என மூன்றுசொல்லடுக்கினா ரென்னலுமாம். விளைவு கொடுந்தொழிலின் மிகுதிகுறிக்க நின்றது, இனி, கொடுந்தொழில் வினைபயன் (துன்பம்) என்னலுமாம். (கக)

இரக்கமென் றொருபொரு ளிலாத நெஞ்சினர்
அரக்கரென் றுளர்சில ரறத்தி னீங்கினார்
நெருக்கவும் யாம்படா நெறிய லாநெறி
துரக்கவு மருந்தவத் துறையு ணீங்கினேம்.

இ-ள். இரக்கம் என்ற ஒருபொருள் - (மன்னுயிர்களிடத்தே) இரங்குதல் என்று சொல்லப்பட்ட ஒருபொருள், இலாத - இல்லாத, நெஞ்சினர் - மனமுடையவர்களாகிய, அரக்கர் என்று - இராக்கதர் என்னப்பட்டு, சிலர் உளர் - சிலரிருக்கின்றார்கள்; அறத்தின் நீங்கினார் - தருமமார்க்கத்தினின்றும் நீங்கின அவ்வரக்கர்கள், நெருக்கவும் - (எங்களை) வருத்தப்படுத்துவதனாலும், யாம் படா நெறி அலா - நாங்கள் ஒழுகுதற்குரிய நல்லொழுக்கமல்லாத, நெறி - தீயொழுக்கத்தில், துரக்கவும் - செலுத்துவதனாலும், அருந்தவம் துறையுள் நீங்கினேம் - அரிய தவத்தினது வழியினின்றும் விலகினேம்.

குறிப்பு — என்றொரு, அகரம் - தொகுத்தல். "சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு" என நாயனார் சினத்தைப் பொருளென்றதற்குப் பரிமேலழகியார், "வைசேடிகர் பொருள், பண்பு, தொழில், சாதி, விசேடம், இயைபு என்பனவற்றை யறுவகைப் பொருளென்றாற்போல, ஈண்டுக் குணம் பொருளெனப்பட்டது" என்று கூறினர். அதுபோல ஈண்டு இரக்கமென்னுந் தொழில் பொருளெனப்பட்டது. அறத்தினீங்கினார் என்னும்பெயர் சொல்லுவார் குறிப்பான் அவரென்னுஞ் சுட்டுப்பெயர் மாத்திரையாயிற்று; "நாணி நின்றோ ணிலைகண்டி யானும், பேணினே னல்லனோ மகிழ்ந்த வானத், தணங்கருங் கடவு ளன்னோள், மகன்றா யாதல் புரைவதா லெனவே" என்னும் அகப்பாட்டில், "நாணிநின்றோள்" என்றும், "அணங்கருங் கடவுளன்னோள்" என்றுங் கூறினாற்போல இது "பொருளொடு புணராச் சுட்டுப்பெயராயினும், பொருள் வேறுபடாஅ தொன்றாகும்மே" என்னுஞ் சூத்திரவிதி. துறையுள், உள் - ஏழனுருபு இது ஐந்தனுருபு நீக்கப்பொருளில் மயங்கிவந்தது. (கஉ)

வல்லியம் பலதிரி வனத்து மானென
எல்லியும் பகலுநொந் திரங்கி யாற்றலேஞ்
சொல்லிய வறநெறித் துறையு நீங்கினேம்
வில்லியன் மொய்ம்பினாய் வீடு காண்குமோ

இ-ள். வில் இயல் மொய்ம்பினாய் - கோதண்டம்பொருந்திய புயத்தையுடையாய்! பல வல்லியம் திரி வனத்து - அநேகம்புலிகள் சஞ்சரிக்கின்ற காட்டில், மான் என - (வருந்துகின்ற) மான்போல, எல்லியும் பகலும் - இரவும் பகலும், நொந்து இரங்கி - மனநொந்து வருந்தி, ஆற்றலேம் - (அவ்வரக்கர்செய்யுங் கொடுமைகளைப்) பொறுக்கமாட்டாதவர்களாய், சொல்லிய - (நூல்களிற்) சொல்லப்பட்ட, அறம் நெறி துறையும் - தருமமார்க்கத்தின் வகைகளினின்றும், நீங்கினேம் - வழுவினோம், (ஆதலின்), வீடுகாண்குமோ - மோக்ஷம் அடைவேமோ?

குறிப்பு — வல்லியம் அரக்கர்க்கும், மான் முனிவர்க்கும் உவமை. என் உவம விடைச்சொல். ஆற்றலேம் உளப்பாடு தன்மைப் பன்மை யெதிர்மறை வினைமுற்று. தமது இடுக்கண் ஒழியுமென்னுந் துணிபுபற்றி 'வல்லியன் மொய்ம்பினுய்' என விளித்தார். அறநெறித்துறையினின்றும் நீங்கினமையால், மோக்ஷ வீடு மோவென்னும் அச்சத்தால் 'வீடுகாணுதுமோ' என்றார். இனி, 'வீடுகாணுதுமோ' என்றற்கு இத்துன்பத்தினின்றும் விடுதலையடைவோமோ என்னலுமாம். காணுதும், தும் தன்மைப்பன்மை யெதிர்காலமுற்று விகுதி. (௧௩)

மாதவத் தொழுக்கிலே மறைகள் யாவையு
மோதலே மோதுவார்க் குதவ லாற்றலே
மூதெரி வளர்க்கிலே முறையி னீங்கினே
மாதலி னந்தண ரேயு மாகிலேம்.

இ - ள். மாதவத்து ஒழுக்கிலேம் - பெருமைபொருந்திய தவநெறியில் நடக்கின்றோமில்லை, மறைகள் யாவையும் ஓதலேம் - வேதங்களெல்லாவற்றையும் ஓதுகின்றோம் இல்லை, ஓதுவார்க்கு உதவல் ஆற்றலேம் - ஓதுகின்றவர்களுக்கு உதவிசெய்கின்றோமில்லை [ஓதுவிக்கின்றோமில்லை], மூது எரி வளர்க்கிலேம் - பழமையாகிய யாகாக்கினியை வளர்க்கின்றோமில்லை [யாகஞ்செய்கின்றோமில்லை], முறையின் நீங்கினேம் - (அந்தணர்க்குரிய) முறைமையினின்றுந் தவறினேம், ஆதலின் —, அந்தணரேயும் ஆகிலேம் - பிராமணராயு மாகின்றோமில்லை,

குறிப்பு — அரக்கரால் நேர்ந்த இடையூறுகளால், அந்தணர்க்குரிய தொழில்களான ஓதல், ஓதுவித்தல் முதலியவற்றைத் தவறினமையின் இன்னணங் கூறினார். 'மறைகள் யாவையும்' என்றது வேதங்களோடு அவற்றின் அங்கங்களும் உபாங்கங்களும் அடங்குதற்கு. எரி காருகபத்தியம், ஆகவனீயம், தக்ஷிணாக்கினியம் என்பவை. "மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான், பிறப்பொழுக்குங் குன்றக் கெடும்" என நாயனார் கூறியபடி வேதமோதாமை அந்தணராகாமைக்குரிய காரணங்களு ளொன்றாயினும் "அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுக லான்" என்று வரையறுத்திருத்தலால், ஈண்டு அந்தணரென்றது முனிவரை (௧௪)

இந்திர னெனின்வ னரக்க ரேயின
சிந்தையிற் சென்னியிற் கொள்ளுஞ் செய்கையா
னெந்தைமற் றியாருள ரிடுக்க ணீக்குவா
ரந்தனை யாஞ்செய்த தவத்தின் மாட்சியால்.

இ - ள். இந்திரன் எனின் - இந்திரனோவென்றால், அவன் —, அரக்கர் ஏயின - ராக்ஷஸர் கட்டளையிட்ட தொழில்களை, சிந்தையின் சென்னியின் கொள்ளும் செய்கையான் - மனத்தினும் சிரசினும் கொள்ளுகின்ற தொழிலினையுடையனாயிருக்கின்றான், (ஆகையால்), எந்தை - எங்கட்கிறைவனே! இடுக்கண் நீக்குவார் - (எங்கள்) துன்பத்தைப் போக்குபவர், மற்று யார் உளர் - (உன்னையன்றி) வேறு எவரிருக்கின்றனர், [ஒருவருமில்லை], யாம் செய்த தவத்தின் மாட்சியால் - யாங்கள் முன்பு செய்த தவத்தின் மகிமையால், வந்தனை - (நீ யெங்களைக் காத்தற்கு இங்கே) எழுந்தருளினாய்

குறிப்பு.—இந்திரன் திரிலோகாதிபதியாயிருந்தும் அதேதுக் கூறுமாறு அவனால் யாதும் பயனில்லை யென்பதுபற்றி அவனையீண்டுச் சுட்டிக் கூறினார்கள். எயினர் - எவினர் என்பதன்றிரிபு, பலவின்பாற் பெயர். சிந்தையிற் கொள்ளுதலாவது அரக்கரிட்ட வேலையைச் செய்துமுடித்தப் பின்னர் அவர்பால் முடிவைப் புகலச் சந்தர்ப்பம் வாயாவிட்டது வினவும் போழ்து தெரிவித்தற்கு மறவாதிருத்தற்பொருட்டு அதே தியானமாக விருத்தல். சென்னியிற் கொள்ளுதலாவது இழிவான வேலையையும் மேலாக நினைத்துச் செய்தல். எதுகை அணிமைவிளி. 'யார்' என்னும் வினா இன்மை குறித்தது. (௧௫)

உருளுடை நேமியா லுலகை யோம்பிய
பொருளுடை மன்னவன் புதல்வ போக்கிலா
விருளுடை வைகலே மிரவி தோன்றினா
யருளுடை வீரநின் னபயம் யாமென்றார்.

இ - ள். உருள் உடை நேமியால் - உருண்டு செல்லுதலையுடைய (ஆஞ்ஞா) சக்கரத்தினால், உலகை ஓம்பிய — உலகமுழுவதையுங் காத்த, பொருள் உடை - செல்வங்களையுடைய, மன்னவன் புதல்வ-சக்கரவர்த்தி திருமகனே! போக்கு இலா- ஒழிவில்லாத, இருள் உடை - (துன்பமாகிய) இருளையுடைய, வைகலேம் - நாளையுடையரா யிருக்கின்றோம், இரவி தோன்றினாய - (அவ்விருளைப்போக்குதற்குச்) சூரியன்போல (நீ இங்கே) எழுந்தருளினாய், அருள் உடை வீர - கருணையையுடைய வீரனே! யாம் நின் அபயம் என்றார் - யாங்கள் நினக்கு அடைக்கலமென்று வேண்டினார்கள்.

குறிப்பு —உருள் முதனிலைத்தொழிற்பெயர். ஆஞ்ஞையைச் சக்கரமென்றல் செய்யுள்வழக்கு 'உலகையோம்பிய மன்னவன்புதல்வ' என்னும் சுவாபிப்பிராய விசேஷணத்தால், எங்களைக் காத்தருளுதல் உனது கடமையென்பது குறிப்பிக்கப்பட்டது. இது பரிகராலங்காரம் சரணமடைந்தாரைக் கைநெகிழவிடாது காத்தருளும் புத்திரனைப் பெற்றமையின் "தமபொருளென்ப தம்மக்கள்" என்றபடி 'பொருளுடைமன்னவன்' என விசேடித்தார் 'அருளுடைவீர' என்றதனால் சிஷ்டரைக் காத்தற்கண் வேண்டும் அருளுடைமையும், துஷ்டரை யொறுத்தற்கண் வேண்டும் வீரமும் கூறப்பட்டன அபயம் - பயப்படாதே யென்றுசொல்லிக் காக்கத்தக்க பொருள். (௧௬)

புகலபு குந்தில ரேறபுறத் தண்டத்தி
னகலவ ரேனுமென் னம்பொடும் வீழ்வரா
றகவி றுன்பந் தவிருதி நீரென்ப
பகல வன்குல மைந்தன் பணிக்கின்றான்

இ - ள். பகலவன் குலம் மைந்தன் - சூரியகுலத்தில் தோன்றிய ஸ்ரீராமபிரான், (அம்முனிவர்களது விண்ணப்பத்தைக்கேட்டு), புகல் புகுந்திலரேல் - (அவ்வரக்கர் இனிக் கொடுமைபுரிவதில்லையென்று) சரணமடையாமற்போனால், புறத்து அண்டத்தின் அகலவரேனும் - (இவ்வண்டத்தைவிட்டு) அப்பாலுள்ள வேறு அண்டங்களில் ஓடிப்போவாரானாலும், என் அம்பொடும் - (யான் பிரயோகிக்கும்) பாணத்தோடே, வீழ்வர் - (இறந்து கீழே) விழுவார்கள், ஆல - ஆதலால்

வ, நீர் - நீங்கள், தகவு இலதுன்பம் - தகுதியில்லாத இத்துன்பத்தை, தவிருதிர் - விட்டு விடுங்கள், என்று - என்று, பணிக்கின்றான் - சொல்லுகின்றான்.

குறிப்பு—'அம்பொடும் வீழ்வார்' என்னுமிடத்து முன்னே நிகழும் அம்பின் வீழ்ச்சியாகிய காரணமும், பின்னே நிகழும் அரக்கர்களின் வீழ்ச்சியாகிய காரியமும், சமகாலத்தில் நிகழ்வதாக முறைபிறழவைத்தமையின் இது முறையிலுயர்வு நவிற்சியணி, இதனை வடநூலார் அக்கிரமாதிசயோக்தியென்பர் இது காரிய விரைவைத் தெரிவிப்பது. இனி, "ஊசியொடு குயின்ற தூசும்பட்டும்" என்புழிப் போல ஒடு உருபைக் கருவிப்பொருளினதாகிய ஆல் உருபாகக்கொண்டு அம்பினால் வீழ்வரெனினுமாம். பகல்வன - இன்பங்களை யுண்டாக்குபவன என்பதுபொருள் புகுந்திலரேல் அகல்வரேனும் ஏல், எனும் வினையெச்ச விகுதிகள் (கஎ)

வேந்தன வீயவும் யாயவர மேவவு
மேந்த லெம்பி வருந்தவு மென்னகர்
மாந்தர் வள்துயர் கூரவும் யானவனம்
போந்த தென்னுடைப் புண்ணியத் தானென்றான்.

இ - ள் வேந்தன் வீயவும்-(தசரத)சக்கரவர்த்தி யிறக்கவும், யாய்வரம் மேவவும் - (கைகேயி என்னும்) தாய் வரங்களை விரும்பிக்கேட்கவும், ஏந்தல் எம்பிவருந்தவும் - பெருமையையுடையோனாகிய என்தம்பி பரதன் துன்பமடையவும், என் நகர்மாந்தர் வல்துயர் கூரவும் - எனது நகரத்தில் [அயோத்தியில்] உள்ள ஜனங்கள் வலியதுன்பத்தை மிகுதியாக அடையவும், யான்வனம் போந்தது - நான் காட்டிற்குப் புறப்பட்டுவந்தது, என்னுடைப் புண்ணியத்தான் என்றான் - எனது நல்வினையாலாகும் என்றான்.

குறிப்பு—வேந்தன்வீதல் - புத்திரசோகத்தால். வரங்கள் - பரதனுக்கு நாடளித்தலும் இராமனுக்குக் காடளித்தலுமாம் பரதன் வருந்துதல் - தனது பிரிவாற்றாமையாலும், இராச்சியபாரம் பொறுத்தற்கருமையாலும் மூத்தமகனாகிய தனக்கே யுரியதாதலால 'என்னகர்' என்றான். தம்பிபுரியு மரசுரிமையை வேற்றுமையின்றித் தான்புரிவதாகக் கொண்டிருத்தலின் 'என்னகர்' என்றான் எனினுமாம். யான்வனம் எய்தாவிடின் முனிவர்க்குற்ற இடர்நீக்க நேரிடாதென்னும் அருமைதோன்ற 'யான் போந்த தென்னுடைப் புண்ணியத்தான்' என்றான். (கஅ)

அறந்த வாநெறி யந்தணர் தன்மையை
மறந்த புல்லர் வலிதொலை யேனெனி
னிறந்து போகினு நன்றிது வல்லது
பிறந்தி யான்பெறும் பேறென்ப தியாவதோ.

இ - ள் அறம் தவாநெறி - தருமத்தினின்றும் நீங்காத நல்லொழுக்கத்தினையுடைய, அந்தணர் தன்மையை - முனிவர்களது பெருமையை, மறந்த - (அம்முனிவர்களுக்குத் துன்பத்தைச் செய்தலான்) மறந்துபோன, புல்லர் - அற்பர்களாகிய அவ்வரக்கர்களது, வலிதொலையேன் எனின் - வல்லமையை அழியேனாயின், இறந்துபோகினும் - (அவ்வரக்கர்களாலேயான்) இறந்துபோனாலும், நன்று - நல்லதே; இது அல்லது - இதனையல்லாமல், பிறந்து - (மானிட ஜன்மத்தில்) தோன்றி, பெறு

ம்பேறு எனபது யாவதோ? - அடைகினற பாககியமெனறு சொல்லப்படுவேதுவேறு எதுவோ.

குறிப்பு —ஒனறுமில்லை யெனபதாம். எனபது - முதல்வேறறுமைச சொல்லுருபு. ஓ - எதிாமறை 'இதுவலலது' எனபதூஉம பாடம நானகாமடியினகணுளள குறறிகரஙகளிரணடனுள முனனது அலகுபெறறும பினனது அலகுபெறாதும வநதமைகாணக. (௧௯)

நிவநத வேதியா நீவிருந தீயவா
கவநத பநதக களிநடங கணடிட
வமைநத விலலு மருஙகணைத தூணியுஞ
சுமநத தோளும பொறைததுயா தீருமால.

இ - ள நிவநதவேதியா - உயாநத அநதணாகளாகிய, நீவிரும - நீஙகளும, தீயவா - துஷடாகளாகிய அவவரககாகளது, கவநதபநதம - உடறகுறைநிரைகளினது, களிநடம கணடிட - பிறா களிககுமாறு குதிககுஙகூததினைக காணுமபடியாக, அமைநதவிலலும - (வலியகடடுககள) பொருநதிய விலலையும, அரும கணைத தூணியும - தடுததறகரிய அமபுகளையுடைய தூணீரஙகளையும, சுமநததோளும - தாஙகிககொணடிருககினற (எனது) தோளகளும, பொறைததுயா - அவறறைச சுமப்பதாலாகிய துனபததை, தீரும - நீஙகபபெறும,

குறிபபு —நீவிரும எனற உமமை மறறை யாவரையுந தழுவியது. உம தீயவா எனறு பிரிதது உமககுத தீமையைச செயகினறவரெனனுமாம கவநதம் - கபநதம, உடறதறை கணைததூணி அமபுபபுடடில தோளகள விலலுநதூணியும தாஙகுதறகுபபயன போரிற பகைவரைவெலலுதலே யாதலால, தோளும பகைததுயாதீருமெனறாா. தோளும எனற உமமை, பூமியும பாரநீஙகும, நீவிருநதுனப நீஙகுவிரெனக குறிபபிததது இனி, நீவிரும தோளும களிநடங கணடிடலால பொறையினுளதாகிய துயா தீருமென வுரைததலுமாம, ஈணடு, பொறைததுயா எனபது சிலேடைவகையால் வேதியா மேலேறும போது அவாதமபொறுமையான விளைநததுயரெனவும, தோணமேலேறுமபோது சுமைபபாரததாலவநத துயரெனவு முறைகாணக. முறகூறிய பொருளில நீவிா எனபது கணடிட எனனும வினையடிகொணடது (௨௦)

ஆவுக காயினு மநதணாக காயினும
யாவாக கேனு மெளியவாக காயினுஞ
சாவப பெறறவ ரேதகை வானுறை
தேவாக குநதொழுந தேவாக ளாகுவாா.

இ - ள. ஆவுககு ஆயினும - பசுககளை இரகூஷிககும பொருடடாலும், அநதணாககு ஆயினும - அநதணாகளை இரகூஷிககும பொருடடாலும, எளியவாககு ஆயினும - ஏழைகளை இரகூஷிககும பொருடடாலும, யாவாககு எனும - இனனும் எவாகளைக காககும்பொருடடாலும, சாவபபெறறவரே - (உதவிசெயது) இறக்கப் பெறறவோகளே, தகைவான உறை - தகைமைபொருநதிய சுவாககலோகததில் வசிககினற, தேவாககும - தேவாகளாலும, தொழும தேவாகள ஆகுவாா - வணஙகததககுநத தேவர்களாவாாகள.

குறிப்பு—எளியவர் - தேகவலியும், பொருள்வலியும் மானுஷ வலியுமில்லாதவர். தேவர்க்கும் - இது வேற்றுமைப் பொருண்மயக்கம். தேவருள்ளும் சிறந்த தேவரென்றபடி (உக)

சூர றுத்தவ னுஞ்சுடர் நேமியு
மூர றுத்த வொருவனு மோம்பினு
மார றத்தினொ டன்றிநின் றாரவர்
வேர றுப்பென் வெருவன்மி னீரென்றான்

இ-ள். சூர் அறுத்தவனும் - சூரபதுமனென்னும் அசுரனை அழித்த குமாரக் கடவுளும், சுடர்நேமியும் - பிரகாசிக்கின்ற சக்கராயுதத்தையுடைய திருமாலும், ஊர் அறுத்த ஒருவனும் - திரிபுரங்களை எரித்தழித்த பரமசிவனும், ஓம்பினும் - (உதவி செய்து) காக்கினும்,— ஆர் அறத்தினொடு அன்றி நின்றார் அவர் - எவ்வரக்கர்கள் தருமத்தோடு பொருந்தாமல் அதருமத்தோடு பொருந்தி நின்றார்களோ? அவர்களை, வேர் அறுப்பென் - வேரோடுகளைவேன், நீர் வெருவன்மின் - நீங்கள் அஞ்சாதேயுங்கள், என்றான் - என்று கூறினான்.

குறிப்பு—திரிமூர்த்திகளுள்ளும் பிரமன் அந்தணனாகி வைதிகநிஷ்டையிலிருப்பவனாதலாலும், தவஞ்செய்வோர்க்கு உதவுதலேயன்றி லோககண்டகர்களை நிக்கிரகஞ்செய்யாதவனாதலாலும் அவனை நீக்கிப் போரில்வல்லவனும் தேவசேனாதிபதியுமாகிய குமாரக்கடவுளைக்கூட்டி யுரைத்தனனென்க. சூர் - வடசொற்சிதைவு. நேமி - சக்கரபாணிக்கு ஆகுபெயர், சுடர்நேமி - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையுமாம். 'ஓம்பினும்' என்ற உம்மை எதிர்மறையாய் அவர் காவாமையைக்குறித்தது. அபயப்பிரதானஞ்செய்தான் என்பதாம். (உஉ)

உரைத்த வாசகங் கேட்டுவந் தோங்கிட
விரைத்த காதல ரேங்கிய வின்னலர்
திரித்த கோலினர் தேமறை பாடினர்
நிருத்த மாடினர் நின்று விளம்புவார்.

இ-ள். உரைத்தவாசகம் - (அவ்வாறு ஸ்ரீராமபிரான்) சொன்ன வார்த்தையை, கேட்டு - (முனிவர்கள் கேட்டு) உவந்து - மகிழ்ந்து, ஓங்கிட இரைத்தகாதலர் - அதிகமாகப் பொங்கியெழுந்த அன்பினையுடையவர்களும், ஏங்கிய இன்னலர் - நீங்கிய துன்பமுடையவர்களும், திரித்த கோலினர் - (கையால்) திரித்த தண்டத்தையுடையவர்களும், தேமறைபாடினர் - இனிமையான வேதங்களை யுச்சரித்தவர்களும், நிருத்தம் ஆடினர் - (ஆனந்தத்தால்) கூத்தாடினவர்களுமாகி, நின்று விளம்புவார் - நின்று சொல்லுவார்கள்.

குறிப்பு—உவந்தோங்கினர்-மகிழ்ந்து துள்ளிக்குதித்தனரென்னலுமாம். 'இரைத்தகாதலர்,' 'ஏங்கிய இன்னலர்,' 'திரித்தகோலினர்' இவையனைத்தும் 'செய்தவேலையன்' என்புழிப்போல வடநூன்முடிபுகள். திரிதண்டமும் ஏகதண்டமும் அடங்குதற்குக 'கோல்' எனப் பொதுப்படக்கூறினர். தேமறை என்பதற்குத் தெய்வத்தன்மையுள்ள வேதமெனினுமாம். நிருத்தம்—நருத்தம். கோல்திரித்தல் முதலிய மூன்றும் மாணாக்கக்குறிப்பு (உங)

தோன்ற னீமுனி யிறபுவ னததொகை
மூனறு போலவன முபபது கோடிவந
தேனற போது மெதிரல வெனறலிற
சானறு வேதந தவமபெரு ஞானமே

இ - ள. தோனறல - தலைவனே ! நீ முனியின - நீ கோபிபபாயே யானல, மூனறுபோலவன - திரிலோகததை ஒப்பனவாகிய, முபபதுகோடி புவனததொகை- முபபதுகோடி லோகஙகளினகூட்டம, வநது - (ஒரேகாலததில ஒருஙகே சோநது) வநது, எனறபோதும - எதிாததாலும, (அவை), எதிா அல-(உனககு) நிகா அலல , எனறலின - எனறதனமையில, வேதம - வேதஙகளும, தவம - தவஙகளும, பெருஞானம - விசேடமான தததுவ ஞானமும, சானறு - சாடசியாகும்.

குறிப்பு—தோனறல் எப்பொருடகுந தலைவன, "இறையே சாரண னியவுடோனற-லதிபன றலைவற கபிதானமமே" இது பிஙகலம , அண்மைவிளி நீ சினநதாலே யழியுந தகைய வுலகஙகளோடு போாபுரிதலும வேணடுமா ? எனபாா 'முனியின' எனறா. இவவரககா உனககொருபொருடடா ? எனபாா 'புவனத தொகை மூனறு போலவன முபபதுகோடி வநதேனறபோது மெதிரல' எனறா. 'மூனறுபோலவன முபபதுகோடி' எனறா போா புரிய வருபவரின மிகுதியைக குறிததறகு. புவனம இடவாகுபெயா எனறு, எல - பகுதி எமபிரானது பெருமையையே வேதஙகள ஓதுவதுபறறியும, அஙஙனம ஓதாநினற வேதஙகளையே தமககுப பறறுககோடாககககொணடு புரிகினற தவவலிமையினுலும, அததவததாலுணடாகினற தததுவஞானததாலும ஈஸவரனைத தாம அறிநதிருப்பது பறறியம 'சானறு வேதந தவம பெருஞானமே' எனறா (உச)

அனன தாகவி னேயின வாணடெலா
மினனல காததிங கினிதுறை வாயெனச
சொனன மாதவா பாதந தொழுதுயா
மனனா மனனவன மைநதனும வைகினுன

இ - ள. அனனது ஆகலின - (நினமகிமை) அததனமையதாதலால, எயின ஆணடு எலாம - (நீ வனததிலிருககுமபடி நினதாய) கடடளையிட்ட வருடஙகளெல்லாம, இனனலகாதது - (எஙகளுககுத) துனபமவராதபடி காததுககொணடு, இஙகு இனிது உறைவாய என - இவவிடததே இனிதாக வாசஞ்செயவாயெனறு, சொனன மாதவா - சொலலிய பெருமைபொருநதிய முனிவாகளது, பாதம தொழுது - அடிகளைவணஙகி, உயா மனனா மனனவன - சிறநத அரசாககரசனுகிய தசாதசககரவாததியின, மைநதனும - பதல்வனுகிய ஸ்ரீராமபிரானும, வைகினுன - (அதறகு உடமபடடுத) தஙகியிருநதான,

குறிப்பு—எயின - பொருநதியவெனினுமாம். "குறறமேகாகக பொருளாக," "அருமபணபினுற றீமைகாகக." என்பனவறறிறபோல, இன்னல்காதது என்பதற்கு இனனல்வாராமற காததது எனப பொருளகொளக. உயா எனபதனை மன்னர்க்காதல், மனனவறகாதல், மைநதறகாதல கூட்டுக. மனனர் மனனவன - ராஜாதிராஜன். (உ௫)

ஐந்து மைந்து மமைதியி னுண்டவண்
மைந்தர் தீதிலர் வைகினர் மாதவர்
சிந்தை யெண்ணி யகத்தியற் சேர்கென
விந்து நன்னுத லாளொடு மேகினர்.

இ - ள் மைந்தர் - ஸ்ரீராமலக்ஷ்மணர்கள், அவண் - அவ்விடத்தில், ஐந்தும் ஐந்தும ஆண்டு - பத்துவருஷகாலம், அமைதியின் வைகினர் - சுகமாகத் தங்கியிருந்தார்கள், (பின்) மாதவர் - அம்முனிவர்கள், சிந்தை எண்ணி - மனத்தின்கண் ஆலோசித்து, அகத்தியன் சேர்க என - அகத்திய முனிவரைச் சேர்வீராக என்று சொல்ல, (அவ்வாறே) இந்து நல் நுதலாளொடும் - பிறைச் சந்திரன்போன்ற அழகிய நெற்றியையுடைய சீதாபிராட்டியுடனே, ஏகினர் - சென்றார்கள்

குறிப்பு —திரிகால ஞானிகளாகிய முனிவர்கள் மேல் இராவண வதம் நடக்க வேண்டியிருத்தலை, அறிந்திருத்தலிற் 'சிந்தையெண்ணி' யென்றும், அதற்கு அகஸ்தியரிடத்துத் தநுசுபெறவேண்டியிருத்தலின் 'அகத்தியற் சேர்கென' என்றும் கூறினர் (௨௬)

விடர கங்களும் வேய்செறி கானமும்
படருஞ் சின்னெறி பையபைய நீங்கினர்
சுடரு மேனிச் சுதீக்கண னென்னுமவ்
விடரி லானுறை சோலைசென் றெய்தினர்

இ - ள் விடர் அகங்களும் - பூமியில் வெடிப்புள்ள இடங்களிலும், வேய் செறி கானமும் - மூங்கில்கள் நிறைந்த காடுகளிலும், படர் - செல்லுகின்ற, சில் நெறி - சிறிய வழியை, பையபைய - மெல்லமெல்ல, நீங்கினர் - கடந்தவர்களாய், சுடரும் மேனி - விளங்குகின்ற மேனியையுடைய, சுதீக்கணன் என்னும் - சுதீக்ஷ்ணன் என்னும் பெயரினையுடைய, அவ் இடர் இலான் - துன்பமில்லாத அம்முனிவர், உறை - வாசஞ்செய்கின்ற, சோலை சென்று எய்தினர் - சோலையிற்போய்ச் சேர்ந்தார்கள்

குறிப்பு —வேய் - மற்றை மூங்கில்களுக்கு முபலக்ஷணம் சின்னெறி - சிறியநெறி, பண்புத்தொகை, ஒற்றையடிப்பாதை பையபைய என்னும்மிகுப் பைபைய என விகாரப்பட்டது "பைபைய வீழ்ந்தனரே" என்றார் சிந்தாமணியிலும் பிரம தேஜஸ் விளங்கப்பெற்ற சரீரத்தை யுடையர் என்பார் 'சுடரும் மேனி' என்றார் சுதீக்ஷ்ணர் - சுதீக்கணர், உக்ரமான தவமுடையவரென்பது பொருள் இடர் - பிறவித்துன்பம். ஐம்புலன்களாலாகுந் துன்பமுமாம் (௨௭)

அருக்க னன்ன முனிவனை யவ்வழிச்
செருக்கில் சிந்தையர் சேவடி தாழ்தலு
மிருக்க வீண்டென் றினியன கூறினன்
மருக்கொள் சோலையின் மைந்தரும் வைகினர்.

இ - ள். செருக்கு இல் சிந்தையர் - கர்வமில்லாத சிந்தையையுடைய ஸ்ரீராமலக்ஷ்மணர்கள், அவ்வழி - அந்த இடத்தில் [ஆச்சிரமத்தில்] அருக்கன் அன்ன -

சூரியனையொத்த, முனிவனை - சுதீக்ஷணமுனிவரை, சேவடிதாழ்தலும் - சிவந்த திருவடிகளில் விழுந்து வணங்கினவளவில், (அம்முனிவர்) ஈண்டு இருக்க என்று - இவ்விடத்தில் தங்குகவென்று, இனியன கூறினன் - இனிய உபசாரவார்த்தைகளைச் சொன்னார், (சொல்ல) மைந்தரும் - அக்குமாரர்களும், மரு கொள் சோலையில் - (மிக்க வாசனையைக்கொண்ட அச்சோலையில், வைகினர் - தங்கினார்கள்

குறிப்பு — அஞ்ஞானமாகிய விருளைக்கெடுத்து விளங்குதலின் 'அருக்கன்னன முனிவன்' என்றார் யாம் இறைமக்களாய வீரர்களாயிருக்கின்றோமே என்பதுபற்றித் தருக்குறுமையிற் 'செருக்கில் சிந்தையர்' என்றார் (௨௮)

வைகும் வைகலின் மாதவன் மைந்தன்பாற்
செய்கை யாவையுஞ் செய்திவட் செல்வநீ
யெய்த யான்செய்த தெத்தவ மென்றன
னைய னும்மவற் கன்பினன் கூறுவான்.

இ - ள் வைகும் வைகலின் - (அவ்வாறு) தங்கியிருக்கும்போது, மாதவன் - அம்முனிவர், மைந்தன்பால் - ஸ்ரீராமபிரானிடத்தில், செய்கையாவும் - செய்யவேண்டிய உபசாரங்களெல்லாவற்றையும், செய்து - நடத்தி, செல்வ - அருமைக்குழந்தாய்! நீ இவண் எய்த - நீ இவ்விடத்தில் எழுந்தருளும்படி, யான் செய்தது எத்தவம் - யான் பண்ணியது எந்த மேலான தவமோ? என்றனன் - என்று சொன்னார், (அதற்கு) ஐயனும் - ஸ்ரீராமபிரானும், அவற்கு - அம்முனிவருக்கு, அன்பினன் - அன்பையுடையவனாகி, கூறுவான் - சொல்லுவான்.

குறிப்பு — வைகல் - பொழுதும் நாளுமாம், செல்வன் - இம்மை மறுமை வீடுகளில் அடையும் பாக்கியங்களைத் தன் அடியார்க்குத் தருபவன் ஆகலின் இவ்வாறு விளித்தாரெனினுமாம் அவற்கு வேற்றுமையுருபு மயக்கம் (௨௯)

சொன்ன நான்முகன் றன்வழித் தோன்றினா
முன்னை யோரு ளுயர்தவ முற்றினா
ருன்னின் யாருள ருன்னரு ளெய்திய
வென்னின் யாருள ரிற்பிறந் தாரென்றார்.

இ - ள். சொன்ன - யாவராலும் புகழ்ந்து சொல்லப்படுகின்ற, நான்முகன்றன் - பிரமதேவனது, வழி - வமிசத்தில், தோன்றினார் - பிறந்தவர்களாகிய, முன்னையோரின் - முதன்மையான முனிவர்களுள், உயர்தவமுற்றினார் - உயர்ந்த தவத்தை முற்றச்செய்தவர்கள், உன்னின் யார் உளர் - உன்னைப்போல யார் இருக்கின்றார்கள்? [ஒருவருமிலர்], உன் அருள் எய்திய - உன்னுடைய கிருபையையடைந்த, என்னின் - என்னைப்போல, இல் பிறந்தார் - உயர்குடியிற் பிறந்தவர்கள், யார் உளர் - யாவரிருக்கின்றார்கள்?

குறிப்பு - பிரம வமசத்திற் பிறந்தவர்களுள் உன்னைப்போல் தவஞ்செய்தவரில்லை, சூரிய வமிசத்திற் பிறந்தவருள் என்னைப்போல நின்னருளைப்பெற்றவரில்லையென்பதாம் பிராமணரென்பதன் பொருள்பற்றி, 'நான்முகன் றன்வழித்தோன்றினார்' என்றார். இனி, இற்பிறந்தாரென்பதற்கு இல்வாழ்க்கையை யுடையவரென்றும், உன்னின் என்பதற்கு ஆராயுமிடத்து என்றும் கூறலாம். (௩0)

உவமை நீங்கிய தோன்ற லுரைக்கெதி
நவமை நீங்கிய நற்றவன சொலலுவா
னவமி லாவிருந தாகியென் ளுலமை
தவமெ லாங்கொளக தககிணை யாவெனருன.

இ - ள். உவமைநீங்கிய - சமானமிலலாத, தோனறல உரைககு - ஸ்ரீராமபி ரானது வாாததைககு, எதிா - உததரமாக, நவமைநீங்கிய - புதுமையிலலாத [பழைய], நலதவன - சிறநதசவததையுடைய முனிவா, சொலலுவான - சொலலுவாா, அவம இலாவிருநது ஆகி - பழுது இலலாத விருநதாக நீ இருநது, எனனுல அமை- எனனுறசெயயபபடட, தவம எலாம - தவஙகளையெலலாம, தககிணை ஆ - தக்ஷிணை யாக, கொளக - பெறறுககொளவாயாக, எனருன - எனறுசொனனுன

குறிபபு—நவமை - வடசொலலடியாகபபிறநத பணபுப்பெயா நவம் - பூமி, மை -குறறம எனவே பூமிசமபநதமாகிய குறறஙகளெனலுமாம அவமிலாவிருநது- தகுதியானவிருநது. விருநது - ஆகுபெயா தக்ஷிணை - தககிணை, காணிககை.(௯௧)

மறைவ லாமெனறிா வளளலுங கூறுவா
னிறைவ நினனரு ளெததவத திறமெளி
தறைவ தீணடொன றகததியற காணபதோா
குறைகி டநத தினியெனக கூறினுன

இ - ள வளளலும - ஸ்ரீராமபிரானும, மறைவலான எதிா - வேதததில வல லவரான சுதிககண முனிவருககு எதிரில, கூறுவான - சொலலுவான, இறைவ- மேலோனே! நின அருள - உனகருணை, எ தவததிறநு - எநதததவததிறநு, எளிது - எளிமையானது? (எனறுகூறி அவரளிதத தவததினையெலலாம எறறுககொணட பினபு) ஈணடு - இபபொழுது, அறைவது - சொலலவேணடுவது, ஒனறு - ஒனறு ளது, (அது எனனவெனருல) இனி அகததியன காணபது -இனி அகஸ்திய முனி வரைககாணவேணடுவதாகிய, ஓா குறைகிடநதது-ஒரு குறைவு (எனமனததில) உள ளது, என கூறினுன - எனறுசொனனுன

குறிபபு—முனிவா தலைவனுதலால இறைவ எனருா நினனருளே எலலாத தவததிறநுமஉயாநததெனபதாம குறை - இனறியமையாப் பொருளுமாம இப பொருடடாதலை "வினைககுறை தீாநதாரிற றீாநதனறுலகு" எனனும குறளினுனு ம, "பயககுறை யிலலைத தாமவாழு நாளே" எனனும புறப்பாட்டினுனுமுணாக. ()

நலல தேகினைந தாயது நானுமுன
சொலலு வானறுணி கினறது தோனறனீ
செலலு காணடவற சேருதி சோநதபின
னிலலை நினவயி னெயதலில லாதவே

இ - ள. தோன்றல - தலைவனே! நீ நல்லதே நினைந்தாய் - நீ நல்லகாரியத் தையேயெணணினுய, அது - அககருமததை, நானும முன் சொலலுவான றுணி கினறது - நானும முனனமே சொலலுமபடி நிசசயிததது, ஆணடுசெலலுக அவண் சேருதி - அவ்விடததிறகு விரைவிறபோய அவவகஸ்திரை யடைவாய, சோர்ந்த

பின் - (அம்முனிவரை) யடைந்தபிறகு, நின்வயின் - உன்னிடத்தில், எய்தல் இல்லாத இல்லை - அடையாத பேறுகள் ஒன்றுமில்லை.

குறிப்பு — சொல்லுவான் - வானீற்றெதிர்காலவினையெச்சம். 'முன்துணிகின்றது' இயல்பினால் இறந்தகாலம் நிகழ்காலத்தில் வந்த வழுவமைதி. உனக்குச் சகல பாக்கியமும் உண்டாகுமென்பதாம். (கூங)

அன்றி யுந்நின் வரவினை யாதரித்
தின்று காறுநின் றேமுறு மாலவற்
சென்று சேருதி சேர்தல் செவ்வியோய்
நன்று தேவர்க்கும் யாவர்க்கு நன்றென்றான்

இ - ள். அன்றியும் - அதுவல்லாமலும், (அம்முனிவர்) நின்வரவினை - உன் வருகையை, ஆதரித்து - இச்சித்து, இன்றுகாறும் நின்று - இந்நாள்வரையில் (எதிர்பார்த்து) நின்று, ஏமுறும் - களிப்புற்றிருப்பர், ஆல் - ஆசையால், செவ்வியோய் - செம்மையுடையோனே! அவன் சென்று சேருதி - அம்முனிவரைப்போய்ச் சேருவாயாக, சேர்தல் - அவ்வாறுபோயடைதல், தேவர்க்கும் நன்று - தேவர்களுக்கும் நல்லது, யாவர்க்கும் நன்று - மற்றெல்லோருக்கும் நல்லது, என்றான் - என்று.

குறிப்பு — ஏமுறுதல் - ஏமமுறுதலென்பதன் விகாரம், ஏமம் - இன்பம். முதலடியில் 'அன்றியும்' என்புழி மகரவொற்றுக் கெடாது யாப்பழியாமைப் பொருட்டு விரித்தல் விகாரமாயின்று, "நுந்தம் எந்நம் நீநும்மவருநவே" என்ற நன்னூல் விதியி னுபலக்கணத்தால் நகரமாய்த் திரிந்து நின்றது. மேல், இராவணசங்காரஞ் செய்து, இவ்வுலோகத்துக்கும் நன்மைசெய்யவேண்டி யிருத்தலின், "தேவர்க்கு நன்று யாவர்க்கு நன்று" என்றார். தேவர்களது பிரார்த்தனையால் திருவவதரித்தமை பற்றி, தேவரை முன்னர்க்கூறினார். (கூச)

வழியுங் கூறி வரம்பக லாசிகள்
மொழியு மாதவன் மொய்ம்மலர்த் தாடொழாப்
பிழியுந் தேனிற் பிறங்கரு வித்திரள்
பொழியுஞ் சோலை விரைவினிற் போயினார்

இ - ள். வழியும் கூறி - (அவ்வாச்சிரமத்திற்குப்போகும்) மார்க்கத்தையும் சொல்லி, வரம்பு அகல் ஆசிகள் - அளவில்லாத ஆசீர்வாதங்களை, மொழியும் - சொல்லுகின்ற, மாதவன் - பெரிய தவத்தையுடைய சுதீக்கண முனிவரது, மொய்ம்மலர்த் தாள் - நெருங்கிய தாமரை மலர்போன்ற பாதங்களை, தொழா - (ஸ்ரீராம லக்ஷ்மணர்கள்) வணங்கி, (பின்பு) பிழியும் தேனின் பிறங்கு - வடிக்கின்ற தேனினது விளங்குகின்ற, அருவித்திரள் பொழியும் சோலை விரைவினிற் போயினர் - கூட்டமாகிய அருவிகளைச் சொரிகின்ற (அகஸ்தியமுனிவர் இருக்கும்) சோலைக்குச் சீக்கிரமாகப் போயினார்.

குறிப்பு — வழியு மென்பதன் உம்மை இறந்தது தழீஇயிற்று. வரம்பகல் ஆசிகள் முனிவரது உவகைமேலீட்டையும் இராமனது பெருமையையும் குறித்தன. மொய்ம்மலர்: முனிவரனைவரும் இராமனையன்றிப் பல உத்தம புருஷர்களும் வணங்குதற்குரியார் என்னும் பொருள்படுமாறு 'மொய்' என்னுஞ் சொற்பெய்யப்பட்

டது. என்னை? மலரிடத்து வண்டுகள் பலமொய்த்தலுண்மையான். தொழா - செய்யாவென்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகால வினையெச்சம். தேனின் இனம் ஐந்தனுருபாகக்கொண்டு தேனமானுந் திவ்வியநீரைப் பொழிதரு மருவித்திரள்கள் எனினுமொக்கும். இப்பொருள்கொள்ளுங்கால் தேன் பிழிவதிற் பிறங்கு மருவித்திரள் எனமாறி யுரைத்தலே யமைவுடைத்து. அருவியென்னவாளர் கூறுது அருவித்திரள் என்றமை கல்யாணிதீர்த்தம், பாணதீர்த்தம், பழைய பாவநாசதீர்த்தம் எனப்பல அருவித்துறைகள் அகத்தியவரையிற் றிகழ்தல்பற்றியெனக்கொள்க. சோலைபோயினார் எனபுழி நான்காவது அன்றி ஏழாவது தொக்கதாகக்கொள்க ()

வேறு.

ஆண்டகைய ரவ்வயி னடைந்தமை யறிந்தா
னீண்டுவகை வேலைதுணை யேழுலக மெய்த
மாண்டவர தன்சரண வழங்கவெதி ரந்தா
னீண்டதமி ழாலுலகை நேமியி னளந்தான்

இ-ள் நீண்ட தமிழால் - பெரிய திராவிடபாஷையால், உலகை - உலகத்தை, நேமியின் அளந்தான் - திருமால்போல அளந்தவரான அகஸ்திய முனிவர், ஆண்தகையர் - வீரராகிய ஸ்ரீராமலக்ஷ்மணர்கள், அவ்வயின் - அவ்விடத்தில் [அப்பொழுது], அடைந்தமை - சேர்ந்ததனை, அறிந்தான் - தெரிந்துகொண்டவராகி, ஈண்டு உவகைவேலை - மேன்மேலெழுகின்ற சந்தோஷமாகிய கடல், துணை ஏழு உலகம் எய்த - ஈரேழு லோகங்களையும் அடையும்படி, மாண்டவரதன் - மாட்சிமைப்பட்ட வரங்களைக் கொடுத்தருளுகின்ற ஸ்ரீராமபிரானுக்கு, சரண வழங்க - (ராவணாதி ராக்ஷஸ வதத்திற்காகத்) திருவடிகளை யருளுமாறு, எதிர்வந்தான் - எதிரில் வந்தார்.

குறிப்பு —தகை - தகுதி, சற்குணம் இது தொழிலடியாகப் பிறந்ததாயினும் பொருளாற் பண்புப்பெயர். ஈண்டுவகை - வினைத்தொகை. உவகை அளவுகடந்து மேன்மேல் அதிகரித்தலால் 'உவகைவேலை' என உருவகஞ் செய்தார். பலருந் தேடிச்சென்று வணங்குதற்குரிய ஸ்ரீராம லக்ஷ்மணர்கள் தம்மைத் தேடிவருகின்றமையின் அத்தலையிலுண்டான அன்பிற்கும் தமது பாக்கியத்திற்கும் வியந்து பெருமகிழ்ச்சி கொண்டாரெனக். திராவிட மென்பது, தமிழெனத் திரிந்தது, தனிமைப்பொருள் குறித்த 'தமி' என்னும் வினையடியாகப் பிறந்து, வினைமுதற் பொருண்மையுணர்த்திய விகுதி குன்றித் தனக்கு இணையில்லாப்பாஷையெனப் பொருள் பயப்பதெனபாரும் செவிக்கினிமைபயத்தலான் மதுரமென்னும் பொருட்பேறுடையதாகித் 'தமிழ்' என வழங்கிய தெனபாரும் உளர். "இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப - விருமொழியும் வகைப்படுத்தார் முனிவேந்த ரிசைபரப்ப, விருமொழியு மான்றோரே தழீஇயினா ரென்றாலிவ்-விருமொழியு நிகரென்னு மிதற்கைய முளதேயோ" வடமொழியை [illegible] ணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத், தொடர்புடைய தென்மொழியை [illegible] மலாந் தொ [illegible] தேத்தக் குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற் [illegible] னிதன்பெருமை யாவரே கணித்தறிவார்" [illegible]
ஆதியிற் சிவபிரான் அகத்தியமுனிவர்க்கு [illegible] பாழியைப்போல இது தெற்கின் நின்றோங்கிப் பரந்ததனாலும், இன்றலன குணங்களை யெடுத்துப் புகழ்ந்த பெரியோர்களால் ஆதரிக்கப் பெற்றமையாலும், நிரம்பிய இலக்கிய இலக்கணங்களையுடைமையினாலும் 'நீண்ட தமிழ்' என்றார். தமிழால் உலகையளத்தல்—தமி

ழுப்பாஷையை உலகமுழுமையும பரவசசெய்தல். சேமியின் - இன உவமப்பொருள். உல மளசதறகுத திருமாலுவமை (௧௬)

பணடவுணா ழுழகினா படாாகளென வானோ
ரெணடவ வெமககருள கெனககுறை யிரநதாா
கணடொருகை வாரினள முகநதுகட லெலலா
முணடவாகள பினனுமிழக வெனறலு முமிழநதான.

இ - ள வானோா - தேவாகள, பணடு - முனனொருகாலததில, அவுணா-அசுராகள, ழுழகினா (கடலில) ஒளிததுககொணடாாகள, படாாகள என - இனியிற வாாகள எனறெணணி, (அகததிய முனிவரை யடைநது) எணதவ - (யாவரும) மதிககததகக தவததையுடையீரே! எமககு அருளக என-எஙகளுககு அருளபாலிபபீராகவெனறு, குறை இரநதாா -(தமது) குறையைச (சொல்லி) இரநதவாகளாக, கணடு - (அவாகள குறையை) அறிநது, கடல எலாம - சமுததிர நீாமுழுவதையும, ஒரு கை முகநது வாரினன - ஒரு கையாலவாரி மொணடெடுதது, உணடு - குடிதது, பின அவாகள உமிழக எனறலும உமிழநதான-மீணடும அவாகள உமிழநதருளுக எனவேணடவே (அதனை) உமிழநதவா

குறிபபு—இரநதாாககணடு எனனும பாடததிறகு இரநதவாகளைககணடு எனறு பொருளகொளக ஒருகாலததில இநதிராதி தேவரோடு போாியறறிய விருததிராசுரன பல அசுரரோடு கடலில ஒளிநதுககொணடது கணட தேவாகளது வேணடுகோடகிரஙகி அகததியமாமுனிவா அககடலினீரைத தமது ஒருகையான முகநது முறறும பருகியருளி அவவசுரரை வெளிபபடுதத இநதிரன கொனறபின, அவாகள வேணடுகோளினபடி மீணடும உமிழநதனா (௧௭)

தூயகட னீரடிசி லுணடது தூரநதா
ஞயவத லாலமரு மெயயுடைய வனஞன
மாயவினை வாளவுணன மாயவவன வனமைக
காயமினி துணடுலகி ஞரிடா களைநதான.

இ - ள. அமருமமெய உடைய அனனன - குறுகிககிடககினற சரீரததையுடைய அவவகததியமுனிவா, தூய கடலநீா அடிசில உணடு - பரிசுததமான கடனீரை புணவாகபபருகி, அது தூாநதான - அதனை மீணடும உமிழநதவா, ஆய அது அலலால - (அஙஙனம) செயத அககாரியமாததிரமேயனறி, மாயமவினை - வஞசகமான [illegible]ையையுடைய, வாள அவுணன - வாளபோலுங கொடிய (வாதாபியெனனு[illegible] அழிநதுபோமபடி, அவன வனமை காயம - அவனது வலி[illegible]மையாகப்புசிதது, உலகின அரு இடா[illegible]னபததைப போககினவா

ன் [illegible] ணடேச சுருககிககூறியது, அவாபெனமையை [illegible]னக. "மககள மெய தீணடலுடறமானிடமறறவா-[illegible]வெணடிறபுழி, [illegible] செவிககு" எனறுகூறிப பின "குழலினிதாறறை யறுக[illegible] பரமசிவனைநோககிச் சொற கேளா தவா." எனறு நாயனாருங கூறிருகினறது? எனலும். பரமசிவன [illegible]வினை, தூாததல - வெளிபபடுததல. குறறு

னிவன் என்பதன் பொருள்விளக்க. 'அமருமெய்யுடையவனுண' எனப்பட்டது. வாளைபோலவயிறறைக்கிழித்துவரும செயலினனுதலின வாதாபியை 'வாளவுணன' என்றார். வாதாபிமாயகத விபரம —வில்வலன வாதாபி என்னும் சகோதரராகிய இருவரில வில்வலன பிராமணவடிவங்கொண்டு சிராத்தமெனனும ஒருவ்யாஜத்தை மேறகொண்டு, தமபியாகிய வாதாபியை யுணவாகச்சமைத்துப பிராமணரையுணபித்து, அவர் உண்டபின 'வாதாபிவெளிப்படு' என அழைததலும இறந்து பிழைக்கும வனமை பெறறவனுன அவன அவருடைய வயிறறைக்கிழித்துக்கொண்டு வெளிப்பட, அவவிருவரும இறந்தவரது மாமிசத்தை யுணடுவந்தனர் இஙஙனம பலமுனிவரைககொனறு வாராநிறக, பலரும அகத்தியமுனிவரையடைந்து அவரை வேண்டலும அவர் அவனையுணடு வில்வலன வாதாபியை 'வெளியே' வாவென்றழைப்பதனமுன அவர் வாதாபி! ஜீரணமாகுக என அவன மாயந்ததுகணடு வில்வலன அவரைக்கொல்லுமபடி முயல அவர்அவனையும தீவிழித்தெரித்தார் என்றது.(௩அ)

போகமுறறு பெருயிரக டாமுலை வுறும
லேகுநெறி யாதென மிதித்தடியி னேறி
மேகநெடு மாலைதவழ விந்தையெனும விண்டோய
நாகமது நாகமுற நாகமென நின்றுன

இ-ள் யோகம உறறு — யோகமுயறசியையுடைய, பெரு உயிர்கள்தாம உலைவுறுமல - மகாத்மாக்களாகிய முனிவர்கள் துனபமடையாதபடி, ஏகுநெறி -(சூரிய சந்திராதி கிரகஙகளும நக்ஷத்திரஙகளும) செல்லுகினறவழி, யாது என - எதுவென்று சொலலி வேண்ட, அடியின மிதித்து ஏறி - (தமது) காலான மிதித்து மேலேறி, மேகம நெடுமாலை தவழ-மேகஙகளினது பெரிய வரிசை தவழப்பெறற, விந்தையெனும விண்தோய நாகம அது- விந்தியமெனனும ஆகாயத்தை அளாவி வளாந்த மலையானது, நாகம உற - பாதாளத்தையடைந்து குறுகும்படி, நாகம என - யானைபோல, நின்றுன - (கமபீரமாக) நினறவர்

குறிப்பு —விந்தை - வடசொறசிதைவு, 'விந்தம்' என்றும பாடமுணடு. நாகம - வடசொல, அது மலையும பாமபும யானையுமாதலால ''நாகம விண குரஙகு புனனை நறறாசு மலை பாமபி யானை'' எனபதனாலறிக 'நாகமுற' எனபதில நாகம -அவை வசிக்கினற லோகத்துக்கு ஆகுபெயர்- விந்தியமலை குறுகிய விபரம - ஒருகாலத்திலவிந்தியமலை மறறை மலைகளினும தான உயரவேணடுமென்று கருதி வானையளாவி வளாந்து சூரிய சந்திராதியர் செலலவொண்ணுதபடி மறைத்து நிறக, தேவர் முனிவர் யாவரும அகத்தியரைவேண்டலும, அவர் அதன முனசெலல அம்மலை அவரை வணஙகக குனிந்தபோது அவர் தாம வடதிசையினின்று ெ... திசை சென்று மீணடு வருமளவும, அஙஙனமே குறுகிக கிடக்கும்படி அ... கட்டளையிட்டு அதனமேலேறி அப்பால நடந்தார் ஏனபது ... (௯)

மூசரவு சூடுமுத லே... ...பப ப...
மாசிறவு வேகென வ... கரெனிற,
ணீசரு... ...ற கச்சிப்புரா...
வீசனிக ராயுலகு சீர்பெற விரு...

உரைக்குதவும - ... ...குக

இ-ள மேல் நாள் -முன ஒருகாலத்தில்பிதது - உரைககபபடும வேணடு த்திக்குத தாழவையுடைய, (அதனைநோக்கி), பொருள கொளளலுமொனறு. ()

ிய சர்ப்பங்களைத் தரித்த சிவபிரான், மூவா - கெடாத, மாசு இல்தவ - குற்றமில்லாத தவத்தையுடையோனே! எகு என - (தென்றிசைக்குச்) செல்வாயாக என்றுகிய மிக்க, உரையின் - அவர் மொழிப்படி, வானின் நெடு - ஆகாயத்தை அளாவி உயர்ந்த, மாமலயம் - பெரிய பொதியமலையை, நேரா - அடைந்து ஈசன் நிகராய - சிவபெருமானுக்கு ஒப்பாக, உலகு சீர்பெற இருந்தான் - உலகம் சமநிலை பெறும்படி அதன்கட்டங்கி இருந்தவர்.

குறிப்பு.—நாகாபரணனாதலால் 'மூசரவுசூடி' என்றும், மும்மூர்த்திகளுள் முதன் மூர்த்தியாதலால் 'முதலோன்' என்றும் கூறினார். "செய்யாயென்னு முன்னிலை வினைச்சொல் செய்யென் கிளவியாகிடனுடைத்தே" என்னும் தொல்காப்பியச் சூத்திர விதிப்படி 'எகு' என நின்றது. வடாது - வடக்குள்ளது. மரூஉ. நீசம் - இழிவு ஆதலின், 'வடாதுதிசை நீசமுற' என்றதனால், தென்றிசை கைலாசத்தின்கட் சிவபிரானேடொப்பப் பொதியமலையில் வீற்றிருந்ததனாலும், அவரோடொத்த பெருந்தன்மை யுடைமையாலும் 'ஈசனிகராய' என்றார். (சo)

உழக்குமறை நாலினு முயர்ந்துலக மோதும்
வழக்கினு மதிக்கவியி னும்மரபி னாடி
இழற்பொலி கணிச்சிமணி நெற்றியுமிழ் செங்கட்
டழற்புரை சுடர்க்கடவு டந்ததமிழ் தந்தான்.

இ - ள். இழற்பொலி கணிச்சி - ஒளி விளங்குகின்ற மழுவாயுதத்தையும்; மணிநெற்றி உமிழ்செங்கண் - அழகியநெற்றியிலே (தழல்) உமிழ்கின்ற சிவந்த கண்ணையுமுடைய, தழல்புரை - நெருப்பைப்போகின்ற, சுடர்க்கடவுள் தந்ததமிழ் - ஜோதிரூபியான சிவபெருமான் அளித்தருளிய தமிழை, உழக்கும் மறைநாலினும் உயர்ந்து - வருந்திப் பழகுகின்ற நான்குவேதங்களினும் மேன்மைபெற்று, உலகம் ஓதும் வழக்கினும் - நல்லாசிரியர் கூறுகின்ற வழக்கைக்கொண்டும், கவியினும் - செய்யுள்வழக்கைக்கொண்டும், மதி - (தமது அறிவினால்) மரபின் நாடி - முறைப்படி யாராய்ந்து, தந்தான் - உலகுக்குக் கொடுத்தருளினவர்.

குறிப்பு.—கனபாடை முதலியவாக உருச்செபித்து ஸ்வரம் தவறாமல் வேதம் கற்பதில் வருத்தம் மிகுதியுமுள்ளதாகலின் 'உழக்குமறை' யெனவும் அவ்வேதத்தினும் தமிழ் எளிதிற்கற்கலாம்படி யிருத்தலானும் பல பெரியோர்கள் தமிழ்மொழி மாலையிட்டே கடவுளைத் துதித்திருத்தலானும் இத்தமிழ் வடமொழியினும் சிறந்ததென்பார் 'உயர்ந்து' எனவும் கூறினார். மரபினாடுதல்—அவ்விலட்சணங்களையெல்லாம் ... வாழ்நாட் பலபிணிச் சிற்றறிவினோர்க்கு அறியலாகுமாறமைத்தல். சிவபெருமானிடத்து அகத்தியர் தமிழுபதேசம்பெற்று உலகைவாழ்வித்த விவரத்தை "ஆதியிற் றமிழ்நூ லகத் ... ... ...ளொரு பாகனை வழுத்துதும், போதமெய் ஞ்ஞான நலம்பெற் ... ... வரையாது கூறுனுணாக. பூர்வம் காசிமாநகரில் முனிவர்பலரும் குழுமி வடமொழியை அபிவிர்த்திசெய்யுங்கருத்தால் சங்கமொன்று தாபித்து நடத்தினர். அச்சங்கத்துள் ஒருவராகிய அகத்தியனார் அனைவரோடு மியாது காரணத்தாற் பிரிந்து, அவர்களிறுமாப்பை யொழிப்பான்சிவபெருமானிடஞ்சென்று வேண்டிநிற்புழி, அங்குத் திவ்வியதோர் பரிமளங்கமழ அதுவந்த வாற்றை யறியாதான் பரமசிவனைநோக்கிச் சுவாமீ! இப்புதுமணம் எங்கிருந்துபோதருகின்றது? என்னும். பரமசிவன் ஆங்கோர் மூலையிற் குவியுண்டுகிடந்த சிலபத்திர

ங்களைக்காணபிக்க, அவற்றைக்கண்டதும் 'தமிழ் தமிழ்' என்னும் இன்பமான பெயரைச்சொலல், உடனே பரமசிவன அப்பாஷைக்கு ஆதாரவிதிகள இவவேட்டுப்பிரதிகளிலுள்ளனவென்று எடுத்துக்கொடுத்து உபதேசிக்கத்தெளிந்து, தக்கணமேதக்கணத்துள்ள பொதியமலைக்குச்சென்று அங்கேயே வாசஞ்செய்துகொண்டு பேரகத்தியம் சிற்றகத்தியம் என்னும் இலக்கணநூலகளைச்செய்து அவற்றைத் தமமாணாக்கர்பனனிருவாக்கும் கறபித்துத் தமிழ்மொழியைத் தழைத்தோங்கச்செய்தனனென்பது வரலாறு. (௬௧)

விண்ணினி னிலத்தினில விகறபவுல கிறபே
ரெண்ணினி னிருக்கினி னிருக்குமென யாரு
முண்ணினை கருத்தினை யுறபபெறுவ னெலென
கண்ணினி லெனக்கொடு களிப்புறு மனத்தான.

இ - ள். விண்ணினில - தேவலோகத்திலும, நிலத்தினில - பூவுலகத்திலும, விகறப உலகில - மறறும பல உலகங்களிலும, பேர எண்ணினில - (அவவுலகங்களிலுள்ளவர்களுடைய) பெரிய உள்ளத்திலும, இருக்கினில - வேதத்திலும, இருக்கும என யாரும - (எபபொழுதும்) உள்ளதாகுமென்று யாவரும, உள நினைகருத்தினை - உள்ளத்தில நினைக்கின்ற தியான வஸ்துவை, [ஸ்ரீராமபிரானை] என கண்ணினில உற பெறுவன - என கண்ணிற காணபபெறுவேன, என்று கொண்டு - என்றெண்ணி, களிப்பு உறு மனத்தான - மகிழ்ச்சியடைய நின்ற மனத்தையுடையவர்

குறிபபு -விகலபம - விகறபம, வேறு என்பது பொருள். விகறப வுலகென்றது அதலம முதலியவற்றை. முதலிரண்டடிகளிற கூறியவை சாவாங்காயாமி என்னும் சொல்லின பொருள் - 'கருத்தினை' யென்னும் ... எல்லாவற்றிறகும் கருத்தாவாகியவனை யென்க. (௬௨)

இரைத்தமறை நானகினொ டியைந்தபிற யாவு
நிரைத்தநெடு ஞானமிகு கலவியினொடு நாளிட
டுரைத்துமய னுலுமறி யாதபொருளோநின
றுரைக்குதவு மாலெனு முணர்ச்சியினுவப்பான.

இ - ள். இரைத்த - (இறைவன குணங்களை) உதகோஷித்துப் புகழுகின்ற மறை நானகினொடு - வேதங்கள நானகோடும், இயைந்த பிற யாவும் நிரைத்த - சேர்ந்த மற்றைச சாஸதிரங்கள எலலாவறறையும் கிரமபபககற்ற, மிகு ஞானம கலவில - சிறந்த அறிவாகிய கலவில, நெடுநாள இடடு உரைத்தும - பலநாள வைத்து ஆராய்ந்துப பாரத்தாலும், அயனுலும பிரமதேவனாலும, அறியாத - அறியபபடாத பொருள - பரமபொருள [ஸ்ரீராமபிரான], (இன்று) நின்று - எதிரில நின்று, உரைக்க உதவும பேசுமபடி அருளும, எனும உணர்ச்சியினாலும அறிவால, உவப்பான - மகிழ்வார

குறிபபு —இயைந்த பிறயாவுமென்றது ... களின் பொருளை அறிதற்குக் கருவியாகிய மீமாஞ்சை, ... தருமசாஸதிரம முதலியவற்றை அயனுலும -உம்மை மறறைத்தேவர்களையும உளபபடுத்தி நின்றது அறியாத - அறியபபடாத என்னும செயப்பாட்டுவினை உரைக்குதவும - அகரம தொகுத்தல. இனி உரைக்கு நேர நின்று உதவும எனப்பிரித்து - உரைக்கப்படும் வேண்டுகோளுக்கு நேர நின்று உதவிசெய்பவன எனவும பொருள கொளளலுமொன்று. ()

கண்டனன் இராமனை வரக்கருணை கூரப்
புண்டரிக வாணயனம் நீர்பொழிய நின்றான்
எண்டிசையு மேழுலகு மெவ்வுயிரு முய்யக்
குண்டிகையி னிற்பொருவில் காவிரி கொணர்ந்தான்

இ - ள். எண்டிசையும் - எட்டுத்திக்குக்களும், ஏழ் உலகும் - ஏழுலகங்களும், எ உயிரும் - (அவற்றிலுள்ள) எல்லாவுயிர்களும், உய்ய - நற்கதியடையும்படி, குண்டிகையில் - (தமது) கமண்டலத்தில், பொருவு இல் காவிரி கொணர்ந்தான் - ஒப்பில்லாத காவிரிநதியைக் கொண்டுவந்த அவ்வகஸ்தியமுனிவர், இராமனை வரக்கண்டனன் - ஸ்ரீராமன் வரக்கண்டு, கருணை கூர - அவனிடத்து அன்புமேலிடுதலால், புண்டரிகம் வாள் நயனம் - தாமரைமலர்போன்ற ஒளியினையுடைய கண்கள், நீர்பொழிய நின்றான் - ஆநந்தபாஷ்பம் பெருக்கினார்.

குறிப்பு.—புண்டரீகமென்னும்பெயர் வெண்டாமரைக்கே வழங்குவதாயினும் இங்குக் கண்களுக்கொப்பிட்டமையால், செந்தாமரைக்குக் கொள்ளத்தக்கது. கண்களுக்குத் தாமரையை யொப்பிட்டதற்கேற்ப, அங்கினின்றும் பெருகுகின்ற கண்ணீருக்குத் தாமரையினின்றும் பெருகுகின்ற தேனை யொப்பிடுக. காவிரி, காவேரி யென்பதன் மரூஉ. கவேரமென்னும் மலையினின்று பிறந்ததென்றும், கவேரனென்னும் அரசனுக்கு மகளென்றும் பொருள்படும். அகஸ்தியர் கங்காஜலத்தைக் கமண்டலத்திற்கொண்டு பொதியமலைக்குச் செல்பவர் கவேரபருவதத்தினருகே வருகையில் விநாயகக்கடவுள் காக்கையுருக்கொண்டுவந்து அதனைக் கவிழ்த்துவிட அது காவிரியாறாய்ப் பெருகிற்று என்பதும், அகஸ்தியர் கங்கையாறுழைச்சென்று காவிரியைக் கமண்டலத்திற்கொண்டு குடகுமலைச்சாரலில் வைத்துவிட்டுச் சலகாரியத்துக்குச் செல்லாநிற்க, ஆங்கொருகாகம்வந்து அதனை உருட்டிவிட, அதுவே பெருநதியாய்ப் பெருகிற்றென்பதும் வரலாறு. (௪௩)

நின்றவனை வந்தநெடி யோனடி பணிந்தா
னன்றவனு மன்பொடு தழீஇயழுத கண்ணா
னன்றுவர வென்றுபல நல்லுரை பகர்ந்தா
னென்றுமுள தென்றமி ழியம்பியிசை கொண்டான்.

இ - ள். நின்றவனை - (அங்ஙனம்) எதிரில்வந்துநின்ற அகஸ்தியரை, வந்த நெடியோன் - (அங்கே) வந்த ஸ்ரீராமபிரான், அடிபணிந்தான் - திருவடிகளில் விழுந்து வணங்கினான், அன்று - அப்பொழுது, என்றும் உள தென்தமிழ் இயம்பி - எப்பொழுதும் உளதாகிய இனியதமிழைச் சொல்லி, இசைகொண்டான் - கீர்த்தியையடைந்தவராகிய, அவனும் - அம்முனிவரும், அன்பொடு தழீஇ - அன்போடு அவனைத் தழுவிக்கொண்டு, அழுதகண்ணான் - (ஆனந்தபாஷ்பம்பெருக, அழுகின்ற கண்ணினையுடையவராய், வரவு நன்று என்று (முடிபட) வரவு நல்லதாகக் கடவது என்று, பல நல உரை பகர்ந்தான் - பல ஆசீர்வசனங்களைச் சொற்றனர்.

குறிப்பு.—திரிவிக்ரமனாய் உலகளந்த திருமாலே இப்பொழுது சக்கரவர்த்தி திருமகனாய்த் திருவவதரித்திருக்கின்றானென்பது தோன்ற 'வந்த நெடியோன்' என்றார். திருக்கலியாண குணங்களால் யாவரினு முயர்ந்தோனென்றுமாம். தென்றமிழ் - தெற்கின்கண் மிகுதியாக வழங்கும் தமிழென்று கூறினுமமையும். ஏனை பாஷைகள் போலாது ஸம்ஸ்கிருதம்போல நித்தியமானதாதலால் 'என்று

மூனத்தென்றமிழ்' என்றார். தமிழியம்பியது - சிவபிரானிடத் துபதேசம் பெற்ற தமிழ்மொழியை உலகிற் பிரவசனஞ் செய்ததமை. (௭௭)

வேதியர்கள் வேதமொழி வேறுபல கூறிக்
காதலமிக நின்றெழில கமண்டலுவி னன்னீர்
மாதவர்கள் வீசிநெடு மாமலர்க டூவப்
போதுமண நாறுகுளிர் சோலைகொடு புக்கான்

இ - ள் மாதவர்கள் - மிக்க தவத்தையுடையோராகிய, வேதியர்கள், பிராமணர்கள், காதலமிக நின்று - (அன்பு மிகுதலால்) ஸ்ரீராமபிரானைச் சூழ்ந்துநின்று, வேறு பல வேதமொழி கூறி - பல வேறுவகைப்பட்ட வேதவாக்கியங்களைச் சொல்லி, எழிலகமண்டலுவின் நன்னீர் - (தமது) அழகிய கமண்டலங்களிலுள்ள நல்ல நீரை, வீசி - தெளித்து, நெடுமாமலர்கள் - மிக்க அழகிய புஷ்பங்களை, தூவ - மேலே சிந்தாநிற்க, (அகத்தியர் ஸ்ரீராமனை), போதுமணம் நாறு - மலர்களின் வாசனைவீசுகின்ற, குளிர்சோலை - குளிர்ந்த (தமது) சோலையினுள்ளே, கொடுபுக்கான் - அழைத்துக்கொண்டு சென்றார்.

குறிப்பு—கமண்டலு வடசொல், தீர்த்தபாத்திரம். புண்ணிய தீர்த்த மாதலின் நன்னீரெனப்பட்டது. மாதவர்கள் - இது 'வேதியர்கள்' என்பதனோடு பண்புத்தொகையாகக் காட்டப்பட்டது. போது - காலவாகுபெயர். கொடு - 'கொண்டு' என்பதன் தொகுத்தல். கமண்டலுவின் நன்னீர் வீசுதல் - பூரண கும்பங்களிற் புண்ணிய தீர்த்தங் கொணர்ந்து புரோக்ஷித்தல். மலர்தூவுதல் - புஷ்ப வர்ஷம் இவை உபசார வகைகளிற் சேர்ந்தன. (௭௮)

பொருந்தவம லன்பொழி லகத்தினிது புக்கான்
விருந்தவ னமைத்தபின் விரும்பினன் விரும்பி
யிருந்தவ மிழைத்தவென திலவிடையின் வந்தென்
னருந்தவ முடித்தனை யருட்கரச வென்றான்.

இ - ள் அமலன் - ஸ்ரீராமன், பொழிலகத்து - அகத்தியருடைய சோலையினுள், பொருந்த - பொருத்தமாக, இனிதுபுக்கான் - இனிமையாய்ப் பிரவேசித்தவனாய், அவன் விருந்து அமைத்தபின் - அம்முனிவர் விருந்துசெய்து உபசரித்தபின்பு, விரும்பினன் - மகிழ்ந்திருந்தான், (அப்பொழுது அம்முனிவர்), விரும்பி - மகிழ்ந்து (ஸ்ரீராமனைநோக்கி) அருட்கு அரச - அருளுக்குத் தலைவனே! இருதவம் இழைத்த எனது இல இடையின் வந்து - பெரியதவத்தைச்செய்த எனது ஆச்சிரமத்தினிடத்தெழுந்தருளி, என் அரு தவம் முடித்தனை என்றான் - எனது அரிய தவத்தினை நிறைவேற்றினை என்று சொன்னான்.

குறிப்பு—அமலன் - [illegible]மிலலாதவன். இனி, விரும்பினனாகிப் புக்கானென்றலுமாம். விருந்து - [illegible]; இவர் புதிதாயவந்தவர்க்குச் செய்யும் உபசாரத்திற்கு இருமடியாகுபெயர் ஸ்ரீராமபிரா[illegible]ழுந்தருளப்பெற்றமையால் இலவினை 'இருந்தவமிழைத்தஇல' என்றார். கருதி[illegible]வருதற்கு "என்ன மாதவஞ் செய்ததிச் சிறு குடிலென்றான்" என்னும் பாரதச்செய்யுளையுங் காண்க (௭௯)

என்றமுனி யைத்தொழு திராமனிமை யோரு
நின்றதவ முற்றுநெடி யோரினெடி யோரு

முன்றனருள் பெற்றிலாக ளுன்னருள் சுமந்தேன்
வென்றன னனைத்துலகு மேலினிதெ னென்றான்.

இ - ள். என்ற முனியை இராமன் தொழுது - என்று இவ்வாறு கூறிய முனிவரை ஸ்ரீராமன் வணங்கி, இமையோரும் - தேவர்களும்' நின்றதவம் - (தாம் செய்யத்தக்கதாய) நின்றதவத்தை, முற்றும் நெடியோரின் - முடியச்செய்த பெரியோர்களுள்ளும், நெடியோரும் - பெரியோர்களாகிய மகாமுனிவர்களும், உன்தன் அருள் - உன்னுடைய கருணை, பெற்றிலர்கள் - (எளிதிற்) பெற்றோர்களில்லை; உன்னருள் சுமந்தேன் - உனது கிருபையை யடியேன் பெற்றேன், (ஆதலின்), அனைத்து உலகும் வென்றனன் - எல்லா வுலகங்களையுஞ் செயித்தேன், மேல் இனிது என- இதன்மேல் (அடையத்தக்க) நன்மையாது? என்றான் - என்று சொன்னான்.

குறிப்பு —'சுமந்தேன்' என்றதனால் மிகுதியாகப் பெற்றேன் என்பதாயிற்று அகத்தியரிடத்து அம்பு முதலியவைபெற்று மேல் இராவணவதஞ் செய்ய நிற்பதைக் கருதி,' வென்றனனனைத்துலகும் மேலினிதென' என்றான் என்பது குறிப்பினுணரப்படுமாற்றிக (௫௦)

தண்டக வனத்துறைதி யென்றுரை தரக்கொண்
டுண்டுவர விந்திசை யெனப்பெரி துவந்தே
னெண்டகு குணத்தினை யெனக்கொடுயர் சென்னி
துண்டமதி வைத்தவனை யொத்தமுனி சொல்லும்

இ - ள் உயர் சென்னி-உயர்ந்த சிரசினிடத்தே, துண்டம் மதி - பிறைச்சந்திரனை, கொடுவைத்தவனை - கொண்டுவைத்தருளிய சிவபிரானை, ஒத்த - போன்ற, முனி - அவ்வகத்தியமகாமுனிவர், (ஸ்ரீராமபிரானைப்பார்த்து), எண்தகு குணத்தினை - (யாவராலும்) தியானிக்கப்படுகின்ற திருக்கலியாண குணங்களையுடையாய்! தண்டகவனத்து உறைதி என்று உரைதரக்கொண்டு - நீ தண்டகாரணியத்தில் வசிக்கின்றாயென்று சொல்லக்கேட்டு, இ திசைவரவு உண்டு என - இந்த இடத்திற்கு (நின்து) வருகை உளதாமென்றெண்ணி, பெரிது உவந்தேன் - மிகவும் மகிழ்ந்திருந்தேன், என - என்றுசொல்லி, சொல்லும் - (பின்னும்) சொல்லுவார்.

குறிப்பு —என்னெண்ணப்படி நீ யிங்குவந்தருளினை யென்பது குறிப்பெச்சம், இனி எண்தகு குணத்தினை எனப்தற்குச் சிறந்த எட்டுக்குணங்களை யுடையவனே எனவுங் கூறலாம் எண்குணங்களாவன அபஹதபாப்மத்வம், விஜரத்வம், விம்ருத்யுத்வம், விசோகத்வம், விஜிகத்ஸத்வம், அபிபாஸத்வம், ஸத்யகாமத்வம், ஸத்யஸங்கல்பத்வம் என்பவை. (௫௧)

ஈண்டுறைதி யையவினி யிவ்வயி னிருந்தால்
வேண்டியன மாதவம் விரும்பின முடிப்பாய்.
தூண்டுசின வாளிருதர் தோன்றியுள ரென்றான்
மாண்டுக மலைந்தெமர் மனத்துயர் துடைப்பாய்.

இ - ள். ஐய - ஐயனே! இனி ஈண்டு உறைதி - இனி (நீ) இங்கெழுந்தருளி ருப்பாயாக, இ வயின் இருந்தால்-இவ்விடத்திலிருப்பாயானால், வேண்டியன மாதவம் - (நாங்கள்) வேண்டிச்செய்வனவான பெருந்தவத்தையும், விரும்பின - (நீ) விரும்பினவற்றையும், முடிப்பாய் - நிறைவேற்றுவாய், தூண்டு சினம் - வளர்கின

ற வேபத்தினையுடைய, வாளை நிருதா - கொடிய அரக்கர், தோன்றி உளர் என்றால் வருவாாகளாயின, (அவாகள), மாணடு உக - இறந்து அழியும்படி, மலைந்து - போர் செய்து, எமா - எங்களது, மனததுயா - மனத்திலுள்ள கிலேசத்தை, துடைப்பாய- போக்குவாய.

குறிபபு—இனி, வேணடியன விருமபியன மாதவம முடிப்பாய எனக்கொணடு, (எமக்கு) இனறிபமையாதனவும, (யாங்கள) விருமபிச செயவனவுமாகிய மாதவத்தை நிறைவேறறுவாய எனலுமாம, எமா - மறறை முனிவரையுங கூட்டிக கூறிய உளபபாடடுப பனமை. (ருஉ)

வாழுமறை வாழுமனு நீதியறம வாழுந
தாழுமிமை யோருயாவா தானவாக டாழவா
ஊழியுழ வனபுதலவ வையமிலை மெயயே
யேழுலகும வாழுமினி யிங்குறைதி யெனறான.

ரி,உழவன புதலவ - ஆஞ்ஞாசக்கரத்தையுடைய சக்கரவாததி திருமகனே! இனி மறைவாழும்-இனிவேதங்கள வாழவடையும, மனுநீதிவாழும - மநுநீதி வாழவடையும, அறமவாழும - தருமங்கள வாழவடையும, தாழும இமையோா உயாவா - (அரக்கரால) தாழவடைகினற தேவாகள மேனமையடைவாாகள தானவாகள தாழவா - (உயாவடைகினற) அசுராகள தாழவடைவாாகள, (அதனால) எழ உலகும வாழும - எழுலகங்களும வாழவுபெறும, ஐயம இலை - (சிறிதும) சநதேகமிலலை, மெயயே - (இது) சத்தியமே, (ஆதலால), இங்கு உறைதி எனறான - இங்குத தங்கியிருக்கக்கடவாய எனறா

குறிபபு—'தாழுமிமையோா' எனறதறகேறப உயாவடைகினற தானவா எனபபடடது -தானவாக்கும அரக்காக்கும வேறறுமையுளதாயினும இமையோாககுப பகைஞராகிய பொதுமைபறறி அபேதமாகக கூறினா. ஆழியுழவன, ஆஞ்ஞாசக்கரமாகிய ஏரால உலகமுழுதையும உழுபவன (ருங)

செருககடையரககாபுரி தீமைசிதை வெயதித
தருககழி தரககடிது கொலவது சமைநதேன
வருககமறை யோயவா வருநதிசையின முநதுற
றிருககைநல நிறகருளெ னெனறண லிராமன.

இ - ள (அபபொழுது), இராமன - ஸ்ரீராமபிரான, (முனிவரை நோக்கி), வருககம மறையோய - கூடடமாகிய வேதஙகளில வலலவரே! செருககு அடை அரககா - கருவததையடைநதராகூதாகள, புரி - செயகினற, தீமை சிதைவு எயதி - தீஙகுகளெலலாம நாசததையடைநது, தருக்கு அழிதர - (அவாகள) களிபபுததொலைநதுபோக, கடிது கொலவது சமைநதேன - (அவாகளை) விரைவிறகொலவதறகுச சிததமாக இருக்கினறேன, (ஆகையால) அவா வரும திசையின - அவவரக்காகள வருகினற (தெறகுத) திக்கில, முநது உறறு இருக்கை - முனனமே போயிருததல, நலம - நனமை, (எனறு எணணுகிறேன), நிறகு அருள என எனறனன - உமககு விருபபமெனனவெனறு சொனனன.

குறிபபு—இனி, 'செருக்கடை' எனறதை, செரு - கடை எனக கணணழித்துக கடையை எழனுருபாககொணடு, யுததகளததிலெனறும், போாததொழிலையுடைய (கடை-இழிவு) இழிவினையுடைய அரக்கரெனறும பொருள கோடலுமாம.

மறைகள் அநேகமானதால் 'வருக்கமறை' என்றார். இராவணனுக்கு ராஜதானியாகிய இலங்கையும், கரன்முதலியோருள்ள ஜநஸ்தாநமும் தெற்கிலுள்ளவாதலால் அரக்கர் வருந்திசையைத் தென்றிசையென்று கூறினார் நினக்கு—உருபு மயக்கமாய் நினது அனுமதி என்னவென்றலுமாம். (௫௪)

விழுமியது சொற்றனையிவ் வில்லிதிவண் மேனாள்
முழுமுதல்வன் வைத்துளது மூவுலகும் யானும்
வழிபட விருப்பதிது தன்னைவடி வாளிக்
குழுவழுவில் புட்டிலொடு கோடியென நல்கி.

இ-ள். (அதனைக்கேட்ட அகத்தியமகாமுனிவர்), விழுமியது சொற்றனை - சிறந்தவார்த்தையைச் சொன்னாய், இவண் - இங்குள்ள, இ வில் இது - இந்தவில், மேல்நாள் - முற்காலத்தில், முழுமுதல்வன் வைத்து உளது - ஸ்ரீமகாவிஷ்ணு வைத்துக்கொண்டிருந்தது, மூவுலகும் - திரிலோகத்தாரும், யானும் - நானும், வழிபட இருப்பது - வணங்கிப் பூசைசெய்யும்படி இருப்பது, இது தன்னை - இவ்வில்லை, வடிவாளிகுழு - கூர்மையான அம்புகளின் கூட்டம், வழுவு இல் - குறைவுபடாத, புட்டிலொடு - தூணீரத்தோடு, கோடி என - கொள்வாய் என்றுசொல்லி, நல்கி - (அவற்றைக்) கொடுத்து,

குறிப்பு—'விழுமியது' விழுமமென்னும் உரிச்சொல்லடியாகத் தோன்றிய பெயர். வாளிக்குழு வழுவில்புட்டில்: அம்பறாத்தூணி. ஆதியில் விசுவகருமாவினால் நிருமிக்கப்பட்டு ஸ்ரீமகாவிஷ்ணுவினிடத்தில் இருந்தவில் பரசுராமனுக்குக் கிடைத்தது; அவ்வில்லைப் பரசுராமனிடத்திலிருந்து ஸ்ரீராமபிரான் வாங்கி வருணனிடங்கொடுக்க வருணன் அதனை அகத்தியரிடம் கொடுத்துவைத்திருந்தனன்; அவ்வில்லை அகத்தியர் ஸ்ரீராமபிரானுக்கு ராக்ஷஸவதஞ் செய்யும்பொருட்டுக் கொடுத்தார் என்றறிக.

இப்புவன முற்றுமொரு தட்டினிடை யிட்டா
லொப்புவர விற்றென வுரைப்பரிய வாளும்
வெப்புருவு பெற்றவரன் மேருவரை வில்லா
முப்புர மெரித்ததனி மொய்கணையு நல்கா.

இ-ள். இ புவனம் முற்றும் - இவ்வுலகமுழுவதையும், ஒரு தட்டினிடை இட்டால் - ஒரு தராசுத் தட்டிலேவைத்து நிறுத்தாலும், ஒப்பு வரவு இற்று என 'சமானமாமென்று' உரைப்பரிய - சொல்லுதற்கரிய, வாளும் - வாளையும், வெப்பு உருவு பெற்ற அரன் - அனற்பிழம்பின் உருவத்தைப்பெற்ற சிவபெருமான், மேருவரை - மகாமேருமலையை, வில் ஆ - வில்லாகக் (கொண்டு), முப்புரம் எரித்த - திரிபுரங்களைத் தகனஞ்செய்த, தனி - ஒப்பில்லாத, மொய்கணையும் - வலிபொருந்திய அம்பையும், நல்கா - கொடுத்து.

குறிப்பு—இட்டால் உம்மை விகாரத்தாற்றொக்கது. வெம்மைக்குணம் அதனையுடைய அங்கியினுக்காகுபெயர். உருவுபெற்ற அரன் என்றமை அடியார்கள் விரும்பிய வுருவெடுத்துப் போதருதலேயன்றி யவனுக்கென்று ஓருருவுமில்லானென்னலை யுணர்த்தி நின்றது. (௫௫)

ஓங்குமர னோங்கிமலை யோங்கிமண லோங்கிப்
பூங்குலை குலாவுகுளிர் சோலைபுடை விம்மித்
தூங்குதிரை யாறுதவழ் சூழலதொர் குன்றின்
பாங்கருள தாலுறையுள் பஞ்சவடி வஞ்ச.

இ - ள். மஞ்ச - இளையோய்! ஓங்குமரன் ஓங்கி - உயர்ந்த மரங்கள் வளரப் பெற்றும், மலை ஓங்கி - மலைகள் உயரப்பெற்றும், மணல் ஓங்கி - மணற்குன்றுகள் உயரப்பெற்றும். பூ குலை குலாவு-மலர்த்தொகுதிகள் விளங்காநின்ற, குளிர்சோலை-குளிர்ந்த சோலைகள், புடைவிம்மி - பக்கங்களில் விளங்கப்பெற்றும், தூங்குதிரை-அசைகின்ற அலைகளையுடைய, யாறுதவழ - ஆறுகள் பாயப்பெற்றுமுள்ள, சூழல் து - சுற்றிடங்களையுடையதாகிய, ஓர் குன்றின் பாங்கர் - ஒருமலையினருகில், பஞ்ச வடி - பஞ்சவடி என்கிற, உறையுள் உளது -வாசஸ்தானமொன்று இருக்கின்றது

குறிப்பு —பஞ்சவடி ஐந்து ஆலமரங்களின் கூட்டம், அதனையுடைய இடத்திற்கு ஆகுபெயர், அது கோதாவிரிக் கரையில் நாஸிகாத்திரியம்பகத்துக்குச் சமீபத்திலுள்ளது, மஞ்ச மைந்த என்பதன்போலி (௩௭)

கன்னியிள வாழைகனி யீவகதிர் வாலின
செந்நெலுள தேனொழுகு போதுமுள தெய்வப்
பொன்னியென லாயபுன லாறுமுள போதா
வன்னமுள பொன்னிவளோ டன்பின் விளையாட.

இ - ள். (ஆங்கு), கனிஈவ -பழங்களைத் தருவனவாகிய, கன்னி இளவாழை-இளமையான வாழைகளும், கதிர்வாலின செந்நெல்- கதிர்களையும் வாலையுமுடைய செந்நெற்பயிர்களும், உள உள்ளன, தேன் ஒழுகுபோதும் உள - தேன் வழிகின்ற மலர்களுமுள்ளன, தெய்வம் -தெய்வத்தன்மை பொருந்திய, பொன்னி என்ல் ஆய - காவேரியென்று சொல்லத்தக்க, புனல் ஆறும் உள - நீரையுடைய நதிகளுமுள்ளன, பொன் இவளோடு - இச்சீதையுடன், அன்பின்விளையாட - அன்போடு விளையாடுதற்கு, போதா -நாரைகளும், அன்னம் - ஹம்ஸங்களும், உள - உள்ளன.

குறிப்பு —கன்னியிள ஒருபொருட் பன்மொழி. பொன் இவள் இலக்குமிப் பிராட்டியாகிய இப்பெண் எனலுமாம். அன்பின் - வேற்றுமை மயக்கம் (௩௮)

ஏகியினி யவ்வயி னிருந்துறைமி னென்றான்
மேகநிற வண்ணனும் வணங்கிவிடை கொண்டான்
பாகனைய சொலலியொடு தம்பிபரி விற்பின்
போகமுனி சிந்தைதொட ரக்கடிது போனான்.

இ - ள் இனி —, ஏகி - சென்று, அவ்வயின் இருந்து உறைமின் என்றான் - அவ்விடத்துத் தங்கி வசியுங்கள் என்று (அகத்தியர்) சொன்னார், மேகம் நிறம் வண்ணனும் -மேகத்தின் நிறம்போன்ற நிறத்தினையுடைய ஸ்ரீராமபிரானும், (அம்முனிவரை), வணங்கி - தொழுது, விடைகொண்டான் - உத்தரவுபெற்று, பாகு அனைய சொலலியோடு - வெல்லப்பாகை யொத்த மொழியினையுடைய சீதாபிராட்டியும், தம்பி - இளையபெருமாளும், பரிவின்பின்போக - அன்போடு பின்னேசெல்லவும், முனிசிந்தை தொடர - அகத்திய மகாமுனிவரது மனது பின் தொடர்ந்து செல்லவும், கடிதுபோனான் - விரைவாக (அப்பால்) சென்றான்.

குறிப்பு.—சொல்லி, இகரவீற்றுப் பெண்பாற்பெயர். ஒடு எண்ணும் மைப்பொருள் பயந்து நின்றது. சிந்தைதொடர இராமபிரானைப் போகவிடுத்த முனிவர் அவன் க்ஷேமமாயப் போய்ச்சேர வேண்டுமென்று விரும்புவர் என்பது குறித்தது.

## மூன்றாவது அகத்தியப்படலம்.

முற்றிற்று.

ஆகப்படலம் ௩-க்கு விருத்தம் ௧௨௫.

---

## நான்காவது: சடாயுகாண் படலம்.

நடந்தனர் காவதம் பலவு நன்னதி
கிடந்தன நின்றன கிரிகள் கேண்மையிற்
றொடர்ந்தன துவன்றின சூழல் யாவையுங்
கடந்தனர் கண்டனர் கழுகின் வேந்தையே.

இ-ள். (இராமலக்ஷ்மணர்கள்) பலகாவதமும் - அநேக காதவழிகளையும், நடந்தனர் - நடந்து, நல் நதி - நல்ல நதிகளையும், கிடந்தன - ஒன்றையொன்று பற்றிக்) கிடந்தனவும், நின்றன - (தனித்தனி) நிலையாகநின்றவைகளும், (ஆகிய) கிரிகள் - மலைகளையும், கேண்மையின் - நட்புற்றாற்போல, தொடர்ந்தன - ஒன்றையொன்று தொடர்ந்தனவும், துவன்றின - நெருங்கியனவுமாகிய, சூழல்யாவையும் - (மற்றும் வசிப்பதற்கு யோக்கியமான) இடங்கள் யாவற்றையும், கடந்தனர் - தாண்டினவர்களாய், கழுகின்வேந்தை - கழுகுகளுக்கரசாகிய சடாயுவை, கண்டனர் - பார்த்தார்கள்.

குறிப்பு — காவதம் - விகாரம்; ஏழரைநாழிகைவழித்தூரம். பாவங்களை நீக்குதலால் 'நன்னதி' யென்றார். கிடந்தன கிரிகள், நின்றன கிரிகள் எனக், இனிக் கிடந்தன நன்னதி என மாற்றி அவ்விடங்களிற் கிடந்தனவாகிய நன்னதிகளையும் என்று கூறினுமாம். கேண்மையிற்கடந்தனர் என்றதைவயித்து முறைமையால் தாண்டிச்சென்று என்றும் பொருள்கூறலாம். (௧)

உருக்கிய சுவணமொத் துதயத் துச்சிசே
ரருக்கனிவ் வகலிடத் தலங்கு திக்கெலாந்
தெரிப்புறு செறிசுடர்ச் சிகையி னாற்சிறை
விரித்திருந் தனனென விளங்கு வானையே.

இ-ள். உருக்கிய சுவணம் - உருக்கிய பொன்னை, ஒத்து - போன்று, உதயத்து உச்சி - உதயகிரியினது சிகரத்தை, சேர் அருக்கன் - சேர்ந்த [உதித்த] சூரியன், இ அகல் இடத்து - இந்த அகன்ற பூமியில், அலங்கு திக்கு எலாம் - விளங்குகின்ற எல்லாத் திக்குகளையும், தெரிப்புறு - தெரிவிக்கின்ற, செறிசுடர் - நெருங்கிய (தனது) கிரணங்களின், சிகையினால் - ஒளியினால், சிறை - சிறகுகளை, விரித்து இருந்தனன் என - விரித்துக்கொண்டிருந்தான்போல, விளங்குவானை - விளங்குபவரை.

குறிப்பு — உதயம் - உதயகிரியினை ஆகுபெயரானுணர்த்திற்று. அருக்கன் - அர்க்கன். உதயகிரியின்கண் விளங்கும் சூரியன் எனவே, சடாயு என்பவரும் அங்கோர் மலையினுச்சியில் விளங்கினார் என்பது பெறப்பட்டது. இதனை மேல்வரும் கவிகளானுமுணர்க. சடாயுவுக்குப் பாலசூரியனும், சிறகிற்குக் கிரணங்களும், சடாயுவிருக்கும் மலைக்கு உதயகிரியு முவமை. சிகை - கிரணங்களின் கொழுந்து, எனவே பிரகாசமெனப் பட்டது. (௨)

முந்தொரு கருமலை முகட்டு முன்றிலின்
சந்திர னொளியொடு தழுவச் சாத்திய
அந்தமில் கனைகட லமரர் நாட்டிய
மந்தர கிரியென வயங்கு வானனை

இ - ள். முந்து - முற்காலத்தில், ஒரு கரு மலை - ஒரு பெரியமலையினது, முகட்டு முன்றிலின் - உச்சியிடத்திலே, அமரர் - தேவர்கள், அந்தம் இல் - அளவில்லாத, கனைகடல் - ஒலிக்கின்ற திருப்பாற்கடலில், சந்திரன் ஒளி ஒடு - சந்திரனது பிரகாசத்தோடு, தழுவ - பொருந்தும்படி, சாத்தியநாட்டிய - சேர்த்துநிறுத்திய, மந்தர கிரியென - மந்தரபர்வதத்தைப்போல, வயங்குவான் அனை - விளங்குகின்றவனை

குறிப்பு —கருமலை - மந்தரமலையைத் தாங்குதற்காகக் கருநிறம்பொருந்திய திருமால் வடிவெடுத்த ஆமைக்கும், சடாயுவினது தேககாந்தியோடுகூடிய மந்தர மலைக்கும் உவமை. அமரரு மசுரரு மமுதமெழப் பாற்கடலைக்கடைந்தகாலத்துச் சந்திரனை அடை தூணாகக்கொண்டதனால், 'சந்திரனொளியொடுதழுவச் சாத்திய -மந்தரம்' எனப்பட்டது, "மத்து மந்தரம் வாசுகி கடைகயி றடைதூண், மெத்து சந்திரன்." "மலைபிடுங்கினார் வாசுகி பிணித்தனர் மதியந், நிலைபெறும்படி நட்டனர்" என்றவற்றானு மறிக. முன்றில் - இல்லுக்குமுன்னுள்ள இடம், இலக்கணப்போலி இஃது இங்கே முன்னிடமென்னு மாத்திரையாயிற்று (௧)

மானிற விசும்பெழின் மறையத் தன்மணிக்
கானிறச் சேயொளி கதுவக் கண்ணகல்
நீனிற வரையினிற் பவள நீள்கொடி
போனிறம் பொலிந்தெனப் பொலிகின் றானனை.

இ - ள். மால் நிறம் - கருநிறத்தையுடைய, விசும்பு எழில் - ஆகாயத்தினது நிறம், மறைய - மறையும்படி, தன்மணிகால் - தனது அழகிய கால்களின், நிறம் சேய ஒளி - நிறத்தினது சிவந்த ஒளியானது, கதுவ - (நாற்புறத்தும்) பொருந்த, கண் அகல் - இடமகன்ற, நீலம் நிறம் வரையினில் - நீல நிறத்தையுடைய அம்மலைமேலே, பவள நீள்கொடி - நீண்ட பவளக்கொடி, போல நிறம்பொலிந்து என - (தனது) அழகிய நிறத்தோடு விளங்கினாற்போல, பொலிகின்றான் அனை - விளங்குகின்றவனை

குறிப்பு.—"ஈனிறத்தார சோலை நிறம்பெயர நீடியதன் -மானிறத்தார பொய்கைத் தலைஞ்சிவப்ப - மாணிறத்தான் - முன்னப்புட் டோன்று முளரித் தலைவைகு - மன்னப்புட் டோன்றிற்றே யாங்கு" என்றார் புகழேந்திப் புலவரும். விசும்பெழில் மறையும்படி கால நிறத்தின் சேயொளிகதுவ எனக் கூட்டுக. செம்மை என்னும் பண்புப்பெயர் ஈறுகெட்டு ஆதி நீண்டு முன்னின்ற மெய்திரிந்து 'சேய்' என நின்றது. நீல - கடைக்குறை. பவளம் - ப்ரவாளம் என்னும் வடமொழி திரிந்ததென்பர். போன - போல என எதுகைநோக்கி நீண்டது, "போனிறப் புதுச் சென்னி" என்றார் சிந்தாமணியினும் இனி, இச்செய்யுளுக்கு விசும்பெழின் மறையும்படி அவ்விசும்பில் கால நிறச்சேயொளி கதுவலால் நீல நிறத்தையுடைய மலையிற் பவளக்கொடி படர்ந்தாற்போல நிறம்பொலிந்த தென்னும்படி விளங்குகின் றவனையென்று கூறினுமாம். (௨)

தூய்மைய னிருங்கலை துணிந்த கேள்வியன்
வாய்மையன் மறுவிலன் மதியின் கூர்மைய
னாய்மையின் மந்திரத் தறிஞ னாமெனச்
சேய்மையி னோக்குறு சிறுகண் ணன்றனை

இ - ள். தூய்மையன் - பரிசுத்தமுடையவரும், இருங்கலை துணிந்தகேள்வியன் - மிக்க கல்வியும் தெளிந்தகேள்வியு முடையவரும், வாய்மையன் - சத்தியத்தை யுடையவரும், மறு இலன் - குற்றங்களில்லாதவரும், மதியின் கூர்மையன் - புத்திநுட்பமுடையவரும், ஆய்மையின் - ஆராய்வதில், மந்திரத்து - மந்திராலோசனைக்குரிய, அறிஞன் - அறிவையுடையவரும், ஆம் என - ஆவாரென்று, (கண்டோர் யாவரும் மதிக்க) சேய்மையின் நோக்குறு - மிக்க தூரத்திலுள்ளவற்றையுங் காண்கின்ற, சிறுகண்ணன்தனை - சிறிய கண்களையுடையவருமானவரை.

குறிப்பு — தூய்மை - மனத்தூய்மை. கல்வியாவது தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல், அவை அறநூல் நீதிநூல் முதலியன. கேட்டலாவது - கேட்கத்தகுந்த நூல்களைக் கற்றறிந்தவர் சொல்லக்கேட்குதல், கற்றவிடத்தே அதனாலாயவறிவைத் திட்பப்படுத்தலானும், கல்லாவிடத்தும் அதனை யுண்டாக்குதலானும் 'இருங்கலை துணிந்தகேள்வியன்' எனக் கல்வியை முன்னேகூறினார். வாய்மையென்பது மெய்யின்றன்மை. மறு - காமம் முதலிய ஆறுகுற்றங்கள். மதியென்பது கல்விகேள்வியானாய அறிவோடு தன்னுண்மையறிவு "நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்த னுண்மை யறிவே மிகும்" என்று நாயனார் கூறியபடி யுண்மையறிவில்லாக்கால் கல்வி பின்னிரங்குதற்கே பயனாவதன்றி, முன்வந்து உதவாதாகலான். சேய்மையினோக்குதல் - வெகுதூரத்தில் நோக்குதல் அன்றி வெகுகாலங்கண்ட சிறியகண் எனினுமாம். 'ஆம்' என்பதனை அசையாகக்கொண்டுரைத்தலுங் கூடும். (ரு)

வீட்டிவா ளவுணரை விருந்து கூற்றினை
யூட்டிவீழ் மிச்சிலு ணுண்டு நாடொறுந்
தீட்டிமே லிந்திரன் சிறுகண் யானையின்
றோட்டிபோற் றேய்ந்தொளிர் துண்டத் தான்றனை.

இ - ள். நாள்தொறும் - தினந்தோறும், மேல் இந்திரன் - மேலுலகிலுள்ள இந்திரனது, சிறுகண் யானையின் - சிறிய கண்களையுடைய ஐராவத மென்னும் யானையினது, தோட்டிபோல் - அங்குசத்தைப்போல, வாள் அவுணரை - கொடிய அசுரர்களை, வீட்டி - (உடலும் உயிரும் வெவ்வேறாக) விடுவித்து [கொன்று], கூற்றினை - யமனை, விருந்து ஊட்டி - (அவருயிரை) விருந்திட்டு உண்பித்து, வீழ் மிச்சில் - கீழே விழுந்த மிகுதியான உடலை, தான் உண்டு - தான் புசித்து, தீட்டி தேய்ந்து ஒளிர் - தீட்டப்பட்டுத் தேய்ந்து விளங்குகின்ற, துண்டத்தான்தனை - மூக்கையுடையவரை.

குறிப்பு — உயிரையும் உடலையும் வேறுபடுத்தி உயிரை யமனுக்களித்து மிகுந்த உடலைத் தான் புசித்தலின் 'மிச்சில்' என்றார். மிச்சில் - மிகுந்தது. தோட்டி: அங்குசம், "யானையின் குடாரியங்குசந் தோட்டி - கோணமியானை வணங்கியுங்கூறும்" என்பது பிங்கலந்தை. துண்டம் - பறவைமூக்கு. மேல்-ஆகுபெயர். தீட்டித் தேய்ந்தொளிர் துண்டமெனக. (சு)

கோளிரு நான்கினோ டொன்று கூடின
வாளுறு திகிரிபோ லாரத் தானைநனை
நீளுறு மேருவி னெற்றி முற்றிய
வாளிர வியிற்பொலி மௌலி யானைநனை

இ - ள். இருநான்கினோடு ஒன்று கூடின கோள் - நவக்கிரகங்களையும், ஆள் உறு திகிரிபோல - ஆளுகின்ற துருவசக்கரம்போன்ற, ஆரத்தான் தன்னை - நவமணிகள் பதித்த மாலையையுடையவரை, நீள் உறு - நீட்சியுடைய, மேருவின் - மகமேரு மலையினது, நெற்றி முற்றிய - உச்சியில் பொருந்திய, வாள் இரவியின் - ஒளிபொருந்திய சூரியனைப்போல, பொலி - விளங்குகின்ற, மௌலியான் தன்னை - கிரீடத்தையுடையவரை

குறிப்பு—ஆளுறும் திகிரியென்றது துருவ சக்கரத்தைத் துருவன் இடையே சுழன்றுகொண்டு வாயுவடிவான கயிற்றால் வலிக்கப்பட்ட நவக்கிரகங்களையும் சுற்றித் திருப்பும் சக்கரம் ஆரத்திற்குத் துருவ சக்கரமும், அவ்வாரத்திலுள்ள நவமணிகளுக்கு நவக்கிரகங்களும் உவமை. கழுகின் வேந்தனாதலால் ஆரமும் முடியுங் கூறினார். (எ)

சொற்பங்க முற்நிமி ரிசையின் சும்மையை
யற்பங்க முறவரு மருணன் செம்மலைச்
சிற்பங்கொள் பகலெனக் கழிந்து சென்றநீர்
கற்பங்க ளனைப்பல கண்டு ளானைநனை

இ - ள் சொல் பங்கம் உற - (புகழ்ந்து சொல்லும்) சொல் தோல்வியடையும் படி, நிமிர் - (அச்சொல்லுக்கு மேம்பட்டு) வளர்கின்ற, இசையின் சும்மையை - கீர்த்தியின் சுமைபோல் பவரை [கீர்த்தி வடிவெடுத்தாற்போன்றவரை], அல் பங்கம் உற - இருள் அழியும்படி, வரும் அருணன் செம்மலை - உதிக்கின்ற அருணனது புத்திரரை, கற்பங்கள் அனைப்பல - அநேகக்கற்பகாலங்களை, கழிந்து சென்ற நீர் - விரைவிற் சென்று கழிகின்ற, சிற்பம் கொள் பகல் என - சிறுமையைக்கொண்ட நாள்களைப்போல, கண்டு உளான் தன்னை - கண்டிருப்பவரை,

குறிப்பு —சொல்லமுடியாத கீர்த்தியென்பார் 'சொற்பங்கமுற நிமிரிசை' யென்றார். "நீளப்பலிவனந்தேசுரைப்பின்" என்றார் சிந்தாமணியினும். அருணன் சூரியன் சாரதி. (அ)

ஓங்குயர் நெடுவரை யொன்றி னின்றது
தாங்கல திருநிலந் தாழ்ந்து தாழ்வுற
வீங்கிய வலியினி லிருந்த வீரனை
யாங்கவ ரணுகின ரயிர்க்குஞ் சிந்தையார்.

இ - ள். ஓங்கு உயர் நெடுவரை ஒன்றில் - உயர்ந்த மலையொன்றில், நின்று - தங்கி, அது தாங்கலது - அம்மலை (தம்மைத்) தாங்கமாட்டாமல், இருநிலம் தாழ்ந்து - பெரிய பூமிக்குள்ளே புதைந்து, தாழ்வு உற - தாழ்ந்திருக்கும்படி, வீங்கிய, வலிமையின் - அதிகரித்த பலத்தோடு, இருந்த - அதிலிருந்த, வீரனை - வீரத்தன்

மையுடையவரை, ஆங்கு - அவ்விடத்தில், அவர் - அவ்விராமலக்ஷ்மணர்கள், அயிர்க்கும் சிந்தையார் - சந்தேகிக்கும் மனமுடையவர்களாகி, அணுகினார் - சேர்ந்தார்கள்.

குறிப்பு —ஒன்குயர் நெடு - ஒருபொருட் பன்மொழி. ஊங்கு - "ஒருகு" என்றதனுற் சுட்டு நீண்டது. அயிர்க்கும் சிந்தையார் - முற்றெச்சம். அணுகினரென்பதை முற்றெச்சமாக்கி யுரைப்பினும் கூடும். (௯)

இறுதியைத் தன்வயி னியற்ற வெய்தினு
னறிவிலி யரக்கனு மல்ல னுமெனி
னெறுழ்வலிக் கலுழனே யென்ன வுன்னியச்
செறிகழல் வீரரும் செயிர்த்து நோக்கினார்

இ - ள் செறிகழல் வீரரும் - நெருங்கிய வீரக்கழலையணிந்த அவ்விராமலக்ஷ்மணர்களும், (சடாயுவைநோக்கி) இறுதியை - முடிவை, தன்வயின் இயற்ற - தன்னிடத்திலேயே செய்துகொள்ள, எய்தினன் - வந்தவனாகிய இவன், அறிவு இலி - அறிவில்லாதவனாகிய, அரக்கன் ஆம் - (பட்சியுருக்கொண்டுவந்த) இராக்கதனுவான், அல்லன் ஆம் எனின் - அவ்வாறல்லாமற்போனால், எறுழ்வலிக் கலுழனே (ஆம்) மிக்க வலியினையுடைய கருடனேயாவான், என்ன உன்னி — என்று எண்ணி, செயிர்த்து நோக்கினார் - கோபித்துப்பார்த்தார்கள்.

குறிப்பு —அரக்கனுயின் தனக்குத்தானே முடிவைத்தேடிக்கொண்டா னென்பார் 'இறுதியைத் தன்வயினியற்ற வெய்தினன்' என்றார். தனக்குத்தானே தீங்கு தேடிக்கொள்ளவிருத்தலின் 'அறிவிலி' என்றார். எறுழ் - உரிச்சொல் 'எறுழ்வலியாகும்'' என்பது சூத்திரம். எறுழ்வலி ஒருபொருட்பன்மொழி. கருடன் என்னும் வடமொழி கலுழன் எனச் சிதைந்துநின்றது. (௧௦)

வனைகழல் வரிசிலை மதுகை மைந்தரை
யனையவன் றுணுகங்கண் டயிர்த்து நோக்கினன்
வினையறு நோன்பின ரல்லர் வில்லினர்
புனைசடை முடியினர் புலவ ரோவெனு.

இ - ள். வனைகழல் - தரித்த வீரக்கழலையும், வரிசிலை - கட்டமைந்த வில்லையும், மதுகை - வலிமையையுமுடைய, மைந்தரை - இராமலக்ஷ்மணர்களை அனையவன் கண்டு - அச்சடாயுபார்த்து, புனைசடை முடியினர் - தரித்த ஜடையாகிய முடியினையுடைய இவர்கள், வினை அறு நோன்பினர் - இருவினையும் அறுதற்குக் காரணமான தவத்தினையுடைய முனிவர்களென்றாலோ, வில்லினர் - வில்லையுடையவர்களாதலால், அல்லர் —, புலவரோ என்று - தேவர்களோ? என்று, அயிர்த்து - சந்தேகித்து, நோக்கினன் - பார்த்தான்

குறிப்பு —புலவர் - அறிவினையுடையவர், புலம் - அறிவு "புலமையாவது பல்வேறுவகைப்பட்ட நூலுணர்ச்சிகளையெல்லாம் ஒருங்கேகொண்ட பேரறிவுடைமையாம்'' என்பர் சாவணப்பெருமாளையர். விபுதரென்னும் வடமொழியின் மொழிபெயர்ப்பு. (௧௧)

புரந்தரன் முதலிய புலவர் யாரையு
மிரந்தர நோக்குவெ னேமி யானுமவ

வரந்தரு மிறைவனு மழுவ லாளனுங்
கரந்தில ரென்னையா னென்று நுங் காண்பென்ல

இ - ள். புரந்தரன் முதலிய - இந்திரன் முதலான, புலவர் யாரையும் - தேவர்களெல்லோரையும், நிரந்தரம் - எப்போதும், நோக்குவென் - பார்ப்பேன், நேமியானும் - சக்கராயுதத்தையுடைய விஷ்ணுவும், அ வரம் தரு இறைவனும் - (வேண்டிய) வரங்களைத் தருகின்ற அப்பிரமதேவனும், மழுவலாளனும் - மழுவாயுதத்தையுடைய சிவபிரானும், என்னை-எனக்கு, கரந்திலர் - ஒளிக்கமாட்டார்கள், (என்னின் அவர்களை), என்றும் காண்பென் - எப்பொழுதும் பார்ப்பேன்

குறிப்பு — நிரந்தரம் - வடமொழி. என்னையே - வேற்றுமை யுருபு மயக்கம் பிரம விஷ்ணு ருத்திரரென்பதே முறையாயினும் ஈண்டுச் செய்யுள் நோக்கிப் பிறழ வைத்தார். (௪௨)

காமனென் பவனையுங் கண்ணி னோக்கினேன்
றாமரைச் செங்கணித் தடக்கை வீரர்கள்
பூமரு பொலன்கழற் பொடியி னோடுமொப்
பாமென வறிகில னார்கொ லாமிவர்

இ - ள் காமன் என்பவனையும் - (அழகினமேம்பட்ட) மன்மதனையும், கண்ணின் நோக்கினேன் - கண்களாற் பார்த்துளேன், (அக்காமன்) தாமரை செங்கண் - தாமரைமலர்போலுஞ் சிவந்தகண்களையுடைய, இ தடக்கைவீரர்கள் - விசாலம்பொருந்திய கைகளையுடைய இவ்வீரர்களது, பூமருவு பொலம்கழல் - தாமரைமலர்போன்ற அழகியபாதங்களது, பொடியினோடும் - தூளியினோடும், ஒப்பு ஆம் என - ஒப்பாவானென்று, அறிகிலேன்- துணியவல்லேனல்லேன், (ஆதலின்), இவர் ஆர்கொலாம் - இவர்கள் யாவரேயோ?

குறிப்பு — நோக்கினேன் என்பதே அமைவதாக, கண்ணினென வேண்டாது கூறியது அநங்கனாகிய அவனைக்காணற் கருமைவிளக்குதற்கு எனக். அன்றி, சிவபிரான் நெற்றிக்கண்ணழற்கிலக்காகி அநங்கனாவதற்குமுன்னின்ற காமனைநோக்கினேன் எனபது கூறுவார் இங்ஙனம் கூறினரெனினுமமைவதேயாம். இவை இரண்டுபாட்டினும் புலவரல்லரெனத் தெளிந்தமை கூறப்பட்டது (௪௩)

உலகொரு மூன்றுந்தம் முடைமை யாக்குறு
மலகறு மிலக்கண மமைந்த மெய்யினர்
மலர்மகட் குவமையா ளோடுமே வந்தவிச்
சிலைவலி வீரரைத் தெரிகி லேனென்.

இ - ள் உலகு ஒரு மூன்றும் - ஒரு மூன்றுலோகத்தையும், தம் - தமக்கு, உடைமை ஆக்குறும் - உரிமையாகச் செய்துகொள்ளும், அலகு அறும் இலக்கணம் - அளவில்லாத உத்தம இலக்கணங்கள், அமைந்த மெய்யினர் - பொருந்திய மேனியை யுடையவர்களாய், மலர்மகட்குவமையாளோடும் - தாமரைமலரில் தோன்றிய திருமகளுக்கும் உபமானமாகச் சொல்லத்தக்க ஒரு பெண்ணுடனே, வந்த (இங்கு) வந்த, சிலைவலிவீரரை - வில்லில் வல்லமையுடைய இந்த வீரர்களை, தெரிகிலேன் - (இன்னாரென்று) யான் தெரிகிலேன், என - என்று.

குறிப்பு—உலகொரு மூன்று - சுவாககம, மததியம், பாதாளம் சககரவாத திககுரிய இலககணங்கள யாவுமமைநதிருததலின உலகொரு மூனறுந தமமுடைமையாககுறு மலகறுமிலககணம எனறா அலகறு - குறறமறற வெனறலுமாம, இலககணம - லக்ஷணமெனனும பொருளில வடமொழிசசிதைவு மலாமகட்கு என புழி உமமை தொககது. எலலாப பெணகளுககு மூவமையாகச சொலலததகக சிறபபினையுடைய திருமகளுககும உவமானமாகச சொலலததககவளெனவே, ஒப்புயாவிலலாதவ ளெனபதாயிறறு (கச)

கருமலை செமமலை யனைய காட்சியா
திருமகிழ் மாாபினா செஙகண வீராதா
மருமைசெய குணததினென றுணைவ ஞழியா
ஞெருவனை யிருவரு மொததுளாரரோ.

இ - ள கருமலை செம்மலை அனைய - கரியமலையையும சிவநத மலையையும ஒதத, காடசியா - தோறறததை யுடையவரும, திருமகிழ மாாபினா - இலககுமி விருமபித தஙகுகினற மாாபினையுடையவரும ஆகிய, செம கண வீரா இருவரும - சிவநத கணகளையுடைய இவவிரணடு வீராகளும, அருமைசெய - அருமையாகச செயகினற, குணததின - நறகுணஙகளையுடைய, என துணைவன - எனது நணபனாகிய, ஆழியான ஒருவனை - தசரத சககரவாததியொருவனையே, ஒததுளாா - ஒததிருககினறாாகள

குறிபபு —ஸ்ரீராமபிரானுககுக கருமலையையும, இளையபெருமாளுககுச செமமலையையும நிறமபறறி உவமை கூறினா திரு ஐயலக்ஷமி (கரு)

எனபபல நினைபபின மனதது ளெணணுவான
சினபபடை வீராமேற செலலு மனபினன
கனபபடை வரிசிலைக காளை நீவிாயாா
மனபபட வெனககுரை வழஙகு வீரெனறான.

இ - ள என - எனறு, பல - பலவாகிய, நினைபபின - எணணஙகளை, மனததுள எணணுவான- மனததில நினைப்பவராய, சினம படை வீராமேல -கோபததை யுடைய ஆயுதஙகளையுடைய இவவீராகளிடததில, செலலும அனபினன- செல்லுகினற அனபினையுடையவராய, (அவாகளைநோககி), கனம- பெருமையுள்ள, வரிசிலை படை - கடடமைநத விறபடையையுடைய, காளை நீவிா - காளைபபோனற நீஙகள யாா - யாவிா? மனம பட எனககு உரைவழஙகுவீா - மனததிறபடுமபடி எனககு உததரஞ்சொலலுஙகள; எனறான - எனறு சடாயு ஆனவா சொனனாா

குறிபபு —காளை அணமைவிளியுமாம. 'நீாகள', 'மீாகள' எனவும பாடம. 'மனபபட' எனறமையின உணமைகூறவேணடு மெனபது கருதது (கசு)

வினவிய காலையின மெய்மமை யலலது
புனைமலாத தாரவா புகலகி லாமையாற
கனைகட னெடுஞ்சிலங காவ லாழியான்
வனைகழற் றயரதன மைநதர் யாமென்றாா.

இ - ள். வினவிய காலையில் - (என்று சடாயு) கேட்டகாலத்தில், புனைமலர் தாரவர் - அணிந்த மலர்மாலையையுடைய இராமலக்ஷ்மணர்கள், மெய்ம்மை அல்லது - உண்மையல்லாமல், புகலிலாமையான - (வேறொன்றைச்) சொல்லுதலில்லாமையான, யாம-ராங்கள், கனைகடல் நெடுநிலம் காவல்-ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட பெரிய உலக முழுவதையுங் காத்தலையுடைய, ஆழியான் - ஆஞ்ஞாசக்கரத்தையுடையவராகிய, வனைகழல் தயரதன் - தரித்த வீரக்கழலையுடைய தசரத சக்கரவர்த்தியினது, மைந்தர் என்றார் - புத்திரர்களென்றார்கள்.

குறிப்பு.—சடாயுவை இன்னாரென்று அறிந்திலராயினும் உண்மையே கூறியது. 'மெய்ம்மை யல்லது புகலிலாமை யா'லென்பது விளக்குமாறறிக. தாரவர் பெயரடியாகப் பிறந்த குறிப்புப் பெயர். (கஎ)

உரைத்தலும் பொங்கிய வுவகை வேலையன்
றரைத்தலை யிழிந்தவர் தழுவுங் காதலன்
விரைத்தடந் தாரினிர் வேந்தர் வேந்தனற்ன
வரைத்தடந் தோளிணை வலிய வோவென்றான்.

இ - ள் உரைத்தலும் - (இவ்வாறு அவர்கள்) சொல்லவும், பொங்கிய - (மேலெழுந்து) பொங்கிய, உவகைவேலையன் - சந்தோஷ சமுத்திரத்தையுடையவராய், தரை தலை - பூமியில், இழிந்து-(மலையினுச்சியினின்றும்) இறங்கிவந்து, அவர் தழுவும் காதலன் - அவர்களைத் தழுவுகின்ற ஆசையையுடையவராய், (அவர்களை நோக்கி), விரைத்தடந்தாரினிர் - வாசனையையுடைய பெரிய மாலையையுடையவர்களே! வேந்தர் வேந்தன் தன் - அரசர்க்கரசனாகிய தசரத சக்கரவர்த்தியினது, வரை தடந் தோள் இணை-மலைபோன்ற விசாலமான இரண்டு புயங்களும், வலியவோ - வலியுள்ளனவாயிருக்கின்றனவோ [க்ஷேமமா]? என்றான் - என்று சொன்னான்.

குறிப்பு—'வேலையன,' 'காதலன' என்பன முற்றெச்சங்கள். தரைத்தலை, தலை. ஏழனுருபு. சக்கரவர்த்தியின் க்ஷேமம் வினவுவார் ஒன்னாரை ஒறுத்து உலகைப் பொறுத்துக் காப்பது தோளாகலின் வரைத்தடந் தோளிணை வலியவோ? என்றார். (கஅ)

மறக்கமுற் றுந்தன வாய்மை காத்தவன்
றுறக்கமுற் றனென முன்னஞ் சொல்லலு
மிறக்கமுற் றனென வேக்க மெய்தினு
னுறக்கமுற் றனென வுணர்வு நீங்கினான்

இ - ள் (அதற்கு இராம லக்ஷ்மணர்கள்) அவன் - அச்சக்கரவர்த்தி, மறக்க முற்றுந்தன - மறக்க முடியாததையாகிய, வாய்மை காத்து - சத்தியத்தைப் பாதுகாத்து, துறக்கம் உற்றான் என - சுவர்க்கத்தை யடைந்தார் என்று, முன்னம் சொல்லலும் - (சடாயு என்பவருக்கு) எதிரிற் சொன்னவுடன், (கேட்ட அவர்) இறக்கம் உற்றான் என - (தனது உயிர் நண்பன்) மரணமடைந்தானென்னுங் காரணத்தால், ஏக்கம் எய்தினான் - துன்பமடைந்தவராய், உறக்கம் உற்றான் என - தூக்கமடைந்தவன்போல், உணர்வு நீங்கினான் - அறிவு நீங்கப்பெற்றார் [மூர்ச்சித்து விழுந்தார்].

குறிப்பு.—சத்திய வந்தர்களும் மறவியால் உண்மையிற் பிறழ்தல் கூடுமாயினும், இவர்க்கு அம்மறவியுமில்லையென்பார் 'மறக்க முற்றுந்தன வாய்மை காத்து'

என்றார். முற்றுதன வெனப பனமையாற கூறினார் வரகக ளிரணடாதனேககி. இனி, இறககம உறறுனென உறககமுறறுனென வகக மெயதினுன உணாவு நீஙகினுன என்று அநவயித்து, இறத்தலையடைநதான போலவும, தூககமடைநதானபோலவும, ஏககமெயதி உணாவு நீஙகினுன என்று பொருள்கொளளினுமாம. (கக)

தழுவின ரெடுததனா தடககை யானமுகங
கழுவின ரிருவருங கணணி னீரினல
வழுவின வினனுயிர வநத மனனனு
மழிவுறு நெஞசின னரறறி னனரோ.

இ - ள் இருவருமம - ஸ்ரீராம லக்ஷமணாகள இருவருமம, தட கையான - தஙகளுடைய பெரியகைகளால, தழுவினா எடுததனா - மூாசசித்துக கீழேவிழுநத சடாயுவை அணைததெடுதது, கணணின நீரினல - தஙகள கணகளினினறுமம பெருகுகினற ஜலததினலே, முகமமகழுவினா - அவா முகததைக கழுவினாகள, (அபபோது) வழுவிய - நீஙகிய, இன உயிா - இனிய உயிா, வநத மனனனும - வரபபெறற ஜடாயு ராஜனும, அழிவுறு நெஞசினன - அழிவையடைநத மனமுடையவராய, அரறறினன - புலமபுவாராயினா

குறிப்பு — அடைநத மூாசசை தெளிதலின, வழுவிய வினனுயிாவநத மனனன, எனறா மனனனிறநதமை பறறியும அவரிடததுளள அனபுபறறியும தாஙகளும சோகததாற கணணீா பெருககினா. தழுவினா, எடுததனா முறறெசசஙகள (உ0)

வேறு

பரவலருங கொடைககு நினறன பனிககுடைககும பொறைககுநெடிமபணா
கரவலருங கறபகமு முடுபதியுங கடலிடமுங களிநது வாழப [புதோறற
புரவலாதம புரவலனே பொயபபகையே மெயககணியே புகழினவாழவே
யிரவலருநலலறமுமயானுமினி யெனபடநீத தேகி னுயே

இ - ள் புரவலாதம புரவலனே அரசாக கரசனே! பொய பகையே-பொயமைககுப பகைவனே! மெயககு அணியே - சததியததிறகு ஆபரணமாயிருபபவனே! புகழினவாழவே - கீாததி வாழதறகிடமானவனே! நினதன - உனனுடைய, பரவல அருமம - துதிபபதறகு அரிய, கொடைககுமம - தானததிறகுமம, பனி குடைக்குமம - குளிாசசிபொருநதிய வெணகொறறககுடைககுமம, பொறைககுமம - பொறுமைககுமம, நெடுமபணபுதோறற - மிகுநத குணம தோலவியுறற, கரவல அருமம - ஒளித்தல இலலாத, கறபகமுமம - கறபகவிருக்ஷமுமம, உடுபதியுமம - சநதிரனுமம, கடல இடமுமம - சமுததிரஞசூழநத பூமியும, களிததுவாழ - சநதோஷிததுவாழுமபடி, இரவலருமம - யாசகாகளும், நல அறமுமம நலலதருமமுமம, யானுமம நானுமம, இனி—, எனபட - எனனதுககததையனுபவிகக, நீதது - (எஙகளை) விடடு, ஏகினுயே - (நீ) போயினுயே?

குறிப்பு.—கொடைககுததோறற கறபகமும், குடைககுததோறற சந்திரனும், பொறைககுததோறற பூமியும என நிரலேகூடடுக. தோறறல—உவமைசொலலப பெறுமை. பிரதிப்பிரயோஜனததை யெதிாபாராது ஈதலே கருதி வேணடிய வேண்டியபடி நல்கும் தனமையால கொடைககுக கறபகதருவும, விருததமாயும்,

சீதளமாயும், வெண்மையாயும் விளங்குந்தன்மையால் குடைக்கு உவாமதியும், தொடுகருவிகொண் டகழ்ந்தும் எச்சில் நிரப்பியும் தீயன்செய்வாரையும் வீழாமற் சுமப்பதுபோலத் தம்மை யிகழ்வாரையும் பொறுத்தலால் க்ஷமைக்குப் பூமியும் உவமை புண்ணியபலத்தால் தம்மையடைந்து ஏற்றவர்க்குமாத்திரஞ் சிறிது நல்கலாலும், தமது காவலனாகிய இந்திரனையும் "தம்திருக்கை யிழந்து போந்து-நின்றளிக்குந் தனிக்குடைக்கீழ்த் திஞருதுங்கிக் குறையிரந்து நிற்கப்" பார்த்திருந்த னானும் தாமும் தசரதன் உடைமையாயபின் இந்திரற் களிக்கப்பட்டமையானும், பலவான்களான நிலைபெயராது சிறைவைக்கப்பட்டமையானும் பஞ்சமென்னு மெண்ணுப் பெயரை வறுமைப்பொருள்தரும் பெயராகக்கொண்ட தருக்கள், அடைந்தவர் யாவராயினும் விரும்பியவளவினும் மிகுதியாய் வெறுப்பவீசித் தன்னையடைந்தாரைக் கைநெகிழாவிடாது உலகமுழுவதுந் தன்னடிப்படுத்திவாழும் தசரதசக்கரவர்த்தியினது கொடைக்கும், நந்துதலும், முயற்கறையும், பகலி லொளிவிளங்காமையும், அரவத்தாலுண்டுமிழ்தலும் பெற்று நிலைநில்லாது திரிகின்றமையால் சந்திரன் - தேய்தலும் வளர்தலுமின்றி என்றும் ஒருபடித்தாயக் களங்கமற்றுப் பகலினுமொளிகான்று பிறரால் கொள்ளப்படாததாய நிலையாய் நின்றளிக்கு மவனது குடைக்கும், தீங்கிழைத்தாரையுந் தாங்கும் புவனம்-தன்னையும் தாங்கும் அவனது பொறுமைக்கும் தோற்றனவெனக் "ஈந்தே கடந்தா னிரப்போர் கடல்" "மண்ணிடை யுயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றித் - தண்ணிழல் பரப்பவு மிருளோத் தள்ளவும்-அண்ணற்றன் குடைமதி யமையு மாதலான்-விண்ணிடை மதியினை மிகையி தென்பவே" என்று பாலகாண்டத்துக் கூறியவாற்றானுமுணர்க. உடுபதி - நக்ஷத்திரங்களுக்குத் தலைவன், களித்து வாழ்தல் - இனித் நம்மை வெல்வாரின்மையின். வாழ எகினுய என வினைமுடிபு காண்க. சக்கரவர்த்தியென்பார் - 'புரவலர் தம்புரவலனே' யென்றார். பொய் சொல்லற்காற்றாது உயிரைவிட்டு மெய்யை நாட்டலின் 'பொய்ப்பகையே மெய்க்கணியே' என்றார், 'சொற்றிறம்பாத் தன்மெய்யை நிறுப்பதாக்கி- இறந்தான்' என்றார் அயோத்தியாகாண்டத்தும் கொடை, குடை, பொறை என முன்னாகக் கூறியதனுக்கேற்ப இரவலரும், நல்லறமும், யானும் என்றார் கொடையினால் வாழ்ந்த இரவலரும், குடையினால் நிலைத்த நல்லறமும், பொறையினால் நட்புக்கொண்ட யானும், என்பட நீத்தேகினாயே என்றதனால், இரவலரையும் நல்லறத்தையும் என்னையும் பரிபாலிப்பார் யாவரென்றபடி எகினுய - மங்கலவழக்கு, செத்தாரை துஞ்சினா ரென்பதுபோல. ஏகாரம் - இரக்கம் (௨௧)

அலங்கார மெனவுலகுக் கமுதளிக்குந் தனிக்குடையா யாழி சூழ்ந்த
நிலங்காவ லதுகிடக்க நிலையாத நிலையுடையே னேய நெஞ்சி
னலங்காண நடந்தனையோ நாயகனே தீவினையே னன்பி னின்றும்
விலங்கானே னதலினால் விலங்கினே னின்னுமுயிர் விட்டி லேனால்

இ-ள். அலங்காரம் என - அலங்காரம் என்று சொல்லும்படி (இருந்து) உலகிற்கு - உலகங்களுக்கு, அமுது அளிக்கும் - அமிர்தத்தைக் கொடுக்கின்ற, தனி குடையாய - ஒப்பற்ற வெண்கொற்றக் குடையையுடையவனே! ஆழி சூழ்ந்த - சமுத்திரஞ் சூழ்ந்த, நிலம் காவல் அது - பூமியைக் காத்தலாகிய அது, கிடக்க - நிற்க, நாயகனே! - உலகத்திற்குத் தலைவனே! நிலையாத - நிலைத்தலில்லாத, நிலையுடையேன் - தன்மையையுடைய எனது, நேயநெஞ்சின் - அன்பினையுடைய மனத்தின், நலம் காண - (நட்பின்) நலத்தைக் காணும்பொருட்டு, நடந்தனையோ - (இவ்வுலகம் விட்டுப்) போயினையோ? தீவினையேன் - பாவத்தொழில்

களையுடைய நான், விலங்கானேன் - விலங்காயிருக்கின்றேன், ஆதலினால் - ஆகையால், நண்பினின்றும் - சிநேக தருமத்தினின்றும், விலங்கினேன் - தவறினவனாகி, இன்னும் - இன்னமும், [உன் மரணத்தைக் கேட்டறிந்தபின்னும்], உயிர்விட்டிலேன் - உயிரை நீத்தேனில்லை.

குறிப்பு—அலங்காரம் - என்பது உலகினுக்கு இன்பஞ்செய்வதோரழகு ஈண்டுக் கவியில் சந்திரனை இவரது குடைக்கு ஒப்பிட்டமையால் அதற்கேற்ப, 'அமுதளிக்குந் தனிக்குடை' என்றார் அமுதளித்தலாவது அருளைவைத்துக்காத்தல் இனி, அமுதளிக்கும் என்பதற்கு அமுதம் போலும் என்றலுமாம். தனிக்குடை - ஏகசத்திரமுமாம். என் மனநிலையைச் சோதிக்கும்பொருட்டு உலகளித்தலையும் விட்டேனாயென்பார் 'நிலங்காவ லதுகிடக்க நிலையாத நிலையுடையே னெய நெஞ்சினலங்காண நடந்தனையோ' என்றார் நெஞ்சின் நேயநலம் எனமாற்றிப் பொருள் கோடலுமமையும். கிடக்கவென்னு மெச்சம் நடந்தனையோ என்பதனைக் கொண்டுமுடியும் நிலையாத நிலை - ஸ்திரமில்லாத மன நிலையும், இருந்த விடத்தி லிராது எப்போதும் சஞ்சரித்துக்கொண்டேயிருக்கின்ற சரீர நிலையுமாம். நடந்தனை - மங்கல வழக்கு தீவினை - இன்னுயிர்த்தோழனை இழக்கவுற்ற பாவம். விலங்கு - குறுக்காக நடப்பதென்னும் பொருளினதாகிய 'திர்யக்' என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு விலங்கு - குறுக்கு "விலங்கக னெடுமொரப" என்றார் புறநானூற்றிலும், விலங்கலலேனாயினிதற்குள் உயிரை விட்டிருப்பேனென்பார் 'இன்னு முயிர்விட்டிலேனால்' என்றார் (௨௨)

தயிருடைக்கு மத்தென்ன வுலகைநலி சம்பரனைத் தடிந்த வந்நா
ளயிர்கிடக்குங் கடல்வலயத் தயலறிய நீயுடனா னாவி யென்று
செயிர்கிடத்தல் செய்யாத திருமனத்தாய் செப்பினாய் திறம்பா நின்சொ
லுயிர்கிடக்க வுடலைவிசும் பேற்றினா ருணர்விறந்த கூற்றினாரே.

இ - ள் செயிர்கிடத்தல் செய்யாத திருமனத்தாய் - குற்றந் தங்குதல் சிறிதுமில்லாத சுத்தமான மனமுடையவனே! [களங்கமற்ற வுள்ளத்தாய்], தயிர் உடைக்கும் மத்து என்ன - தயிர்க்கட்டியை யுடைத்துச் சிதற அடிக்கின்ற மத்துப் போல, உலகை நலிசம்பரனை - உலகங்களை வருத்திச் சிதற அடிக்கின்ற சம்பராசுரனை, தடிந்த அந்நாள் - வென்ற அக்காலத்தில், அயிர்கிடக்கும் கடல்வலயத்து - நுண்மணல் கிடக்கின்ற சமுத்திரஞ்சூழ்ந்த பூமியில், அயல் அறிய - அயலவர் அறியும்படி, நீ உடல் நான் ஆவி என்று - நீ உடல் நான் உயிரென்று, செப்பினாய் - சொன்னாய், நின்சொல் திறம்பா - (அப்படிச்சொல்லிய) நினது வார்த்தைகள் தவறாவாம் (அப்படியிருக்கவும்) உணர்வு இறந்த - பகுத்தறிவில்லாத, கூற்றினார் - யமனார், உயிர்கிடக்க - உயிர் (இப்பூமியில்) இருக்க, உடலை - சரீரத்தை, விசும்பு ஏற்றினாரே - சுவர்க்கத்திற் கொண்டுபோயினாரே

குறிப்பு —உலகத்துக்குத் தயிரும், சம்பரனுக்கு மத்தும் உவமை "பாயுமாரி போற்பகழி சிந்தினார்,யா மத்தெறி தயிரினாயினார்" எனச் சிந்தாமணியிலுங்காண்க "மத்துறு தண்டயி ரிற்புலன் றீக்கது வக்கலங்கி-வித்துறு வேனை விடுதிகண் டாய்." என்றார் ஆளுடைய வடிகளும் தடித்தல் - அறுத்தல், "கடிதறடிதல் பரிதல் கண்டித்தல் - சேதித்தல் கொய்தல் லறுத்தலாகும்" என்பது நிகண்டு அயிர் - நுண்மணல் "அதரு மயிரு மெக்கரு நுண்மணல்." வலயம் - வட்டம்; 'கடல் வலயம்' என்றதனாற் பூமியாயிற்று, அயல் - ஆகுபெயர். 'நீயுடல் நானாவி' என்றது சடாயு: நீ என்

பது சக்கரவர்த்தியென்றும் நான் எனபது ஜடாயுவென்றுங கொள்க சம்பராசுர யுத்தததில துணையிருந்து செய்த வுதவியைககருதி 'உயிா' எனறது. உடலை வைதது உயிரைக கொணடுபோகும் வழககிறகு மாறாக உடலை எடுதது உயிரைவைததுப் போனை எனனும புனமைகருதி 'உணாவிறநத கூறறினா' எனறா கூறறினா எனபது இகழசசியினற பனமைப பொருளில வநதது. இனி, கூறறுகிய இயமனா எனபபிரித துரைததலுமாம. (உக)

எழுவதோ ரிசைபெருக விடபொழுதே யொபபரிய வெரியுந் தீயின
விழுவதே நிறகமட மெலலியலா தமமைபபோ னிலததின மேலவீழந
தழுவதே யானெனனு வறிவுறறா னெனவெழுநதாங கவரை நோககி
முழுவதே ழுலகுடையமைநதனமீா கேணமினென முறையிற சொலவான.

இ-ள். யான்—, எழுவது-(பரவிக) கிளமபுவதாகிய, ஓா இசைபெருக-ஒபபறற கீாததி அதிகரிககுமபடி, இபபொழுதே-இவவேளையிலே, ஒபபு அரிய-ஒபபிலலாத, எரியும தீயில-எரிகினற நெருபபில, விழுவதே நிறக-விழவேணடியதேயனறி, மடம-அறியாமையையுடைய, மெலலியலா தமமைபபோல-பெணகளைபபோல, நிலததில வீழநது அழுவதே-பூமியில விழுநது அழலாமோ? எனறு-எனறு நினைதது, அறிவ உறறான என-அறிநதவனபோல, எழுநது-எழுநதிருந ஆஙகு-அபபொழுது, அவரைநோககி-அவவிராம லக்ஷமணாகளைநோககி, முழுவது எழ உலகுடைய-எழுலகஙகள முழுவதையும உரியபொருளாகவுடைய, மைநதனமீா-குமாரககளே! கேணமின-கேளுஙகள, என-எனறு, முறையின-முறைமையாக, சொலவான-சொலலுவாராயினா.

குறிபபு—"பசைநதாரிற றீாதலிற றீபபுகு தனனறு" எனறதறகிசைய நணபனிறநததறகு நானும அககினிப பிரவேசஞசெயது பிராணனை விடடுப புகழை நிறுததாது இரஙகியழுவதோ எனபாா அவவாறு கூறினா. துனபம நோநதவிடதது அவசமாயப பூமியின வீழநது புரணடு புலமபல பூவையா இயறகை, "பூவையிழை மகளிாபோலப புலமபல" எனறாா சிந்தாமணியிலும மைநதனமாா எனபது மைநதனமீா என விளியேறறது மாா-பலலோா படாககைபபெயா விகுதி சககரவாததி திருமகாகளாதலால 'முழுவதேழுலகுடைய மைநதனமீா' எனறாா 'உலகுடையான மைநதனமீா' எனறும பாடம. (உஉ)

தககனனி வயிறறுதிததா ரைமபதினமா தடஙகொஙகைக கையலாருட
டொககபதின மூவரையக காசிபனும புணாநதனனத தோகை மாருண
மிககவதி திபபெயராண முபபதது மூநகோடி விணணோ ரீநதாண
மைககருஙகட டிதியெனபா ளதினிரடடி யசுராதமை வயிறு வாயததாள.

இ-ள். தககன வயிறறு-தக்ஷப்பிரஜாபதியினது வயிறறில, நனிஉதிததாா-மிகுதியாகத தோனறியவாகளாகிய, ஐமபதினமா-ஐமபது பேராகிய, தடம கொங்கை தையலாருள-பெரியதனஙகளையுடைய மகளிாகளுள, தொகக-ஒருவகுப்பாகச்சோநத, பதினமூவரை-பதினமூனறு பெணகளை, அ காசிபனும-அந்தக் காசிபப் பிரஜாபதியும, புணாநதனன-மணநது கூடினா, அ தோகைமாருள-அந்தப் பெண்களுள, மிகக-(புததியிற)சிறநத, அதிதிப் பெயராள-அதிதிப்பெயருடையவள. முப்பதது முக்கோடி விணணோா ஈநதாள-முப்பதது மூனறுகோடி

தேவர்களைப் பெற்றாள், மை கரு கண்-மையெழுதிய கரிய கண்களையுடைய, திதி என்பாள் - திதி என்னும் பேருடையவள், அதின் இரட்டி அசுரர்தமை - அதற்றொகையின் இரட்டிப்பாகிய [அறுபத்தாறுகோடி] அசுரர்களை, வயிறுவாய்த்தாள் - பெற்றாள்.

குறிப்பு — தக்ஷன் - தக்கன், இவன் பிரமன்றன் புதல்வன், தக்கன் மனைவி மக்களைப் பெறினும் அவன் வயிற்றிற் பிறந்ததாகச் சொன்னது, உலக வழக்கு நோக்கியும், இரண்டு மாதமவரை ஆடவர் வயிற்றிற்றங்கிப் பின் கர்ப்பம் ஸ்திரீகளிடத்தில் தங்குமென்ற நூல்வழக்கு நோக்கியு மென்க. இவ்விருவகையும்பற்றியே "பத்திரு மாதங் கருவயி னூறிய பாழுடம்பை" என்று மறைஞானசம்பந்தரும் கூறினர். நவப் பிரமர்களில் காசிபரு மொருவராதலால் அக்காசிபர் என்று சுட்டிக் கூறினார். தையல்-அழகு, இங்குப் பெண்களுக்கு ஆகுபெயர். அசுரர்-என்பதற்கு அமிர்தம் புசியாதவரென்றும் சுரர்களுக்குப் பகைவரென்றும், பகைவருயிரைக் கவருபவரென்றும் பொருள்கொள்ளத்தகும். வயிறு வாய்த்தல் - கர்ப்பமாதல் எண்டு மகப்பேற்றை யுணர்த்தியது. (௨௫)

தானவரே முதலோரைத் தனுப்பயந்தாண் மதியென்பாண் மனிதர் தம்மோ
டானவரு ணங்களவ யவத்ததடைவே பயந்தனளாற் சுரபி யென்பாள்
டேனுவுடன் கந்தருவ மற்றுள்ள பிறபயந்தா டெரிக்குங் காலை [ள.
மானமுடைக் குரோதவசை கழுதைமரை யொட்டைபிற வயிறு வாய்த்தா

இ - ள் தனு என்பாள்-தனு என்பவள், தானவரே முதலோரை-தானவர் முதலியவர்களை, பயந்தாள் - பெற்றாள், மதி என்பாள் - மதியென்பவள், மனிதர் தம்மொடு ஆன - மனிதர்களிடத்துப் பொருந்திய, வருணங்கள் - ஜாதிகளை, அவயவத்து - தன் உறுப்பினின்றும், அடைவே - முறையாக, பயந்தனள் - பெற்றாள், சுரபி என்பாள் - சுரபியென்று சொல்லப்பட்டவள், தேனுவுடன் - காமதேனுவோடு, கந்தருவம் - குதிரைகளையும், மற்றுள்ள - வேறுமுள்ள, பிற - பிறவற்றையும், பயந்தாள் - பெற்றாள், தெரியுங் காலை -ஆராயுமிடத்து, மானம் உடை - பெருமையுடைய, குரோதவசை - குரோதவசையென்பவள், கழுதை மரை ஒட்டை -கழுதைகளையும் கணவிரவங்களையும் ஒட்டகங்களையும், பிற - மற்றவைகளையும், வயிறுவாய்த்தாள் - பெற்றாள்.

குறிப்பு — தானவர் - தேவசாதியினோர் வகுப்பு வருணங்க ளவயவத்தடைவே பயந்தனள் என்றது - முகத்திற் பிராமணர்களையும், தோளில் க்ஷத்திரியர்களையும், தொடையில் வைசியர்களையும், பாதத்திற் சூத்திரர்களையும் பெற்றாளென்றபடி. தேனு என்றது காமதேனு முதலிய பசுக்களை. கந்தருவம் -குதிரைமுகத்தோடு கூடியதோர் கந்தருவஜாதி. மானம் - பெருமையும் நாணுமாம். இது மற்றைப் பெண்களுக்கு முபலக்ஷணம். குரோதவசை - கோபத்துக்கு வசப்பட்டவள். உஷ்டரம் - ஒட்டையெனத் திரிந்தது. (௨௬)

மழைபுரைபூங் குழலவிநதை வானிடமி னருணனுடன் வயிநதேயன்
றழைபுரையுஞ் சிறைக்கூகை பாறுமுதற் பெரும்பறவை தம்மை யீன்றா
ளிழைபுரையுந் தாமபிரையூகக் குருவிசிவல் காடைபல பிறவுமீன்றாள்[லாம்.
கழையெனுமக் கொடியயந்தாள் கொடியுடனே செடிமுதலாக் கண்டவெல்

இ-ள். மழைபுரை - மேகத்தையொத்த, பூ குழல் விநதை - அழகிய கூந்தலையுடைய விநதை யென்பவள், வான் - மேகத்திற் றோன்றுகின்ற, இடிமின் - இடியும் மின்னலும், அருணனுடன் வயிநதேயன் - அருணனும் கருடனும், தழைபுரையும் சிறை - தழைகளையொத்த சிறகுகளையுடைய, கூகை பாறு முதல - கோட்டானும் பருந்தும் முதலாகிய, பெரு பறவை தம்மை - பெரிய பறவைகளை, ஈன்றாள் - பெற்றாள்; இழைபுரையும் - மகளிர்க்கு ஆபரணத்தை யொக்கின்ற [மகளிர்க்குட் சிறந்த], தாமிரை - தாமிரை யென்பவள், ஊர்க்குருவி - ஊர்க்குருவிகளையும், சிவல் - கௌதாரிகளையும், காடை - காடைகளையும், பலபிறவும் - மற்றும் பலவற்றையும் ஈன்றாள் - பெற்றாள், கழையெனும் அக்கொடி - கழையென்னும் பெயரையுடைய பூங்கொடி போன்றவள், கொடியுடனே செடிமுதலா - கொடியும் செடியும் முதலாக, கண்ட எல்லாம் - காணப்படுகின்றவற்றை யெல்லாம், பயந்தாள் - பெற்றாள்

குறிப்பு — வைநதேயன் - தத்திதாந்தம், விநதையின் குமரன் என்பது பொருள். கூகை - கூகம் என்னும் வடமொழிச்சிதைவென்பர். கூவென்றொலிக்கின்றமையான் வந்தபெயராகலின் தமிழே யெனலுங்கூடும். தாமிரை - வடமொழிச்சிதைவு. கொடி - வஞ்சிக்கொடியுமின்னற்கொடியுமாம். இங்குப் பெண்ணுக்கு உவமவாகுபெயர். விநதை - ஆகாரம் ஐகாரமாயிற்று. (உஎ)

வெருட்டியெழுங் கண்பணப்பை வியாளமெலாங் கத்துருவர் மின்னு மீன
மருட்டிகழு மொருதலைய புயங்கமெலாஞ் சுதையெனனு மாது தந்தா[ருண
ளருட்டையெனும் வல்லிதந்தா ளோந்தியுடும் பணில்கணமுத லான வெல
தெருட்டிடுமோ திளையீந்தாள் செலசரமா கியபலவுந் தெரிக்குங் காலை. [லாந

இ-ள். கத்துருவாம் - கத்துரு என்பவளாகிய, மின்னும் - மின்னல்போன்றவளும், வெருட்டி எழும் - (பிறரை) அச்சமுறுத்தியெழுகின்ற, கண் பணம் பை - கட்டமாகிய பணம் என்னும் பெயரையுடைய படங்களையுடைய, வியாளம் எலாம் - சாப்பங்களையெல்லாம், ஈன்றாள் - பெற்றாள், சுதை எனனும் மாது - சுதையென்னும் பெயரையுடைய பெண், மருள் திகழும் - அச்சஞ்செய்து விளங்குகின்ற, ஒருதலைய - ஒற்றைத் தலையையுடைய, புயங்கம் எலாம் - நாகங்களெல்லாவற்றையும், தந்தாள் - பெற்றாள், அருட்டையெனும் வல்லி - அரிஷ்டையென்னும் பெயரையுடைய பெண், ஓந்தி உடும்பு அணில் முதலாய - ஓணான் உடும்பு அணில் முதலாகிய, எல்லாம் - எல்லாவற்றையும், தந்தாள் - பெற்றாள், இளை - இளையென்னும் பெயரையுடைய, தெருட்டிடும் மாது - (யாவரையுந்) தேற்றுகின்ற பெண், செலசரம் ஆகிய பலவும் - ஜலத்திற் சஞ்சரிப்பனவாகிய மீன் முதலிய பலவற்றையும், ஈந்தாள் - பெற்றாள், தெரிக்கும் காலை - ஆராய்ந்து சொல்லுமிடத்து

குறிப்பு — இருதலை, ஐந்தலை, எழுதலை, ஒன்பதுதலை, ஆயிரந்தலை முதலிய தெய்வத்தன்மை பொருந்திய சாப்பங்களென்பார் 'கண்பணப்பை வியாளம்' என்றார். புயங்கம் புஜங்கம், வக்கிரமாகச் செல்வது, அன்றியும், மார்பினால் நகர்வது என்பது பொருள். (உஅ)

அதிதிதிதி தனுவருட்டை சுதைகழையே சுரபியணி விநதை யான்ற
மதியிளைகத் துருவுடனே குரோதவசை தாமபிரையா மடநலார்கள்

த்தம் முறை முறையாய் உக - பொருநதிய முததுபபோன்ற நீா மேனமேலுஞ் சிநதுமபடி, நினறு - (சடாயுவின எதிரில) நினறுகொணடு, இனன - இததனமை யான வாாததைகளை, நீாமை - முறைமையோடு, நிகழததினா - சொனனாாகள.

குறிபபு —முததம - உவம வாகுபெயா மற்று - அசை. (கஙூ)

உயவி டததுத வறகுரி யானுநதன
மெய்வி டககரு தாதுவிண ணேறினு
னிவவி டததினி லெமபெரு மாஅனெமைக
கைவி டிறபினை யாாகளை கணணுளாா

இ - ள உயவிடதது - பிழைகக வேணடுமபொழுது [துனபம நேருஙகால ததில], உதவறகு உரியானும - உதவிசெயதறகுரியவராகிய சககரவாததியும, தன மெயவிட கருதாது - தனககுரிய சததியததைக கைவிட எணணாமல, விண எறி னுன - சுவாககம சென்றாா, எமபெருமா அன - எமது பெருமானே! இவவிடதது - இநதவிடததில [இநதவேளையில] எமை கைவிடில - (நீயும) எஙகளைக கைசோரவி டடால, பினை களைகண உளாா - பினபு (எஙகளுககுப) பறறுக கோடாகவுளளவா, யாா - (வேறு) யாவா? [ஒருவருமிலலை ]

குறிப்பு —உயவிடதது, வகரமெய - உடமபடு மெயயல்லாத மெய, இதனை மெயயீறறுடமபடு மெயயெனபா நச்சினார்க்கினியர், உதவறகு - குவவீறறுவினை யெசசம. எமபெருமா அன, அளபெடை - விளியுருபு. (கச)

தாயி னீஙகருந தநதையிற றணணகா
வாயி னீஙகி வனமபுகுந தெயதிய
நோயி னீஙகினெ நுனனினெ னெஙகளை
நீயு நீஙகுதி யோநெறி நீஙகலாய

இ - ள. நெறி நீஙகலாய - நனமாாககததினினறும நீஙகாதவனே! நீஙக அரும - பிரிதறகு அருமையான, தாயின தநதையின - தாயினினறும தநதையி னினறும, தண நகா வாயின - குளிாநத படடணததினினறும, நீஙகி - பிரிநது, வனமபுகுநது - காடடைசசோநது, எயதிய - அடைநத, நோயின - வருததததி னினறும, நுனனின - உனனால, நீஙகினெம - தீாநதோம, எஙகளை - (துனபம நீஙகபபெறற) எஙகளைவிடடு, நீயும நீஙகுதியோ - (துனபததை யாறறிய) நீயும பிரிவாயோ? என - னனன

குறிபபு —'நீஙகரும' எனபதனை, தாய, தநதை, நகரம இமமூனறனோடுங கூட் டுக, இது இடைநிலைத தீவகம. நீ எனபது 'நுன' எனறாயிறறு, "நுனபழம பகைதவ நூறு வாயென" [நாமகளிலம்பகம் 295], "நுனசீரடி நோவ நடநது செ லேல" [கேமசரியாரிலம்பகம் 109] எனனுஞ சிந்தாமணியிறபோல, இதனை ஆசி ரியா நச்சினார்ககினியர் திசைசசொல் எனபர். (கரு)

எனற சொலல ரிரநதழி நெஞசினா
ரினற வீரரை நோககி யிளைநதவ

என்ற தென்னி னயோத்தியி னையன்மீர்
சென்ற பின்னவற் சேர்குவெ னியானென்றான்.

இ - ள் என்ற சொல்லர் - என்று சொல்லிய வார்த்தையை யுடையவராய், இரந்து - (தன்னை யிறவாதபடி) யாசித்து, அழிகின்றார் - வருந்துகின்ற மனத்தையுடையவர்களாய், நின்ற வீரரை - நின்ற ஸ்ரீராம லக்ஷ்மணர்களை, (சடாயு) நினைந்து - (அவர்கள் இரக்கத்தைப்பற்றி) ஆலோசித்து, ஐயன்மீர் - பிள்ளைகளே! அன்று அது என்னின் - இப்பொழுது யான் இறப்பது (உங்களுக்கு) உடன்பாடன்றாகுமாயின், அயோத்தியின் சென்றபின் - அயோத்தியாபுரிக்கு (நீங்கள்) சென்றபிறகு, யான் அவன் சேர்குவென் - யான் அச்சக்கரவர்த்தியை யடைவேன் [இறப்பேன்], என்றான் - என்று சொன்னான்.

குறிப்பு — அயோத்தி - அயோத்தியா என்னும் வடசொல்லின் திரிபு, ஒருவரானும் யுத்தம் செய்தற்குக் கூடாதது என்பது பொருள். இதனால் அவ்வயோத்தி மா நகரைப் பரிபாலித்துவந்த சக்கரவர்த்திகளது பராக்கிரமம் விளங்குகின்றது.

வேந்தன் விண்ணடைந் தானெனின் வீரர்நீர்
ஏந்து ஞால மினிதளி யாதிவண்
போந்த தென்னை புகுந்தவெ ன்புந்திபோய்க்
காந்து கின்றது கட்டுரை யீரென்றான்.

இ - ள் வேந்தன் - சக்கரவர்த்தி, விண் அடைந்தான் எனின் - சுவர்க்கம் புகுந்தானாயின், வீரர் நீர் - வீரர்களாகிய நீங்கள், ஏந்து ஞாலம் - தாங்குதற்குரிய பூமியை, இனிது அளியாது - இனிமையாகக் காவல்செய்யாமல், இவண் - இவ்விடத்தில் [வனத்தில்], போந்தது என்னை - வந்தது என்ன? புகுந்த என் - நடந்த விஷயங்கள் என்ன? புந்திபோய் - புத்திசென்று, காந்துகின்றது - வருந்துகின்றது, கட்டுரையீர் என்றான் - உறுதியாகச் சொல்லுங்களென்றான்.

குறிப்பு — புந்தி - 'புத்தி' என்னும் வடசொல்லின் விகாரம். புகுந்த — வினையாலணையும் பெயர். (கஎ)

தேவர் தானவர் திண்டிற ற்காவே
றேவ ராக விடரிழைத் தாரெனிற்
பூவ ராவு பொலங்கறை வேலினீர்
சாவ ராக்கித் தருவெ னரசென்றான்.

இ - ள். பூ - இலைபோன்ற, அராவு - கூர்மைசெய்யப்பட்ட, பொலம் கறை வேலினீர் - அழகிய இரத்தக்கறையுள்ள வேலாயுதத்தையுடையவர்களே! தேவர் (ஆக) தேவர்களாயிருந்தாலும், தானவர் (ஆக) அசுரர்களாயிருந்தாலும், நாகர் (ஆக) பாதாளலோகவாசிகளாயிருந்தாலும், வேறு எவர் ஆக - வேறு எவர்களாயிருந்தாலும், இடர் இழைத்தார் எனின் - (உங்களுக்குத்) துன்பத்தைச்செய்திருப்பாரானால், சாவர் ஆக்கி - (அவர்களை) இறந்தவர்களாகச்செய்து, அரசு தருவென் - இராச்சியத்தை (உங்களுக்குக்) கொடுப்பேன், என்றான் - என்றுசொன்னான்.

குறிப்பு —'திணடிறல' எனபதனை, தேவாமுதலியவர்க்கு விசேடணமாககி யுரைப்பினும பொருநதும. 'ஆக' எனபதனை, தேவா, தானவா, நாகா எனனுமிட ததுவ கூடடி யுரைககபபட்டது (௩௮)

தாதை கூறலுந தமபியை நோககினன்
சீதை கேளவ னவனுநதன சிறறவை
மாத ராலவநத செயகை வரமபிலா
வோத வேலை யொழிவின றுணாததினன.

இ - ள. தாதைகூறலும - சடாயு (இவவிதம) சொல்லலும, சீதைகேளவனும- ஸீதாபதியாகிய ஸ்ரீராமபிரான, தமபியைநோககினன - இலக்ஷமணனை(ச சொலலு மபடி குறிபபாயப) பாாததருளினன, அவனும - அவவிலக்ஷமணனும, தன சிறற வைமாதரால - தன சிறியதாயாகிய கைகேயியால, வநதசெயகை - நோநதசஙகதி களாகிய, வரமபு இலா - முடிவிலலாத, ஓதவேலை ஒழிவினறு உணாததினன - பெரியகடலைச சிறிதும தவிாதலிலலாமல சொனனன.

குறிபபு —தசாதனுககு இனனுயிாத தோழரானமைபற்றிச சடாயுவைத தா தைமுறையாகக கூறினா. (௩௯)

உநதை யுணமைய னாககியுன சிறறவை
தநத சொலலைத தலைககொணடு தாரணி
வநத தமபிக குதவிய வளளலே
யெநதை வலலது யாவாவல லாரெனு.

இ - ள (அதுகேடட ஜடாயு ஸ்ரீராமபிரானைநோககி), உநதை - உன தந தையாகிய தசரதசககரவாததியை, உணமையன ஆககி- சததியததையுடையவராகச செயது, உன சிறறவைதநத சொலலை - உன சிறியதாய சொனனவாாததையை, த லைககொணடு - சிரசிலவகிதது, தாரணி - பூமியை, வநததமபிககு - உடனபிறநத தமபிககு, உதவியவளளலே - கொடுதத உதாரகுணமுடையவனே! எநதை - என னப்பனாகிய நீ, வலலது - செயபவலலகாரியததை, வலலாா - செயயவலலவா, யா வா எனு - வேறுயாவா எனறு சொலலி,

குறிபபு —தாரணி - தரணிஎனபதின விகாரம எநதை - மரபுவழுவமைதி, முனனிலைபபடாககை. (௪0)

அலலித தாமரைக கணணனை யனபுறப
புலலி மோநது பொழிநதகண ணீரினன
வலலை மைநதவம மனனையு மெனனையு
மெலலை யிலபுக ழெயதுவித தாயெனறான.

இ - ள். அல்லி தாமரை - இதழ்களையுடைய செந்தாமரைமலர்போன்ற, கண் ணனை - கணகளையுடைய ஸ்ரீராமபிரானை, அனபு உற புலலி - மிகக அனபினால தழுவிக்கொணடு, மோநது - உசசிமோந்து, பொழிநதகண் நீரினன - சிநதிய கண் ணீரையுடையவராய், வல்லை - சாமாததியமுடையாய்! மைந்த - மைநதனே! (௪௧)

அ மன்னையும் - அச்சக்கரவர்த்தியையும், என்னையும் - என்னையும், எல்லை இல்புகழ் - அளவில்லாதபுகழை, எய்துவித்தாய் - சோபபித்தாய், என்றான் - என்றுசொன்னார்

குறிப்பு.—வல்லை - விரைவிலே யென்றுரைப்பினுமாம். மன் - பெருமை, ஈங்கு ஆகுபெயராய் அதனையுடைய அரசனையுணர்த்திற்று. பிதாவாகியபரிபாலன முதலியவற்றால் இவன் தந்தை இவனைப்பெறுதற்கு என்னதவஞ்செய்தானோ என னுஞ் சொல்லை யெய்துவித்தலான், 'அம்மன்னனையு மென்னையு மெல்லையில் புக ழெய்துவித்தாய்' என்றான், "மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை, யென்னோற் றான் கொல்லெனுஞ் சொல்" என்றார் செந்நாப்போதாரும். (சக)

பின்ன ரும்மப் பெரியவன் பெய்வளை
யன்ன மன்ன வணங்கினை நோக்கினன்
மன்னர் மன்னவன் மைந்தவிவ் வாணுத
லின்ன ளென்ன வியம்புதி யாலென்றான்

இ - ள். அ பெரியவன் - அந்தப்பெரியவராகிய சடாயு, பின்னரும் - பின்னும், பெய்வளை - அணிந்த வளையல்களையுடைய, அன்னம் அன்ன - அன்னப்பேடையொத்த, அணங்கினை - சீதாபிராட்டியை, நோக்கினன் - பார்த்து, மன்னர் மன்னவன்மைந்த - சக்கரவர்த்தி திருமகனே! இ வாள் நுதல் - ஒளிபொருந்திய நெற்றியையுடைய இப்பெண், இன்னள் என்ன - இன்னாளென்று, இயம்புதி என்றான் - (எனக்கறியச்) சொல் என்றான்

குறிப்பு.—பெய்வளை - வினைத்தொகை. நோக்கினன் - முற்றெச்சம். வாணுதல் - அன்மொழித்தொகை (சஉ)

அலவி றுத்தன் தாடகை யாதியா
விலவி றுத்த திடையென மேலநாட்
புலவி றுத்தது யாவும் புகன்றுதன்
சொலவி றுத்தனன் றோன்றலபின் றோன்றினன்

இ - ள். தோன்றலபின் தோன்றினன் - ஸ்ரீராமனுக்குப்பின்னே திருவவதரித்த இளையபெருமாள், அல இறுத்தது அன - இருள் ஒருவடிவமெடுத்தது தங்கினாற்போன்ற, தாடகை ஆதியா - தாடகையைக் (கொன்றது) ஆதியாக, வில இறுத்தது இடை என - (மிதிலாபுரியிற் பிராட்டிகாரணமாக) ஹரதனுவைப் பங்கஞ்செய்தது இடையாக, புல இறுத்ததுயாவும் - வனத்தையடைந்தது முதலியாவற்றையும், புகன்று - சொல்லி, தனசொல இறுத்தனன் - தன்வார்த்தையை முடித்தார்.

குறிப்பு.—கொன்று என ஒருசொல்வருவிக்க. தாடகை - மலைகளிற்றிரிபவள். இனி, 'புலவிறுத்தது' என்பதற்கு சக்கரவர்த்திக்குச் சரமகைங்கரியஞ்செய்ததென்று உரைப்பினும் அமையும். (சங)

கேட்டு வந்தனன் கேழ்கிளர் மௌலியான்
ஞேட்ட லங்கலி னீர்துறந் தீரவள்
நாட்டி னீவிரு நன்னுத லானுமிக்
காட்டில வைகுதிர் காக்குவென் யானென்றான்.

இ - ள். கேழ்கிளர் மௌலியான் - ஒளிவிளங்குகின்ற கிரீடத்தையுடைய சடாயு, கேட்டு - (லக்ஷ்மணர் கூறியவற்றைக்) கேட்டு, உவந்தனன் - மகிழ்ந்தவராய், தோடு அலங்கலினீர் - பூவிதழையுடைய மாலையையுடையவர்களே! வளம் நாட்டின் - வளப்பத்தையுடைய நாட்டினின்றும், துறந்தீர் - விட்டுநீங்கிவந்தவர்களாகிய, நீவிரும் - நீங்களும், நல் நுதல் தானும் - நல்ல நெற்றியையுடைய சீதையும், இ காட்டில் வைகுதிர் - இந்தக்காட்டிற்றானே இருங்கள், யான் காக்குவென் - நான் பாதுகாப்பேன், என்றான் - என்றுசொன்னார்.

குறிப்பு—உவந்தனன் - முற்றெச்சம். நன்னுதல்: பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. (சச)

இறைவ வெண்ணணி யகத்திய னீந்துள
தறையு நன்மணி யாற்றி னகன்கரைத்
துறையு ளுண்டொரு சூழலச் சூழல்புக்
குறைது மென்றன னுள்ளத் துறைகுவான்.

இ - ள். உள்ளத்து உறைகுவான் - (எல்லாருடைய) இதய கமலத்திலும் தங்கியிருப்பவனாகிய ஸ்ரீராமபிரான், (சடாயுவை நோக்கி) இறைவ - இறைவனே! அகத்தியன் - அகத்தியமாமுனிவர், எண்ணி - (வாசத்திற்கு யோக்கியமானது என்று) ஆலோசித்து, ஈந்து உளது - (வசிக்கும்படி) சொல்லியருளியதாகிய, அறையும் நல் மணி யாற்றின் - ஒலிக்கின்ற நல்ல இரத்தினங்களையுடைய கோதாவரி யாற்றினது, அகன் கரை துறையுள் - அகன்ற கரையிடத்துள்ளதும் துறையைத் தன்னகத்துக் கொண்டதுமாகிய, ஓர் சூழல் - ஓர் இடம், உண்டு - உளது, அ சூழல் - அவ்விடத்தில், புக்கு உறைதும் என்றனன் - போய் வசிக்கின்றோம் என்று சொன்னான்.

குறிப்பு—ஸ்ரீராமபிரான் சடாயுவை 'இறைவ' என்றது கழுகுகளுக்கு அரசாயிருத்தலையும், தனக்குப் பிதா முறையாதலையும் நோக்கியென்க. 'அறையு நன் மணியாறு'—சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற நல்ல முத்துப் போலத் தெளிந்த நீருள்ள ஆறு என்றலுமாம் (சரு)

பெரிது நன்றப் பெருந்துறை வைகிநீர்
புரிதிர் மாதவம் போதுமின் யானது
தெரிவு றுத்துவெ னென்றவர் திண்சிறை
விரியு நீழலிற் செல்லவிண் சென்றனன்

இ - ள். (பின்பு சடாயு) பெரிதும் நன்று - மிகவும் நல்லதாயிற்று, அ பெரும் துறை - அந்தப் பெருமைபொருந்திய இடத்தில், வைகிமாதவம்புரிதிர் - தங்கிச் சிறந்த தவத்தைச்செய்யுங்கள், யான் - நான், அது தெரிவுறுத்துவென் - அவ்விடத்தை (உங்களுக்குக்) காண்பிப்பேன், போதுமின் என்று - வாருங்கள் என்றுசொல்லி, அவர் - அவ்விராமலக்ஷ்மணர்கள், திண் சிறை - (தனது) வலியசிறகுகளின், விரியும் நீழலில் - பரந்தநிழலில், செல்ல - வரும்படி, விண் - ஆகாயமார்க்கத்தே, சென்றனன் - பறந்துபோனார்.

குறிப்பு—சடாயு ஸ்ரீராமலக்குமணர்களுக்கு நிழலைத்தந்து ஆகாயத்திற்செல்ல அந்நிழலில் இவர்கள் சென்றனரென்பதாம். அப்பெருந்துறைபெரிது நன்று எனமாற்றிப் பொருள்கூறினுமாம். நிழல் - நீழல், நீட்டல் விகாரம். (சசு)

ஆய சூழ லறியவு ணர்த்தியத்
தூய சிந்தைய தோமில குணத்தினன்
போய பின்னைப் பொருசிலை வீரரு
மேய சோலை யினிதுசென் றெய்தினர்.

இ - ள். தூய சிந்தைய - பரிசுத்தமான மனத்தையுடைய, தோம் இல் குணத்தினன் - குற்றமற்ற குணங்களையுடைய அச்சடாயு, ஆய சூழல் - எதிர்ப்பட்டதாகிய பஞ்சவடியை, அறிய - (அவர்கள்) அறியும்படி, உணர்த்தி போயபின்னை - காட்டிப்போன பின்பு, பொருசிலை வீரரும் - போர்செய்கின்ற வில்லையுடைய அவ்வீரர்களும், மேய - பொருந்திய, சோலை இனிது சென்று எய்தினர் - அச்சோலையில் இனிமையாகப் போய்ச் சேர்ந்தார்கள்.

குறிப்பு — நடந்து செல்லும் வழிதொலையக் குறுகியதாதலின் 'ஆயசூழல்' என்றார். இனி, இவர் வந்து வசித்தற்கும் அதனால் சிறப்படைதற்குமே உற்பத்தியாகிய சூழலென்றலுமாம். சிந்தைய குறிப்புப்பெயரெச்சம். இனி, 'மேயசோலை' அகஸ்திய மகா முனிவரால் ஏவப்பட்ட சோலை யென்றலுமாம். (௬எ)

வார்ப்பொற் கொங்கை மருகியை மக்களை
யேற்பச் சிந்தனை யிட்டவ் வரக்கர்தங்
சீர்ப்பைச் சிக்கறத் தேறினன் சேக்கையிற்
பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்றான்.

இ - ள். அ அரக்கர்தம் - அவ்விடத்துள்ள இராக்ஷதர்களுடைய, சீர்ப்பை சிக்கு அற - சிறப்பை ஐயமில்லாமல், தேறினன் - நன்றாய் அறிந்தசடாயு, வார் பொன் கொங்கை - கச்சணிந்த அழகிய தனங்களையுடைய, மருகியை - (தன்) மருமகளாகிய சீதையையும், மக்களை - குமாரர்களாகிய ஸ்ரீராமலக்ஷ்மணர்களையும், ஏற்ப சிந்தனை இட்டு - தக்கபடி சிந்தனைசெய்து, சேக்கையில் பார்ப்பை - கூட்டிலுள்ள (தமது) குஞ்சுகளை, பார்க்கும் - (அடிக்கடி) வந்து பார்க்கின்ற, பறவையின் - பறவைபோல, பார்க்கின்றான் - பாதுகாத்துக்கொண்டு வருவாராயினர்.

குறிப்பு — பொற்கொங்கை - தேமல்படர்ந்த கொங்கையுமாம், பொன் - அது போன்ற தேமலுக்கு ஆகுபெயர். பார்ப்பு பறப்பவற்றிளமை, "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை" என்பது தொல்காப்பியம். சேக்கை படுக்கப்படுவது, சே பகுதி, கு சாரியை, ககரத்தோற்றமும் உகரக்கேடும் சந்தி, ஐ செயப்படு பொருள் விகுதி. (௬அ)

## நான்காவது: சடாயுகாண் படலம்.

முற்றிற்று.

ஆகப்படலம் ௪-க்கு விருத்தம் ௨௨௯.

# ஐந்தாவது சூர்ப்பநகைப் படலம்.



புவியினுக் கணியா யானற பொருடநது புலததிற ருகி
யவியகத துறைக டாஙகி யைநதிணை நெறிய ளாவிச
சவியுறத தெளிநது தணணென றொழுககமுந தழுவிச சானறோா
கவியெனக கிடநத கோதா வரியினை வீரா கணடாா.

இ – ள. வீரா - ஸ்ரீராம லக்ஷமணாகள, புவியினுககு அணியாய - பூமிககு அலஙகாரமாய, ஆனற பொருள தநது - மிகுநத வஸதுககளைககொடுதது, புலததிறறு ஆகி - பககததே விளை நிலஙகளையுடையதாகி, அவி அகம துறைகள தாஙகி - அவிநதபாவஙகளையுடைய நீாததுறைகளைககொணடு, ஐநதிணை நெறி அளாவி - ஐவகை நிலததின வழிககலநது, சவி உற தெளிநது - கணணொளி யூடு செலலுமாறு தெளிவினையடைநது, தணணெனறு - குளிாநது, ஒழுககமும தழுவி - ஒழுகுதலையும பொருநதி, சானறோா கவி என - அறிஞாகளாற செயயபபடட கவிகளைபபோல, கிடநத - இருநத, கோதாவரியினை - கோதாவரியெனனும நதியினை, கணடாா - பாாததாாகள

குறிபபு —"நீரினறமையாதுலகு" எனறபடி யுலகிலுளள சராசரபபொருளகளெலலாம உயததறகுககாரணமாகியும, தூயமைசெயவதாகியு மிருததல பறறி 'புவியினுககணியாய' எனறாா "ஆறிலலா வூருககழகுபாழ" என எதிாமறைமுகததான ஔவையாா் கூறியதுஙகாணக 'ஆனறபொருள' எனறது மணியும பொனனுமாரமுமகிலுமுதலிய பொருளகளை, தானே நினறு உணவாதலனறியும உணவாம பிறபொருளையுநதரவலல தெனபாா 'புலததிறறாகி' எனறாா இநநிபுணணிய தீாததமாகலின 'அவியகததுறைகடாஙகி' எனபபடடது "வீஈாகள" - (போயின ஆசையினுன) எனறாறபோல, 'அவியகம' எனநினறது, ஈணடு அவிதல - கெடுதல, "ஒருமூனறவிததோன" எனபுழி அவிததோன கெடுததோன எனறாா அடியார்க்கு நல்லார். அகம அவி யெனமாறறி இரணடன றொகையெனககோடலும பொருநதும இபபொருளில அவி வினைததொகை இனி, அவிபபாகததைததருகினறயாகசாலைகளையுடைய துறைகளைததாஙகி யெனறும, (வெபபததைத) தணிககினற மனசசெறிவினையுடைய துறைகளைததாஙகி யெனறும, பொருள கூறுதலுமேறகும. ஐநதிணையாவன —குறிஞசி, முலலை, பாலை, மருதம, நெயதலெனபன "மாயோன மேய காடுறை யுலகமுஞ, சேயோனமேய மைவரை யுலகமும, வேநதன மேய தீமபுன லுலகமும, வருணன மேய பெருமண லுலகமு, முலலை குறிஞசி மருதம நெயதலெனச, சொலலிய முறையாற சொலலவும படுமே" எனனுஞ சூததிரததில் 'சொலலிய முறையாற சொலலவும படும' எனபதனாற சொலலாத முறையாற சொலலவும படுமென அருததாபததிகோடலானும, "நடுவுநிலைத திணையே நணபகலு வேனிலொடு, முடிவுநிலைமருஙகின முனனிய நெறிததே" எனறும "நடுவ ணைநதிணை நடுவண தொழியப் - படுதிரை வையம பாததிய பணபே" எனறும ஆசிரியா தொல்காப்பியனாா அருளிசசெயதமையானும "முலலையுங குறிஞசியு முறைமையிற றிரிநது, நலவியலபிறழநது நடுஙகுதுய ருறுததுப், பாலை யெனபதோா படிவங கொளளும" எனனுஞ சிலப்பதிகாரத்தானும போநத இப்பெற்றிததபதூஉம, த்திணையினையுநதழுவித திணை ஐநதெனறாா. "வான சூா்நத வயஙகெரிகியென

ல், நெருப்பெனச் சிவந்த வுருப்பவி ரங்காட், டிலையில மலர்ந்த முகையவி ழிலவம்" என்னும் அகநானூற்றுச்செய்யுளானும், "சீறருங் கணிச்சியோன் சினவலி னவ்வெ யி, லேறுபெற் றுதிர்வனபோல வரையிளந் தியங்குந, ராறுகெட விலங்கிய வழலவி ரார்இடை." என்னும் கலித்தொகைச் செய்யுளானும் முறையே முல்லை முறைமை திரிந்து பாலையாயினவாறும் குறிஞ்சிமுறைமை திரிந்து பாலையாயினவாறுங் காண்க. திணை - ஒழுக்கம். இது ஒழுக்கம் நிகழும் இடத்திற்காயிற்று. "குலமு நிலமு மொழுக்கமுந் திணையே" என்பது பிங்கலந்தை. நீர்ப்பெருக்கான் தன்மையிலும் அடியிற் கிடந்த நுண்சிறுபொருளும் கண்ணுக்குத்தோற்றமாம்படி தெளிவுற்றமையின் 'சவியுறத்தெளிந்து' என்றார், "சவிமணிக் கோவை செவ்வி சாற்றிய வனப்புக் காந்தி" யாகலின் ஈண்டுச்சவி ஒளியென்னும் பொருளினது. இங்ஙனம், இந்நதி அணி, பொருள், துறை, திணைமுதலியன தழுவி நடத்தலின் இந்நீர்மைத்தாகிய சான்றோர் கவியையுவமை கூறினார் "கோதாவிரி' யென்னும் பாடம்பிழையுடைத்து. என்னை? பிங்கலந்தையினும் சூடாமணி நிகண்டினும் வடமொழி அமரத்தினும் கோதாவரி யென்றே வழங்கலான்.

சான்றோர் கவிக்குச்சிலேடைப் பொருள்வருமாறு — புவியினுக்கு அணியாய் - புவியிலுள்ளவர்களுக்கு அலங்காரமாகி, ஆன்றபொருள்தந்து - அமைந்த சதுர்வித புருஷார்த்தங்களை யளித்து, புலத்திற்றாகி - அறிவின்தாகி, அவி அகத்துறைகள் தாங்கி - தேவருணவினையொத்த அகப்பொருட்டுறைகளைக் கொண்டு, ஐந்திணை நெறி அளாவி - ஐவகை நிலத்தின் மார்க்கத்தினைக்கலந்து, சவி உற தெளிந்து - (மனம்) ஒளிபெறத்தெளிந்து, தண் என்று - தண்ணளி பூண்டு, ஒழுக்கமும் தழுவி - அவ்வவ்வருண நிலைக்கேற்ற ஒழுக்கமுந்தழுவி (யது சான்றோர் கவி) என்பதாம்.

புவி ஈண்டு ஆகுபெயராய் மக்களை யுணர்த்திற்று. அணி என்றது ஐவகை இலக்கணத்து ளொன்றாகிய அணி என்பதனை, இனி, சான்றோர் கவியை மேற்கோளாக எடுத்துரைப்பார் சொற்கழகாய என்றலுமாம், அணி-அழகு, "நூற்கியைந்த சொல்லின் வனப்பே வனப்பு" என்றார் ஆன்றோரும் 'ஆன்ற' ஈண்டு அமைந்த என்னும் பொருட்டு. "ஆன்ற பெரியாரகத்து" என நாயனாரும், "மரங்கள் - ஆன்றபருவத்தாற் பூத்து" என இந்நூலாசிரியரும் அமைந்த என்னும் பொருளிலுரைத்தமையறிக 'ஆன்ற பொருள் - சதுர்வித புருஷார்த்தம் "அறம்பொருளின்பம் வீடென நான்கும் - திறம்படப் பொருளெனச் செப்பினர் புலவர்" என்பவாகலின். சான்றோர் தாம் கற்றுங் கேட்டும் பெற்ற பல அரிய பெரிய விஷயங்களுங் கற்பித்த கற்பனைகளும் அக்கவியின்கண் அடங்கி ஆக்கியோர் பேராற்றலைக் குறிக்குமென்பார் 'புலத்திற்றாகி' என்றார் நூல்வழிப் பட்டதெனினு மமையும். புலம் நூலாதலை, "புலந்தொகுத்தோன்" என்னும் தொல்காப்பியப் பாயிரத்தாற் கண்டு தெளிக. அகப்பொருட்டுறைகள் இன்பப் பாலனவாகலின் அத்துறைகட்குத் தேவருணவாகிய அமிர்தத்தை யுவமைகூறினார். ஐவகைத் திணைகளும் திணைமயக்கங்களும் விரவி நடத்தலின் 'ஐந்திணை நெறியளாவி' என்றார். கற்போர்தாம் ...மை நீங்கி அறிவா மொளியைப் பெறுதற்கு அக்கவியே காரணமாக விருத்த 'சவியுற' என்றார். தெளிவு குன்றக்கூறல் முதலிய குற்றங்களி னீங்கிய

இனி, 'ஐந்திணை' என்பதற்கு ஐந்தின் இணையாகிய பத்து எனக்கொ ங்கச் சொல்லல் விளங்கவைத்தல் முதலிய பத்துவிதத்திற் கலந்து அழ த்துத் தெளிவடைந்து என்றலுமாம். உலகம் இருள் தருமா ஞாலத்து வழி உழன்று பின் எரிவாய் நரகிற்கிரையாகாமே நன்னெறிச் செலுத்தி ரிக்குந் தண்ணளி பூண்டுள்ளதாகலின் 'தண்ணென்று' என்று

குறிப்பு — உத்தமன், உழையள் என்னும் சொல்லாற்றலான ஸ்ரீராமபிரான் ஏகபத்நீ விரதன் என்னும் பொருள் தோன்றுதல் காண்க. உழையள் ஸஹதர்ம சாரிணி. இனி, உழையளாகு மென்பதற்கு மானபோன்றவளாகிய எனப் பொருள் கூறலியலுமாயினு மப்பொருள் ஈண்டுச் சிறவாமையறிக. சிறிய முறுவல் - மந்த ஹாஸம். போதகம் - பத்துவயது சென்ற யானைக்குட்டி. போதம் என்னும் வடமொழிப் பெயர் சிறுமைப் பொருளில் வந்த கப்பிரத்தியயம் பெற்றுப் போதகம் என வந்தது. இன்னும் இக் கப்பிரத்தியயம் சூத்திரகன் எனப் பெயர்ப் பொருளிலும், புத்திரகன் என அனுகம்பைப் பொருளிலும், தைலகம் என அற்பப் பொருளிலும், விருக்ஷகம் எனச் சிறுமைப் பொருளிலும் வரும். (௫)

வில்லிய றடக்கை வீரன் வீங்குநீ ராற்றின் பாங்கர்
வல்லிக ணுடங்கக் கண்டான் மங்கைதன் மருங்குல் நோக்க
வெல்லியங் குவளைக் கானத் திடையிடை மலர்ந்து நின்ற
வல்லியங் கமலங் கண்டா ளண்ணறன் வடிவு கண்டாள்.

இ - ள். வில் இயல் தடக் கை வீரன் - கோதண்டம் பொருந்திய பெருமை தங்கிய கையினையுடைய வீரனாகிய ஸ்ரீராமபிரான், வீங்கு நீர் - மிகுந்த ஜலப்பெருக்கினையுடைய, ஆற்றின் பாங்கர் - கோதாவரி நதியின் பக்கத்தில், வல்லிகள் நுடங்கக் கண்டான் - கொடிகள் அசைவதைப் பார்த்து, மங்கை தன் - சீதாபிராட்டியினுடைய, மருங்குல் நோக்க - இடையைப் பார்க்கவும், (சீதாபிராட்டி), அண்ணல் தன் வடிவு கண்டாள் - பெருமையிற் சிறந்த ஸ்ரீராமபிரானது திருமேனியைப் பார்த்து, எல்லி குவளை கானத்து - இருள் நிறத்தினையுடைய நீலோற்பலக் காட்டில், இடை இடை - நடுநடுவே, மலர்ந்து நின்ற - பூத்திருக்கின்ற, அல்லி அம் கமலம் கண்டாள் - இதழ்களையுடைய அழகிய தாமரை மலர்களைக் கண்டாள்.

குறிப்பு — கண்டான்' கண்டாள் - முற்றெச்சங்கள். அம் - சாரியை. வல்லிகள் பிராட்டியின் மருங்குலுக்கும், குவளைக் கானம் பெருமாளின் நிறத்துக்கும், கமலம் பெருமாளின் கண், கை, கால் முதலிய பத்தத் திருவவயவங்களுக்கும் உவமை. (௬)

அனையதோர் தன்மை யாலவ் வருவிநீ ராற்றின் பாங்கர்ப்
பனிதரு படிவப் பஞ்ச வடியெனும் பருவச் சோலைத்
தனியிட மதனை நண்ணித் தம்பியாற் சமைக்கப் பட்ட
வினியபூஞ் சாலை யெய்தி யிருந்தனன் னிராம னிப்பால்.

இ - ள். இராமன் - ஸ்ரீராமபிரான், அனையது ஓர் தன்மையால் - (அந்தி) அப்படிப்பட்டதாகிய ஒப்பற்ற நிலைமையைப் பெற்றிருப்பதினாலே, அ அருவி நீர் ஆற்றின் பாங்கர் - மலையின் வீழாறுகளாற் பெருகிய அக்கோதாவரி நதியின்பக்கத்திலிருக்கிற, பனிதரு - குளிர்ச்சியைத் தருகின்ற, படிவம் - அழகாகிய, பஞ்சவடியெனும் - பஞ்சவடியென்று சொல்லப்பட்ட, பருவம் சோலை - இளஞ் சோலை சூழ்ந்த, தனி இடம் அதனை நண்ணி - ஒப்பற்ற இடத்தை யடைந்து, (அங்கே) தம்பியால் அமைக்கப்பட்ட - இளையபெருமாளால் செய்து முடிக்கப்பட்ட, இனிய - இனிமையாகிய, பூ சாலை எய்தி - அழகிய பன்னசாலையை யடைந்து, இருந்தனன் - (அதில்) வசித்துக்கொண்டிருந்தான், இப்பால் - இப்பால், [illegible],

குறிப்பு —இனி, அனைய தோர் தன்மையால் என்பதனை நண்ணி என்பத னோடுகூட்டி யுரைத்து, அப்படிப்பட்டதாகிய ஒப்பற்ற (விநோதங்களை நோக்கும்) தன்மையோடு சேர்ந்து என்னலுமொன்று சூரிய வெப்பம் உள்ளே நுழை தற்கிடமின்றி இலைகளடர்ந்திருத்தலின் 'பனிதரு படிவம்' என்றார் இனி, விசே டமாக ஜன சஞ்சாரமின்மைபற்றியும் அரக்கர் வசிக்கின்ற இடத்திற்குச் சமீப மாக இருக்கின்றதுபற்றியும், ஏனையோர் வசித்தற்கு அச்சத்தைத் தருகின்ற பஞ் சவடியென்னலுமாம் பனிதரு என்பதனால் ஸ்ரீராமபிரான் பஞ்சவடி தீரத்தை யடைந்தகாலம் பனிக்காலம் என முதனூலாகிய வான்மீகத்திற் கூறிய விடயம் குறிப்பிக்கப்பட்டது "பாவஜஞ்ஞ கிருதஜஞ்ஞ தாமஜஞ்ஞ சலக்ஷ்மண|| தவயா புத்யேண தாமாத்மா ஸமவிாதத பிதாமா||" என் எம்பெருமான் மனமுவந்து பாராட்டுமெப்படியாய நியமன மில்லாதிருக்கவேயும் பெருமானும் பிராட்டியும் ஏகாந் தமாயிருக்கத்தக்க இடத்தையு மமைப்பித்தார் என முதனூலுட் கூறிய விசேதாந் தத்தை 'இனிய பூஞ்சாலை'யென்று கூறிப் பெறவைத்தார். (எ)

வேறு

நீலமா மணிநிற நிருதர் வேந்தனை
மூலநா சம்பெற முடிக்கு மொய்ம்பினாள்
மேலைநா ளுயிரொடும் பிறந்து தானவிளை
காலமோர்ந் துடனுறை கடிய நோயனாள்

இ - ள். மேலைநாள் - ஆதியில், உயிரொடும் பிறந்து - உயிரோடு உற்பவி த்து [உடலில் உயிர் தோன்றிய காலத்தில் தானுந்தோன்றி], தானவிளைகாலம் ஓர் ந்து - தான் (கெடுதியைச் செய்வதற்கு) விருத்தியாகின்றகாலத்தை அறிந்து, உடன் உறை - (உடலில் உயிர்) உடனே வசிக்கின்ற, கடியநோய் அனாள் - கொடியவியா தியையொத்தவளாகி, நீலம் அம் மணி நிறம் -நீலநிறத்தினையுடையதாகிய மரகதமெ ன்னும் இரத்தினம் போலும் நிறத்தினையுடைய, நிருதர்வேந்தனை - அரக்கர்களுக்கு அரசனாகிய இராவணனை மூலம் நாசம் பெற-அடியோடு அழியும்படி, முடிக்கும் - அழிக்கும், மொய்ம்பினாள் - வலிமையையுடையாளும்.

குறிப்பு — நாசம் - தொழிற்பெயர், நசி - பகுதி, வாசம், பாடம் என்பனபோல் விகாரம் பெற்றுவந்தது இவ்வரக்கி இராவணனுடன் பிறந்து வளர்ந்தும் அவன் மடிவதற்கு இவளே காரணமாக ஏற்படுகின்றாளாகலின் இவளுக்கு உயிருடன் பிறந்து உடன் உறை கடியநோயை உவமை கூறினார் "உடன்பிறந்தார் சுற்ற த்தாரென்றிருக்க வேண்டா, முடன்பிறந்தே கொல்லும் வியாதி" என்றார் பிறரும் மேலை என்பதில் 'ஐ' சாரியை. உயிரொடும் பிறந்த நோய் - கன்மநோய் மூலம் மூலபிலத்தையுங் குறிப்பி னுணர்ந்துமாற்றிக. (அ)

செம்பரா கம்படச் செறிந்த கூந்தலாள்
வெம்பரா குத்தனி விளைந்த மெய்யினாள்
ளும்பரா னவாக்குமோண் டவாக்கு மோதநீ
ரிம்பரா னவாக்குமோ ரிறுதி யீட்டுவாள்.

இ - ள். செம்பு அராகம்பட - செம்பினது செந்நிறம் பொருந்திய, செறிந்த- [illegible], கூந்தலாள் - கூந்தலையுடையாளும், வெம்பு அராகு - சினங்கொண்ட

ராகு வென்னுங் கருமபாம்பையொத்து, தனிவிளைந்த மெய்யின்... டாய வுடலினையுடையாளும, உமபா ஆனவாகளும - தேவலோகத்திலுள்ளவர்க்கும, ஒா தவாகளும -ஒளிய தவததினையுடைய முனிவாகட்கும், ஒதம ... ஆனவாகளும - கடலசூழந்த இவ்வுலகததிலுள்ளவாகளுககும, ஒா இறுதி ... ள - ஒருமுடிவைத தேடுவாளும

குறிபபு—அராகம - சிவபபு, "முடுகியல் செந்திறம் பாலை யாழததிற - மாதுககு தககராக மராகம" எனபது பிங்கலந்தை இனி, செம+பராகம் எனக கணணழிதது, சிவந்த மகரநதம எனபபொருள கூறுவாருமுளா அராகு - அராகமென்பதுபோல வநதது. இது கரியநிறமும கொடிய செயலு முடைமைககு உவமை; தலை மாததிரமேயுள்ள அராகுவா லுள்தாநதிவகு இறபபப பெரிதெனனுங கருத்தானிவவாறு கூறினா இறுதி - தொழிறபெயா. அமரரெனறிருப பாாகளும, கூறறங குதிததலுங கைகூடுமெனறிருபபாாகளும காயசிததி யடைநதிருபபாாகளும இறுதி யீட்டுவாள எனவே சூாபபநகையின வனமை கூறினா இனி, இராவணாதி இராக்ஷஸ கணங்களால மிகக கஷ்டததை யனுபவிககும தேவருககும, தணடகாரணிய வாசிகளாகிய மகருஷிகளுககும, மறறுமுள்ள நிலவுலகத்தாாககும அககஷ்ட நிவிா ததியுண்டாமபடியான வழிதேடுவாள எனனலுமாம. (௯)

வெய்யதோா காரண முணமை மேவினள
வயகலுந தமியளவ வனததுவ வைகுவா
ளெய்தினிவ வுலகெலா நுழைபு நோனமைய
ளெய்தின ளிராகவ னிருந்த சூழல்வாய

இ - ள வெய்யது ஒா காரணம உணமை - (பினனிகழும) தீயகாரியததிறகெலலாம ஒா காரணமாயிருததலை, மேவினள - பொருநதினவளும, வயகலும - நாளும, தமியள- ஒனறியாய, அவ வனதது வைகுவாள - அநதவனத்தில வசிபபவளும, எய்தின - சீககிரததில, இ உலகு எலாம - இநதவுலகமெலலாம, நுழைபும - புகுகினற [புகுநது சுறறிவரததகக], நோனமையள - வலிமையையுடையவளுமாகிய சூாபபநகை, இராகவன இருநத சூழல வாய - ஸ்ரீராம பிரானிருநத இடத்திறகு, எயதினள - (போயச) சோநதாள.

குறிபபு —முதலடிக்குத தீங்கு தேடுங்காரணமாக முனனையூழை யடைநதுளளாள் எனறலு மொனறு - இவள ஊழானே பிறாககுந தனககுந தீங்குதேடுந்தகைமைநதாள எனபது கருதது - ஈணடு, உணமை - ஊழ, "உணமையறிவே மிகும" எனபுழிபபோல, உணமை - ஊழ எனபதை, ஊழெனனும அதிகாரமுகததுப பரிமேலழகருரைதத வாறறானுமுணாக இனி, சூாபபநகைதன மகனிறநத கொடிய காரணததின மெயமமையையறிய விருமபினவளாய அவவனததில வசிககினறுளெனறு பொருள கூறுவாருமுளா. வயகல - போலி நொயதின -இலேசாகவெனறலுமாம இராகவன -ரகுவமஙிசததிறபிறநதவன; தததிதாநதம். வாய -ஏழனுருபு (௧௦)

எணடகு மிமையவ ரரகக ரெங்கண்மேல
விணடனா விலககுதி யெனன மேலோா

அண்டசத் தருந்துயி றுறந்த வையனைக்
கண்டனள் டன்கிளைக் கிறுதி காட்டுவாள்.

இ - ள். தன் கிளைக்கு - தனது சுற்றத்தார்களுக்கு, இறுதிகாட்டுவாள் - முடிவைக் காட்டுகின்ற சூர்ப்பநகை, மேலைநாள் - ஆதிகாலத்தில், எண் தகும் இமையவர் - மதிக்கத்தக்க தேவர்கள், அரக்கர் - இராக்ஷதர்கள், எங்கள்மேல் - எங்கள் மீது, விண்டனர் - பகைகொண்டார்கள், விலக்குதி என்ன - (அவர்களால் எங்களுக்கு நேரிடும் துன்பத்தை) விலக்கியருள்வாயென்று வேண்ட, அண்டசத்து - சேஷசயனத்தினின்றும் அரு துயில் துறந்த - அரிய நித்திரையை யொழித்து ஸ்ரீராமபிரானாகத் திருவவதரித்தருளிய, ஐயனை - ஸ்ரீமந்நாராயணனை, கண்டனள் - பார்த்தாள்.

குறிப்பு—விண்டனர், விள் - பகுதி. விள்ளல் - வேறுபடுதல். அண்டஜம் - முட்டையிற் பிறப்பதெனபது பொருள். இங்குச் சிறப்புவகையால் ஆதிசேஷனென்னும் பாம்பை யுணர்த்திற்று. யோகநித்திரையாதலால், 'அருந்துயில்' என்றார், இது அறிதுயிலெனவும், பொய்த்துயிலெனவும் சொல்லப்படும். ஐயன் - சுவாமி, அழகனுமாம். கிளை - உவமவாகுபெயர். (௪௧)

சிந்தையி னுறைபவற் குருவந் தீர்ந்ததா
லிந்திரற் காயிர நயன மீசற்கு
முந்திய மலர்க்கணோ ரூன்று நான்குதோ
ளுந்தியி னுலகளித் தாற்கென் றுன்னுவாள்

இ - ள் (அச்சூர்ப்பநகை), சிந்தையின் உறைபவற்கு - மன்மதனுக்கு, உருவம் தீர்ந்தது - வடிவம் (சிவபிரானது நெற்றிக் கண்ணால் வெளிப்பட்டு) ஒழிந்தது; இந்திரற்கு ஆயிரம் நயனம் - தேவேந்திரனுக்கு ஆயிரங் கண்கள் (உண்டு), ஈசற்கு - சிவபிரானுக்கு, முந்திய - முற்பட்ட, மலர் கண் ஓர் மூன்று - மலர்போலும் கண்கள் மூன்று (உண்டு), உந்தியின் - (தனது) திருவுந்திக் கமலத்தினின்றும், உலகு - எல்லா வுலகங்களையும், அளித்தாற்கு - அளித்த நாராயணனுக்கு, நான்கு தோள் - சதுர் புஜங்கள் (உண்டு), என்று - என்றுகூறி, உன்னுவாள் - (பின்னை இப்புருடோத்தமன் யாவன் என) ஆலோசிப்பாளாயினாள்.

குறிப்பு—ஸ்திரீ புருஷர்களுடைய மனத்தின் கண்ணே நிகழ்தலாய காமவேட்கை யெழுச்சிக்குக் காமனே காரணகர்த்தாவாக விருத்தல்பற்றி, 'சிந்தையி னுறைபவன்' என்றாள். இதுபற்றியே மன்மதனுக்குச் சித்தசன், மனோசன், மனோபு, மனோத்பவன் என்னும் பெயர்கள் வாய்ந்தன. சோம சூரியாக்கினிகள் சிவபிரானது கண்களென்று சொல்லப்படுங் காரணம்பற்றி 'முந்தியகண்' என்றார். திருமால் தனது உந்தியினின்றுந் தோன்றிய நான்முகக் கடவுளைக்கொண்டு உலகைப் படைப்பித்தாராயினும், அப்படைப்புத் தொழிலும் அவனதே யெனக்குறிப்பித்தற்கு 'உந்தியி னுலகளித்தாற்கு' என்றாள். 'உலகமெலா முந்தியீன்றுக மண்டத்த வொருமுதலே' என்றார் பிறரும். - கட்டவிழ்ந்த தாமரை மலருக்

லயிற் குவிதலுண்மையால் தாமரை நிகராவதில்லை) கதி
மெனில் - கிரணங்களோடு கூடியசந்திரனே தான் தக்கவுவமையாமெனின்,
கலைகள் தேயும் - கலைகுறைந்து தேய்தலையடையும்; அம் மதியெனின் - (அது

றறவ மியற்றியவ வாஙக னலலுருப
பெற்றன ளுமெனப பெயாதது மெணணுவாள.

இ - ள. கறறை அம சடையவன - திரளான அழகிய சடாபாரததையுடைய சிவபிரான, கணணில - (தன) நெறறிககணணினால, காயதலால - எரிததலால, இறறவன - (உடல) இழநதவனாகிய, அ அநஙகன - அநதமனமதன, அனறு தொடடு இன்று காறும - (உடலிழநத) அநநாண முதலிநநாளவரையிலும, நல தவம இயறறி - நலலதவததைசசெயது, நல உரு பெறறனன ஆம என - (இநத) நலலுருவததையடைநதான போலும் எனறு, பெயாததும - மீணடும, எணணுவாள - (அவள) ஆலோசிப்பாளாயினள.

குறிபபு — யோசததமாநத பரமசிவன எனபாள 'கறறையஞசடையவன' எனறாள அம - நீரெனக கஙகை தஙகியசடையுமாம சடை - ஜடா எனனும வடமொழிததிரிபு, ஆகாரம ஐகாரமாயிறறு இறறவன, இறு - பகுதி - ஸ்ரீராமபிரானுடையவடிவம மனமதன வடிவினும அழகுடைதது எனபாள 'நறறவம' எனவும, 'நலலுரு' எனவுஙகூறினாள ஐமபுலனவிதத அருநதவரும இவனகாடு புககஞானறு இவனபடிவததின விழைநதமை நோககியனறே 'இராமன' எனறார. முனிவர் விழைநதமையை இவவாசிரியரும கோசிகா கூறறாக "ஆடவா பெணமையை யவாவுந தோளினாய எனபா "கணடாரையழகாற றுவககுணணவலலான" எனறார பெரியாரும அநஙகன - அஙகமிலலாதவன (கரு)

தரஙகளி னமைநதுதாழந தழகின சாபின
மரஙகளு நிகாககில மலையும புலலிய
வுரஙகளி னுயாதிசை யோமபு மானையின
கரஙகளே யிவனமணிக கரமெனற றுனனுவாள

இ - ள தரஙகளின அமைநது - உவமையோடு பொருநதி, தாழநது - (முழநதாளளவும) தாழதலடைநது, அழகின சாபின - அழகிறகெலலாம இருபபிடமாயுளள இவன கரஙகடகு, மரஙகளும - (கறபக முதலாகிய) மரஙகளும, மலையும - (மேரு முதலாகிய) மலைகளும, புலலிய - தாழநதன (ஆதலின), நிகாககில - இணையாகமாடடா, (ஆகையால), உரஙகளின - வலிமையோடு, உயா - உயாநதிருககினற, திசை ஓமபும - திககுககளைக காவலசெயகினற, ஆனையின கரஙகளே - யானைகளின துதிககைகளே, இவன மணி கரம எனறு உனனுவாள - இவனது அழகிய கரஙகளெனறு நினைபபாள.

குறிபபு — கரஙக ளொனறுககொனறு உவமையாய உவமையிரணடாதலின தரஙகளெனப பனமையாற கூறினா முழஙகாலளவுந தாழநத கரஙகளெனவே, ஆசானுவாகு எனறதாயிறறு "உயாநததன மேறறே யுளளுங காலை" எனனுந தோல்காப்பிய வுவமவியற சூததிர விதிபபறறிக கறபகமும மேருவுநகொண்டாம. இவைபோனற அளவில மரஙகளையும மலைகளையும மறறவறறையும பரிககும பேருலகைத தாஙகும பொதுமைபறறி யானையின கரஙகளெனறனா. (கச)

மாம இராகவன -

- - ன் வீரத தோளொடு
எணடகு மிமையவ ரரகக ரெங்கணமேல
விணடனா விலககுதி யெனன மேலோா

குறிப்பு — கடப்பதற்கரிய மலையையுவமை கூறவே இவன் புயங்களையும் வெல்லுதலருமை குறிப்பிக்கப்பட்டது. துப்பு - பவளம், உமிழ்வனவுமாம். இதழுக்குச் சிறந்த உவமையாகக் கூறப்படுந் துப்பு என்பது உமிழ்வனனும் மற்றோரிழிந்த பெயரையும் பெற்றிருத்தலான் அது உவமையாதற் பாற்றன்றாயின் மற்றையாதை உவமை கூறுவேன் என்பது ஏற்றடியாற் போதருங் கருத்து. இனி, மாக குன்று - கரியமலையுமாம். உள்ளமே துப்பெனின் என ஆற்றொழுக்கிலேயே கொண்டு என மனமே துப்பென இதழ்க்கு நாரகருமாயின என்பொருள் கூறலுமமையும். ஒரு அம்சத்திலேனும் பவளம் இதழுக்கு நிகராகாதென்பாள் 'ஓர் துப்பு' என்றாள்.

நற்கலை மதியுற வயங்கு நம்பிதன்
னெற்கலை திருவரை யெய்தி யேமுற
வற்கலை நோற்றன மாசி லாமணிப்
பொற்கலை நோற்றில போலு மாலென்றாள்

இ - ள். நல் கலை மதி உற - நல்ல கலைகளோடு கூடிய சந்திரனையொப்பாக, வயங்கும் - விளங்குகின்ற, நம்பிதன் - இப்புருடோத்தமனது, எல் கலை - இருளை விலக்குகின்ற, திரு அரை - சிறப்புப்பொருந்திய இடையினைக்கண்ணே, எய்தி - அடைந்து, ஏம் உற - இன்பம் அடையும்படி, வற்கலை - மரவுரி, நோற்றன - செய்த தவங்களை, மாசு இலா - குற்றமில்லாத, மணி - அழகிய, பொன்கலை - பீதாம்பரம், நோற்றில போலும் - செய்யவில்லைபோலும், என்றாள் - என்று சொன்னாள்.

குறிப்பு — தேய்வோடு களங்கமின்மைவிளங்க 'நல்' என்றாள். நல்லசாஸ்திர விசாரணைசெய்த அறிவுடையவர்க்கு நம்பியென்றலுமாம். கலை - சந்திரன்பங்கு, கலையரை - வினைத்தொகை. "திருவென்ப கமலை செல்வம் சிறப்பொடு முப்பேர்" என்பவாகலின், கண்டுதிருவைச்சிறப்பென்றாம். அரை - எண்ணலளவைப்பெயராயாகையின் ஈறுபாதிற்காரணையின் ஆகுபெயர். ஏமம் என்னும் உடன்மொழிச் சுருணப்பெயர் ஈறுபோய 'ஏம்' என்றிருந்தது. வற்கலை - வன்மையாகிய கலையென்பாரை இது வடசொல்லென்று கூறிமறுக்க. (உஉ)

தொடையமை நெடுமழைத் தொங்க லாமெனக்
கடைகுழன் றிடைநெறி கரிய குஞ்சியைச்
சடையெனப் புனைந்தில னென்னிற் றையலா
ருடையுயிர் யாவையு முடையு மாலென்றாள்

இ - ள். தொடை அமை - தொடுத்தலமைந்த, நெடுமழை - நீண்டமேகத்தினது, தொங்கல் ஆம் என - வரிசையாமென்னும்படி, (தொங்குதலுற்று) கடைகுழன்று - கடைப்பாகத்திற் சுருண்டு, இடைநெறி - மத்தியிலடர்த்தியுற்ற, கரியகுஞ்சியை - கருமைநிறங்கொண்ட குடுமியை, சடை என - சடையென்னும்படி, புனைந்திலன் என்னில் - அணியானாயின், தையலார் - பெண்களினுடைய, உடை - ஆடையும், உயிர் - உயிரும், யாவையும் - (அவர்க்குரியமற்றை) எவையும், உடையும் - நிலைகெட்டுப்போம், என்றாள் - என்று சொன்னாள்.

குறிப்பு — தொடை - தொடுக்கப்படுவது, "நீண்டு குழன்று நெய்த்திருண்டு நெரிந்து செறிந்து நெடுநீலம், பூண்டு புரிந்து சரிந்துகடை சுருண்டு புகையு நறும்பூவும், வேண்டு மல்ல வென்றுதெய்வ வெறியே கமழு நறுங்குஞ்சி, யீண்டு சடையா

யினதென்றுன மழையென றுரைத்த விழிபனரே" எனனுந் திருவிருத்தத்தை யீணடெடுப்பிடுக. உடை - உடுக்கப்படுவதெனச் செயப்படுபொருள் விகுதிபுணர்ந்த பெயர், உடு - பகுதி, யாக்கையுடெனறதனால் - உயிரினுஞ்சிறந்தனவாகிய நாணுங்கற்புங்கொள்க. உயிரினுமிவை சிறந்தவாதலை "உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ், செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" - என்னுந் தொல்காப்பியக் களவியற் சூத்திரத்தானுணர்க. (உக)

நாறிய நகையணி நல்ல புலவினு
லேறிய செவ்வி யியற்று மோவெனு
மாறகன் முழுமணிக் காசின் மாட்சித்தன்
வேறொரு மணியினால் விளங்கு மோவெனபாள்

இ - ள், நாறிய - மணமவீச, நகை அணி - நகைக்கின்றமாலையும் (முல்லைமாலையையும்), நல்ல (நகையணி) - (நகைக்கின்றமாலையாகிய) நல்லமுத்துவடத்தையும், புலவினால் - (இப்புருடோத்தமன்) அணிந்துகொண்டால், ஏறிய - (இவவழகைக்காட்டினும்) அதிகமான, செவ்வி - அழகை, இயற்றுமோ - செய்யுமோ? [செய்யாது], எனு - என்று சொல்லி, (பின்பு) மாறு அகல - (மாறுபாட்டைப்போலப்) பிறிதொன்றிலலாத [இணையிலலாத], முழுமணிக்கு ஆசின் மாட்சி - குறைவுபடாத சிறந்த மாணிக்கத்தினது (இயற்கைப்) பெருமையானது, வேறு ஒருமணியினால் - மற்றொரு இரத்தினத்தினால், விளங்குமோ - (அதிக அழகினையுடையதாகக்) காணப்படுமோ? [காணப்படாது], என்பாள் - என்று சொல்லுவாள்

குறிப்பு. — நாறிய-செய்யியவெனனும் வினையெச்சம், இது 'புலவினால்' எனனும் வினைகொண்டு முடிந்தது நகையணி-சிரிக்கின்றமாலையாகவே முல்லைமாலை, முத்துவடமென்று கூறினும்- நகையணியென்பது இடைநிலைத்தீவகமாக நின்றவினை நல்லவென்ப தொடுக்கப்பட்டது "காமவென்றிக்கு வென்னைகொண் மாயனே" என்புழி நகை - முத்துவடமென்றார் ஆசிரியர் நச்சினார்க்கினியரும் மேனியின் கருமைக்கேற்ப வெண்மையணிக ளிம்த லழகுடைத் தென்பாராயினும், இப்புருடோத்தமனது இயற்கையழகு திருந்து ளதிருமேனிக்குமுன் அவைசிறவாவென பாளிருனென கூறினளெனக் இனி நாறியநல்ல அணிநகைபுலவினாலெனக் கொண்டு வாசனைவீசுகின்ற மாலையையும் நல்ல ஆபரணங்களையும் அணிந்துகொண்டாலென பொருள் கோடலுமொன்று செவ்வியின், இன - தவிரவழிசந்தசாரியை. இனி அதனை ஐந்தனுருபு எல்லைப்பொருளாகக்கொண்டு ஏறிய இவ்வழகைக்காட்டினும் (அழகைச்) செய்யுமோ எனக்கூறலுமியையும் மாறல மணி - விலையிலலாத மணியுமாம். (உச)

காந்தில னிலக்கண மெடுத்துக் காட்டிய
பாந்தரு நானமுகன படைப்புற றுனமோ
விரந்திவ னிணையடிப் பொடியு மேறகிலாப
புரந்தர னுலகெலாம் புரக்கின றுனெனருள்.

இ - ள் காந்திலன - (சிறிதும்) ஒளியாதவனுடைய, இலக்கணம் - சாமுத்திரிகாலக்ஷணமனைத்தும், எடுத்து காட்டிய - (உலகத்தாருக்கு) எடுத்துக்காட்டும்பொருட்டாக, பரம் தரு - (இவனுக்குச்) சரீரத்தைத்தந்த, நானமுகம் - நானகுமுகங்களையு

டைய பிரமதேவன், பழிப்பு உற்றான் - நிந்திக்கப்பட்டவனானான்; இவன் இணையடி - இப்புருடோத்தமனது இரண்டு பாதங்களினின்று உதிர்ந்த, பொடியும் - தூளியையேனும், இரந்து ஏற்கிலா - யாசித்துப் பெற்றுக்கொள்ளாத, புரந்தரன் - இந்திரன், உலகு எலாம் - உலகமுழுவதையும், புரக்கின்றான் - ஆளுகைசெய்கின்றான் என்றாள் - என்று நினைத்தாள்.

கருத்து —சகலலக்ஷணமும் பொருந்தும்படி இப்புருடோத்தமனுக்கு உடலையளித்த பிரமதேவன், இவன்பாததூளிக்கும் நிகராகாத இந்திரனுக்குச் செல்வத்தைக் கொடுத்து இவனுக்குச் செல்வங்கொடாமற் போயினனாதலின் அவன் அபகீர்த்திக்கு ஆளானான் என்பதாம். (உரு)

நீத்தமும் பரவையுங் குறுக நெஞ்சிடைக்
கோத்தவன் புணர்விடைக் குளிப்ப மீக்கொள
வேத்தவம் புரியவொன் றீக லான்பொருள்
காத்தவன் புகழெனத் தேயுங் கற்பினாள்

இ - ள். நீத்தமும் - வெள்ளமும், பரவையும் - கடலும், குறுக - சிறியனவாக, நெஞ்சிடைக்கோத்த - மனத்திற்பதிந்த, அன்பு - (ஸ்ரீராமபிரான் மீதுகொண்ட) பிரியமானது, உணர்வு - அறிவு, இடை குளிப்ப - தன்னுள் முழுகிப்போம்படி, மீ கொள - மேற்கொண்டுவிட்டதனால், எத்து அவம் புரிய - (ஏழைகள்) எத்தாற் கேடுசெய்ய, ஒன்று (உம்) - ஒருபொருளையும், ஈகலான் - கொடாதவனுடைய, பொருள் காத்தவன் - திரவியத்தைக்காத்திருப்பவனது, புகழ் என - கீர்த்தியைப் போல, தேயும் - அழிகின்ற, கற்பினாள் - கற்பினையுடையவளும்.

குறிப்பு —குளிப்ப மீக்கொள என்றுஞ்செயவெனெச்சங்கள் முறையே காரியகாரணப் பொருளில் வந்தன. எத்து - முதனிலைத்தொழிற்பெயர். அவம் - கேடு, “அவஞ்செய்வா ராசையுட் பட்டு” என்புழி அவம் - கேடு என்றார் பரிமேலழகரும். இல்லாப்பழிச்சலில் வைதலே யன்றதலாற் பிறரைச் சுற்றக் கேடிழைத்தலாயிற்று. ஒன்றும் என்பதில் உம்மை விகாரத்தாற் றொக்கது -இனி, எத்தவம் புரியவொன் றீகலான் என்பதற்கு, (இரப்பார்) பெருக்கமான தவம் புரியவும் ஒன்றும் ஈகலான் எனினுமமையும், ஏண்டு ஏ என்னும் உரிச்சொல் பெருக்கமென்னுங் குறிப்பினையுணர்த்தும் “ஏகலடுக்கம்” என்புழிப்போல் “ஏஎ யேபெற்றாகும்” என்பதனுரையாலுணர்க, [தொல்காப்பியம் சொல்லதிகாரம் உரியியல்] புரியவும் என்புழி உம்மை விகாரத்தாற்றொக்கது இனி “எத்தவும் புரியவொன்றீகலான்” என்ற பாடபேதத்திற்கேற்ப இரப்போர் தங்கள் வாழ்க்கைக்காகத் துதிப்பவும் அவற்றை மனங்கொள்ளாது, விரும்புமாறு ஒன்றையுந் தாராதானுடைய என்பொருள் கூறலுஞ் சாலும். (உசு)

வான்றனில் வரைந்ததோர் மாத ரோவியம்
போன்றனள் புலர்ந்தனள் புழுங்கு நெஞ்சின
டோன்றல சுடாமணித் தோளி னுடங்க
ரூன்றினள் பரிக்கவோ ரூற்றம் பெற்றிலள்.

இ - ள். புலர்ந்தனள் - வாட்டங்கொண்டவளும், புழுங்குநெஞ்சினள் - (காமாக்கினியால்) கொதிக்கின்ற மனமுடையவளும், தோன்றல - காணக்கிடையாதன

வாகிய, சுடர்மணி - பிரகாசம்பொருந்திய மரகதமணியின் நிறத்தினையுடைய, தோளில் - ஸ்ரீராமபிரானுடைய திருத்தோள்களில், கட்டங்கள் ஊன்றினள் - தனது பார்வையை நிலைநிறுத்தினவளும், பறிக்க - (அங்ஙனம் நிலைநிறுத்தியபார்வையை அத்தோளினின்றும்) பெயர்த்தெடுக்க, ஓர் ஊற்றம் பெற்றிலள் - ஒருவன்மையி லலாதவளுமாகிய சூர்ப்பநகை, வான் தனில் - ஆகாயத்தில், வரைந்தது - எழுதப்பட்டதாகிய, ஓர் - ஒரு, மாதர் ஓவியம் போன்றனள் - பெண்சித்திரம்போல அசைவற்று நின்றாள்.

குறிப்பு கண்ணிமைத்தலுமின்றிப் பார்த்துக்கொண்டு சலியாது நின்றமையால் ஓவியத்தையுவமை கூறினார் 'மாதர் ஓவியம்' என்பதற்கு அழகுவாய்ந்துள்ள சித்திரம் என்பொருள் காண்டலுங் கூடுமாயினுமஃது சண்டைக்கேலாமையறிக. மாதரென்னுஞ்சொல்லுக்கு அப்பொருளே சிறந்ததமேனும் ஈண்டுப்பெண் என்னு மளவே குறித்துவந்ததென்க காமம் கைமிகுந்திளைத்தலால் 'புலர்ந்தனள்' என்றார். போல என்னும் உருவினுவமச்சொல் செயலுவமத்திற்கு வந்தது. இடைச்சொல்லாய மரீஇவந்த வினைப்பார பட்டதாயக்காரணம் கூறப்படாத 'போலும்' என்னு முவமச்சொல் அன்னவென்பதுபோல மற்றை மூன்றுவமத்தும் பயின்றுவருமென்பதை எய்து விச்சற பொருட்டன்றே பொருளுடையவற்றையும் பின்னிறுத்தி "போல மறுப்ப வொப்ப" என்சூத்திரஞ்செய்தாரென்பர். தோன்றல் - பலவின்பாலவினையாலணையும் பெயர் "தோன்றற்ற" என்பது பாடம். ஊற்றம் முயற்சியுமாம் (உஎ)

நின்றன ளிருந்தவ னெடிய மார்பகம்
ஒன்றுவெ னன்றெனி னமுத முண்கினும்
பொன்றுவென் போகநீ னியரிது போவென்று
சென்றெதிர் நிற்பதோர் செயலை தேடுவாள்

இ - ள் நின்றனள் - (அவ்வாறு சித்திரம்போல) நின்றசூர்ப்பநகை, இருந்தவன் - ஆங்கிருந்த ஸ்ரீராமபிரானது, நெடியமார்பகம் - விசாலமானமார்பை, ஒன்றுவென் - அணைவேன், அன்றெனின் - அல்லவென்றால், அமுதம் உண்கினும் பொன்றுவென் - அமுதத்தைச்சாப்பிட்டாலும் இறந்துபோவேன், இனி போகது - இனி (தீருமபிய) போதல், அரிது போவெனு - முடியாது போலும் என்றுசொல்லி, சென்று - நடந்துபோய், எதிர் நிற்பது - (ஸ்ரீராமபிரானுக்கு) முன்னேநிற்பதாகிய, ஓர் செயலைத்தேடுவாள் - ஒருசெயலை ஆராய்வாளாயினாள்

குறிப்பு —இருந்தவன் என்பபெரியதவசத்தினையுடையான் என்றலுமாம் அமுதம் - மரணத்தை யொழிப்பதெனக் காரணம் பற்றியபெயர் சாவாமருந்தென்பதும் அது பொன்றும் - மகரக்குறுக்கம் ஸ்ரீராமபிரானுடைய ஆலிங்கனம் இடையாவிடில் அமுதமுண்டாலும் பொன்றுவென் என்று ஸ்ரீராமபிரானுடைய ஆலிங்கனத்திற்குச் சமானமாகிய அமிர்தத்திற்குக் குறைகூறினமையால் இதுவியதிரேகாலங்காரத்தொனி ஸ்ரீராம பிரானுடைய எதிர்நின்றிடற்கும் இவளுக்குகூடாதென்பதையேயறிச் சேருந்திறன் மனத்தாலுஞ் சித்திக்கவில்லையென்பார் 'சென்றெதிர் நிற்பதோர் செயலைத்தேடுவாள்' என்றார் (உஅ)

எயிறுடை யரக்கியெவ் வுயிரு மிட்டதோர்
வயிறுடை யாளென மறுக்கு மாதலால்

குயிலொடா குதலையோா கொவவைச செவ்விவாய
மயிலொட ரியலியாய மருவ னனறெனு.

இ - ள எயிறுடை அரக்கி - (இவள) வக்கிரதந்தங்களையுடைய இராக்ஷஸி, எ உயிரும இட்டது - எந்தவுயிரையும் வைத்ததாகிய, ஓாவயிறுடையாள - பெரியவயிற்றினையுடையவள, என - என்று நினைத்து, மறுக்கும - மறுத்துவிடுவான, ஆதலால - ஆதலினால, குயில - குயிலகள, தொடா - (தம்மினமென்றுகருதித) தொடாந்துவரத்தக்க, குதலை - குதலைசசொறபயின்ற, ஓா கொவவைசசெவவியாய - ஒப்பற்ற கோவைக்கனியை யொத்த சிவந்தவாயினையுடைய, மயில தொடா இயலியாய - மயிலகள பின்தொடாந்து வரத்தக்கசாயலையுடையவளாகி, மருவல நன்று என்று - பொருந்துதல் நன்மையுடையது என்று நினைத்து

குறிப்பு — உடை - உடையவென்னும குறிப்புப்பெயரெச்சத்தில அகரம விகாரத்தாற்றொக்கது இட்டம கருதி எயிறுவக்கிரதந்தம என்றும "பிறழ்பல" என்ற தமிழிலவரும ஆகாரத்தில மாத்திரம்சுமையிலலாமல ஜீவஹிம்சையில தத்பரையாயிருந்து கொண்டு மகரிஷிகள முதல கடைப்பட்டபிராணிகள ஈறாகக்கொல்லு மவள என்பது 'எவவுயிரு மிட்டசோா வயிறுடையாள' என்பதன்கருத்து மறுக்கும என்பதனை மறுகும என்பதன பிறவினையாகக்கொண்டு மனக்கலக்கஞ்செய்வான என்பொருள கூறலுமொன்று இச்சூல் சாவஜீவதயாபரனாகிய ஸ்ரீராமபிரானுக்குத்தான முற்றுமொவவாதவளென்பதைத் தானே யறிந்தாள என்பதாம (உ௦)

பஙகயச செலவியை மனத்துப பாவியா
வங்கையி னுயமந திரத்தனை யாயந்தன
டிங்களிற சிறந்தொளி முகத்தள செவவியள
பொங்கொளி விசும்பிற பொலியத தோனறினள.

இ - ள. பங்கயம செலவியை - தாமரைமலரில வீற்றிருக்கின்ற இலக்குமி தேவியை, மனத்து - மனத்துக்குள்ளே, பாவியா - தியானித்து, அங்கையின ஆய - தன கைச்சபபட்டதாகிய [illegible], மந்திரத்தை—, ஆயந்தனள - தியானித்தாள. (உடனே) திங்களில சிறந்த ஒளி முகத்தினள - சந்திரனைக்காட்டிலும் மேன்மையுடையதாய் விளங்குகின்ற முகத்தையுடையவளும, செவவியள - அழகையுடையவளுமாகி, பொங்கு ஒளி - தன்னுடைய தேகத்தின மிகுந்தபிரகாசம, விசும்பினிற பொலிய - ஆகாயத்தில விளங்க, தோன்றினள - காணப்பட்டாள

குறிப்பு — இமவானில மரகதப்பாறையில பதுமையென்னும கயசதிறடாற்றிய பொற்றாமரையிற்றிருவென்பாா 'பங்கயச்செலவியை' என்றாா செலவி - செலவத்தைத்தருபவள மனத்து - இதில 'அத்து' சாரியை, "மஃகான புள்ளிமுன அத்தே சாரியை" என்பதனால எழுனுருபினக்கணசாரியைபெற்று "அத்தே வற்றே யாயிரு மொழிமேல ஒற்றுமெய்கெடுதல தெற்றென்றற்றே" என்பதனான்மகரங்கெட்டு "அத்தி னகர மகரமுனை யிலலை" என்பதனால அகரங்கெட்டு முடிந்தது. பாவியா பாவம என்னும வடசொல்லடியாகப்பிறந்து வந்த செய்யாவென்னும வாய்பாட்டு வினையெச்சம, இஃது ஆயந்தனள என்னும தன கருத்தாவின வினைகொண்டு முடிந்தது. அகம் கை - அங்கையென்றாயிற்று மந்திரம - வடசொல், இதற்கு நினைப்பவரைக் காப்பதென்பது அவயவப்பொருள. திங்களில, 'இல' ஐந்தாம வேற்றுமையெல்லைப்பொருளது. செவவியள என்பதற்குச செவவியமேனியையுடையவள என

ளுவது ஒத்த பருவத்தையுடையவளென்றுவது பின்னுமிருவரையாம் பொருள் கொள்ளவும் படும். செவ்வி - பருவமாதலை "செவ்வி யருமையும் பாரார்" என்பதனுலுமுணர்க. (கூ0)

**வேறு.**

பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவ மனுங்கச்
செஞ்செவிய கஞ்சநிமிர் சீறடிய ளாகி
யஞ்சொலிள மஞ்ஞையென வன்னமென மின்னும்
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்.

இ - ள். ஒளிர்பஞ்சி - சோதிமிகுகின்ற செம்பஞ்சும், குளிர்விஞ்சுபல்லவம் - குளிர்ச்சிமிகுந்த தளிர்களும், அனுங்க - (ஒப்பாகமாட்டாமையால்) வருந்த, செம் செவிய - சிவந்த, கஞ்சம் நிமிர் - தாமரையைப்போலுமுயர்ந்த, சீறடியள் ஆகி - சிறிய பாதங்களையுடையவளாகி, அஞ்சொல் - அழகியவார்த்தைகளைப்பேசும், இள மஞ்ஞையென - இளமைபொருந்திய மயிலைப்போலவும், அன்னமென - அன்னப் பேடையைப்போலவும் மின்னும் வஞ்சியென - விளங்குகின்ற கொடியைப்போல வும், நஞ்சமென - விஷத்தைப்போலவும், வஞ்சமகள் வந்தாள் - வஞ்சனைகொண்ட சூர்ப்பநகைவந்தாள்.

குறிப்பு — தாமரையைப்பேசச் செம்பஞ்சுக்கு எழிலின்மைபற்றியும், பல்லவத்திறகுச் செம்மையிருந்தியுமின்மைபற்றியும் அவை ஒவ்வாமையால் 'அனுங்க' என்றார். குளிர் - முதனிலைத் தொழிற்பெயர். பல்லவம் - வடசொல். தாமரை செம்பஞ்சைப்போலும் செம்மையும் பல்லவம்போலும் செவ்வியுமுடையதெனப் பு துவிளங்க 'செஞ்செவிய கஞ்சம்' என்றார். இனி, 'அனுங்க' என்பதற்குயுவமைவருந் பிடைச்சொல்லாகக்கொண்டு பஞ்சியும் பல்லவமுமொத்துநசுக்குஞ்சமம்போலு மடியை யுடையளாகி என்று கூறுதலுமொக்கும். இது "கயலொத்துக் குவளையொண்கண்ணாள்" என்பதுபோலவந்ததென்க. அஞ்சொல் அம்சொல் - இருபெயரொட்டு. இசசெய்யுள் மெலலின வண்ணத்தானவந்தது. மெல்லெழுத்துமிகுந்துவருவது மெல்லிசை வண்ணம், "மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே" என்றார் தொல்காப்பியனார். (கக)

பொன்னொழுகு பூவிலுறை பூவையெழில் பூவைப்
பின்னெழில்கொள் வாளிணை பிறழ்ந்தொளிர் முகத்தாள்
கன்னியெழில் கொண்டது கலைத்தட மணித்தேர்
மின்னிழிவ தன்மையிழி விண்ணிழிவ தென்ன

இ - ள். பொன்னொழுகு - அழகு ஒழுகுகின்ற, பூவில் உறை - தாமரைப்பூ வைபத்தில் வசிக்கின்ற, பூவையெழில் - இலக்குமிதேவியினது அழகையும், பூவைப் பின் - பூவைப்புள்ளினிடத்துள்ள, எழில் - அழகையும், கொள் - தன்னிடத்துக் கொண்ட, வாளிணை - இரண்டுவாளாகிய கண்கள், பிறழ்ந்து ஒளிர் முகத்தாள் - மா றுபட்டுவிளங்கும் முகத்தினையுடையாள், கன்னி எழில்கொண்டது - இளம்பெண் ணின்வடிவைக்கொண்டதாய், கலை - வஸ்திரத்தினையுடைய, தட மணி தேர் - பெரி யமணியணிந்ததேரொன்று, மின் இழிவது - மின்னிறங்குவது, அன்மை - அல் லாமல், விண் இழிவது - விண்ணின்றிறங்குவது, என்ன - கண்டார் சொல்லாநிற்ப.

குறிப்பு — அலகுலாகிய தேரிழியுமிடத்து முதற்கட்டோன்றுவது இடையேயாகலின் மின்னை முன்னரும் முடிவிற்றோன்றுவது கூந்தலாகலின் விண்ணைப்பின்னருங்கூறினார். இடையே சிறிதுகண்ணிறந்து புலனாதலானமின் என்றும் அச்சிறிதுந்தோன்றாது வெளிபோறலால் விண்ணென்றுங்கூறினரென்றலுமிழுக்காது. பின் - எழனுருபு. பூவையைப்பின்னிய எழில் எனினுமமையும். அதன்கண் அழகு - சொல்லினழகெனக் - குளகமாதலின் அடுத்துவருஞ்செய்யுளில் வந்தாளென்னும் வினைகொண்டது. (௫௨)

கானினுயர் கற்பக முயிர்த்தகதிர் வல்லி
மேனிநனி பெற்றுவிளை காமநெறி வாசத்
தேனின்மொழி யுற்றினிய செவ்விநனி பெற்றோர்
மானின்விழி பெற்றுமயில் வந்ததென வந்தாள்.

இ-ள். கானின் உயர் - வாசனையினாலுயர்ந்த, கற்பகம் - கற்பகவிருக்ஷம், உயிர்த்த - பெற்ற, கதிர்வல்லி - பிரகாசமுடைய கொடியினது, மேனி - வடிவத்தை, நனிபெற்று - மிகக்கொண்டு, விளை காமம் நெறி - உற்பத்தியாகும் காமவிச்சைக்குவழியாகிய, வாசம் தேனின் மொழியுற்று - வாசனையுள்ளதேன் போலும் சொற்களையடைந்து, இனிய செவ்விநனிபெற்று - கண்ணுக்கினிமையான அழகினை மிகக்கொண்டு, ஓர் மானின்விழிபெற்று - ஒப்பற்றமான் போலுங்கண்களையடைந்து, மயில்வந்தது - ஒருமயில்வந்ததென்னும்படி, வந்தாள் - வந்துசேர்ந்தாள்.

குறிப்பு — கான் - பூங்காவனமுமாம். கற்பகமுயிர்த்த கதிர்வல்லி-காமவல்லி, "கற்பகஞ் சேர்கொடி காமவல்லி" இது நிகண்டு. மேனி-நிறத்தினுக்கு ஆகுபெயர். விளைகாமம் - முற்றியகாமம் விளைதல் - முற்றுதல் செவ்வி - ஈண்டுமனோரதம், நடுவுநிலைமையுமாம் "செவ்வியான்கேடும்" என்றதிருக்குறளினும், "செவ்வியரல்லார்" என நாலடியாரிலும் பயின்றுவருதலால் செவ்வி நடுவுநிலைமையாதறெளிது. அழகுகூறவந்தவிடத்து நடுவுநிலைமையும் உடன்கூறியதென்றுகொள்ளின், குணமுழுதுமுள்ளவழியன்றே அவையுடையார்க்கு இவண்மாட்டுக் காமம் நிகழுமென்பது கருதிக்கொண்டது வெளிப்படுத்தற்கென்க. நடையானுவமைதோன்றுமாறுங் கருதி 'மயில்வந்ததென வந்தாள்' என்றார். "மயினமருணடைப்பூங்கொம்பே" எனவும் "நடைமயிலே" எனவும் நிரம்பிய இலக்கணத்தவாகிய சான்றோர்செய்யுட்களில் பயின்றுவருவதால் மயில் நடைக்குவமையாதலறிக. (௫௩)

நூபுரமு மேகலையு நூலுமற லோதிப்
பூமுரலும் வண்டுமிவை பூசலிடு மோசை
தாமுரைசெய் கின்றதொரு தையல்வரு மென்றுக்
கோமகனு மத்திசை குறித்தனன் விழித்தான்.

இ-ள். நூபுரமும் - சிலம்பும், மேகலையும் - அரைப்பட்டிகையும், நூலும் - ஆடையும், அறல் ஓதி - கருமணல்போலுங்கூந்தலிலணிந்த, பூ - புஷ்பத்தில், முரலும் - ஒலிசெய்கின்ற, வண்டும் இவை - வண்டுகளுமாகிய இவைகள், பூசல் இடும் - ஒன்றுடன் ஒன்றுதாக்கும், ஓசை - சப்தத்தினால், உரைசெய்கின்றது - பொருள் செய்யப்படுவதாகிய, ஒருதையல்வரும் என்று - ஒருபெண்வருகின்றாளென்று, கோமகனும் - ஸ்ரீராமபிரானும், அத்திசை - (ஓசைவரும்) அந்தத்திசையை, குறித்தனன் விழித்தான் - குறித்துப்பார்த்தான்.

குறிப்பு—நூபுரம, மேகலை - வடசொறகள மேகலை - பவளககோவை எட்டிஞறசெயதது. "எணகோவை மேகலை காஞசி யெழுகோவை - பணகொள கலாபம பதினறு - கணகொள, பருமம பதினெடடு முபபத திரணடு, விரிசிகை யெணணாற பாறறு - எனபதனுணாக - நூல - அதனலாய ஆடைககுககருவியாகு பெயா - இதுகணகூடுவரி, கணகூடாவது பரிசதரிசனம, அஃதாவது காடசி, அஃது ஒருவாகூடடவனறித தானே வநதுநிறகுநிலைமை, எனனை? "கணகூடாவது கருதுங காலை, இசைபப வாராது தானே வநது, தலைபபெயது நிறகுந தனமைதெனப" எனறாராகலின கோமகன - சககரவாததிதிருமகன, விலவலலானுமாம. பரமபதநாத னெனறுரைபபினுமிழுககாது குறிததனன விழிததான-முறறெசசஙகள.

விணணருள வநதெதாரு மெலலமுத மெனன
வணணமுலை கொணடிடை வணஙகவரு போழதத
தெணணருளி யேழைமை நடைநதெழுமெயஞ ஞானக்
கணணருளசெய கணணனிரு கணணினெதிர கணடான.

இ - ள ஒருமெல அமுதம -ஒருமெனமையான அமுதமெனபது, விண அருளவநதது என - ஆகாயநதர (பபுவிககு) வநதுதெனனுமபடி, வணணமுலை கொணடு - அழகியதனஙகளைககொணடு, (அதனல) இடைவணஙக - மருஙகுல வளைநதுவளுமபடி, வருபோழததது - (சூரபபநகை) வருமபொழுது, (அவளை), எண அருளி - எணணிளைததநது, எழைமைதுடைதது - (அதனல) அறிபாமையைநீககி, எழும-பினனுணடாகினற, மெய ஞானம கண - தததுவஞானமாகிய கணணினை, அருளசெய - கொடுததருளுகினற, கணணன - ஸ்ரீராமபிரான, இருகணணின - தனது உபயநேததிரஙகளாலும, கணடான - பாரததருளினன

குறிபபு,—இவள விணணினினறு மிழிநததனமை விணணுலகததுளள அமுதம வநததை யொபபாமெனறபடி காடசியின உயிாமயககுறுதலிற கொலலியறபாவை போனறள அவவாறு அழியுமுயிரையிமைபபிறறருதலின அமுததததையும போனறள எனபதாம வணணம- வாநம எனபதனறிரிபு. பொழுது - போழது என விகாரபபடடுவநதது - அதது சாரியை எண - கணிதம, அது கருவியும் செயகையுமென இருவகைபபடும அவை ஏரம்பமுதலிய நூலகளுடகாணக. எணணெனறதனல தனனேடொறறுமையுடையதாய இனறியமையாத எழுததுஙகொளக- இவை அறமுதற பொருளகளைக காணடறகுக கருவியாகலின அவறறையருளி எனறா. அவைகருவியாதல "ஆதி முதலொழிப வலலா தனவெணணி-னீதி வழுவா நிலைமையவான, மாதே - அறமாா பொருளினபம வீடெனறிவறறின - றிறமாமோ வெணணிறநதாற செபபு," "எழுததறியத தீரு மிழிதகைமை தீாநதான, மொழிததிறததின முடடறுபபா னாகு-மொழிதகிறததின, முடடறுதத நலலோன முதனனிற பொருளுணாநது, கடடறுததது வீடு பெறும" இவறருனறிக தேயமிடையிடடவறறையும காலமிடை யிடடவறறையும காணுதலின ஞானதைதககணணெனறா "எணணெனப வேனை யெழுததெனப விவவிரணடுங - கணணெனப வாழுமுயிாககு" எனனு மிவவருமைத திருககுறளையு மீணடு நோககுக. ஞகரமிரடடிததது "மிகலுமாம" எனறதனுல். கணணன - கிருஷணன எனனும வடமொழிததிரிபு, அடியாாகளது பாவஙகளையொழிபபவனெனபது பொருள. கருமைநிறமுடைமையிற கிருஷணனெனபாருமுளா - இனனும வேறு வேறு பொருளுஙகூறுவா, அவையெல்லாம் வடமொழிவலலாா வாயககேட்டுணாக. ஈணடுரைபபிறபெருகும. இ

தனால், தன்னடியார்கட்கு எண்ணின்வழி மெய்ஞ்ஞானத்தையளித்தருளும் அமலனு திபிரானுகிய எம்பெருமானை இவளது மெல்லமுதமாகிய பெண்டன்மைகண்டு பேதுற்றுப் பெருமைகுன்றுமென்பது நன்குகுறிப்பிக்கப்பட்டமையறிக. (கரு)

பெருமைய நாகருல கிற்பிறி தின்ன வானின்ன
பாருமைய் னில்லதொரு மெல்லுருவு பார்ரா
வாருமை யடங்குமழ கிறகவதி யுண்டோ
சேரிமையா யாவரிவர் மேரென நினைந்தான்

இ-ள். பெருமைய - அகன்ற இடத்தினையுடைய, நாகர் உலகில் - நாகலோகத்திலும், வானின் - தேவலோகத்திலும், பார்உமையின் - புவியினும், இல்லது-இல்லாததாகிய, ஒரு - ஒப்பற்ற, மெல் - மென்மையான, உருவு - (சூர்ப்பநகையின்புது) உருவத்தை, பாரா - பார்த்து, ஆர்உமை அடங்கும் - யாவரிடத்தடங்கும், அழகு இறகு - அழகினுக்கு, அவதி உண்டோ - எல்லையுண்டோ? [இல்லை], இவர்யோ - இவருக்கு நிகரானவர், சேர்மையாயாவர் என - மாதர்களில் எவர்களிருக்கின்றுரென்று, நினைந்தான் - எண்ணினன்.

குறிப்பு —பெருமையென்னும் பண்புகிரிந்தபோ எனநின்றது இதுவும் இதுபோன்ற அருமை - கருமை முதலிய பண்பின்றிப்புக்ஷமுயிர் முதன்மொழிகளோடேயே பெரும்பாலும் புணர்ந்துவருமெனக் உமைய குறிப்புபெயரெச்சம் வான - இருபெயர் பார - பருமையையுடையதென்ப பண்பாகுபெயர். பார்க்கப்படுவதென்னும் பொருளில் வந்ததெனப்பாருமுளர். பாரா இச்செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம் நினைந்தான் என்னும் தனக்குத்தாவின் வினைகொண்டது ஆர - யாவரென்பதன் மரூஉ இவளிடத்துள்ள இவ்வழகு பிறரிடத்துள்ள அழகில் அடங்குவதில்லை என்றபடி. "யாலத்துள்ளதூஉ மன்று" என்றிருத்தலுங்காண்க- "ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியு, மொன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும், வழக்கினாகிய வுயர்சொற்கிளவி, யிலக்கண மருங்கிற் சொல்லா றல்ல" எனவழுவமைத்ததனை 'இவர்' எனச்சுட்டினன் இதனால் ஸ்ரீராமன பரஸ்திரீயைக் கனவினுந்தீண்டானென்பது குறிப்பிக்கப்பட்டமை யறியக்கிடத்தல் காண்க. (கசு)

அவ்வயின் வாசைத னகத்துடைய வன்னுள்
செவ்விமுக முன்னியடி செங்கையி னிறைஞ்சர்
வெவ்விய நெடுங்கணயில் வீசியயல் பாரா
நவ்வியி னொதுங்கியிறை நாணியய னின்றுள்,

இ-ள் தன் அகத்து தன்மனத்தினகண்ணே, அ ஆசை உடைய - (ஸ்ரீராமபிரானைப்புலனுவான சொன்ன) அந்த ஆசையினையுடைய, அன்னுள் - அத்தகையளாகிய சூர்ப்பநகை, அவ்வயின் - அவ்விடத்தே, செவ்விமுகம் - (ஸ்ரீராமபிரானது) அழகிய முகத்தை, உன்னி - (மனத்தில்) நினைத்தவளாய், அடி - (அவனது) திருவடிகளை, செங்கையின் இறைஞ்சா - (தனது) சிவந்த கைகளினால் வணங்கி, நெடுங்கண் - நெடியகண்களாகிய, வெவ்விய அயில் வீசி - கொடியவேலை (ஸ்ரீராமபிரான் மேற்படியபடி சுழற்றி) எறிந்தும், [ஸ்ரீராமபிரானைக்காமத்தை விளைக்குங்கொடியபார்வையாற் பார்த்தும்], அயல்பாரா - (பின்னும் அவனைப்பாராதவள் போற) பக்கத்திற்பார்த்தும், இறைநாணி - சிறிதுவெட்கப்பட்டு, நவ்வியின் ஒதுங்கி - மானைப்போல ஒதுங்கியும், அயல் நின்றுள் - (அவன்) பக்கத்தே நின்றுள்.

குறிப்பு — அவ்வழின் - அப்பொழுது என்னுமாம் முகத்தைவேறிட்டு நோக்காமை விளங்க 'உன்னி' என்றார் செங்கையினிறைஞ்சல் குயபிடுதல். கண்ணயில்வீசி - விபரீதவுணமை பெருங்காமிகள் நாணிலராயினும் தம்மைமதிக்கற பொருட்டு மாயவிகளைதபுரிவாரெனபார் 'இறைநாணி' என்றார் நாணமாவது - காமக்குறிப்பு நிகழ்ந்தவழிப் படுவதோர் ஒடுக்கம் - இதுமடவார்க்குரியமுக் குணங்களிலொன்று - மற்றையிரண்டு அச்சமும் மடனும் பயிர்ப்பும், பேதைமையும், நிறையுங்கூறுவர் (கஎ)

தீதில்வர வாகதிரு நின்வரவு சேயோய
போதவுள தெம்முழையோர் புண்ணியம தன்றோ
வேதுபதி யேதுபெயர் யாவருற வென்றான்
வேதமுதல் பேதையவ டன்னிலை விரிப்பாள்.

இ - ள் வேதமுதல் - வேதத்தின் முதற்பொருளான ஸ்ரீராமபிரான், சேயோய - சேய்மையிலுள்ளவரே! திருநின்வரவு - சிறப்பினையுடைய நுமது வருகையானது, தீது இல்வரவு ஆக - நல்வரவாகக்கடவது, (நம்மைப்போலும் உயர்குலமடவார்), போத உளது-(எம்மை ஒருபொருட்டாய் நீ தேடி) வரநேர்ந்தது, எம் உழை ஓர் புண்ணியம் அது அன்றோ-எமமிடத்திலிருக்கிற ஒருபுண்ணியமதனாலல்லவா? ஏதுபதி - (நுமது) இருப்பிடம் யாது? ஏதுபெயர் - (நுமது) பெயர் யாது? யாவர் உறவு-(நுமது) பந்துக்கள் யாவர்? என்றான் - என்று வினவினான், (அவ்வினாக்கட்கு விடையாக), பேதை அவள் - அறிவிலியாகிய அசூர்ப்பநகை, தன் நிலை- தனது நிலைமையை, விரிப்பாள் - (பின்வருமாறு) விரித்துச்சொல்வாளாயினாள்.

குறிப்பு —சேய்மை - தூரம். விண்ணினின்றிறங்கினமையால் 'சேயோய்' என்றார் இனி, இளையவளே எனவும், செம்மையென்னும் பண்பின்றிரிபாகக்கொண்டு செவ்வியோயெனவுங் கூறலாம் வேதமுதல் - அன்மொழித்தொகை மாதாக்கணிகலமாகிய பேதைமையைக் குறித்தற்கிவள் தக்காளல்லளாதலின் அறிவிலியென்னும் பொருளில் 'பேதையவள்' என்றார். (கஅ)

வேறு

பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்விமுப் புரங்கள் செற்ற
சேவலோன் றுணைவ னான செங்கையோன் றங்கை திக்கின்
மாவெலாந் தொலைத்து வெள்ளி மலையெடுத் துலக மூன்றுங்
காவலோன் பின்னை காம வல்லியாங் கன்னி யென்றாள்

இ - ள். பூவிலோன் -தாமரைமலரிலிருக்கின்ற பிரமதேவனது, புதல்வன் - புத்திரனாகிய புலஸ்தியப்பிரமமாவினுடைய, மைந்தன் - குமாரனாகிய விச்சிரவசுவினது, புதல்வி - மகள், முப்புரங்கள் செற்ற - திரிபுரங்களையுந்தகித்தருளிய, சேவலோன் - ருஷபவாகனத்தையுடைய சிவபிரானது, துணைவன் ஆன - தோழனான, செங்கையோன் - குபேரனது, தங்கை—, திக்கின் மா எலாம் தொலைத்து - திக்கஜங்களையெல்லாம் வென்று, வெள்ளிமலை எடுத்து -கைலாசமலையை (அடியோடு) தூக்கி, உலகம் மூன்றும் - திரிலோகங்களையும், கா-காவல்செய்கின்ற, வலோன் - வல்லவனான இராவணனுக்கு, பின்னை - தங்கை, காமவல்லியாம் கன்னி என்றாள் - (நான்) காமவல்லியென்று சொல்லப்படுகின்ற கன்னி என்று சொன்னாள்.

குறிப்பு — "எதுபதி? எதுபெயர்? எவருறவு?" என்றுகேள்விக்கு இன்னவூர், இன்னபெயர், இன்னார் உறவு என்கிறவே விடையளித்தலைவிட்டு 'பூவிலோன் புதல்வனமைந்தன்' என்றுதொடங்கிக் குலத்தின் ஏற்றத்தையே முதலில் எடுத்துக்காட்டினாள். ஏனெனில், நிலையில்லாத்காமசாரிணியாய் எங்கும் சஞ்சரிப்பவளென்றால் குடியிருக்கவுமிடமில்லாது காலாடியாய்த்திரிபவளென்றும், சூர்ப்பநகை என்று நாமத்தைச்சொன்னால் முறம்போலொத்த நகத்தினையுடைய பயங்கரியான ராக்ஷஸியென்றும் நினைந்து உத்தேசகாரியத்திற்கிசைபாது மறுத்துவிடுவான் என்று கருதியென்க - பூவிலோன் புதல்வனமைந்தன் புதல்வி என்றாள் தன்னை அநாமகுலகோத்திரையென்று நினையாமல் ஸத்குலப்ரஸூதையென்று நினைப்பதற்கென்க. பூவிலோன் - பூவை இல்லாக உடையவன், பிரமதேவன்; விசிரவசு என்பவனுடைய புதல்வியென்றதனாலேயே குலத்தினேற்றந் தோன்றவிருக்க பிரமனைத் தொடுத்துச் சொன்னகாரணமென்னெனில், "வியாசம் வஸிஷ்டநப்தாரம்" என்ற வியாசருடைய புகழ்பேச வந்தசுலோகத்தில், வசிட்டருடைய கொட்பேரன், சக்தியினுடைய பேரன், பராசரனமைந்தன், சுகன்தந்தை என்றும் மஹரிஷிசந்ததியின் ஏற்றத்தை எடுத்துச்சொன்னது போலத்தன் குலத்தின் ஏற்றத்தை விவரிப்பதற்காகவென்க. 'முப்புரங்கள் செற்ற சேவலோன் றுணைவனான செங்கையோன் றங்கை' நேரேதமையன்மார்களாகிய ராவணகும்பகர்ணாதிகளுடைய தங்கையென்று சொன்னால் தன் ராக்ஷஸ ஜன்மத்தையும் க்ரௌர்யத்தையும் காட்டுமென்றும் அது உத்தேசகாரியஹானியென்றும் கருதித் தனக்குத்தெய்வத்தன்மையும் தோன்றும்படி அஷ்டாதிகாரிகள் மூவரில் ஒருவனாகிய திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளைத் தோழமை கொண்ட திக்பாலகனாகிய குபேரன் றங்கையென்றெடுத்துக்காட்டினாள். செங்கையோன் - செம்மையாகிய கையினன், சம்பத்தைக்கொடுக்கின்றவனாதலின் கைக்குச் செம்மை கொடையென்பது தெளிவு, இதனால் நீவறுமை நீங்கிச் சுகிக்கலாமென்பதைத்தோற்றுவித்தாளென்க 'திக்கினை மாவெலாந் தொலைத்து வெள்ளிமலையெடுத்த தூலக மூன்றுங் காவலோன் பின்னை' இதனால் பிரமகுலோற்பன்னையும், வைசிரவணன் றங்கையும், சுந்தரியுமாகிய இவளைச்சேர்ப்பதனும் விஷயத்தில் இராக்ஷஸர்களுடைய பீதியினும் அதிகமாகவன்றோவளரு மென்று சங்கைத்தடாதிருக்கும்படிக்குப் பின் தனக்குள்ள மெய்வலிமை கூறுகின்றாள் கத்தறச்செய்யுமவன் என்னும் பொருட்டாய 'இராவணன்' என்பபெயர் குறித்தால் அதுகலக்கத்திற்கிடமாயக் கைவிடற்கு மேதுவாமென்று கருதியொழித்து அர்த்த நக்ரமாய அப்பெயரைக்குறித்தாள், மாவெலாம் தொலைத்து என்பதனால் அழச்செய்கிறவன் என்பதும் வெள்ளிமலையெடுத்து என்பதனால் அழுமவன் என்பதும் பெறப்படுமாதிருத்தலறிக. பின்னை - ஆகுபெயர் வைத்தவியமடைந்திருக்கு நிலைமையில் தன்னைக் கன்னியென்றாள் அதுவும் இராமன் தன்னை அங்கீகரித்தற்கோர்காரணமாகவென்கருதியென்க (௩௧)

அவ்வுரை கேட்ட வீரனையுறு மனத்தான் செய்கை
செவ்விதன் றறித லாகுஞ் சிறிதென்னா றுணரச் செங்கண்
வெவ்வுரு வமைந்தோன் றங்கை யென்றது மெய்ம்மை யாயி
னிவ்வுரு வியைந்த தன்மை யியம்புதி யியல்பி னென்றான்.

இ-ள். அ உரை கேட்ட வீரன் - அந்தச்சொற்களைக்கேட்ட ஸ்ரீராமபிரான், ஐயுறுமனத்தான் - சந்தேகங்கொண்ட மனத்தினையுடையவனாகி, செய்கை - (இவளது) நடக்கை, செவ்விது அன்று - அழகியது அல்ல, சிறிதேன் அறியல

ஆகும் என்று - சற்றுநேரத்தில் தெரியலாம் என்று, உணர - (அதனை) அறியும் பொருட்டு, செங்கண் - சிவந்த கண்களும், வெவ்வுரு - வெவ்விய வுருவமும், அமைந்தோன் - பொருந்தினவனான இராவணனது, தங்கை என்றது - தங்கை என்று நீ கூறியது, மெய்ம்மை ஆயின் - உண்மையே ஆனால், இ உரு இயைந்ததன்மை - (உனக்கு) இவ்வுருவம் பொருந்திய தன்மையை, இயல்பின் இயம்புதி - உள்ளவாறே சொல்லாய், என்றான் - என்றருளிச்செய்தான்.

குறிப்பு — "பிரமாணவயமப்ரசசது ராகேநோவா" என்றசுலோகத்தில் இராமனால் கொல்லத் தீர்மானிக்கப்பட்டவனை பிரமருத்திரேந்திராதிகளாலும் காக்க முடியாதென்றும், "ஸபித்திராச" என்கிற சுலோகத்தில் அம்மூவருள்பட உலகத்திலுள்ளயாவராலும் காகாசுரன் கைவிடப்பட்டானென்றும், "பிசாசாந்தான வாந யக்ஷாந்" என்கிற சுலோகத்தில் கோடிராவணன் போன்றவர்கள் வந்தாலும் சுண்டுவிரனகத்தால் கொல்லுவேன் என்றும் கூறியிருப்பதும் தவிர திருவணை நிர்மாணித்ததையும் வாலியைவதைத்ததையும், கார்த்தவீரியனையும் கொன்ற பரசுராமனை வெற்றிகொண்டதையும், மேருசாரமான ஹரகோதண்டத்தைபபங்கம் செய்ததையும், பின்னும் பலபராக்கிரமங்களையும் கவிதான ராமாயணமுகமாயக்கண்டவர் ராகையால் சூர்ப்பநகை வியந்துபேசின இராவணன் விஷயத்தில் ஸ்ரீராமபிரான் சிறிதுமச்சமுறாமல் நிராபிப்பிராயமாக மதித்துப்பேசினான் என்பதைவிளக்க 'வீரன்' என்றார். மேல், வீரன் என்ற பதப்பிரயோகத்தால் சுண்டு ஐபுறுதல் ராவணன் மாட்டன்று, சூர்ப்பநகையின் பரஸ்பரவிரோதமான ரூபிரூபங்களில் என்க. செவ்விது - செம்மையென்னும் பண்படியாகப்பிறந்த குறிப்புவினை. 'சிறிதின் அறியலாகும்' என்பதற்கு, இவ்விஷயம் நிரம்புகுந்து விசாரிக்கவேண்டுவது அநாவசியமேயாயினும் வந்தமட்டில் சிறிது விசாரிப்போம் என்று பொருள் கூறலுமாம். பொய்யே கூறுமவளாகலால் 'இயல்பின் இயம்புதி' என்றான். (சுப)

தூயவன் பணியா முன்னந் சொல்லுவாள் சோர்வி லாளம்
மாயவல் லரக்க ரோடும் வாழ்வினை மதிக்க லாதே
னாயவுறு மனத்தே னாகி யறந்தலை நிற்ப தானேன்
தீவினை தீய நோற்றுத் தேவரிற் பெற்ற தென்றாள்.

இ - ள். தூயவன் பணியாமுன்னம் - பரிசுத்தனாகிய ஸ்ரீராமபிரான் அவ்வாறு பணித்தருளுவதன் முன்பு, சோர்விலாள் சொல்லுவாள் - சொற்சோர்வில்லாதவளாய அந்தச்சூர்ப்பநகை சொல்லத்தொடங்குவாள், அ மாயவல் அரக்கரோடு - மாயங்களில் வலிய அந்த இராக்ஷதர்களோடு, வாழ்வினை - வாழ்ந்திருத்தலை, மதிக்கலாதேன் - மதிக்காதவளாகிய நான், ஆயவுறுமனத்தேன் ஆகி - நன்மையிது தீமையிது என்று ஆராய்ந்தறியத்தக்க மனத்தினையுடையவளாகி, அறந்தலை நிற்பதானேன் - தருமத்தின்வழியே யொழுகுதலுற்றேன், (மற்றும்) தீவினை தீய - பாபகர்மங்களகசித்தும்போம்படி, நோற்று - நோன்பியற்றி, தேவரில் பெற்றதென்றாள் - (இவ்வுருவம்) தேவர்களாற் பெறப்பட்டது என்று சொன்னாள்.

குறிப்பு — தூயவன் - தூய்மையென்னும் பண்படியாகப்பிறந்த பெயர். பணித்தல் - அருளிச்செய்தல், "படையுளபடுவோன் பணிமொழிகூறி" என்னுமிடத்தில் பணித்தல் - இசைச்சொல்லென்று கொண்டு "விண்டலை யாவாகும் வேந்தா வண் டில்லைமெல் லகழிசூழ, கண்டலையேகரி யாக்கன்னிப் புனனைக் கலந்தகன்

வா, கண்டிலே யேவரக் கங்குலெல்லாமங்குல் வாய்விளக்கு, மண்டல மேபணியாய் தமியேற்கொரு வாசகமே" என்றிதனைக்காட்டாகக் காட்டிப் பணிவிடையெனினும் வழக்குமது என்றார் அடியார்க்கு நல்லார். சோர்வு - சொல்லவேண்டுவதனை மறப்பானொழிதல், இனி, பொய்ம்மொழி புகற்றற்கண் சிறிதும் சோர்விலலாளாகி யெனினுமாம் மாயம் - மாயையின்காரியம் - தேவரிற்பெற்றது எனபதற்குத் தேவர்களைப்போலப்பெற்றது என்னலுமாம், இதில் 'இல்' ஐந்தனுருபு ஒப்புப்பொருண்மைக்கண் வந்தது. தேவர்களைப்போலப் பெறுதலாவது - தேவர்களைப்போலப்புண்ணியத்தின் மிகுதிப்பாட்டான நலவுருப்பெறுதல் புண்ணியத்தின் மிகுதியால் மனிதர் நலவுருப் பெற்றுத்தேவர்களாகின்றாரென்பது நூற்றுணிபு. (சக)

இமையவர் தலைவ னேயு மெளிமைபி னேவல் செய்யு
மமைதியி னுலக மூன்று மாளபவன் றங்கை யாயின்
சுமையுறு செல்வத் தோடுந் தோன்றலை துணையு மின்றித்
தமியைநீ வருதற் கொத்த தன்மையென் றைய லென்றான்.

இ - ள் தையல் - பெண்ணே! இமையவர் தலைவனேயும் - தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனும், எளிமையின் - எளியதன்மையில், ஏவல்செய்யும் - பணிவிடை செய்தற்குக் காரணமாகிய, அமைதியின் - மாட்சிமையுடனே, உலகம் மூன்றும் ஆளபவன் - திரிலோகங்களையும் ஆளுகின்ற இராவணனது, தங்கை ஆயின் - தங்கையேயானால், சுமை உறு செல்வத்தோடும் - மிகுதியான செல்வப்பெருக்கத்தோடும், தோன்றலை - வந்தாயில்லை, துணையும் இன்றி - யாதொரு துணையுமில்லாமல், தமியை - ஒன்றியாய், நீ—, வருதற்கு - (நீ) வருதற்கு, ஒத்த தன்மை என் - பொருந்திய நிலைமையாது? என்றான் - என்று வினவினன்

குறிப்பு —இமையவர் தலைவனேயும் - உம்மை உயர்வு சிறப்பு. எளிமை - எளியதன்மை, பண்புப்பெயர் அமைதியின் ஆருதல் - கலக்கமின்றி யாளுதலுமாம், அதாவது, பகைவரின்றி யாளுந்தன்மை. தங்கை - முறைப்பெயர் சுமையுறு செல்வம் - கோலிக்கின்ற செல்வமுமாம் அவை வாத்தியமும் யானை குதிரை முதலிய விருதுகளும் சுமையொலியாதலை, "கப்பலை சுமமை கலியே யழுங்க லென்றிவை நான்கு மரவப் பொருள்" என்னும் தொல்காப்பிய வுரியியற் சூத்திரத்தானுணர்க இங்குச் சுமையென இடை குறைந்து வந்தது. (சஉ)

வீரனஃ துரைத்த லோடு மெய்யிலாள் விமல யானச்
சீரிய ரல்லார் மாட்டுச் சேர்கிலென் றேவர் பாலு
மாரிய முனிவர் பாலு மடைந்தனெ னிறைவ வீண்டோர்
காரிய முண்மை நின்னைக் காணிய வந்தே னென்றாள்.

இ - ள் வீரன் - ஸ்ரீராமபிரான், அஃது உரைத்தலோடும் - அம்மாற்றங் கூறியவுடனே, மெய் இலாள் - உண்மைபேசுதலில்லாத சூர்ப்பநகை, விமல - சுவாமீ! யான் - நான், அ சீரியர் அல்லார் மாடு - அறிவுடையோரல்லாராகிய அவ்வரக்கர்பக்கத்தே, சேர்கிலென் - சேர்வதேயில்லேனாகி, தேவர்பாலும் - தேவர்கள் பக்கத்தும், ஆரியமுனிவர்பாலும் - ஆரியராகிய ருஷிகள்பக்கத்தும், அடைந்தனென் - சேர்ந்தேன், இறைவ - அரசே! ஈண்டு ஓர் காரியம் உண்மை - ஈங்கோர்காரியமிருக்கின்றதை உத்தேசித்து, நின்னை - நும்மை, காணிய வந்தேன் - காணுதற்காக வந்தேன், என்றாள் - என்று சொன்னாள்.

குறிப்பு —மெய்யிலான் என்பதற்கு - உண்மையான தேகமில்லாதவனென்னு மமையும். விமல - அண்மைவிளி, மலரகிதனே என்பது பொருள். ஆரியமுனிவர்-பூஜ்யர்களான முனிவர்கள், முனிவர் - பகவத்தியான முடையவர் இமயமலைக்கும் பொதியமலைக்கும் இடையிட்டதேசம் ஆரியமெனப்படுதலால் ஆங்குள்ள முனிவரென்பாள் 'ஆரியமுனிவர்' என்றுள். இனி, ஆரியம் வடமொழியாகலின் அதனிலமைந்தவேதவேதாங்கங்களிற் றேர்ந்த அறிஞராகிய முனிவரெனினுமியலும் காணிய - செய்யியவென்னும் வாய்பாட்டுவினையெச்சம், அது வந்தேனென்னும் வினைகொண்டது (௩௩)

அன்னவ ளுரைத்த லோடு மையனு மறிதற் கொவ்வா
நன்னுதன் மகளிர் சிந்தை நன்னெறிப் பால வல்ல
பின்னிது தெரியு மென்னுப் பெய்வளைத் தோளி யென்பா
லென்னைகா ரியத்தைச் சொல்லஃ தியையுமே லிழைப்ப லென்றான்

இ - ள் அன்னவள் - அச்சூர்ப்பநகை, உரைத்தலோடும் - (அங்ஙனங்) கூறியவுடனே, ஐயனும்-ஸ்ரீராமபிரானும், நல் நுதல் மகளிர் சிந்தை-அழகிய நெற்றியையுடைய மாதர்களது எண்ணங்கள், அறிதற்கு ஒவ்வா - (இலேசில்) அறிந்துகொள்வதற்கு ஒவ்வமாட்டா, [முடிவனவல்ல], (மேலும்), நல் நெறிப்பால அல்ல-சன்மார்க்கத்தையடுத்தவையு மல்ல, இது - இவளெண்ணம், பின் தெரியும் என்னு இனிமேல் (பேசப்பேச) அறியலாமென்று நினைந்து, பெய் வளை தோளி - வளையல் அணிந்த கைகளையுடையாய்! என்பால் - என்னிடத்தே, என்னை காரியத்தை யாது காரியத்தினையுடையாய்? சொல் - உரைப்பாயாக, அஃது - அக்காரியம், இயையுமேல்-(மனத்துக்குப்) பொருந்துமே யாயின், இழைப்பல் - செய்வேன், என்றான்-.

குறிப்பு —அன்னவள் - அன்னம்போன்றவளுமாம் ஐயன் - ஆயன் என்னும் வடமொழிப்பாகதமாய ஐயன் என்வந்தது, அழகனும் சுவாமியும் மூத்தோனும் எனத் தமிழ்மொழியாகக்கொண்டு பொருள்கூறுதலுமாம் "அன்புநா லாக வின்சொ லவாதொடுத் தமைத்த காதல், வின்பஞ்செய் காமச் சாந்திற் கைபுனைந் தேற்ற மாலை, நன்பகற் சூட்டி வெள்ளாந் தொழுதினு நங்கை மார்க்குப், பின்செலும் பிறர்க ளுள்ளம் பிணையனாக் கடிய தன்றே" எனவும் 'பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில பிறப்பு நோக்கா, வுண்ணிறை வுடைய வல்ல வோராயிர மனத்த வாகும்" எனவும் சிந்தாமணியில் மகளிர்சிந்தையறிதற் கொவ்வாத்தன்மைய வெனக்கூறியிருத்தல் காண்க தோளி - அண்மைவிளி காரியத்தை-காரியத்தினையுடையை என்முன்னிலைவினை. (௩௪)

தாழுறு காமத் தன்மை தாங்களே யுரைப்ப தென்ப
தாமென லாவ தன்றா லருங்குல மகளிர்க் கம்மா
வேழுறு மூயிர்க்கு நோவே னென்செய்கேன் யாரு மில்லேன்
காமனென் றொருவன் செய்யும் வன்மையைக் காத்தி யென்றாள்.

இ - ள் தாம் உறு காமம் தன்மை - தாங்களடைந்த காமத்தினது நிலைமையை, தாங்களே உரைப்பது என்பது - தாமே (தமது வாயிற்றிறந்து வெளிப்படக்) கூறுவதென்பது, அருங்குலமகளிர்க்கு- அரியகுலமாதருக்கு, ஆம் எனல் ஆவது அன்று (தகுதியுடையது) ஆகுமென்றுரைத்தல் (ஒருபோதும்) சம்பவிக்கக்கூடியது அன்று

(ஆயினும்), எம் உறு உயிர்க்கு நோவேன் - இன்பத்தையடையும் உயிரின் (நிலைதளராதிருக்கும்) பொருட்டு வருந்துகின்றயான், என்செய்கேன் - யாதுசெய்வேன், யாரும் இல்லேன் - (என்காமநோய்க்குப் பரிகாரந்தேடுபவர்) யாருமில்லாதிருக்கின்றேன், காமன் என்ற ஒருவன் செய்யும் - காமனென்னும் பெயரைக்கொண்ட ஒருவன் செய்கின்ற, வன்மையை காத்தி - கொடுமையை நீக்கி இரட்சிப்பீராக, என்றாள் - என்றுசொன்னாள்.

குறிப்பு — "அச்சமு நாணு மடனு முந்துறுத்த, நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப" என்பவாகலின் அருங்குலமளிக்க குரைத்தலாவதில்லையென்றான் "இறப்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச் செப்பமு நாணு மொருங்கு" என்றபடி இறப்பிறந்தார்க்கே சிறந்தபல்வாய குணங்கள் ஒருவாகறபிக்க வேண்டாமே யுள்வா ந்தன்மைநோக்கி 'அருங்குலம்' என விசேடித்தாள் ஏம-வலிமையுமாம் தீராது இருந்து வருந்துகின்றமைநோக்கி இங்ஙனம் வெறுப்புமீக்கொண்டு கூறினாளென்க. நோவேன் - வினையாலணையும் பெயர். என்-எவன் என்பதன்விகாரம் ஒருவன் என அவனது வன்கண்மை கூறினாள் "தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற், றன்னையே கொல்லுஞ் சினம்" என்னும் இத்திருக்குறளிற் போல 'வன்மையைக்காத்தி' என்கின்றது, வன்மையில்லாமற்காக்க என்பதாம். (௪௫)

சேணுற நீண்டு மீண்டு செவ்வரி சிதறி வெவ்வே
றேணுற மிளிர்ந்து நானா விதம்புரண் டிருண்ட வாட்கட்
பூணியல் கொங்கை யன்னா ளம்மொழி புகற லோடு
நாணில ளைய னொய்ய ணல்லளு மல்ல ளென்றான்

இ - ள் சேண் உற நீண்டு - (பார்வை) நெடுந்தூரத்தே சேரும்படி நீண்டு, மீண்டு - (அப்பார்வை) மீளுதலடைந்து, செவ்வரிசிதறி - சிவந்தவரிகள் பரவலுற்று, வெவ்வேறு - பலவிதமான, எண் உற - எண்ணம் (கண்டார்) அடையும்படி, மிளிர்ந்து - விளங்கி, நானாவிதம் புரண்டு-வெவ்வேறு வகையாகப் புரளுதலுற்று, இருண்ட-கருமையுற்ற, வாள் கண்- ஒளிபொருந்திய கண்களையும், பூண் இயல்கொங்கை - ஆபரணம் பொருந்திய முலைகளையுமுடைய, அன்னாள் - அச்சூர்ப்பநகை, அம்மொழி புகறலோடும் - அவ்வார்த்தை சொன்னவுடனே, ஐயன் - ஸ்ரீராமபிரான், (இவள்), நாணிலள் - நாணமில்லாதவள், நொய்யள் - அற்பமானவள், நல்லளும் அல்லள் - நன்னடக்கையுடையாளு மல்லள், [கெட்டவள்,] என்றான் —,

குறிப்பு — வாட்கண் - வாள்போலுங் கண் என உவமைத்தொகையுமாம் நாணிலள் என்பது விதந்து எனச்சிலேடைப் பொருள் தந்து நிறபதுமறிக நொய்யள்- நொய்யின் தன்மைவாய்ந்தவள், அஃதாவது அற்பமெனக்கருதப்படுந்தன்மை நாண்போன்று முறுக்குடையா திருத்தலின் 'நாண்' என்பர் ஆசிரியர் நச்சினார்க்கினியர். அதனை "சிலைகொ ணாணிற் றீராத திருந்துகற்பின வாதம்" என்னும் செய்யுட்குறிப்புரை யுட்காண்க (௪௬)

பேசல ரிருந்த வள்ள லுள்ளத்தின் பெற்றி யோராள்
பூசல்வண் டரற்றுங் கூந்தற் பொய்ம்மகள் புகன்ற வெங்க
ணாசைகண் டருளிற் றுண்டோ வன்றென லுண்டோ வென்னு
மூசலா லுலாவு கின்றாண் மீட்டுமோ ருரையைச் சொல்வாள்.

இ-ள் பூசல - போர்செய்தலையுடைய, வண்டு - வண்டுகள், அரற்றும் - ஒலிசெய்யாநின்ற, கூந்தல - அளகபாரத்தினையுடைய, பொய்ம்மகள் - (உருவத்திலும் மொழியிலும்) பொய்ம்மையைக்கொண்ட சூர்ப்பநகை, பேசலன் இருந்தவன் - பேசாது (மௌனமாக) இருந்த ஸ்ரீராமபிரானது, உள்ளத்தின் பெற்றி ஓராள்-மனத்தின் தன்மை யாராயாதவளாகி, புகன்ற- (உள்ளக்கருத்தை வெளியிட்டுச்) சொன்ன, என்கண்-என்னிடத்தே, ஆசைகண்டு - விருப்பத்தைக்கண்டு, அருளிற்று உண்டோ-அருள்செய்தது உள்ளதோ? அன்று எனல் உண்டோ- (அருள்செய்தது) அல்லதென்று கூறுதலுள்ளதோ? என்னும் - என்று சொல்லப்படும், ஊசலால் - கலக்கத்தால், [ஐயத்தால்], உலாவுகின்றாள் -உலவிநிற்கின்றாளாகி, மீட்டும் - திரும்பவும், ஓர் உரையை சொல்வாள் - ஒருவார்த்தையைக் கூறுவாளாயினாள்.

குறிப்பு —"சுரும்பெழுந் திருந்துணர்த் தொங்கல் வார்குழல்" "எழுந்திருந்தினை நறுந்தாதூதும், தும்பிகையாடு வட்டிற் றோன்றும்" என்றார் பிறரும் - பொய்ம்மகள்- குறிலவழி யகரத்தின்முன் மெலிமிகுந்தது, "எண்மூவெழுத்தீற்றெவ்வகை மொழிக்கும்" என்னுஞ் சூத்திரத்தால் கண்டருளல் -ஒருமொழி பேசலன், ஓரான், உலாவுகின்றாள் முற்றெச்சங்கள் (௩௭)

எழுதரு மேனி யாயீண் டெய்திய தறிந்தி லாதேன்
முழுதுணர் முனிவ ரேவல் செய்தொழின் முறையின் முற்றிப்
பழுதறு பெண்மை யோடு மிளமையும் பயனின் றேகப்
பொழுதொடு நாளும் வாளா கழிந்தன போலு மென்றாள்.

இ-ள். எழுது அருமேனியாய - (ஓவியத்துறை கைபோயவர்களும்) தீட்டவொண்ணாத திருமேனியையுடையாய்! ஈண்டு - இங்கு, எய்தியது அறிந்திலாதேன் (நீர்) எழுந்தருளிய விஷயத்தை யறியாதயான், முழுது உணர் முனிவர் ஏவல் - முற்றும் உணர்ந்த முனிவர்களேவிய வேலையை, செய் - செய்கின்ற, தொழில் முறையில் - வேலையினது ஒழுங்கில், முற்றி - தோசிப்படைந்து, பழுது அறுபெண்மையோடும் - குற்றமற்ற பெண்டன்மையுடனே, இளமையும் - வாலிபப்பருவமும், பயன் இன்று ஏக - பிரயோசனமில்லாமற் போகும்படி, பொழுதொடு நாளும்- இரவும்பகலும், வாளாகழிந்தன என்றாள் - வீணேகழிந்துபோயினவென்று கூறினாள்,

குறிப்பு —எழுதருமேனியாய என்றற்கு (யாவர் மனத்தினும்) எழுச்சிதரும் மேனியாய என்னலும், மேன்மேலும் வளர்ச்சியடைகின்ற திருமேனியாய என்னலும் பொருந்தும் "சுருளிட்டாடிய மருள்படு பூங்குழல்-பவளச் செவ்வாய்த் தவள வெண்ணகை-யொள்ளரி நெடுங்கண் வெள்ளிவெண் டோட்டுக் - கருங்கொடிப் புருவத்து மருங்குவளை திருநுதற் - காந்தளஞ் செங்கை யேந்திள வனமுலை - யகன்ற வல்குலந்துண் மருங்குல்" என்றவாறு அவயவ விலக்கணம் பொருந்திய வழியே பெண்பிறவியென்பார் 'பழுதறுபெண்மை' என்றார் ஓடும் - உடனிகழ்ச்சிப்பொருட்டு பொழுதும் நாளும் என்பன ஈண்டு இராப்பகல் மாத்திரையாயின்றன. ஓடு - எண்ணுப்பொருட்டு. போலும் - ஒப்பில்போலி முழுது - எஞ்சாமையுணர்த்தும் உரிச்சொல், "முழுதென் கிளவி யெஞ்சாப்பொருட்டே" என்பது தொல்காப்பியம் (௩௮)

நிந்தனை யரக்கி நீதி நிலையிலாள் வினைமற் றெண்ணி
வந்தன ளாகு மென்றே வள்ளலு மனத்துட் கொண்டான்
சுந்தரி மரபிற் கொத்த தொன்மையின் றுணிவிற் றன்றா
லந்தணர் பாவை நீயா னரசரில் வந்தே னென்றான்.

இ - ள். வள்ளலும் - ஸ்ரீராமபிரானும், நிந்தனை அரக்கி - (இவள்) அபகீர்த்தியையுடைய அரக்கி, நீதிநிலையிலாள் - நீதிமார்க்கத்தில் நிற்றல் இல்லாதவள், வினைமற்று எண்ணி - வேறுகாரியத்தை யுத்தேசித்து, வந்தனள் என்றே - வந்துள்ளா ளென்பதாகவே, மனத்துள் கொண்டான் - (தன்) மனத்திற்கருதினவனாகி, சுந்தரி - அழகினையுடையாய்! நீ அந்தணர்பாவை - நீ பிராமணர்பெண் [பிரமகுலஸ்திரீ], யான் அரசரில் வந்தேன் - நான் அரசர்களில் வந்தேன் [க்ஷத்திரியன்], (ஆகவின் நாமிருவரும் மணஞ்செய்துகொள்வது) மரபிற்கு ஒத்த - வமிசத்துக்குத் தகுதியான, தொன்மையின் துணிவிற்று - பழமையாகிய துணிபின் வழிப்பட்டது அன்று என்றான் - அன்றென்று கூறினான்.

குறிப்பு — வினைமற்றென்பது புணர்ச்சியை. ஆகும் - அசை. பாவை - உவமவாகுபெயர். பூர்வகாலத்து அரசர்கள் க்ஷத்திரியர்களேயாகலின், அரசர் என்பது க்ஷத்திரிய வமிசமாத்திரையாய் நின்றது, "மறையோர் மன்னர் வணிகர் சூத்திரரெனு மிறையோர் தத்தமக் கெய்து மற்றதுவே .." என்புழியும் 'மன்னர்' என்றமையறிக. அந்தணர் குலப்பெண்ணை க்ஷத்திரியர் வைசியர் சூத்திரர் என்னும் மூவகை வருணத்தாரும் வேட்டற்கு விதியில்லையாதலின் 'மரபிற்கொத்த தொன்மையின் றுணிவிற்றன்று' என்றார், "இழிந்த புன்குலத் தாதற் குலத்தினு மியல்புற மேம்பட்டுக், கழிந்த நன்குலத் தாதல்பொன் னனையவர் கவினுடை வடிவெல்லா, மொழிந்த நூல்வழி பிறழ்ந்தமெல் லுருவினர் முகிண்முலை முயக்குற்றோ, லழிந்து போகுநல் லுணர்வழ் னிரயமு மாங்கவர்க் கணித்தாமால்" 'பின்னவர் தமது மரபின் வேட்டிடலாம் வணிகர்பின் னவருழைத் தமது, நன்மர பதனிற் கோடலர் மரசர் தம் முழை நாயகர் தம் மரபின், மன்னுமவே ளாளர் மரபினிற் கொள்ளலர் மறையவர் வருணநான் கிடத்துங், கன்னியைக் கொள்ளலாம் பின்னவள் மறையோர்க் கருமகப் பெறிற் கதி யடையான்" என்றார் அதிவீரராமபாண்டியரும் [காசிகாண்டம்] தொன்மை - பழைய ஒழுக்கத்துக்குப் பண்பாகுபெயர். அரசர் - ராஜசப்தபவம். (௪௧)

ஆரண மறையோ னெந்தை யருந்ததி கற்பி னெம்மோய்
தாரணி புரந்த சால்கடங்கார் தம்மரபின் றையல்
போரணி பொலங்கொள் வேலாய் பொருந்தலை யிகழ்தற் கொத்த
காரண மிதுவே யாயி னென்னுயிர் காண்பெ னென்றாள்

இ - ள். போர் அணி பொலங்கொள் வேலாய் - போர் செய்தலையே ஆபரணமாகக்கொண்ட அழகுள்ள வேலினையுடையாய்! எந்தை - எங்கள் தந்தை, ஆரணம் மறையோன் - வேதத்துக்குரிய அந்தணன்; அருந்ததி கற்பின் எம்மோய் - அருந்ததியைப்போலும் கற்பு நிலைமையையுடைய எங்கள் தாய், தாரணி புரந்த சால்கடங்கார் தம்மரபின் தையல் - பூமியை யரசாண்ட சால்கடங்கடரென்னும் இராக்கதர்களது குலத்திற்பிறந்தபெண், (ஆதலால்) பொருந்தலை இகழ்தற்கு ஒத்த காரணம் இதுவே ஆயின் - (நீ என்னோடு) கூடுதலை இகழ்ந்து விடுதற்கு ஏற்றகார

ணம் இதுவேயாமானால், என் உயிர் காண்பென் - (உடலை விட்டுப்பிரிந்துபோகும் நிலைமையிலிருக்கும் எனது உயிரை (அங்ஙனம் பிரிந்துப் பார்ப்பேன், [இறந்துபடு வேன்] என்றாள்—,

குறிப்பு —மறைகளை ஓதல் ஓதுவித்தல் என்னும் இருதொழிற்கும் உரியவர் அந்தணரேயாதலால் மறையோர் என்பது அவர்க்கே காரணப்பெயராம் இங்கே 'ஆரணம்' என்ற அடைமொழிவந்ததால், 'மறையோன்' என்றது காரணங்கருதா மல் வெறும் சாதிப்பெயர்மாத்திரமாய் நின்றது. அருந்ததி - வசிஷ்ட முனிவரது மனைவி மோய - தாய், "எவ்வமிலாயி மோயதாய் ஈன்றவள் நாமம்" என்பது நிக ண்டு தாரணி - தரணி என்னும் வடசொல்லின் விகாரம்.

ராக்ஷச குலத்துப்பிறந்த ஹேதி யென்பவனது மகன் வித்யுத்கேச னென்ப வன் சந்தியையின் மகளான சாலகடங்கடை யென்பவளை விவாகம் செய்துகொ ண்டு சுகேசனைப்பெற்றான் அச்சுகேசனது மக்கள் மாலியவான், சுமாலி, மாலி என்பவருள் சுமாலியின்மகள் கேகசி யென்பவள் விச்சிரவசு என்னும் பிரமகுலத் தோன்றலோடுகூடி இராவணனிவரை யீன்றாளென்றுணர்க இங்குக்குறித்த சால கடங்கடை பிள்ளையைப்பெற்றவுடன் அங்கேயே விட்டிட்டுக் கணவனுடன் சென்றிட யாருமில்லாமல் அழுதுகொண்டிருந்த அக்குழந்தையைப் பார்வதி பர மேசுவரர் கண்டெடுத்து அக்குழந்தைக்கு அப்பொழுதே தாய்க்குச் சமமான பருவ முண்டாம்படி அனுக்கிரகித்து நீண்ட ஆயுளையுந்தந்து வானத்திற்பறந்து செல்லத் தக்கதொரு நகரத்தையுங்கொடுத்து, இனி இராக்கத மகளிர்க்கு விரைவிற்கருவுறுத லும் உடனே மகப்பெறுதலும் பிறந்த மகவு உடனே தாயோடு ஒத்த பருவமடைத லுமாகிய வரத்தையும் அளித்துச்செல்ல, அவ்வரப்பயன்களைப் பின்னை அரக்கர் யாவரும் பெற்றுச்சிறப்புற்றனராதலால், இங்கு இராக்கதகுலம் 'சாலகடங்கர் தமம ரபு' என அவள் பெயராற் குறித்துக் கூறப்பட்டது. சாலகடங்கடையின் வழித் தோன்றியவர், சாலகடங்கடர், அது, "சாலகடங்கர்' எனவிகாரப்பட்டது எனது தந்தை அந்தணனாயினும் தாய் அரசர் குலத்தவளாதலால் அவளிடத்துப்பிறந்த என்னை நீ மணஞ்செய்துகொள்ளாடல் என்னைச் சரியான பிராமணசாதிக் கன்னி கையென்று எண்ணி நீக்கிவிடக் கருதுதல் நியாயமன்று. ஏனென்றால் பிராமண னுக்கும் க்ஷத்திரிய ஸ்திரீக்கும் பிறந்தவர்கள் அநுலோம சாதியாருள் பிராமணரை யொத்த க்ஷத்திரியரென்றும், இவர்கள் உயர்ந்த தந்தையின் சாதியைச் சேராதவர் களாய்த் தாயின் சாதியைக்காட்டிலும் சிறிது மேன்மையான தனிச்சாதியாராகின்ற னரென்றும் இவர்கள் தாய்வம்சத்துத் தருமங்களை அநுஷ்டிக்கத்தக்கவர்களாகை யால் இவர்களை க்ஷத்திரியர் மணஞ் செய்துகொள்ளலாமென்றும் நூற்கொள்கை யுளது. ஆதலின், நீ தடைசொல்லாமல் என்னை மணஞ்செய்வாயேயன்றி யிகழ்ந்த வேறு காரணமுறையன்று விரக தாபத்தாலாகும் மரணவேதனை யென்னை நிச்சய மாய் வந்தடையும் என்பது தோன்றப் 'பொருந்தலை யிகழ்ந்தற்கொத்த காரண மிதுவேயாயி னென்னுயிர் காண்பென்' என்றாளென்க பொருந்தலை என்பதை - முன்னிலையொருமை யெதிர்மறைத் தெரிநிலை முற்றெச்சமாகக்கொண்டு (நீ மணம்) இணங்காமல் என்பொருள் கோடலுமாம். (ருய)

அருந்ததிய னையை கூற வகத்துறு நகையின் வெள்ளைக்

குருத்தெழு கின்ற நீலக் கொண்டலுண் டாட்டங் கொண்டான்

வருத்தநீங் கரக்கர் தம்மின் மானுடர் மணத்த னங்கை
பொருத்தமன் றென்று சாலப் புலமையோர் புகல்வ ரென்றான்.

இ - ள். அருத்தியள் அனையகூற - ஆசையையுடையாளாகிய சூர்ப்பநகை அத்தகைய மொழிகளைக்கூறினதால், அகத்து உறு - தன் மனத்திற்பொருந்திய நகையின் - சிரிப்பினது, வெள்ளை குருத்து - வெண்மை நிறம்பொருந்திய இளவொளி, எழுகின்ற - வெளித்தோன்றப்பெற்ற, நீலக்கொண்டல் - நீலமேகம்போன்ற ஸ்ரீராமபிரான், உண்டாட்டங்கொண்டான் - விளையாடுதலைக்கொண்டவனாகி, நங்கை - பெண்ணே! வருத்தம் நீங்கு அரக்கர் தம் மின் - துன்பம் நீங்கிய இராக்கதர் தமது பெண்ணை, மானுடர் - மனிதர், மணத்தல் - விவாகஞ்செய்து கொள்ளல், பொருத்தம் அன்று என்று - பொருத்தமல்லதென்று, சால - மிகவும், புலமையோர் - அறிவுடையோர்கள், புகல்வர் என்றான் - கூறுவார்கள் என்று கூறினான்.

குறிப்பு — அருத்தி - அர்த்தியென்னும் வடசொல்லின் திரிபு என்பர். அனைய - பெயர். நகை-முதனிலைத் தொழிற்பெயர். தன் மனத்திலுதித்த களிப்புமுழுதும் வெளியிற்றோன்றாவாறு தனது மேன்மைத்தன்மைக்கு உற்றபடி யடக்கிக்கொண்டு புன்னகைபுரிந்தமை தோன்ற 'அகத்துறு நகையின் வெள்ளைக்குருத்து எழுகின்ற' என்றார். குருத்து - இளங்கொழுந்து, இளவொளிக்கு இலக்கணை. நீலக்கொண்டல் - உவமவாகுபெயர். உண்டாட்டு - வீரமதுவையுண்டு மனங்களித்தல், ஈண்டு அச்செயலின்மையானும், கொண்ட களிப்பின் றன்மை அச்செயல் போறலானும், உடன்படுதல் மறுத்தல் என்னும் இருதன்மையையும் உடையவன் போல விநோதமாக வெவ்வேறு காரணங்களை ஒன்றன்பின் ஒன்றாகக்கூறிப் பேச்சைவளர்த்துச் சாந்தமானவழியில் மறுக்கின்றமை பற்றியும் 'உண்டாட்டங்கொண்டான்' என்றார். வருத்த நீங்கு என்றற்கு மனவருத்தப்படாதே என்பொருள் கொள்ளலும் அமையும். தம்மின் என்பதைத் தம்மில் எனக்கொண்டு இராக்கதர்களில் என்பொருள் கோடலாமாயினும் ஈண்டு ராக்ஷஸப்பெண்ணும் மானிடபுருஷனுமாகிய சிறப்புநோக்கி தம்+மின் எனக்கண்ணழித்து மின் பெண்ணெனக்கூறினும் மின்- ஆகுபெயர். மநுஷ்யராக்ஷசகணங்கள் ஒருவரோடொருவர் மணஞ்செய்துகொள்ளக் கூடாது என்பர் 'பொருத்தமன்று' என்றார் 'மானுயர்' என்னும் பாடம் சிறப்புடைத்தன்று. (ருச)

பரவரும் சிரத்தை யாரும் பத்தியின் பயத்தை யோரா
திராவணன் றங்கை யென்ற தேழைமைப் பால தென்னா
வராவணை யமல னன்னா யறிவித்தேன் முன்னந் தேவர்ப்
பரவினி னீங்கி னேனப் பழிபடு பிறவி யென்றாள்.

இ - ள். பரவரும் - புகழ்தற்கருமையான, சிரத்தை ஆரும் - ஊக்கம் மிகுகின்ற, பத்தியின் - பக்திகுணத்தினது, பயத்தை - பயனை, ஓராது - கருதாமல், இராவணன் தங்கையென்றது - இராவணனுக்குத் தங்கையென்று கூறியது, ஏழைமைப்பாலது - (என்) அறிவின்மையிடத்தது, என்னா - என்று நினைத்து, (அச்சூர்ப்பநகை), அரா அணை அமலன் அன்னாய் - சேஷசயனத்தையுடைய நிர்மலனாகிய ஸ்ரீமந்நாராயணனை யொப்பாய்! பழிபடு அ பிறவி - குற்றம் பொருந்திய அவ்விராக்ஷசப்பிறப்பினை, தேவர் பரவினில் - தேவர்களைத் துதித்ததினால், நீங்கினேன் - ஒழியப்பெற்றேன், முன்னம் அறிவித்தேன் - (இவ்விஷயத்தை) முன்னமே தெரியப்படுத்தினேன், என்றாள் - என்று கூறினாள்.

குறிப்பு —சிரத்தை, பத்தி, இராவணன் - சரத்தா, பக்தி, ராவண என்ற வடமொழித் திரிபுகள். பத்தி - தன்னினும் மேம்பட்டோரிடத்துச் செய்யும் அன்பு. தான் அரக்கன் தங்கையென்று கூறாமல் முனிவர்பால் அன்பொடு வழிபட்டதையே பெரிதாக எடுத்துக் கூறியிருக்குமிடத்துத் தன்னை மணஞ்செய்ய மறுக்கானென்றும் அங்ஙனங் கூறியது தன் ஏழைமைப்பாலதென்றுங் கருதினாளெனக். 'அறிவித்தேன் முன்னம்' என்றது, கீழ் 41, 43 கவிகளிற் கூறியவற்றைக் குறிக்கும்.

ஒருவனோ வுலக மூன்றிற் கோங்கொரு தலைவ னாங்கி
லொருவனோ குபேர னின்னோ டுடன்பிறந் தவர்க ளன்னார்
தருவரேற் கோடு மன்றேற் றமியைவே றிடத்துச் சார
வெருவுவெ னங்கை யென்றான் வேதத்தி னறிவை யென்றான்.

இ - ள் வேதத்தின் அறிவை என்றான் - வேதத்தி னறிவுக்குமெட்டாத ஸ்ரீ ராமபிரான், நங்கை - பெண்ணே! நின்னோடு உடன்பிறந்தவர்கள் - உன்னோடு கூடப்பிறந்தவர்களில், ஒருவனோ—? உலகம் மூன்றிற்கு - திரிலோகங்களுக்கும், ஓங்கு ஒருதலைவன் - உயர்ந்த ஒரு அரசன் [இராவணன்], ஆங்கில் ஒருவனோ - அவ்விடத்திலிருக்கிற ஒருவனோ? குபேரன்—, அன்னார் - அத்தகைய (அரசாட்சியுஞ் செல்வமுமுடைய) வர்கள், தருவரேல் - (மனமகிழ்ந்து) கொடுப்பார்களானால், கோடும் - (உன்னை யேற்றுக்) கொள்ளுவோம், அன்றேல் - அல்லதாயின், தமியை - (நீ) தனித்திருக்கின்றாய், (ஆதலினால்) வேறு இடத்துச்சார - (இவ்விடத்தைவிட்டு) வேறிடத்தைச்சாரும்படி, வெருவுவென் என்றான் - பயப்படுவே னென்று கூறினான்.

குறிப்பு —ஓகாரமிரண்டும் - பிரிநிலை. மூன்றிற்கும், 'உம்மை' விகாரத்தாற் றொக்கது. ஓங்கு - சுட்டுநீண்டது. கோடும் - தன்மைப்பன்மை எதிர்காலவினைமுற்று. நங்கை - பெண்ணிற் சிறந்தாள், விரும்பப்படுபவள் அண்மைவிளி, இபல் பாயிற்று. எம்பிரான் இராவணனுக்கும் குபேரனுக்கும் பயந்ததாக விளையாட்டாகக்கூறி மறுக்கலுற்ற பேரறிவை வியந்து 'வேதத்தின் அறிவை என்றான்' என்றார். (ருக)

காந்தாப்ப மென்ப துண்டாற் காதலிற் கலந்த சிந்தை
மாந்தர்க்கு மடந்தை மார்க்கு மறைகளே வகுத்த கூட்ட
மேந்தற்பொற் றோளி னாயிஃ தியைந்தபி னெனக்கு மூத்த
வேந்தர்க்கும் விருப்பிற் றாகும் வேறுமோ ருரையுண் டென்றாள்

இ - ள் ஏந்தல் பொன்தோளினாய - பெருமையிற் சிறந்தவராகிய அழகிய தோளிணையுடையீர்! காதலில் - (ஒருவர்மேலொருவர் கொண்ட) வேட்கையினாலே, கலந்தசிந்தை - ஒன்றுபட்ட மனத்தினையுடைய, மாந்தர்க்கும் மடந்தைமார்க்கும் - ஆடவர்களுக்கும் பெண்களுக்கும், மறைகளே வகுத்த கூட்டம் - வேதங்களே வகுத்துக்காட்டிய விவாகத் தொகுதியுள், காந்தர்ப்பம் என்பது உண்டு - காந்தருவ விவாகம் என்னு மொருவிவாகமுள்ளது; இஃது இயைந்தபின் - இவ்விவாகம் பொருந்திய பிறகு, எனக்கு மூத்தவேந்தர்க்கும் - எனக்கு மூத்தவர்களாகிய குபேர ராவணர்களுக்கும், விருப்பிற்று ஆகும் - விருப்பினையுடையதாகும், வேறும் ஓர் உரை உண்டு என்றாள் - பின்னும் ஒருவார்த்தையுள்ளதென்று கூறுவாள்.

குறிப்பு — காந்தர்ப்பம் - மணமெட்டினுள் ஒன்றாகிய காந்தருவம், இது கந்தருவகுமாரருங் கன்னியருந் தம்முளெதிர்ப்பட்டு இயைந்ததுபோலத் தலைவனுந் தலைவியு மெதிர்க்கப்பட்டுப் புணர்வது, "அதிர்ப்பில்லையம் பூண்ரு மாடவருந் தம்மு, ளெதிர்ப்பட்டுக் கண்டியைத லென்ப - கதிர்ப்பொன்யாழ், முந்திருவர் கண்ட முனிவருந் தண்காட்சிக், கந்தருவர் கண்ட கலப்பு." பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என மணமெட்டாம் இவற்றுள் "முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே, பின்னைய நான்கும் பெருந்திணை பெறுமே" என்றவாறு இது பெருந்திணைப்பாற்படும். இது களவொழுக்கமாம். களவொழுக்கம் பொதுவாகலின் நான்கு வருணத்தார்க்கும் ஆயர் முதலியோர்க்கு முரித்து. இக்களவொழுக்கம் வேதமுடிவென்பார் 'மறைகளே வகுத்த' என்றார், "அந்தண ரருமறை மன்ற லெட்டினுட் கந்தருவ வழக்க மென்மனார் புலவர்" என்பவாகலின் சந்தருவ வழக்கத்தோடொத்த வழக்கினைக் காந்தருவம் [காந்தர்ப்பம்] என்றது உபசார வழக்கு (௫௪)

முனிவரோ டுடையர் முன்னே முதிர்பகை முறைமை நோக்கார்
தனிமைநீ யாத லானமற் றவரொடுந் தழுவற் கொத்த
வினையமீ தல்ல தில்லை விண்ணுநின் னாட்சி யாக்கி
யினியரா யன்னார் வந்துன் னேவலி னிற்ப ரென்றாள்.

இ - ள் முன்னே - தொன்று தொட்டு, முனிவரோடு - இருடிகளுடனே, முதிர்பகை உடையார் - முதிர்ந்த விரோதத்தினையுடைய ராவணாதியர்கள், முறைமை நோக்கார் - (நீவிரும் இருடியென்று பகையின்) முறைமையைக் கருதமாட்டார்கள், நீ - நீவிர், தனிமை ஆதலால் - தனித்திருக்கின்றீராதலால், அவரொடும் - அவ்விராவணாதியருடனே, தழுவற்கு ஒத்த - சேர்தற்குத் தகுதியான, வினையம் - தந்திரம், ஈது அல்லது இல்லை - இவ்விவாக மல்லாமல் வேறில்லை, அன்னார் - அவ்விராவணாதியர், விண்ணும் நின் ஆட்சி ஆக்கி - தேவலோகத்தையு முமக்கு உரிமையாக்கி, இனியராய் - மகிழ்ச்சியை யுடையாராய், வந்து—, உன் ஏவலில் நிற்பர் என்றாள் - நீவிரேவும் பணியில் நிற்பார்கள் என்று கூறினள்

குறிப்பு — மற்று - அசை. விண்ணும் உம்மை எச்சந்தோடு சிறப்புமாம் வந்து - உரையசையுமாம். (௫௫)

நிருதர்தம் மருளும் பெற்றே னின்னலம் பெற்றே னின்னோ
டொருவருஞ் செல்வத் தியாண்டு முறையவும் பெற்றே னொன்றோ
திருநகர் நீங்கப் பின்னர்ச் செய்தவம் பயந்த தென்னா
வரிசிலை வடித்த தோளான் வாளெயி றிலங்க நக்கான்.

இ - ள். வரிசிலை வடித்த தோளான் - கட்டமைந்த வில்லினை வசமாக்கிய தோளினையுடைய ஸ்ரீராமபிரான், நிருதர்தம் அருளும்பெற்றேன் - அரக்கர்களுடைய கருணையையும் அடைந்தேன், நின்னலம் பெற்றேன் - நின்னின்பத்தையும் அடைந்தேன், ஒருவரும் செல்வத்து - நீங்குதற்கருமையான செல்வத்தில், யாண்டும் - எப்பொழுதும், நின்னோடு உறையவும் பெற்றேன் - உன்னோடு வசிக்கவும் பெற்றேன், திருநகர் நீங்கப்பின்னர் - திருவயோத்தியைவிட்டு வந்தபின்பு, செய்தவம் பயந்தது - (யான்) செய்த தவங்கொடுத்தபயன், ஒன்றோ—? [அநேகம்]; என்னா -

என்றுகூறி, வாள் எயிறு இலங்க நக்கான் - ஒளிபொருந்திய பற்கள் விளங்கும்படி சிரித்தான்.

குறிப்பு —ஒன்றோ, ஓ - எதிர்மறை. அருள்பெற்றேன் நலம்பெற்றேன் செல்வத்தியாண்டு முறையவும் பெற்றேன் என்று எதிர்மறையிலக்கணையாற் பரிகாசமாகக்கூறி யிகழ்ச்சிநகை செய்தனன் எனக். வடித்த என்றது கீளசெய்த எனப் பொருள் கூறலுமியையும். (௬௬)

விண்ணிடை யிம்பர் நாகர் விரிஞ்சனே முதலோராக லெல்லாங்
கண்ணிடை யொளியின் பாங்காகக் கடிகமழ் சாலே நின்றும்
பெண்ணிடை யரசி தேவர் பெற்றநல் வரத்தாற் பின்னர்
மண்ணிடை மணியின் வந்த வஞ்சியே போலவாள் வந்தாள்.

இ - ள் இம்பர் - இவ்வுலகத்தவர்கள், நாகர் - சாப்பசாதியார், விண்ணிடை விரிஞ்சனே முதலோர்க்கு எல்லாம் - விண்ணிலிருக்கின்ற பிரம தேவனே முதலானவர்க்கெல்லாம், கண்ணிடை - கண்ணிலிருக்கின்ற, ஒளியின் - பிரகாசத்தினது, பாங்கர் - பக்கமாகிய, கடிகமழ் - புதுமணங் கமழுகின்ற, சாலேநின்றும் - பன்னசாலேயிலிருந்து, பெண்ணிடை அரசி - பெண்ணிற் சிறந்தாளும், தேவர்பெற்ற நல்வரத்தால் - (ஸ்ரீமந்நாராயணனுல்) தேவர்கள் அடைந்த நல்லவரத்தினுல், பின்னர் - பிறகு, மண்ணிடை - புவியில், மணியின்வந்த -இரத்தினம்போலத் திருவவதரித்தருளிய, வஞ்சியே போலவாள் - (சாமானிய மானிடப்) பெண்ணேயே யொப்பாளுமாகிய எம்பிராட்டி, வந்தாள்—,

குறிப்பு —இம்பர் - இடவாகுபெயர். விரிஞ்சன் - சிருஷ்டிக்கிறவன் ஏகாரம்- பிரிநிலேயும் உயர்வு சிறப்புமாம் எம்பிராட்டியை இவ்வரக்கி பார்ப்பதுமுதல் ராக்ஷசசம்மாரத்துக்குக் காரணமேற்படுதலானும் அதற்குக் காலங்கிட்டியதானும் இனிநடக்குஞ் செயல்களேக் காணத் திரிலோகத்தவரு மொருங்குகூடிச் சாலேயினகண் ஒயாது பார்த்துக்கொண்டிருந்தன ரென்பார் 'கண்ணிடையொளியின் பாங்கர்க்கடிகமழ் சாலே' என்றார். இனி, முதலிரண்டடிகட்கு விரிஞ்சனே முதலோர்க்கு எல்லாம் கண் இடைதற்குக் காரணமான [காணக்கண் கூசும்படியான] ஒளிவடிவமுள்ள ஸ்ரீராமபிரானருகில் எனப்பொருள்கூறலுமமையும், இங்கே ஸ்ரீராமபிரானது திருமேனியின் திவ்வியகாந்தியைச் சிறப்பித்து அவனுக்கு ஒளியென்று ஒருபெயர் கூறினார் எனக் 'கண்ணிடைதற்கு' காரணமான ஒளியோடு இனிய பக்கத்திலுள்ள (கடிகமழ் சாலேயினின்று பிராட்டிவந்தாள்) என்னனுமாம் (௬எ)

ஊன்சுட வுணங்கு பேழ்வாய் புணர்விலி யுருவ நாறும்
வான்சுடாச் சோதி வெள்ளம் வந்திடை வயங்க நோக்கி
மீன்சுடா விண்ணு மண்ணும் விரிந்தபோ ரரக்க ரென்னுங்
கான்சுட முளேத்த கறபின் கனலியைக் கண்ணிற் கண்டாள்.

இ - ள். ஊன்சுட - (சுட்ட) மாமிசஞ்சுட, (அதனுல்), உணங்கு - வருந்துகின்ற, பேழ்வாய் - பெருவாயையுடைய, உணர்வு இலி - அறிவில்லா அசூர்ப்பநகை, உருவம் நாறும் - (பிராட்டியின்) திருவுருவத்தினின்றுண்டாகின்ற, வான்சுடா சோதிவெள்ளம் - சூரியப்பிரகாசம்போன்ற ஒளியின் மிகுதியானது, வந்து—,

இடை - பக்கத்தே, வயங்கல் நோக்கி - விளங்குதலைப் பார்த்து, மீன்சுடர் - நட்சத்திரங்களையும் சூரிய சந்திரர்களையுமுடைய, விண்ணும் - ஆகாயத்திலும், மண்ணும் - புவியிலும், விரிந்த - விரிவுபெற்ற, போர் அரக்கர் என்னும் கான் - போர்த்தொழிலையுடைய இராக்கதர்களென்றுகூறும் கானகத்தை, சுட - சுட்டெரிப்பதற்காக, முளைத்த - தோன்றிய, கற்பு கனலியை - கற்பாகிய நெருப்பினையுடைய பிராட்டியை, கண்ணில் - (தன்) கண்களால், கண்டான் - பார்த்தான்.

குறிப்பு —ஊ - தசை, னகரச்சாரியைபெற்று 'ஊன்' என வந்தது, வான் - பெருமை, வான்சுடர் எனவே சூரியனென்றும் மீன் - மின்னுவது, முதனிலை திரிந்து காரணப்பெயராய நட்சத்திரத்தை யுணர்த்திற்று. இனிமேல் இலங்கை தீப்பட்டெரிதற்கும் அரக்கர் மடிதற்கும் எம்பிராட்டியினது அழியாத கற்பே காரணமென்பது தோன்றக் 'கற்பின்கனலி' என்றார். அரக்கரென்னுங் கான்சுடமுளைத்த கற்பின்கனலி - உருவகம் காணற்கரியவளைக் கண்டான் என்பார் 'கண்ணிற் கண்டான்' என்றார். இங்கே, கனலி என்பதில் இ - பெண்பால் விகுதி. (௫௮)

மருவொன்று கூந்த லாளை வனத்திவன் கொண்டு வாரா
னுருவிங்கி துடைய ராக மற்றையோர் யாரு மில்லை
யரவிந்த மலரு ணீங்கி யடியிணை படியிற் றோய்த்
திருவிங்கு வருவாள் கொல்லோ வென்றகந் திகைத்து நின்றாள்.

இ - ள் மரு ஒன்று கூந்தலாளை - வாசனை பொருந்திய கூந்தலையுடைய இப்பெண்ணை, வனத்து - வனத்திற்கு, இவன் கொண்டு வாரான் - இவன் அழைத்து வரமாட்டான், இங்கு - இவ்வுலகத்தில், இது உருவு உடையார் ஆக - இவ்வுருவத்தை யுடையவராக, மற்றையோர் யாரும் இல்லை - மற்றப்பெண்கள் எவரும் இல்லை, திரு - இலக்குமிதேவி, அரவிந்த மலருள் நீங்கி - தாமரைமலரினின்றும் நீங்கி, அடியிணை - இரண்டுபாதங்களும், படியில் தோய - புவியிற்கலக்கும்படி, இங்கு - இவ்விடத்திற்கு, வருவாள் கொல்லோ - வருவாளோ? என்று - என்றுநினைத்து, அகம் திகைத்து நின்றாள் - மனம்பிரமித்துநின்றாள்.

குறிப்பு —கொல் - ஐயம், ஓ - வினா இங்கு - அசையுமாம் மலருள் - உருபு மயக்கம் பிராட்டியின் கூந்தல்மணம் இயற்கைமணமே யென்பார் 'மருவொன்று கூந்தல்' என்றாள் கூந்தற்கு இயற்கையாகவே மணமுண்டென்றலை, "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி, காமஞ் செப்பாது கண்டது மொழிமோ, பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற், செறியெயிற் றரிவை கூந்தலி, னறியவு முளவோநீ யறியும் பூவே." என்னுந் திருப்பாசுரத்தாலறிக. இனி, செயற்கை மணமுமாம் தெய்வ மங்கையாகிய திருமகள் அத்தன்மையைவிட்டு மானிடத்தன்மை பூண்டுவந்தாளென்பது தோன்ற 'அடியிணைபடியிற்றோய' என்றான். (௫௯)

பண்புற நெடிது நோக்கிப் படைக்குநர் சிறுமை யல்லா
லெண்பிறங் கழகிற் கெல்லை யில்லையா மென்று நின்றாள்
கண்பிறப் பொருளிற் செல்லா கருத்தெனி னஃதே கண்ட
பெண்பிறந் தேனுக் கென்றா லென்படும் பிறருக் கென்றாள்.

இ - ள். பண்பு உற - குணமாயமையும்படி, நெடிது நோக்கி - மிகுதியாகவாலோசித்துப்பார்த்து, படைக்குநர் - சிருஷ்டிப்பவரது, சிறுமை அல்லால் - குறைவு

லலாமல், எண்பிறக்கு அழகிறகு-மதிப்புமிகுந்த அழகினுக்கு, எல்லை இல்லை என்று நின்றாள்-வரம்பில்லையென்றுகூறி (பிரமைகொண்டு) நின்றவச் சூர்ப்பநகை, கண்ட-(இப்பெண்ணைப்) பார்த்த, பெண்பிறந்தேனுக்கு-பெண்ணாய்ப்பிறந்த எனக்கு, கண் பிறபொருளில் செல்லா-கண்கள் வேறுவஸ்துவினிடத்திற் செல்லமாட்டா; கருத்து எனின்-(என்) மனமோ வென்றால், அஃதே-இவ்வாறே பிறபொருளிற் செல்லமாட்டாது, என்றால்—, பிறருக்கு-ஆடவருக்கு, என்பமே என்றாள்-(கண்களும்மனமும்) யாது (நிலைமையை) அடையும் என்றுகூறினள் (௯௦)

பொருந்திறத் தானை நோக்கிப் பூவையை நோக்கி நின்றாள்
கருத்தமற் றினிவே றில்லை கமலத்துக் கடவு ளானே
யொருந்திறத் துணர நோக்கி யுருவினுக் குலகம் மூன்றி
னிருந்திறத் தாக்கு செய்த வரம்பிவ ரிருவ ரென்றாள்.

இ-ள் பொருந்திறத்தானை நோக்கி-போர்செய்யும் வலிமையையுடைய ஸ்ரீராமபிரானைப்பார்த்தும், பூவையைநோக்கி-சீதாபிராட்டியைப் பார்த்தும், நின்றாள்-(வியப்படைந்து) நின்ற அசசூர்ப்பநகை, கமலத்து கடவுள்தானே-தாமரைமலரிலிருக்கிற பிரமதேவனே, ஒருதிறத்து உணர-ஒரு தன்மையிலறியுமாறு, நோக்கி-ஆலோசித்துப்பார்த்து, உருவினுக்கு-வடிவின்பொருட்டு, உலகம் மூன்றின்-(சுவர்க்கமத்திய பாதாளமென்னும்) திரிலோகங்களிலுமிருக்கிற, இருந்திறத்தாக்கும்-(ஆண்பெண் என்னும்) இருவகையாக்கும், செய்த—, வரம்பு-எல்லை, இவர் இருவர்-இவர்கள் இருவருமாயினார், இனி, கருத்துவேறு இல்லை-இனி ஆலோசிக்க வேறு (உவமை) இல்லை, என்றாள்—, (௯௧)

பொன்னைப்போற் பொருவின் மேனிப் பூவைப்பூ வண்ணத் தானிம்
மின்னைப்போ லிடையா ளோடு மேவுமெய் யுடைய னல்லன்
றன்னைப்போற் றகையோ ரில்லாத் தளிரைப்போ லடியி னாளு
மென்னைப்போ லிடையே வந்தா ளிகழ்விப்பே னிவளை யென்னா.

இ-ள். பொன்னைப்போல-பொன்னினைப்போல, பொருவு இல மேனி-ஒப்பில்லாத திருமேனியையுடைய, பூவைப் பூவண்ணத்தான-காயாமலர்போலுங் கரிய நிறத்தினையுடைய இப்புருடோத்தமன், இம்மின்னைப்போல இடையாளோடு-மின்னலைப்பொலுமிடையினையுடைய இப்பெண்ணுடனே, மேவும்-சேர்கின்ற, மெய் உடையன் அல்லன்-உடலையுடையவனல்லன், தன்னைப்போல தகையோர் இலா-தன்னைப்போலிருக்கிற அழகினையுடையாரில்லாமலிருக்கப்பெற்ற, தளிரைப்போல அடி-(இளந்) தளிரைப்போன்ற (மிருதுவான) பாதத்தையுடைய, இன்னாளும்-இப்பெண்ணும், என்னைப்போல-என்னைப்போல, இடையேவந்தாள்-நடுவே வந்தவளாயிருக்கின்றாள், இவளை—, இகழ்விப்பேன் என்னா-(இப்புருடோத்தமன்) இகழ்ந்துகூறுமாறு செய்வேன் என்று நினைத்து. (௯௨)

வருமிவண் மாயம் வல்லள் வஞ்சனை யாக்கி நெஞ்சந்
தெரிவிலே டேறுந் தன்மை தீரியோய் செயலிற் றன்று
லுருவிது மெய்ய தன்று லூனுகா வாழ்க்கை யானை
வெருவினெ னெய்தி டாமல் விலக்குதி வீர வென்றாள்.

இ - ள். சீரியோய் - நற்குண நற்செய்கையுடையவனே! வீர - ஆண்மையை யுடையீர்! வரும் இவள் - (இங்கு) வருகின்ற இப்பெண், மாயம்வல்லள் - மாயை யில் வல்லவள், (மேலும்), வஞ்சனை அரக்கி - வஞ்சகத்தையுடைய ராக்ஷஸி, நெஞ்சம் தெரிவு இலள் - மனதை யறிந்தறிகிலாதவளா யிருக்கின்றாள், (ஆதலின்) தேற்ற தன்மை -(இவளை இன்னாளென்ற) தெளிதல், செயலிற்று அன்று - செய்யத்தக்க தன்மையுள்ளதன்று, (அன்றியும்), உருவு இது மெய்யது அன்று - இவ்வுருவம் உண்மையானதில்லை, ஊன்றுகா வாழ்க்கையாளை வெருவினென் - தசையை யுண்ணுகின்ற வாழ்வினையுடைய இவளை அஞ்சினேன், எய்திடாமல் - (இவள் இங்கு வந்து) சேராதபடி, விலக்குதி என்றாள் - தடுத்துவிடுவீராக என்று கூறினாள்.

குறிப்பு — சுந்தர சொரூபியாய் மாறுவேடந் தரித்து வந்தவளென்பாள் 'மாயம் வல்லள்' என்றாள். நம்மை உண்ணவோ? நம்மனமென்பாற் செல்லாவண்ணம் செய்யவோ? இத்தந்திர மெடுத்தாளென்பாள் 'வஞ்சனையரக்கி' என்றாள். இவள் மேனியைக்கண்டு மயங்கலாகாது யதார்த்தவாதியல்லள் என்பாள் 'நெஞ்சந்தெரிவி லள்' என்றாள். இனி, (எனக்கு வசமாகும்படியிளகியவுமது) மனத்தின் தன்மை யை யறியாதவள் என்றும், (என்பாலும் அவள் பாலும் இரங்கற்கரியதானவுமது) மனத்தின் தன்மையறியாதவளென்றும் பொருள்கோடலுமாம். அன்று ஆல் என்பன அசைகள். இனி, வஞ்சனையறியாத சீரியோயாகிய வுனது செயலின்று அன்று, மாயமவஞ்சனை இவற்றையுடைய அரக்கியாகிய எனது செயலாம் எனவோர் உண்மைப்பொருள் விளங்குமாறு கூறினாளெனனலுமாம். (சுசு)

ஒள்ளிது னுணர்வு மின்னே யுன்னையா ரொளிக்கு மீட்டார்
தெள்ளிய நலத்தி னாலுன சிந்தனை தெரிந்த தம்மா
கள்ளவ லரக்கி போலா மிவளைநீ காணடி யென்னா
வெள்ளிய முறுவன் முத்தம் வெளிப்பட வீர னக்கான்.

இ - ள். வீரன் - ஸ்ரீராமபிரான், மின்னே - பெண்ணே! உன் உணர்வு - உனது அறிவு, ஒள்ளிது-பிரகாசமுடையது [தீக்ஷ்ணயமுடையது], உன்னை ஒளிக்கும் ஈட்டார் - உன்னை மறைத்துவைக்கும் வலியுள்ளவர்கள், யார்-எவர்? தெள்ளிய-தெளியும்படிசெய்த, நலத்தினால் - நன்மையினால், அம்மா—! உன் சிந்தனைதெரிந்தது - உனது எண்ணம் அறியலாயிற்று, கள்ளம் வல் அரக்கி ஆம் இவளை - திருட்டுத்தனமுள்ளவலிய ராக்ஷஸியாகும் இவளை, நீ—, காணடி - பார்ப்பாயாக, என்னா- என்று கூறி, வெள்ளிய -வெண்மை நிறம் பொருந்திய, முத்தம் முறுவல் - முத்துப் போன்ற பற்கள், வெளிப்பட - வெளியேதோன்றும்படியாக, நக்கான் - சிரித்தான்,

குறிப்பு — மின் - உவமவாகுபெயர். இவ்வரக்கிக்குத் தப்பி நான் பிழைப்ப தேயருமையாயிருக்க நின்னை யெவ்வாறு காப்பேனென்பார் 'உன்னையாரொளிக்கு மீட்டார்' என்று கூறினார். இனி, இவள் அரக்கியல்ல நீயேயரக்கி யென்பார் இங் ஙனங்கூறினா ரெனனலுமியையும் "கடிசொல்லில்லை காலத்துப்படினே" என்றத னால், அம்மாவென்பது. திசைச்சொல்லாகிய விளாவனை, அன்றி 'அம்ம' என்ற அகரவீற்றுரிச்சொல் "அம்மகேட்பிக்கும்" என்றதனால் யானொன்று சொல்வேன் கேளாயெனனும் பொருண்மையை யுணர்த்தி உரையசையாய்விட்டது "உரைப் பொருட்கிளவி நீட்டமும் வரையார்" என்னும் சூத்திரப்படி நீண்டு, பின்பு "அம்ம வென்னு மசைச்சொ னீட்டம், அம்முறைப் பெயரொடு சிவணா தாயினும், விளியொ

யகொளபதெளியு மோரே" எனனுஞ சூததிரததால அமமாகொறறு எனற வழிக கொறறனெனறது எதிரமுக மாகசூதறகுக கேளாயெனனுமபொருடகது நினறதாத விற பிரிநது நினறவிளியேலா தெனறுணாக. போல - ஒபபில போலி, இபபாட்டில் முதல மூனறடியில வந்தனயாவும, எதிரமறையிலககணையாகிய பிறகுறிபபு வஞசபபுகழசசியணி (௬௪)

ஆயிடை யமுதின வநத வருநததிக கறபி னஞசொல
வேயிடை தோளி னுளும வீரனைச சேருமவேலை
நீயிடை வநத தெனனை நிருதாதம பாவை யெனனுக
காயெரி யனைய கள்ள வுள்ளததாள கதிதத லோடும

இ - ள. ஆயிடை - ஆஙகு, அமுதின வநத - அமிாதமபோலு மெழுநதருளிய, அருநததி கறபின - அருநததியினது கறபினையும, அம சொல - அழகிய வாாததையையுமுடைய, வேய இடை தோளினுளும - மூஙகில (உவமைககுத தோலவியுறறுப) பினவாஙகுகினற புயததினையுடைய சீதாபிராடடியும, வீரனை சேரும வேலை - ஸ்ரீராமபிரானைக கிடடுகினற சமயததில, காய எரி அனைய - எரிகினற தீயினையொதத, கள்ளம உள்ளததாள - வஞசகததனமைபொருநதிய மனததினையுடையாளாகிய அசசூாபபநகை, (பிராடடியை நோககி), நிருதாதமபாவை - அரககாகளுடைய பெணணே! நீ—, இடை வநதது எனனை - (எஙகளுககு இடையூறாக) நடுவேவநதகாரணம யாது? எனறு - எனறுகூறி, கதிததலோடும - கோபிததவளவில,

குறிப்பு —அ + இடை - ஆயிடை, சுடடு நீணடது "நீட வருதல செயயுளுளுரிததே" எனபவாகலின அமிாதங கடகினிதாகிய மெனமையுந தனனை நுகாநதாா பிறிது நுகராமறறடுககு மெனமையுமுடைமையின 'அமுதினவநத' எனறாா. இதனால அரககி விடமென வநதவளெனபதாம். அமுதின, இன - உவமவுருபு இனி, உருபு மயககமாககொணடு அமுதொடுவநத வெனவிரிததுப பாறகடலில அமுதொடு பிறநதவளெனனலுமியையும மறறு, அமுதினவநத அஞசொல எனக கொணடு "அஞசொறக ளமுதி னளளிககொணடவள" என மேலவருமசெயயுட் கொபபிடடுக கூறுதலுமாம (௬௫)

அஞசின ளஞசி யன்ன மினனிடை யலசவோடிப
பஞசினமெல லடிக ணோவப பதைததனள பருவக கால
மஞசிடை வயஙகித தோன்றும பவளததின் வலலி யெனனக
குஞசர மனைய வீரன குவவுததோ டழுவிக கொணடாள.

இ - ள் அஞ்சினள - இயற்கையாகவே யசசததினையுடைய சீதாபிராட்டி, அஞசி - பயநது, அனனம - அனனபபுடபோலும, மின இடை அலச ஓடி - மினனல போனற இடை தளருமபடி ஓடடங்கொணடு, பஞசின - பஞசியைபபோலும, மெல் அடிகள - மெனமை பொருநதிய பாதஙகள, நோவ - நோகுமபடி, பதைததனள - பதறுதலுறறவளாய்; பருவம காலம மஞசு இடை - காாபபருவககாலததிலிருககிற மேகததின்கண், வயஙகி தோனறும-பிரகாசிததுக் காணப்படுகினற, பவளததின் வலலி என்ன - மின்னலைப்போல, குஞசரம் அனைய வீரன் - யானையை

யொதத ஸ்ரீராமபிரானது, குவவு தோள - திரட்சிபொருந்திய புயஙகளை, தழுவிக் கொணடாள - கட்டியணைததுக கொணடனள

குறிபபு —மகடூ குணஙகளிலொனறாய அசசததினையுடையாள அஞசியது வியபபனறெனபார 'அஞசினளஞசி' எனறார விரைநதோடும வலியினமை விள ஙக அனனததை உவமை கூறினார. அனனம மின எனபுழி உவமவுருபு தொகு ததல. இனி அஞசினள எனபதை, முறறெசசமாககொணடு அஞ்சி யஞசி எனனலுமாம. பகைததனள - முறறெசசம பருவககாலமஞசு - ஆவணி புரட்டாதி மாதஙகளில தோனறுமேகம இமமாதஙகள காாபபருவமாதலை "காரே கூதிா முனபனி பினபனி, சிரிள வேனில வேனி லென்றாங, கிருமூனறு திறததது பெரும பொழுத வைதா, மாவணி முதலா விரணடிரண டாக, வாடி யிறுதிய வாயுங காலே" எனபதனானுணாக கரியமேகமெனபாா இஙஙனங கூறினார. மஞசு - பிரானுககும, பவளததின வலலி - பிராட்டிககும உவமை. பவளவலலி - ஆகுபெயராய மின னலை யுணாததிறறு ஸ்ரீராமபிரானுககு யானையை உவமைகூறியதில அவனது தோள யானையினது துதிககைபோனறதெனபதுங குறிபபாலமையும. (சுசு)

வளையெயிற றவர்க ளோடு வருமவிளை யாடடென றாலும
விளைவன தீமை யேயா மெனபதை யுணாநது வீர
னுளைவன வியறற லொலலை யுனனிலை யுணாரு மாயி
னிளையவன முனியு நஙகை யேகுதி விரைவி னெனறன

இ - ள. வீரன - ஸ்ரீராமபிரான, வளை எயிறறவாகளோடு வரும - வளைநத பறகளையுடைய அரககிகளுடனே சமபவிககினற, விளையாடடு எனறாலும - விளை யாடடெனறு கூறினாலும, விளைவன - விளையுஞ செயலகள, தீமையே ஆம எனப தை - தீதேயாகுமெனபதை, உணாநது - நினைதது, நஙகை-பெணணே! உளைவன இயறறல - மனவருததப படுமபடியான செயலகளைச செயயாதே, இளையவன - இலககுமணன, ஒலலை உன நிலை உணருமாயின - சீககிரம உனததனமையை யறிவா னேயானால, முனியும - கோபிபபான, விரைவின ஏகுதி எனறன விரைவாகப் போயவிடு எனறு கூறினன. (சுஎ)

பொறபுடை யரககி பூவிற புனலினிற பொருபபில வாழு
மறபுடை யுளளத தாரு மஙஙகனு மமரா மறறு
மெறபெறத தவஞசெய கினறா ரெனனைநீ யிகழுவ தெனனே
நற்பொறை நெஞசி னிலலாக களவியை நசசி யெனறாள.

இ - ள. பொறபு உடை அரககி - அழகினையுடைய அவவிராகூசியானவள, பூவில - பூமியிலும, புனலினில் - ஜலததிலும, பொருப்பில - மலையிலும, வாழும - வாழகினற, அறபு உடை உளளததாரும - அனபினையுடைய மனததினையுடையவாக ளும, அநஙகனும - மன்மதனும, அமரா - தேவாகளும, மறறும - மறறவாகளும, என் பெற - எனனையடையுமபடி, தவம செய்கினறா - தவஞசெயதுவருகினறா கள, (இஙஙனமிருகக), நீ -நீவிா, நல பொறை -நலலபொறுமை, நெஞ்சின இலலா- (தன்) மனததிலிலலாத, களவியை - களளததனமுடைய இவளை, நசசி - விருமபி, எனனை இகழ்வது - எனனை இகழ்சசி செய்வது, என - யாதுி என்றாள்—;

குறிப்பு — உடை - உடைய எனபதன விகாரம். அனபு - அறபென விகாரப படடது. செயயுளாதலின, புவியிலும நீரிலும மலையிலும இருநது தவமியறறிக கடவுளிடததிலனபினையுடைய முனிவா எனபான 'பூவிற புனலினிற பொருபபில வாழு மறபுடையுள்ளததா' னெனறான இனி, பூவிலும் புனலினும் பொருபபிலும வாழகினற அனபுடையுளளததாராகிய பிரமா விஷ்ணு ருததிரன எனனும இவரும எனப் பொருளகோடலுமாம (௬௮)

தனனொடுந தொடாவி லாதே மெனனவுந தவிரா டாளிக
கனனெடு மனததி சொலலுங களளவா சகஙக ளெனனு
மினனொடு தொடாநது செலலு மேகமபோன மிதிலை வேநதன
பொனனொடுமே புனிதன போயப பூமபொழிற சாலை புககான

இ - ள. தனனொடும தொடர்வு இலாதேம எனனவும - நினனுடனே உறவிலலாமலிருககிறே மெனறு கூறவும, தவிராள - ஒழியாதவளாகி, இ கல நெடுமனததி - கலலினும பெரிய மனததினையுடைய இவள, களளவாசகஙகள - பொயம மொழிகள, சொலலும - கூறுகினறாள, எனனு - எனறு நினைதது, புனிதன - ஸ்ரீராமபிரான, மினனொடுதொடாநது செலலும மேகமபோல - மினனலுடனே தொடாநது போகினற மேகததைப்போல, மிதிலை வேநதன பொனனொடுமே - ஜானகிப பிராடடியுடனே, போய-சென்று, அ பூ பொழில சாலைபுககான - அவவழகிய சோலைசூழநத பனனசாலையுட் புகுநதான.

குறிபபு — "வைகலு நீருட கிடப்பினுங கலலிறகு, மெலலெனறல சால வரிதாகு - மஃதேபோல, வைகலு நலலறங கேடபினுங கீழகட்குக, கலலினும வலலெனனு நெஞசு" எனறபடிதான எவவளவு சொலலககேடடுமே அவள மனநதாழாததுபறறி 'தனனொடுந தொடாவி லாதே மெனனவுந தவிரா டாளிக கனனெடு மனததி' எனறான 'நெடுமனம' எனறது, "எணபதுகோடி நினைநதெணணுவன" எனறபடி வரமபிலலாது மேனமேற செலலும ஆசைககருததுநீடசியையுடைய மனமெனறபடி மினனல் பிராடடிககும மேகம பெருமானுககும உவமை மிதிலை - நிமியெனனும அரசனது குமாரனும சனககுலததலைவனுமான மிதி எனனும அரசனால ஏறபடுததபபடட நகரமெனறு காரணபபெயா. (௬௯)

புககபின போய தெனனு முணாவினள பொறையு ணீஙகி
யுககதா முயிர ளொனறு முயிாததில ளொடுஙகி நினறா
டகிலள மனததுள யாதுந தழுவிலள சலமுங கொணடாண
மைககருங குழலி னுணமாட டனபினில வலிய னென்பாள

இ - ள புககபின போயது 'எனனும உணர்வினள - (ஸ்ரீராமபிரான பனனசாலையுட) புகுநதபிறகு போயவிடடதெனனும அறிவினை யுடையவளும, பொறையுள நீஙகி உககது ஆம உயிரள - உடலினினறும நீஙகிவிடடதாகிய உயிரினையுடையாளும, ஒனறும் உயிாததிலள ஒடுஙகி நினறாள - சிறிதும சுவாசம விடாமல் ஒடுஙகி நின்றவளும, தகிலள மனததுள் யாதும தழுவிலள - வசப்படாத மனததில எவவிஷயமும ஏற்றுககொளளாதவளுமாகிய சூாப்பநகை, சலமும் கொணடாள - கோபததையும் அடைநது, மை கருஙகுழலினுள் மாடடு - கரிய கூநதலினை

புடையாள் (சீதாபிராட்டியின) இடதது, அன்பினில் வலியன் - அன்பில வலிமை யுளளவன [பேரனபுடையான], என்பான் - எனறுகூறுவான.

குறிப்பு:—பொறை - சுமககப்படுவதெனறு உடமபுககுக் காரணப்பெயா, பொறு - பகுதி, ஐ - செயபபடுபொருள விகுதி. காமவேதனை மிகக இவளுககு அப்பொழுது வலிமை யழிவால தன உடமபுந தாஙகமாட்டாததொரு பெரிய பாா மாகததோனறியது எனபது தோனற இஙகே உடமபை வேறுபெயரால குறியா மற 'பொறை' எனற சொலலாற குறிததாா பொறையுள - உருபுமயககம (எ௦)

நினறில ளவனைச சேரு நெறியினை நினைநது போனு
ளினறிவ னாகம புலலே னெனினுயி ரிழபபெ னெனனுப
பொனறிணி சரளச சோலைப பளிககறைப பொதுமபா புககாள
சென்றது பரிதி மேலபாற செககாவந திறுதத தனறே.

இ - ள் நினறிலள - (அஙகு) நிலலாமல, அவனை - அநத ஸ்ரீராமபிரானை, சேரும - அடைகினற, நெறியினை நினைநது - வழியை நினைததுககொணடு, போனுள - சென்ற சூாபபநகை, இவன ஆகம - இவனது மாாபினை, இனறு புலலேன எனின - இறறை நாள அணையேனாயின, உயிா இழபபென எனனு - (என) உயி ரினை இழநதுவிடுவேன எனறுகூறி, பொன திணி - பொறபொடிபோனற பூநதாது ககள அடாநத, சரளம சோலை-நேரமைபொருநதிய சோலையிலுளள, பளிககு அறை பொதுமபா புககாள - (தனது) பளிஙகுமணடபததினது உளளிடததிலே நுழைந திடடாள, (அபபொழுது), பரிதி - சூரியன, மேலபால சென்றது - மேற்குததிககிற போயச சோநதது [அஸ்தமிததது], செககாவநது இறுததது - (அததிசையிற) செவவானம வநது சோநதது

குறிபபு —பொன - உவமையாகுபெயா பளிககறை - ஸ்படிககலலினு லமைககபபடட சிறுவீடு. பளிககறை - வேறறுமையில மெனறொடாவன றொட ராயிறறு 'மேலபால' எனபது மததிமதீபமாய 'பரிதிசெனறது செககாவநதிறுத தது' எனற இரணடனேடு மியையும. (எக)

வேறு

அழிநத சிநதைய ளாயயா வாளவயின
மொழிநத காமக கடுஙகனன மூணடதால
வழிநத நாகததின வனறொளை வாளெயிற
றிழிநத காாவிட மேறுவ தெனனவே

இ - ள (அவவநதிபபொழுதில்), அழிநத சிநதையளாய அயாவாள் வயின - அழிநத மனமுடையவளாயச சோரும அசசூாபபநகையினிடதது, மொழிநத - (முன) கூறிய, காமம கடுஙகனல - காமமாகிய கொடியதீயானது, வழிநத - ஒழு குதலுறற, நாகததின - நாகசாப்பததினது, வல தொளை - கொடிய துவாரததினை யுடைய, வாள எயிறு - வாளபோலுங் கூாமைபொருந்திய பறகளினினறும, இழிநத - இறஙகிய, காாவிடம் - கரியவிஷம, ஏறுவது என்ன - (உடலில) ஏறுவது போல, மூண்டது - (அவள உடல் முறறும் வியாபித்து) எரிவதாயிறறு.

குறிப்பு.—ஸ்ரீராமபிரான் தன்னை மறுத்தமையால் இனிச் செய்வதியாதெனப் பலவாறு சிந்தித்து ஒன்றுந்தோன்றாது உடைந்தமைவிளங்க 'அழிந்தசிந்தையளாய்' என்றார். அயாவுள் - வினையாலணையும் பெயர். வயின் - ஏழனுருபு. கனல்- கனல்வது வினைமுதற்பொருள் விகுதி புணர்ந்து கெட்டது. நாகந்தோலுரிக்கும் பொழுது நஞ்சுகாலுதல் மிகுமாதலின் 'வழிந்த' என்றார். எயிற்றின் துளைவழியாய் இறங்கிய நஞ்சால் பாம்பின் உடல்வெந்து தோல் உரியுமென்பர். காமக் கொடுமையின்றிறம் "உள்ளினுஞ் சுட்டிடு முணர்வு சோர்விற, கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத், தள்ளினுஞ் சுட்டிடுந் தன்மை யீதினால், கள்ளினுங் கொடியது காமத் தீயதே," என்பவாகலின் 'காமக்கடுங்கனல்' என்றார். (௭௨)

தாடகைக்கொடி யாட்ட மார்பிடை
யாடவர்க்கர சன்னயி லம்புபோற்
பாடவத்தொழின் மன்மதன் பாய்கணை
யோட வுட்கி யுயிருளைந் தாளரோ.

இ - ள். தாடகை கொடியாள் - தாடகையென்னுங் கொடியராக்ஷஸியினது, தடமார்பிடை - பெரியமார்பினிடத்தே, ஆடவர்க்கு அரசன் - புருஷோத்தமனாகிய ஸ்ரீராமபிரானுடைய, அயில் அம்புபோல - கூர்மைபொருந்திய பாணத்தைப்போல, பாடவம் தொழில் மன்மதன் - சாமர்த்தியமான போர்த்தொழிலையுடைய மன்மதனது, பாய்கணை - பாய்கின்ற அம்புகள், ஓட - (தன்மனத்திற்பாய்ந்து) ஓடுவதால், உட்கி - (அவள்) அஞ்சி, உயிர் உளைந்தாள் - பிராணாவஸ்தை யடைந்தாள்.

குறிப்பு.—கொடியாள் - கொடுமையென்னும் பண்படியாகப் பிறந்தபெயர். ஆண்மையுடையார் யாவரினுஞ் சிறந்தவனாதல்பற்றி 'ஆடவர்க்கரசன்' என்றார். அரசன்னயில் - விரித்தல். கணை முதலியன கட்புலனுக்குத் தோன்றாவாறு கொண்டு தானும் அநங்கனாய் நின்று "திண்பரித் தென்றலுந் தேருந் தார்புனை, வண்பரிக் கிள்ளையு மாலை யானையுங், கண்கடைப் படுங்கொலைக் காமசேனையு மெண்படப் புகுந்தன னிரதி காந்தனே" என்றவாறு வீரபோர்க்குரியனவாகச் சேனையோடு சென்று எவரையும் வெல்லுந்திறமையுடையான் என்பதுபற்றிச் சாமர்த்தியமான போர்த்தொழிலையுடையானென்று கூறினார். பாடவம் என்றதற்குக் களிப்பென்றேனும், சுகமென்றேனும் பொருள் கோடலமையுமாயினும் இப்போரினிறுதியில் இவள் இன்பம் பெற்றுத் துன்பமே பெற்று மடிவாளென்னும் உறுதி நோக்கி அவை பொருந்தாவெனக் இது பற்றியே மன்மதனிவள்மேலேவிய கணைக்குத் தாடகையைக்கொன்ற அம்பினை யுவமைகூறினார். மன்மதன் கணை - தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலோற்பலமென் மலர்கள் ஐந்தாம், "அந்த வரவிந்த மாம்பூ வசோகப்பூப், பைந்தளிர் முல்லை பணிநீலம் - மைந்துமே, வீரவேண் மைந்தரையும் வேண்டுங்கண் மாதரையு, மாரவே ளெய்யு மலர்" இவை திரவியபாணம். இங்கிதம் மதநம், வசீகரணம், மோகனம், சந்தாபம் இவை பாவபாணமென் ஐங்கணை இருவகை என்ப. இக்கணைகள் செயலில் வன்மையுடைமை பற்றிப் 'பாய்கணை' என்றார். அம்மலர்களின் செயலின் வன்மையை "இணைக்கு மரவிந்த நீள்பசலை மாம்பூ, வினைத் துணைவு நீக்கு மசோகு - வனத்திலுறு, முல்லை கிடைகாட்டு மாதே முழுநீலங், கொல்லு மதனம்பின் குணம்" என்பதனாலறிக. தாடகை- மலையிற் சஞ்சரிப்பவள், இவள் சுகேது என்னும் யக்ஷனது மகள், சுந்தனென்பவனது மனைவி; ஆயிரம்யானைவலிமை கொண்டவள், கணவன் அகஸ்தியரது கோபத்திற்கு இலக்காய்ச் சாம்பரானதை

யறிந்த இவன் தன் புத்திரர்களாகிய சுபாகு மாரீசன் என்னும் இவர்களுடனே அம்முனிவரை யெதிர்த்துச் சென்றபொழுது அவர் இட்டசாபத்தால் மூவரும் ராக்ஷஸராயினர். ஸ்ரீராமபிரான் தாடகையைக் கொன்றது, விசுவாமித்திராச்சிரமத்துக்குச் செல்லும் வழியிடையிலென்க. (எக)

கலையு வாமதி யேகறி யாகவன்
சிலையின் மாரனைத் தின்னு நினைப்பினள்
மலைய மாருத மாநெடுங் காலவே
லுலைய மார்பிடை யூன்றிட வோயுமால்.

இ - ள் (அசரூபப்பாவை), கலை உவாமதியே - (பதினாறு) கலைகளையுடைய பூரண சந்திரனே, கறியாக - கறியாகும்படி (கொண்டு), வன் சிலையின் மாரனை - வலிய (கரும்பு) வில்லினையுடைய மன்மதனை, தின்னும் - தின்கின்ற, நினைப்பினள் - எண்ணத்தையுடையாளாகி, மலயமாருதம் மாநெடுங்காலவேல் - தென்றற்காற்றாகிய பெரிய கொடிய வேலானது, உலைய - (அவன்) வருந்தும்படி, மார்பிடை ஊன்றிட - (அவனுடைய) மார்பினிடத்தே தாக்கிட (அதனால்), ஓயும் - சோர்வடைவாளாயினள்.

குறிப்பு.—கலை - சந்திரன்பங்கு. உவாமதி - பௌர்ணமிச் சந்திரன். ஏகாரம் - பிரிநிலை. கறி - கறிக்கப்படுவது செயப்படுபொருள் விகுதி புணராது கெட்டது, கறித்தல் - கடித்தல், புசித்தல் கரும்புவில் பிறவிற்களைப்போல் வன்மைபெறாது இலேசேயாயினும் மனோவேதனை பெரிதும் விளைக்கும் மாரனது கொடிய செயலை அவ்வினைமேலேற்றி 'வன்சிலை' என்றார். மதியும் மாரனும் இவளை வருத்துவதில் ஒருதன்மையராயினும் கட்புலனுக்குத் தோன்றும் மதியின்மேற் சினமிக்கது தோன்ற மதியை உண்பொருளினை யுட்செலுத்தற் கின்றியமையாத கறியாகக் கருதினளென்க. மலயமாருதம் - பொதியமலையினின்றும்மீழியுங்காற்று. மலயம் - பொதியமலை, "தென்மலை மலயந் தென்றல் வருமலை" என்பது பிங்கலந்தை மாநெடு- ஒருபொருட் பன்மொழி. இச்செய்யுளிற்குறித்த சந்திரன் மன்மதன் தென்றல் என்பனவும் அடுத்த கவிகளில் வருகிற கடல் அன்றில் முதலியனவும் காமோத்தீபகப்பொருள்களாதலை "தென்றற்கும் வீணைக்கும் சேமணிக்குங் கோகிலத்துக், கன்றிற் கமைக்காழிக் கமபுலிக்கு - நின்றரற்று, மனனைக்கு மாரற் கயாந்தாளொன் றனன்மே, யெனனைக் குமாரற் கியம்பு" என்பதனானுணர்க (எச)

அலைக்கு மாழி யடங்கிட வங்கையான்
மலைக்கு லங்களிற் றூக்கு மனத்தினு
ணிலைக்கும் வானி னெடுமதி நீணிலா
மலைக்க நீங்கு மிடுக்கினண் மாதுவாள்,

இ - ள் அலைக்கும் ஆழி அடங்கிட - துன்பஞ்செய்கின்ற கடல் (கோஷியாது) அடங்கிப்போம்படி அங்கையால் - (தனது) உள்ளங்கையினாலே, மலைக்குலங்களில் - மலைக்கூட்டங்களால், தூக்கும் மனத்தினள் - (அதைத்) தூர்த்துவிடக்கொள்ளும் மனத்தினையுடையாளாகி, வானில் நிலைக்கும் நெடுமதி - ஆகாயத்தில் நிலைபெற்றிருக்கின்ற பூரண சந்திரன், நீள்நிலா - நெடிய நிலவினாலே, மலை

கக - (அவளைத்) தியங்கும்படி செய்ய, (அதனால்), நீங்கும் - (தான் செய்யக்கருதிய தொழிலினின்றும்) நீங்கி, இங்கினை மாந்துவாள் - இடைஞ்சலேயுடையாளாகி உள்ளழிந்தாள்.

கருத்து —கடலைத் தூக்கக்கருதியவுடனே, கடல் மதலேயாகிய சந்திரன் தன் தாயகருத் தீங்கு நேரிடாவாறு தன்னிலவினால் அவளை வெருட்டி வெற்றிகொண்டனென்பதாம் "குரைகடல் மதிக்கு மதலேயைக், குறுமுயலொளிக்கு மானேனை, பிரவிருளகற்று நிலவனே, பிறையவன் முடித்த வணியனைக், கரியவன் மனத்தினுதையனைக், கயிரவ மலர்த்து மவுணனைப், பாவுநா தமக்கு நின்றிரு, பதமலா தப்பவினையயே" என்பதனால் கடலுக்கு மதி மதலேயாதல் காண்க.

குறிப்பு.—மயலவினை செழிக்கவும், துயில்வினை யொழிக்கவும் இரைதலபற்றி 'அலேக்கும்' என்றார் இனி, அலேகளேக்கரையில் மோது மாழியென்றலுமாம். அங்கை - அகங்கை யென்பதன் விகாரம். அவல்கக்கண்முடையாளாகலானும், அவள் உள்ளங்கையிற் பந்துபோல மலேகிறகுமென்ல கைக்குப் பெருமையாகலானும (அங்கை) - அழகியகையென வுரைகூறுது விட்டாம். குலங்களில், இல - உருபுமயக்கம மேகங்களாற்சிறிது மறைபடாத தன்மைதோன்ற 'நிலேக்கும்' என்றூர். நிலா - சந்திரபபிரபை மலேக்க - இப்பிறவினை யெச்சத்திறகு மலேய என்பது தன்வினையாம். நீங்கும் - முற்றெச்சம். நீங்குமிடுக்கினள் மாந்துவாளென்பதற்கு வலி நீங்கினவளாய மரணுவஸ்தை யடைந்தாளெனப் பொருள்கோடலுமாம (௬௫)

பூவெ லாமபொடி யாகவிப பூமியுட
காவெ லாமொடிப பெனனெனக காந்துவாள
சேவ லோடுறை செந்தலே, யனறிலி
ஞவி ஞலவலி யெஞ்ச நடுங்குவாள.

இ - ள். பூ எலாம பொடி ஆக - புஷ்பங்களெல்லாம பொடியாகும்படி, இப்பூமியுள - இந்தப் பூமியிலிருக்கிற, கா எலாம ஒடிப்பென் என - சோலேகள் எல்லாவற்றையும ஒடித்தெறிவேனென்று, காந்துவாள - கொதிப்புற்றவளாகி, சேவலோடு உறை - ஆண்பறவையோடு வசிக்கின்ற, செந்தலே அனறிலின் - செய்ய தலேயினையுடைய அன்றிற் பறவையினது, நாவினுல் - தொனியினுல், வலி எஞ்ச - (தனது) பலங்குறைய, நடுங்குவாள - நடுக்கங்கொள்வாளாயினுள்.

கருத்து—புஷ்பங்களின் மேற்கொண்ட கோபத்தால இவள் இச்சோலேயை அழிக்கின், தனக்கு இருப்பிடமின்றி அவதிப்பட நேரிடுமென அன்றிலுணர்ந்து கூவி அவளே அச்செயலியற்றுவாறு தடுத்து வெற்றிகொண்டதென்பதாம

குறிப்பு —மன்மதனுறைவிடமாகிய சோலேயையும் அசசோலேயிலுள்ள மலர்களேயும நாசஞ்செய்தால மன்மதனுக்கு வலிகுன்றுமென்று கருதிக் காவை யொடிக்கக் காந்தினுளெனக். காவென்ற குறிப்பால பூ - மாமலரும அசோகமலருமாம். இனி, பூ எலாம என்றதற்குப் பூமிமுழுதும எனப்பொருள்கொண்டு அவ்விருவகை மலரோடு தாமரை முதலலே நீலோற்பலம என்னுமலர்களேயும நாசஞ்செய்யக் கருதினுளென்னலு மேற்கும. ஒடிப்பென்னை - விரித்தல். சேவல் - ஆணன்றிலாதலே, "சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணு,மாயிருந்தூவி மயிலலங் கடையே" என

னுந் தொல்காப்பியச் சூத்திரத்தானுணர்க. அன்றிற்பறவை ஆண் பெண் பிரிதலில்லை; பிரியும்படி நேரின் இரவில் இரையின்பொருட்டு ஆண்பிரியும். அங்ஙனம் பிரிவதுஞ் சிறியநேரமே. அச்சிறியநேரத்திற் பெடையன்றில் கூவும். அங்ஙனங் கூவியவளவில் ஆண்வந்து சேரவேண்டும், அல்லது பிரதித்தொனியேனுஞ் செய்யவேண்டும், இல்லாவிடிற் பெடையிறந்துவிடும் இதுபற்றியே 'சேவலோடுறை' என்றார், அன்றில் ஆணும்பெண்ணும் தலையோடுதலை பிணைத்திருக்குஞ் சிறப்புநோக்கிச் 'செந்தலையன்றில்' என்றார் நா என்னுங் கருவி அதன் காரியமாகிய தொனியை யுணர்த்துதலின் கருவியாகுபெயர் இவ்வன்றிலின் தொனி, குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனும் ஏழுவகை யிசையினுளொன்றாய விளரியாம் இது ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்னும் ஏழனுள் தைவதமாமென்றும் விளரியென வொருபண்ணின் பெயரென்றுங் கூறுப மயில் பஞ்சமஸ்வரத்தைச் செய்வதுபோல, அன்றில் தைவதஸ்வரத்தைச் செய்யுமென்றறிக இவ்வன்றிலின் விளரிஸ்வரங் கேட்டவுடனே சேவல்வந்து அதனை மகிழ்விக்குந் தன்மைபோலத் தானெப்பாடுபடினும் தனக்குக் காமமூட்டிய கட்டழகன் கிட்டானேயென்னும் விசாரத்தால் வலியெஞ்ச நடுங்குவாளென்க. (எசு)

அணவி றிங்களை நுங்க வராவினைக்
கொணா வென்றோடி யெனக்கொதித் துன்னுவாள்
பணையின் மென்முலை மேற்பனி மாருதம்
புணர வாருயிர் வெந்து புழுங்குமால்.

இ-ள். அணவு இல் திங்களை - கிட்டுதலில்லாத [சேய்மையிலுள்ள] சந்திரனை, நுங்க - விழுங்க, அராவினை - பாம்பினை, ஓடி - விரைந்து சென்று, கொணா வென என - கொண்டு வருவேனென்று, கொதித்து - கோபித்து, உன்னுவாள் - கருதுவாளாகி, பணை - பெரிய, மென்முலைமேல் - மெல்லிய தனங்களின்மீது, பனிமாருதம் - குளிர்ந்த காற்றானது, புணர - தோய்வதால், ஆருயிர்வெந்து - (தனது) அரிய உயிரும் வேவுதலுற்று, புழுங்கும் - வருந்துவாளாயினாள்.

கருத்து — திங்களை நுங்க அராவினைக் கொணர்வாளாகில் அவ்வரா தன்னை விழுங்கிவிடுமென அஞ்சிப் பனிமாருதம் அவள் முலைமேற்பாய்ந்து வருத்தி அவளை அச்செயலினின்றும் நீக்கி வெற்றிபெற்றதென்பதாம்.

குறிப்பு — அணவு - முதனிலைத் தொழிற்பெயர். திங்கள் - கலைநிறைந்த சந்திரன். பணையின் என்புழி இன் - தவிர்வழி வந்தசாரியை இனி, பணையின் முலை என்றற்கு முரசுபோன்ற முலையெனலும் பொருந்தும் (எஎ)

கைக்க ளாற்றன் கதிரிளங் கொங்கைமே
லைய தண்பனி யள்ளின ளப்பினள்
மொய்கொ டயிடை வெந்து முருங்கிய
வெய்ய பாறையில் வெண்ணெய் நிகர்க்குமால்.

இ-ள். தன் கதிர் இளங்கொங்கைமேல் - தனது ஒளி பொருந்திய இளமை வாய்ந்த முலைகளின்மீது, ஐய - வியக்கும்படியாக, தண்பனி - குளிர்ந்த பனிக்

கட்டிகளை, கைகளால் அள்ளினன் அப்பினள் - (தன்) கைகளால் அள்ளி அப்பிக் கொண்டாள், (அப்பனிக்கட்டிகள்), மொய்கொள் தீ இடை - மொய்த்தல் கொண்ட [மிகுதியான], அக்கினியில், வெந்து—, முருங்கிய - உருவழிந்த, வெய்யபாறையில் - வெப்பமான கல்லின்மேலிருக்கிற, வெண்ணெய் நிகர்க்கும் - வெண்ணெய்க்கட்டிகளை ஒத்தன.

குறிப்பு—காமத்தாற் சூடுகொண்டது விளங்க அக்கினிச்சுவாலை பொருந்திய மூலையென்பார், 'கதிர்கொங்கை' என்றார். ஐ - வியப்பாதலை "ஐயிரு வட்டமொ டெஃகு வலந்திரிப்ப" என்னுந் திருமுருகாற்றுப்படையி னுரையானும், "தெருளு றவைய முடிப்பையின் றெனவே" என்னுங் கல்லாடத்தி னுரையானுமறிக. "ஐவியப்பாகும்" என்பது தொல்காப்பியம். இனி, ஐய - அசைநிலையாகக் கோடலும், அழகியவெனப்பொருள்கோடலும் பொருந்தும். அள்ளினள் - முற்றெச்சம். மொய்ம்முதனிலை. மொய்கொள் தீ - காமாக்கினிக்கும், வெந்துமுருங்கிய வெய்யபாறை - அவள் உடலுக்கும், வெண்ணெய் - பனிக்கும் உவமை. (௭௮)

அளிக்கு மெய்யுயிர் கான்றழ லஞ்சினள்
குளிக்கு நீருங் கொதித்தெழக் கூசுமால்
விளிக்கும் வேலையை வெங்க ணனங்கனை
யொளிக்க லாமிட மியாதென வுன்னுமால்

இ - ள். விளிக்கும் வேலையை - கூவுகின்ற கடலையும், வெங்கண் அநங்கனை - கொடிய மன்மதனையும், ஒளிக்கல் ஆம் இடம் யாது என உன்னும் - (எடுத்துச் சென்று) ஒளிப்பதற்காகிய (தக்க) இடம் யாதென்று ஆலோசிப்பாளாய், அளிக்கும் - அன்போடு பாதுகாக்கப்படுகிற, மெய் - (தன்) உடம்பினின்று, உயிர் கான்று - உயிர் வெளிப்படும்படியான நிலைமையையடைந்து, அழல் அஞ்சினள் - காமாக்கினிக்கு அச்சங்கொண்டவளாய், (அவ்வெப்பந் தணியும்படி), குளிக்கும் - (தான்) முழுகுகிற, நீரும் - (சிறிய) தண்ணீரும், கொதித்து எழ கூசும் - கொதிப்புற்றுப் பொங்கியதால் நாணமடைவாளாயினள்.

குறிப்பு—உயிர் சோர்வடையாத நிலைமையிலும் காணுதற்கரிய மன்மதனை உயிர் சோர்ந்த இந்நிலைமையில் எங்குத் தேடிக் கண்டுபிடிப்பேனென்றும், தான் குளிக்கின்ற இச்சிறிய நீரே இங்ஙனங் கொதிக்குமாயின் வடவைத்தீயைத் தன்னிடத்தே கொண்டிருக்கிற பெரியகடலினது கொதிப்பை எவ்வாறு பொறுப்பேனென்றும் நாணங்கொண்டு கடலையும் மன்மதனையும் எடுத்துச் சென்று ஒளிக்கக் கருதிய எண்ணத்தை நீக்கினுளென்க. இனி, உயிர் என்றதைப் பெருமூச்சு என்பொருள்கொண்டு, தன் உடம்பிற் சரியாய் மூச்சுவரவொட்டாமற் பெருமூச்செறியும்படி தபிக்கிற காமதாபத்துக்கு அஞ்சி அதனைத் தணிக்கும்பொருட்டு அன்னுக்கு எதிரிடையான குளிர்ந்த நீரிலேமூழ்க, உலகத்துத்தீயை அவிக்க வல்லதான அந்நீரும் இந்தத் தீயை அவிக்கமாட்டாமல் இதன் வெப்பத்தால் தான் கொதித்து மேலெழக்கண்டு யாதொன்றும் பரிகாரங்கிடைத்திடாமையால் மிக அஞ்சவாள், ஒலியால் வருத்துகிற கடலுக்கும் செயலால் வருத்துகிற மன்மதனுக்கும் வருத்தமிலக்காகாமல் மறையும்படியான இடமு முண்டோ வென்று சிந்திப்பாளாயினளென்று கூறுதலும் அமையும்.

குறிப்பு — எய்தார் என்னும் வினையினுரிமைபற்றி அஸ்திரங்களையும், எறிந்தார் என்னும் வினையினுரிமைபற்றிச் சஸ்திரங்களையும் கூறினர், "அஸ்திரம் விடுபடை", "சஸ்திரம் விடாப்படை" என்பவாகலின். பொய்த்தல் - மகளிர்விளையாட்டின் பெயர், வளைதடிகள் வீசியெறிந்ததில் யாதும் பெருமையில்லையென்பார் 'பொய்த்தார்' என்றார். கிடைத்தல் - கிட்டுதலுமாம். ஆ - ஆக என்பதன் விகாரம். எயிற்றுக்குப் பிறையை உவமைகூறவே பிறைபோலும் வளைவினையுடைய வக்கிரதந்தங்களாயிற்று. (௧அ)

தேர்பூண்டன விலங்கியாவையுஞ் சிலைபூண்டெழு கொலைபாற்
பார்பூண்டன மதமாகரி பலிபூண்டன பரிமாத்
தார்பூண்டன வுடல்பூண்டில தலைவெங்கதிர் தழீஇவந்
தூர்பூண்டன பிரிந்தாலென விரிந்தாருயி ருலைந்தார்

இ - ள். சிலைபூண்டு எழுகொலைபால் - (ஸ்ரீராமபிரானது) வில்லிற் பொருந்தி யெழுந்த கொலைத்தொழிற் கணைகளால், தேர்பூண்டன - தேர்கள் பூண்டனவாகிய, விலங்கு யாவையும் - மிருகங்களனைத்தும், பார்பூண்டன - புவி பூண்டனவாகிய, மதமாகரி - மதம் பொருந்திய பெரியயானைகளும், பலிபூண்டன - கொல்லப்பட்டன, தார் பூண்டன பரிமா - அணி வகுக்கப்பட்டனவாகிய குதிரைகளினது, உடல் - உடல்கள், தலை பூண்டில - சிரங்கள் பெற்றிருக்கவில்லை, வெங்கதிர் தழீஇவந்து - சூரியனை நெருங்கிவந்து, ஊர் பூண்டன - பரிவேடங்கள் சூழ்ந்தவை, பிரிந்தால் என - விலகினாற்போல, விரிந்தார் - அகன்ற அரக்கர்கள், உயிர் உலைந்தார் - உயிர் நீங்கினார்கள்.

குறிப்பு — தேர் பூண்டன விலங்கியாவையும் என்றது - தேர்களிற் கட்டப்பட்ட யானை, குதிரை, சிங்கம், யாளி, நாய், நரி முதலியவற்றை. இவற்றுள் யானையும் குதிரையும் அடங்கியிருப்பதால் அவ்வனம் தேரிற் பூட்டப்படாத யானைகளென்பதும் குதிரைகளென்பதும் விளங்க 'பார் பூண்டன' 'தார் பூண்டன' என்று கூறினார். கொலை - கொல்வது, ஐ - கருவிப்பொருள் விகுதி. இது தொழிலாகு பெயராய் அம்பினை யுணர்த்தி நின்றது. இக்கொலையென்னும் சொல் கருவிப்பொருள் விகுதிகெட்டு முதனீண்டு 'கோல்' என நின்று அம்பின் பெயராய் வருதலு முண்டு. விரிந்தாருயிருலைந்தார் என்றதை இரிந்து ஆருயிர் உலைந்தார் எனப் பிரித்துப்பொருள் கோடலுமாம், இரிதல் - ஓடுதல். தழுவி - தழீஇயென விகாரப்பட்டது.

மால்பொத்தின மறவோருடன் மழைபொத்தின வழிசெம்
பால்பொத்தின நதியிற்கிளர் படிபொத்தின படர்வான
மேல்பொத்தின குழுவிண்ணவர் விழிபொத்தினர் விரைவெங்
கால்பொத்தினர் நமனூதுவர் கடிதுற்றுயிர் கவர்வார்

இ - ள். மால்பொத்தின - மயக்கம் நிரம்பிய, மறவோர் உடல் - வீரராகிய அரக்கர்களின் உடலில், மழைபொத்தின வழி - சரமாரி துளைத்த துவாரங்களை, செம்பால் பொத்தின - அரத்தங்கள் மூடினவாய், நதியில் - நதியைப்போல, கிளர் - நிறைந்து, படி பொத்தின - புவியைமறைத்தன, படர்வான மேல் பொத்தின குழு விண்ணவர் - அகன்ற ஆகாயத்தின்மேல் நிறைந்த கூட்டமாகிய தேவர்கள், விழி பொத்தினர் - கண்களை மூடினார்கள், நமன் தூதுவர் கடிது உற்று உயிர் கவர்வார் - யமன

து தூதுவாகள விரைவிறசாாநது உயிாகளைபபிடிதது, விரை வெஙகால பொதி னா - விரைநதோடுமெ (தமது) வெவவிய காலகளை (வலிநீஙகப) பிடிததாாகள

குறிபபு —மால - தபபிபபிழைகக வழிகாணாது கொணடமயககம பொதது தல - மூடுதல, புரைதல, பொருளசென மருஙகி லுரை வேறுபடடது. மழை - உவமவாகுபெயராய மழைபோலுமெவிய கணைகளையுணாததியது கிளா - கிளாநது எனபதன விகாரம. அரககா இறநது வீழநத கோரததைபபாாகக அஞசினவராய விணணவா விழிபொததின ரெனக நமன தூதுவா கால பொததியதால இறநதவா ளவிறநதோரெனபது பெறறும செமபால - அரததம, "செநநீா சோரி நெயததோா செமபால, புணணீா சுடுவெல புலாணீா சோணித, மூதிரஙகுருதி கறையிரத தப பெயா" இது பிஙகலநதை (௪௦௦)

பேயேறின செருவேடடெழு பிததேறினா பிலவாய
நாயேறின தலைமேனெடு நரியேறின வெரிகால
வாயேறின வடிவாளியின வானேறினா வநதாா
தீயேறிக லரியேறென முகிலேறெனச செறிநதாா.

இ - ள பேய ஏறின - பசாசுகள மிகுநதுளள, செருவேடடு - போரினை விருமபி, எழு பிதது ஏறினா - பிறநத பைததியமிகுநத (சில) ராகூஷஸாகளுடைய, பிலவாய - குகைபோனற வாயகளில, நாய ஏறின - நாயகளேறின, தலைமேல - (அவாகளினது) சிரஙகளினமேல, நெடுநரி ஏறின - பெருநரிகள ஏறின, எரிகால வாய ஏறினவடி - நெருபபைக ககககுகினற வாயினிடததே யேறிய கூாமையையுடைய, வாளியின (ஸ்ரீராமபிரானது) அமபுகளால, வான ஏறினா - (அசசததையடைநது ஒளிததறபொருடடு) மேகததினமேலேறிநினற (சில) அரககாகள, (மறுபடியும போாசெயயததுணிநது), தீ ஏறு - பெருநெருபபைப போலவும, இகல அரி ஏறு என - பகைதத ஆணசிஙகமபோலவும, முகில ஏறு என - மேகததின இடியைபபோலவும, வநதாா செறிநதாா - வநது நெருஙகினாாகள

குறிபபு —பேயேறின, வாயேறின - பெயரெசசஙகள வநதாா - முறறெசசம பேயேறின செரு எனறது - எதிாததோாஅனைவரும வெனறு மீளவலியிலலாாய இறநததுபோல எதிாபபோாஅனைவரும இறபபரெனபது விளஙகறகு. இபபோரினகட சென்றாாஅனைவரு மிறநததுணாநதும மறறையோா போாககிசசைகொணடது அறிவினமெனபாா 'பிததேறினா' எனறாா வாளியின வானேறினா தலைமேல நரியேறின எனறு கூடடிப பொருளகோடலுமாம, ஈணடு, வானேறினா - இறநதோா இபபொருடகேறபச செறிநதாா வநதாா எனறு முடிகக, ஈணடு செறிநதாா - பெயா வநதாா - வினைமுறறு (௪௦௪)

தலைசிநதின விழிசிநதின தழலசிநதின தரைமேன
மலைசிநதின படிசிநதின வரிசிநதுர மழைபோற
சிலைசிநதின கணைசிநதின திசைசிநதின திசையோ
டுலைசிநதின பொறிசிநதின வுயிாசிநதின வுடலம

இ - ள (அவவாறு வநது செறிநத அரககாகளது), தலை சிநதின - தலைகள சிதறின, விழிசிநதின - கணகள சிதறின, தழல சிநதின - (அககணகளினினறும)

அககினி சிதறின, தரைமேல மலைசிநதினபடி - புவிமேல மலைகள் சிதறியபடி, வரி சிநதுரம சிநதின - கலலணை கட்டிய யானைகள சிதறின, மழைபோல சிலைசிநதின கணை சிநதின - மேகஙகளைபபோல விலலுகள சிநதிய அமபுகள சிதறின, திசைசிநதின - திககுககளிடிநது சிதறின, திசையோடு - அததிககுககளுடனே, உலை சிநதின - கொலலனுலையிற சிதறினபோல, பொறிசிநதின - அககினிபபொறிகள சிதறின, உடலம உயிர சிநதின - உடலகள உயிரை நீககின (௪0உ)

வேறு

படைபபெருந தலைவரும படைதத தோகளு
முடைததடம படைகளு மொழிய வுறறெதிர
விடைததடாந தெதிரநதவர வீரன வாளியான
முடைததவெங குருதியின கடலின மூழகினார

இ - ள படை பெருநதலைவரும - பெரிய சேனாதிபதிகளாகிய பதினைாகு பேரும, படைதத தோகளும - அவாகள கொணட இரதஙகளும, உடை தடம படைகளும - அவாகளுடைய பெரிய ஆயுதஙகளும், ஒழிய - நீஙகலாக, எதிர உறறு- (ஸ்ரீராமபிரானுககு) எதிரேவநது, விடைதது - கோபிதது, அடாநது - நெருஙகி, எதிாநதவா - எதிாதத அரககாகள, (மேறகூறியவாறு), வீரன வாளியால - ஸ்ரீராமபிரானது அமபுகளால, (இறநது), முடைதத - புலால நாறறம வீசாநினற, வெங குருதியின கடலில- வெவவிய அரததககடலில, மூழகினா- ஆழநதுபோனாாகள ()

சுறறுற நோககினா தொடாநத சேனையி
லறறில தலையெனு மாககைகை கணடிலா
தெறறின ரெயிறுக டிருகி னாசின
முறறின ரிராமனை முடுகு தேரினா.

இ - ள சுறறுறநோககினா - (படைததலைவா பதினைலவரும) எடடுததிசைகளு சேரபபாாதது, தொடாநத சேனையில - தொடாநதுவநத (தமது) சேனைகளில், தலை அறறில எனும ஆககைகைகணடிலா - தலை யறுபடவிலலையெனறு சொலலுமபடியான உடலைக கணடாாகளிலலை, (அதனால), தெறறினா - (மனதிலே) மாறுபடடவாகளாய, எயிறுகள திருகினா - பறகளை நெறுநெறெனகக கடிதது, சினம முறறினா கோபமுதிரககொணடு, இராமனை முடுகுதேரினா - ஸ்ரீராமபிரானைககிட்டிய தேரினையுடையவராைாகள

குறிபபு —சுறறுறநோககல - கணபாாவை எலலாததிககுககளிலுஞ செலலுமபடி திருமபிததிருமபிப பாாததல சுறறு - முதனிலை தலையோடுகூடிய உடல அவாகள கணகளுககுப புலப்படவில்லை, முறறுஙகவநதமாயிறறு எனறபடி பறகளைக கடிததுத திருகுதலால எழுமோசையை நோககி நெறுநெறெனககடிதது எனறு கூறினும ஆககை - யாககை யெனபதன மருஉ (௪0௩)

ஏழிரு தேருமவந திமைபபின் முனபிடைச
சூழவன கணைகளிற றுணிய நூறினு
னாழியும புரவியு மாளு மறறவை
யூழிவெங காலெறி யோஙக லொததவே.

இ-ள் வந்து இடை சூழ்வன - வந்து பக்கத்தே சூழ்ந்துகொண்டனவாகிய, ஏழ் இருதேரும் - (அச்சேனாதிபதிகளுடைய) பதினான்கு தேர்களும், இமைப்பின் முன்பு - கண்மூடித் திறப்பதற்கு முன்னே, துணியது ஆற்றினான் - சின்னபின்னமாம்படி (ஸ்ரீராமபிரான் தனது கணைகளால்) அழித்தான், (அக்கணைகளின் செயலால்), ஆழியும் - (அத்தேர்களினது) சக்கரங்களும், புரவியும் - குதிரைகளும், ஆளும் - தேர்ப்பாகர்களும், மற்றவை - (கொடி கொடிஞ்சி முதலிய) மற்றவைகளும், ஊழி வெங்கால் - ஊழிகாலத்திற் பிறக்குங் கொடிய காற்றானது, எறி - (எடுத்து) வீசுகின்ற, ஓங்கல் ஒத்த - மலைகளை ஒத்திருந்தன (௪௦௫)

அழிந்தன தேர்அவ ரவனி கீண்டுக
இழிந்தனர் வரிசிலை யெடுத்த கையினர்
ஒழிந்திலர் சரங்களை யுருமி னேறெனப்
பொழிந்தனர் பொழிகனல் பொடிக்கும் கண்ணினார்

இ-ள் அழிந்தன தேரவர் - (அவ்வாறு) அழிந்த தேர்களையுடையாராகிய சேனாதிபதிகள் பதினால்வரும், அவனி கீண்டு உக இழிந்தனர் - புவி பிளந்து விடும்படி இறங்கி, வரிசிலை எடுத்தகையினர் - கட்டமைந்த வில்லினை யெடுத்த கையினையுடையவராய், ஒழிந்திலர் - ஓயாமல், சரங்களை - அம்புகளை, உருமின் ஏறு என - பேரிடி போலும்படி, பொழிந்தனர் - பெய்து, பொழிகனல் பொடிக்கும் கண்ணினார் - சொரிகின்ற நெருப்பினாலே (எதிர்ப்பட்டனவற்றைச்) சாம்பலாக்குகின்ற கண்களையுடையவர்களானார்கள் (௪௦௬)

நூறிய சரமெலாம் நுறுங்க வாளியால்
ஈறுசெய் தவர்சிலை யேழொ டேழையும்
மாறினொ டாறுமோ ரிரண்டு மம்பினால்
கூறுசெய் தமர்த்தொழிற் கொதிப்பை நீக்கினான்.

இ-ள் நூறிய சரம் எலாம் - (திசைகளை) நாசப்படுத்திய (அவ்வரக்கர்களுடைய) கணைகளெல்லாம், நுறுங்க - பொடியாகும்படி, வாளியால் - (ஸ்ரீராமபிரான் தனது) கணைகளால், ஈறுசெய்து - தொலைத்து, அவர் சிலை ஏழொடு ஏழையும் - அவ்வரக்கர்களுடைய விற்கள் பதினான்கையும், ஆறினொடு ஆறும் ஓர் இரண்டும் அம்பினால் - பதினான்கு சரங்களால், கூறுசெய்து - துண்டித்து, அமர் தொழில் - போர்ச் செயலினது, கொதிப்பை நீக்கினான் - கொதிப்பை மாற்றினான் (௪௦௭)

வில்லிழந் தனைவரும் வெகுளி மீக்கொளக்
கல்லுயர் நெடுவரை கடிதின் ஏந்தினார்
ஒல்லையின் உருத்துயர் விசும்பின் நின்றுங்கின
றெல்லுயர் பொறியுக வெறிதன் மேயினார்

இ-ள். அனைவரும் - (அப்படைத்தலைவர்) எல்லாரும், வில் இழந்து - விற்களை யிழந்து, வெகுளி மீ கொள - கோபம் அதிகரிக்க, (அதனால்), கல் உயர் நெடுவரை - மலைகளினுயர்ந்த பெரியமலைகளை, கடிதின் - விரைவில், ஏந்தினார் - (கையிற்) பிடித்தவர்களாய், ஒல்லையில் - விரைவில், விசும்பின் நின்று - ஆகாயத்

தில் சினமுற்கொண்டு, எல் உயர் பொறி உக-சூரியனது உயர்ந்த இரதம் பொடியாகும் படி, ஓங்கி - (மலைகளையேந்திய கைகளை) உயர்த்தி, உருத்து எறிதல் மேயினார் - கோபித்து (அம்மலைகளை) வீசி எறிந்தார்கள் (௧௦௮)

> கலைகளின் பெருங்கடல் கடந்த கல்வியா
> னிலைகொள்வெம் பகழியே யிரண்டு வாங்கினான்
> கொலைகொள்வெஞ் சிலையொடு புருவங் கோட்டினான்
> மலைகளுந் தலைகளும் விழுந்த மண்ணின்மேல்.

இ - ள். கலைகளின் பெருங்கடல் - சாஸ்திரங்களாகிய பெரியகடலை, கடந்த - தாண்டிய, [கற்றுத்தேர்ந்த] கல்வியான் - படிப்பாளியாகிய ஸ்ரீராமபிரான், கொலைகொள்வெஞ்சிலை யொடு புருவம் கோட்டினான் - கொல்லுந் தொழிலைக் கொண்டிருக்கிற வெவ்விய வில்லையும் புருவத்தையும் வளைத்து, இலைகொள் - இலை வடிவினைக்கொண்டிருக்கின்ற, வெம் பகழி ஏழ் இரண்டு - வெவ்விய பாணங்கள் பதினான்கை, வாங்கினான் -(தூணீரத்திலிருந்து) எடுத்தான், (அவ்வளவில்), மலைகளும் (அசரேந்திப்பிடிக்கா கைக்கொண்ட) மலைகளும், தலைகளும் -(அவர்கள்) சிரங்களும், மண்ணின் விழுந்த - புவியில்விழுந்தன

குறிப்பு ;—கலைகள் - தநுர்வேத முதலிய நூல்கள். இலை - அரசிலையும் வேப்பிலையுமாம் கணைகள் எடுக்கவே மலைகளும் தலைகளும் விழுந்தன என்றது—கரவேகமும் சரவேகமும் விளங்கற்கு 'கோபத்தோடு ஆகாயத்தை நோக்கினானென்பார் புருவங் கோட்டினான்' என்றார் (௧௦௯)

> படைத்தலைத் தலைவர்கள் படலும் பல்படை
> புடைத்தடர்ந் தெதிரழல் புரையுங் கண்ணினார்
> கிடைத்தனர் ராக்கதர் கீழு மேலுமா
> யடைத்தனர் திசைகளை யமர ரஞ்சினார்.

இ - ள். படைத் தலைத் தலைவர்கள் படலும் -சேனைக்கு முதன்மையான தலைவர்கள் பதினாலவரும் இறந்த அளவில், அரக்கர்கள் - (மற்றும்) இராக்கதர்கள், பல படை புடைத்து - பல ஆயுதங்களைவீசி, அடர்ந்து - நெருங்கி, எதிர் - (ஸ்ரீராமபிரானுக்கு, முன்னே, அழல் புரையும் கண்ணினார் -நெருப்பு வெளிப்படுகின்ற கண்களையுடையவர்களாயும், கீழும் மேலும் ஆய - புவியிலும் ஆகாயத்திலும் (நிறைந்தவர்கள்) ஆகி, திசைகளை அடைத்தனர்- திக்குக்களெல்லாவற்றையும் மூடிவிட்டவர்களாயும், கிடைத்தனர் - கிட்டினார்கள், (அதுகண்டு), அமரர் அஞ்சினார் - தேவர்கள் பயந்தார்கள் (௧௧௦)

> முழங்கின பெரும்பணை மூரி மால்கரி
> முழங்கின வரிசிலை முடுகு நாணொலி
> முழங்கின சங்கொடு புரவி முற்றுற
> முழங்கின வரக்கர்த முகிலி னார்ப்பரோ.

இ - ள். பெரும்பணை மூரிமால் கரி முழங்கின - பெரிய முரசுகளும் பெரிய யானைகளும் பேரொலி செய்தன; வரிசிலை முடுகு நாண் ஒலி முழங்கின - கட்டமை

ந்த விற்களினிடத்தே விரைந்து பூட்டப்படுகின்ற நாண்களின் ஓசைகள் முழங்காநின்றன, சங்கொடு புரவி முழங்கின - (வீரர்கள் கைக்கொண்ட) சங்குகளுங் குதிரைகளும் முழங்காநின்றன, அரக்கர்தம் முகிலின் ஆர்ப்பு - இராக்கதர்களுடைய மேககர்ச்சனைபோன்ற பேரொலிகள், முந்து உற முழங்கின - குறைவில்லாவாறு முழங்காநின்றன.

குறிப்பு—பணை - மற்றை வாச்சியங்கட்கு உபலக்கணம். பணைகரி முழங்கின வெனவே பணை, யானைமேல் ஏற்றப்பட்டதென்பதாம், 'ஓங்கன்மேன் மழையென மாமுரசெற்றதிர்'' என்க்கீழ்க்கூறியதுகண்டுணர்க. சங்கொடு புரவி எனவே குதிரைமேலேறிய வீரர்களைக்குறிப்பித்தது. ஆர்ப்பு-மாத்திரை யிறந்த சப்தம். முழங்கல்-பலவகையான சப்தங்களுமொன்று சேர்ந்து கிளம்பும் ஒலி. வீரர்தமது ஆண்மையையும் தமதே வெற்றியென்பதையும் விளக்கவும் சேனைகள் பின்னிடாது முன்னின்று போர்புரிதற்கு உற்சாக மூண்டாக்கவும் சங்கநாதம் புரிவாரென்பதுணர்க. சங்கநாதம் உத்தமமான வினையோடு கூட்டப்படுவது, ''துய்யமொழி மென்குயிலுஞ் சோலைவரி வண்டினமும், வையமுழங்கும் வலம்புரியுங் - கையத்தனத், தும்புருவு நாரதரும் பாடியமூ வோசையென் நம்பீ நால்வேதத்தான்'' என்று இசைமரபுடையார் கூறினாராகலின். மூரிமால் -ஒருபொருட்பன்மொழி, ''முன்னா முரசிரங்க மூரிக் கடற்றானை'' என்புழி மூரி - பெருமையாதல்காண்க. இனி, பெரியகரியயானை யெனலுமாம், மால் - கருமை. (௧௧௧)

வேறு

வெம்படை நிருதர் வீச விண்ணிடை மிடைந்த வீர
னம்பிடை யறுக்கச் சிந்தி யற்றன படுமென் றஞ்சி
யும்பரு மிரியல் போனா ருலகெலா முலைந்து சாய்ந்த
கம்பமி றிசையி னின்ற களிறுங்க ணிமைத்த வன்றே.

இ - ள். வெம்படை - கொடிய ஆயுதங்களை, நிருதர்வீச - இராக்கதர்கள் வீசி எறிகையால், விண் இடைமிடைந்த - (அவைகள்) ஆகாயத்தில் நெருங்கின, வீரன் அம்பு - ஸ்ரீராமபிரானது கணைகள், இடை அறுக்க - நடுவே (புகுந்து) அறுப்பதால், சிந்தி அற்றன - சிதறி அறுபட்ட அவ்வாயுதங்கள், படும் என்று அஞ்சி (தம்மேல்) வீழும் என்று பயந்து, உம்பரும் - தேவர்களும், இரியல்போனார் - ஓடிப்போனார்கள், உலகு எல்லாம் உலைந்து சாய்ந்த - உலகமுழுதும் அழிந்து சரிவுற்றன, கம்பம் இல் - அசைதலில்லாத, திசையில் நின்ற களிறும் - திக்குக்களில் நின்ற (அஷ்ட) கஜங்களும், கண் இமைத்த - கண்களை மூடித்திறந்தன. (௧௧௨)

வேறு.

அத்தலைத் தானைய னளவி லாற்றலன்
முத்தலைக் குரிசில்பொன் முடியன் முக்கணன்
கைத்தலைச் சூலமே யனைய காட்சியான்
வைத்தலைப் பகழியான் மழைசெய் வில்லினான்.

இ - ள். அத்தலை தானையன் - முதன்மையான அச்சேனையையுடையவனும், அளவு இல் ஆற்றலன் - அளவில்லாத வலிமையையுடையவனும், பொன்முடியன் -

பொன்னினாலாகிய மகுடத்தையுடையவனுமாகிய, மூ தலை குரிசில் - மூன்று சிரங்களையுடைய பெருமையிற் சிறந்த திரிசிரனென்பவன், முக்கணான் கைத்தலை சூலமே அனைய காட்சியான் - மூன்று கண்களையுடைய சிவபிரானது கையினிடத்தேயுள்ள திரி சூலத்தையே ஒத்த தோற்றத்தையுடையவன், (மற்றும்), வை தலை பகழியால் - கூர்மைபொருந்திய நுனியினையுடைய அம்புகளால், மழைசெய் - மழையைச் செய்கின்ற, வில்லினான் - வில்லினையுடையவன் (கக௩)

அன்னவ னடுவுற வாழி யூழியி
தென்னவந் தெங்கணு மிரைத்த சேனையு
டன்னிகர் வீரனுந் தம்பியும் வில்லினன்
றுன்னிரு ளிடையதோர் விளக்கிற் றோன்றினான்

இ - ள். அன்னவன் நடு உற - அத்தகைய திரிசிரன் நடுவேவர, ஊழி ஆழி சுது என்ன - பிரளயகாலசமுத்திரம் இதுவென்று சொல்லும்படி, வந்து—, எங்கணும் - எவ்விடத்தும், இரைத்த - பேரொலிசெய்த, சேனை உள் - சேனைக்கு நடுவே, தன் நிகர் வீரனும் - தன்னைத்தானே ஒத்த வீரனாகிய ஸ்ரீராமபிரானும், தம்பியன் - தனித்தவனாகவும், வில்லினன் - ஒரே வில்லினையுடையவனாகவும், (நின்று), துன் இருள் இடையது ஓர் விளக்கில் தோன்றினான் - நெருங்கிய இருளுக்கு மத்தியிலிருப்பதாகிய ஒரு விளக்கைப்போலக்காணப்பட்டான் (கக௪)

ஓங்கொளி வாளின னுருமி னார்ப்பினன்
வீங்கிய கவசத்தன் வெய்ய கண்ணினன்
ஆங்கவ னணிக்கெதி ரணிக ளாகநோ
தாங்கின னிராமனுஞ் சரத்தின் றானையால்

இ - ள். ஆங்கு - அவ்விடத்தில், இராமனும் - ஸ்ரீராமபிரானும், ஓங்கு ஒளி வாளினன் - மிகுந்த பிரகாசமுள்ள வாளாயுதத்தையுடையவனும், உருமின் ஆர்ப்பினன் - இடியைப்போலும் பேரொலியையுடையவனும், வீங்கிய கவசத்தன் - பருத்தகவசத்தையுடையவனும், வெய்ய கண்ணினன் - கொடியகண்களையுடையவனுமாகிய, அவன் - அத்திரிசிரனது, அணிக்கு - படைவகுப்புகளுக்கு, எதிர் - முன்னே, அணிகள் ஆக - படைவகுப்புகளாக, சரத்தின் தானையால் - அம்புகளாகிய சேனையினாலே, நோ தாங்கினன் - உவமைதாங்கினன் [சமத்துவமுடைமைகாட்டினான்], (கக௫)

தாளிடை யற்றன தலையு மற்றன
தோளிடை யற்றன தொடையு மற்றன
வாளிடை யற்றன மழுவு மற்றன
கோளிடை யற்றன குடையு மற்றன

இ - ள். (அவ்வாறு நிறுத்திய சரத்தானையால்), தாள் இடை அற்றன - கால்கள் நடுவே யறுபட்டன, தலையும் அற்றன - சிரங்களும் அறுபட்டன, தோள் இடை அற்றன - புயங்கள் நடுவேயறுபட்டன, தொடையும் அற்றன - சரங்களும் அறுபட்டன; வாள் இடை அற்றன - வாளாயுதங்கள் நடுவே யறுபட்டன, மழு

வும அறறன - பாசாயுதஙகளும அறுபடடன, கோள இடை அறறன - வலிய இடைகள அறுபடடன, குடையும அறறன - கவிகைகளும அறுபடடன

குறிபபு —கோளிடையறறன எனறது - அரககாது வலியதிமைகளிடையே யறுபடடன எனனலும பொருநதும, ஸ்ரீ ராமபிரானது கணைகள அரககா உயிாக ளையும அவா பாவஙகளையும நீககுந தகைமையையுடையனவெனனும துணிபுபறறி இஙஙனங கூறினரெனக; "தெரிகணை மூழகலிற றிறநத மாாபின, ிருவினைகடா துபோய " என மேலவருஞ செயயுளை யீணடுநோககுக, கோள+இடை+அற று+அனன+குடையும எனக கணணழிந்து, சநதிரன (இருகூறுய) இடையே யறறு வீழநதாறபோலக குடைகளும அறறன எனறு பொருளகோடலுமாம, குடை ககுவமை நோககிக கோளினைச சநதிரனெனறு கூறினும (கககூ)

கொடியொடு கொடுஞசினப புாவிச கூடடறப
படியிடை படிநதன பருதத தோபணை
நெடியவண கடகரி புாணட நெறறியி
னிடியொடு முறிநதுவீழ சிகர மெனனவே

இ - ள பருததேோ - பெரிய இரதஙகள, கொடியொடு - கொடிகளுடனே கொடுஞசினம புரவி - கொடிய கோபததையுடைய குதிரைகளினது, கூடடு அற கூடடஙகள அறறு, படியிடை - புவியில, படிநதன - வீழநதன, பணை - முரசுக ளையுடைய, நெடிய வல கடம கரி- பெரிய வலிய மதம பொருநதிய யானைகள நெற றியில - உசசியில, இடியொடு - இடியினேடு, முறிநது வீழசிகரம எனன - முடிநது விழுகினற மலைகளைபபோல, புாணட - (துதிககை யறுபடடு வீழநது) புரணடன

அறறன சிரமென வறித றேறறலா
கொறறவெஞ சிலைசசரங கோதது வாஙகுவா
ிறறவ ிருதவ ரெழுநது விணணினைப
பறறின மழையெனப படைவ ழஙகுவாா

இ - ள இறறவா - (தலை) யறுபடட அரககாகள, சிரம அறறன என அறி தல தேறறலா - (தம) தலைகள அறுபடடன வெனறு அறியாமல, சரம கோதது - அமபுகளைபபூடடி, கொறற வெஞசிலை - வெறறி பொருநதிய வெவவிய விலலை, வாஙகுவாா - வளைபபாா, இருதவா எழுநது - தலைகள அறுபடாதவாகளெழுநது, விணணினை பறறின மழை என - ஆகாயததைபபறறிய மேகநதாரைகளை வழஙகு தலபோல, படை வழஙகுவாா - ஆயுதஙகளை எறிநதாாகள (ககஅ)

கேடகத தடககையா கிரியின றேறறதத
ராடகக கவசததா கவநத மாடுவ
பாடகத தரமபையா மருளப பலவித
நாடகத தொழிலினை நடிபப வொததவே

இ - ள கேடகம தடம கையா -கேடகததையுடைய பெரியகையினையுடைய வாகளும, கிரியின தோறறததா - மலைபோலுங காட்சியையுடையவாகளுமாகிய, ஆடகம கவசததா - பொறகவசததையணிநத வீராகளுடைய, கவந்தம ஆடுவ - கவ

நந்தனவ ஆடுவன, (எத்தன்மையாயிருந்ததென்னில்), பாடகத்து அரமகையா - (காலிற்) பாடகத்தையணிந்த தேவமாதர்களும், மருள - மயங்கும்படி, பலவிதம் - பலவகையாகிய, நாடகம் தொழிலினை - நடனத்தொழிலோடு, நடிப்ப ஒத்த - கூத்தாடுவனபோன்றன (கக௯)

கவரிவெண் குடையெனு நுரைய கைம்மலை
சுவற்றரு சுறவமாழ் சுழிய தண்டுறைப்
பவரினப் படுமணி குவிக்கும் பண்ணைய
வுவரியைப் புதுக்கின வுதிர யாறரோ.

இ - ள் கவரிவெண் குடை எனும் நுரைய-வெண்சாமரங்கள் வெண் குடைகள் என்று கூறும் நுரைகளையுடையனவும், கைம்மலை - யானைகளும், சுவல் - (அரக்கர்களின் அறுபட்ட) தோள்களும், சுறவம் தரு - சுறுமீன்களைப்போல, ஆழ் - ஆழ்கின்ற, சுழிய - நீர்ச்சுழிகளையுடையனவும், தண் துறை - குளிர்ந்த இறங்கு துறைகளில், இனப்படும் - குலங்குலமாக வகுக்கப்படுகின்ற, மணி - இரத்தினங்களை, குவிக்கும் - (கொண்டாந்து) குவிக்கின்ற, பவர் பண்ணைய - கொடிகளாகிய படுகைகளை யுடையனவுமாகிய, உவரியை - உப்புக்கடலகளை, உதிரம் யாறு - அரத்தநதிகள், புதுக்கின - நூதனமாகச் செய்தன

குறிப்பு — கவரி - சமரீயெனனுமம் வடசொற் சிதைவென்பர், இது ஒருவகைப் பெண் மானின் பெயர் இப்பெயர் அம் மானினது வால் மயிரை யுணர்த்திப் பின்னர் அவ்வால் மயிரால் செய்யப்படும் சாமரத்தையுணர்த்துதலின் இருமடியாகுபெயர். இக்கவரி வெண்மை நிறமுடைத்தாதல் பற்றி இடைநிலைக்குணத்தீவகமாகி நிற்ற வெண் என்பதைக் கவரியோடுங் கூட்டி வெண்சாமரங்களென்றும் சுவல் தரு மேடுதருகின்ற [பெரிய] எனவும், சுவறு அரு - வற்றாத எனவும் பொருள்கொண்டு நீர்ச்சுழிக்கு அடையாக்கிக் கூறலாமாயினும், கைம்மலை + சுவற்று சுறவம் என்பது பண்புத்தொகையாக நில்லாது உம்மைத் தொகையாக நிற்றலின் அது பொருந்தாதெனக், பண்புத்தொகையா மிடத்துக் கைம்மலைச் சுவற்று என வலிமிக்கு நிற்கும் பற்பபாட்டில, "சுவலழுந்தப்பலகாய்" எனபுழியும், சுவற்பூண ஞாண்மிசைப் பொலிய என புழியும் சுவல்-தோளாதலும், "உழிஞைப் பவரொடு மிடைந்து" எனபுழிப் பவரென்பது கொடியாதலுங்காண்க. தரு - உவமவாசகம். நுரை,—முதனிலைத்தொழிலாகு பெயர் சுழி - சுழிப்பது, வினை முதற் பொருண்மை விகுதி பண்ணாந்து கெட்டது தண்டுறை - ஆயுதவுறை யெனவும், பவர் - நெருங்க லெனவும் பொருள் கொண்டு தண்டுறையாகிய நெருங்கலுற்ற இனமணிகளைக் குவிக்கும் பண்ணைய என்று கூட்டியுரைத்தலுமாம் உவரி - உவர்ப்புடைமை பற்றிக் கடலுக்கு இப்பெயர் போந்தது, உவர் - பகுதி, இ - வினைமுதற் பொருண்மை விகுதி (௧௨0)

சண்டவெங் கடுங்கணை தடியத் தானசில
திண்டிறல வளையெயிற் றரக்கர் தேவராய
வண்டுழல புரிகுழன மடந்தை மாரொடுங்
கண்டனர் தமமுடைக் கவந்த நாடகம்.

இ - ள். சண்டம் வெங்கடுங்கணை - வேகம்பொருந்திய கொடியபாணங்கள், தடிய - கொல்லுவதால், திண் திறல் வளை எயிறு அரக்கர் - வலிய வக்கிரதந்தங்களையுடைய இராக்கதர்கள், தேவராய் - தேவர் உருவத்தை யடைந்தவராய், வண்டு உழல் புரி குழல் மடந்தை மாரொடும் - வண்டுகள் உழுகின்ற (பாரிசாத முதலிய புஷ்பங்களையணிந்த) சுருட்டிமுடித்த கூந்தலினையுடைய பெண்களோடும், தம் உடைக் கவந்தம் நாடகம் - தங்களுடைய கவந்தங்களினது நாடகத்தொழிலை, கண்டனர் - பார்த்தார்கள்.

குறிப்பு—சண்ட வெங்கடுங்கணை - நமன்போன்ற கொடியக்கணைகளுமாய் வெங்கடு, திண்டிறல் என்பன - ஒருபொருட் பன்மொழிகள். இராக்கத வுருவ மொழிந்து வீரசுவர்க்கமடைந்து தேவர்போலும் இன்பம் நுகர்வாராயின் தன்மை பற்றி 'தேவராய்' என்றார். இறந்து தேவராய அரக்கர்கள் போக பூமியின்கண் இன்பம் அடையுந் தகைமைவிளங்க 'வண்டுழல் புரிகுழன் மடந்தை மாரொடுங் கண்டனர்' என்றார். போகபூமியியலை 'பதினாறாட்டைக் குமரனுஞ் சிறந்த, பன்னீராட்டைக் குமரியு மாகி, யொத்த மரபினு மொத்த வன்பினுங், கற்பகநன்மர நற்பய னுதவ, வாங்கிய செய்தவத் தளவு மவ்வுழிப், போக நுகர்வது போக பூமி" என்பதனாலறிக. வண்டுழுஞ் செயலைநோக்கியும், தேவமாதரென்பது நோக்கியும் பாரிசாத முதலிய விண்ணுலக மலர்களைக் கூறினும். கூந்தலை உச்சியின்முடித்தல் முடியும், சுருட்டிமுடித்தல் குழலும், மயிரை முடிந்துவிடுதல் தொங்கலும், பின்னிவிடுதல் பனிச்சையும், பின்னே செருகல் சுருளுமாதலின், குழல் - சுருட்டிமுடித்த கூந்தலென்றும். உடை - உடைய என்பதன் விகாரம். (கஉச)

ஆய்வளை மகளிரோ டமர ரீட்டத்தர்
தூயவெங் கடுங்கணை துணித்த தங்கடோள்
பேயொரு தலைகொளப் பிணங்கி வாய்களி
னாயொரு தலைகொள நகையுற் றார்சிலர்.

இ - ள். ஆய்வளை மகளிரோடு - ஆராய்ந்தெடுத்த வளையல்களையுடைய தேவமாதருடனே, அமரர் ஈட்டத்தர் - தேவர்கூட்டத்தைச்சேர்ந்த அரக்கர்களில், சிலர்—, தூய - பரிசுத்தம்பொருந்திய, வெங்கடுங்கணை - விரும்பத்தக்குந்த வேகம்பொருந்திய (ஸ்ரீராமபிரானது) அம்புகள், துணித்த - அறுத்த, தங்கள்தோள் - தமது புயங்களை, பேய் ஒருதலைகொள - பேய்கள் ஒருபக்கத்திற் பற்றுவதாலும், நாய் - நாய்கள், பிணங்கி - சண்டைசெய்து, வாய்களின் - வாய்களினால், ஒருதலைகொள - மற்றொருபக்கத்திற் பற்றுவதாலும், நகை உற்றார் - சிரித்தார்கள்.

குறிப்பு—பாவிகளாகிய அரக்கர்கள் தேவர்களானது ஸ்ரீராமபிரானது கணைகளின் மகிமையாலென்பார் 'தூயவெங்கடுங்கணை' என்றார். "செஞ்சரத் தூய்மை யாற் றேவ ராகினான்" என மேலுங் கூறுவர். (கஉஉ)

தெரிகணை மூழ்கலிற் றிறந்த மார்பின
ரிருவினை கடந்துபோ யும்ப ரெய்தினார்
நிருதர்தம் பெரும்படை நெடிது நின்றவ
னொருவனென் றுள்ளத்தி னுலைவுற் றாரரோ.

இ - ள் தெரிகணை மூழ்கலின - ஞானஸ்திரஙகள பாயநததினுல, திறநத மாாபினா - பிளவுபடட மாாபினையுடைய அரககாகள, இருவினை கடநதுபோய - பெரிய பாவததைத தாணடிசசென்று, உமபா எயதினா - விணணுலகை யடைநதவாகளாய, நிருதாதம பெருமபடை - அரககருடைய பெரியசேனையின கண, நெடிது நினறவன - நெடுநேரமாக நிறகினற ஸ்ரீராமபிரானை, ஒருவன என்று - ஒப்பற்றவனாகிய பரமபொருளென்று கூறி, உளளததின - (தமது) மனததில, உலைவு உறறா - அசசததை யடைநதாாகள (௪௨௩)

கைககரி யனனவன பகழி கணடவா
மெயககுலம வேரொடுந துணிதது வீழததின
மைககரு மனததொரு வஞசன மாணபிலன
பொயககரி கூறிய கொடுஞசொல போனறவே.

இ - ள். கைககரி அனனவன - துதிககையினையுடைய யானையை யொதத ஸ்ரீராமபிரானது, பகழி - அமபுகள, கணடவா மெய குலம - பாாதத அரககாகளின உடற கூடடஙகளை, வேரொடும துணிநது வீழததின - அடியோடு அறுததுததள ளின, (அககணைகள), மை கருமனதது ஒரு வஞசன -குறறம பொருநதிய அஞஞா ன விருள சூழநத மனததினையுடையானுகிய ஒரு பொயயன, மாணபு இலன - பெருமையிலலாதவனுகி, பொய கரி கூறிய - (நியாயசபையிற) பொயசசாடசி சொ னன, கொடுஞசொலபோனற - கொடிய வாாததைகளை ஒததிருநதன. (௪௨௪)

அஞசிறை யறுபத மடைநத கீடததைத
தஞசெனத தனமய மாககுந தனமைபோல
வஞசகத தாககரை வளைததற வளளறுன
செஞசரத தூயமையாற றேவ ராககினுன

இ - ள அம சிறை அறுபதம - அழகிய இறகுகளையுடையவணடு, அடைநத- (தான) கொணட, கீடததை - புழுககளை தஞசு என - தஞசமென்று, தனமயம ஆககும தனமைபோல - (அவறறிறகுத) தனது உருவைச செயகினற தனமையைப போல, வளளல - ஸ்ரீராமபிரான, வஞசகதது அரககரை வளைதது - மாயசசெயலி னையுடைய இராககதரை வளைததுககொணடு, செஞசரததூயமையால - தனது நல லபாணஙகளினுடைய பரிசுததததினுலே, தேவா ஆககினுன - (அவவரககாகளை) தேவாகளாகுமபடி செயதான

குறிபபு —அறுபதம - சினையாகுபெயராய ஆறுகாறபறவையை யுணாததிறறு. இபபறவை வணடுகளுள ஓாவகையாகிய குளவியாம இககுளவி வெணணிறங கொணட புழுககளைக கொணடுபோய அடைகாததுத தனனுருவை அதனுககு அளிததுத தன இனமாககுந தனமையையுடையதாம. இதனுணமை பாகவததில "பொனனிற மாமெனப புவனம படைததுககாதது" எனவருஞ செயயுளால நனகு விளஙகுதலறிக தஞசு - தஞசம எனபதன விகாரம இனி, தனகுஞசு எனபதன விகாரமுமாம தனனைபபோல சதுாபுஜஙகள முதலியன கொணடு விளஙகும நித தியசூரிகளாகுமபடி செயது இவவரககருககு மோட்சததைக கொடுததான எனபாா 'தனமைபோல செஞசரததூயமையால தேவராககினுன' எனறாா (௪௨௫)

வலங்கொள்போர் மானுடன் வலிந்து கொன்றமை
யலங்கல்வே லிராவணற் கறிவிப் பாமெனச்
சலங்கொள்போ ரரக்கர்த முருக்க டாங்கின
விலங்கையி னுற்றவக் குருதி யாறரோ

இ - ள். வலம் கொள்போர் மானுடன் வலிந்து கொன்றமை - வலிகொண்ட போரில் ஒருமனிதன் துணிந்து (அரக்கரைக்) கொன்ற விஷயத்தை, அலங்கல் வேல இராவணற்கு - வெற்றி மாலையைப்புனைந்த வேலினையுடைய இராவணனுக்கு அறிவிப்பு ஆம் என - அறிவித்தலாகும் என்னும்படி, சலம் கொள் போர் அரக்கர்தம் - கோபங்கொண்ட போரினையுடைய அரக்கர்களினது, உருக்கள் தாங்கின - உருவங்களைத்தாங்கிக் கொண்டு, அக் குருதி யாறு - அவ்விரத்தநதிகள், இலங்கையின் உற்ற - இலங்கையினகண் அடைந்தன.

குறிப்பு —'அறிவிப்பாம்' என்பது தன்மைப் பன்மை முற்றுமாம். (௧௨௬)

சூழ்ந்தகார் நெடும்படை பகழி சுற்றுறப்
போழ்ந்துயிர் குடித்தலிற் புரளப் பொங்கினன்
றாழ்ந்திலன் முத்தலைத் தலைவன் சோரியி
னாழ்ந்ததே ரம்பரத் தோட்டி யார்க்கினான்

இ - ள். சூழ்ந்த - வளைந்த, கார் - அணிவகுப்பினையுடைய, நெடும்படை - (தனது) பெரிய சேனையை, பகழி - (ஸ்ரீராமபிரானது) அம்புகள், சுற்று உற போழ்ந்து - ஒருங்கு சேரப்பிளந்து, உயிர் குடித்தலின் - உயிர்களை யுண்பதால், முத்தலைத்தலைவன் - திரிசிரன், புரள பொங்கினன் - (கண்டார் நிலைமை) மாறும்படி கோபித்து, தாழ்ந்திலன் - தாமதியாதவனாகி, சோரியின் - இரத்தத்தில், ஆழ்ந்த புதைந்த, தேர் - (தனது) இரதத்தை, அம்பரத்து ஓட்டி - ஆகாயத்திற் செலுத்தி, ஆர்க்கினான் - பேரொலிசெய்கின்றான். (௧௨௭)

ஊன்றிய தேரின னுருமின் வெங்கணை
வான்றொடர் மழையென வாய்மை யார்க்குஞ்
சான்றென நின்றவத் தரும மன்னவன்
றோன்றறன் றிருவுரு மறைப்பத் தூவினான்

இ - ள். ஊன்றிய தேரினன் - (வானத்தினின்றும் இறக்கிப் புவியில்) நிறுத்திய தேரினையுடைய திரிசிரன், யாவர்க்கும் - எவர்க்கும், வாய்மைசான்று என - சத்தியத்திற்குச் சாட்சிபோல, நின்ற - நிற்கின்ற, அத் தருமம் மன்னவன் - புண்ணியத்தையுடைய அத்தசரதச்சக்கரவர்த்தியினது, தோன்றல் தன் - குமாரனாகிய ஸ்ரீராமபிரானுடைய, திரு உரு மறைய - திருமேனி மறையும்படி, உருமின் வெங்கணை - இடியைப்போலுங் கொடியபாணங்களை, வான் தொடர் மழை என - விண்ணினைப்பற்றிய மேகம்போல, தூவினான் - பொழிந்தான்.

குறிப்பு:—"உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா, ருள்ளத்து ளெல்லா முளன்" என்றவாறு தான் கைகேசிக்குக் கொடுத்த வரத்தின்படி நடந்து சத்தியத்தை நிலைநாட்டி யெவரும் நன்குமதித்துத் துதிக்க நின்றவனென்பது விளங்க 'யாவர்க்குஞ் சான்றென' என்றார். "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்றாது

நிறபதோள றில" என்றவாறு தான இறந்ததன புகழிலேததிருக்கப்பெற்றமையா ல நின்ற என்னும இறந்தகாலப பெயரெச்சத திறகு நிறகின்றவென நிகழ்காலததுப பொருளகூறினும இங்ஙனநின்றது தெளிவுபறறியாத காலவழுவமைதி. அதத ரும மன்னன தோன்றல எனவே எமபிரானும மாதாபிதா வாகிய பரிபாலனத தின பொருட்டுக கானடைந்து சததியததை நிலைநிறுததிய தனமை குறிப்பிககப பட்டது (கஉஅ)

தூவிய சரமெலாந் துணிய வெங்கணை
யேவின னிராமனு மேவி யேழிரு
பூவியல வாளியாற பொலங்கொ டேரழித
தாவிவெம பாகனை யழிதது மாறறினான.

இ - ள தூவிய சரம எலாம - (திரிசிரன) பொழிந்த கணைகளெல்லாம. துணி ய - அறுபடும்படி, வெங்கணை ஏவினன இராமனும - வெவ்விய சரங்களை யேவிய ஸ்ரீராமபிரானும, மேவி - விருமபி, பூ இயல - பொலிவு பொருநதிய, ஏழ இரு வா ளியால - பதினானகு கணைகளால, பொலம கொளதேர அழிதது-பொன கொண்ட தேரினை நாசபபடுததி, ஆவி வெம்பாகனை அழிதது - (அவனுககு) உயிரபோலும பிரியமான ரதசாரதியைககொனறு, மாறறினான - (அவன நிலையை) மாறுபடுமப படி செயதான. (கஉகூ)

அனறியு மககணத தமர ராரதெழுப
பொனறெரி வடிமபுடைப பொருவில வாளியால
வனறொழிற றீயவன மகுட மாததலை
யொனறொழித திரணடையு முருட்டி னானரோ

இ - ள அனறியும - அல்லாமலும, அ கணதது - அப்பொழுதில, அமரா ஆரதது எழ - தேவாகள ஆரவாரஞசெயது கிளமபுமாறு, (ஸ்ரீராமபிரான), பொன தெரிவடிமபு உடை - பொன காணப்படுகிற நுதியினையுடைய, பொருவு இல வாளி யால (தன) ஒப்பிலலாத கணைகளால, வல தொழில தீயவன - கொடியசெயலக ளையுடைய பாவியாகிய திரிசிரனது, மகுடம மா தலை - கிரீடமபொருநதிய பெரிய தலைகளில, ஒனறு ஒழிதது - ஒனறினைநீககி, இரணடையும - மறறைய இரணடு தலைகளையும, உருட்டினான - உருளுமபடி செயதான (கஙo)

தேரழிந தவவழித திரிசி ராவெனும
பேரழிந ததனினு மறமபி ழைததிலன
வாரழிந துமிழசிலை வான நாட்டுழிக
காரழிந தாலெனக கணைகள சிநதினான.

இ - ள தோ அழிந்து - இரதம் நாசமாகிய, அ வழி - அவவிடதது, திரிசிரா எனும - திரிசிரனே என்று கூறும, பேர அழிநததனினும - பெயா அழிநத தனமை யினும, மறம பிழைததிலன - வலிமை நீஙகாதவனாகிய திரிசிரன, வாா அழிந்து - நீளங்கெட்டு [வளைந்து], உமிழ - (கணைகள) சிநதுகின்ற, சிலை - விலலினாலே, வான நாட்டுழி - விண்ணுலகத்தினின்றும, கார இழிநதாலென - மழை பிறங்கினது போல, கணைகள சிநதினான - பாணங்களை யெயதான.

குறிப்பு—மூன்று சிரங்களில இரணடு சிரமொழிந்து ஒருசிரத்தோடு நினறு னெனபார 'திரிசிராவெனும பேரழிந்து' எனறார இவன ஆகாயத்தினினறு சர மாரி பொழிந்தமை விளங்க 'வானநாடடுழிககாரிழிந்தாலென' எனறார இவன கரிய மேனிககும சர வருஷத்துககும மேகம உவமையாககபபடடது (கஙக)

ஏறறிய நுதலின னிருணட காரமழை
தோறறிய வில்லொடுந தொடர மீமிசைக
காறறிடை யழிந்தெனக காரமு கத்தையு
மாறறரும பகழியா லறுத்து மாறறினான

இ - ள் ஏறறியநுதலினன-(அத்திரி சிரன நெறறியினமேல) ஏறறிய புருவத் தையுடையானுகி, இருணட காரமழை தோறறிய - இருள் சூழந்த காரபபருவத்து மேகத்தைப்போலக காணபபடட, வில்லொடும தொடர - வில்லுடனே வர, மீமி சை காறறிடை அழிந்தென - வானத்தினகண காறறினுல (அம்மேகம) அழிந்தது போல, (அழியுமபடி), காரமுகத்தையும - விலலினையும, (ஸ்ரீராமபிரான), மாறற ரும பகழியால - (யாவராலும) விலககமுடியாத (தனது) பாணஙகளால, அறு த்து மாறறினுன - துணித்து வேருககினுன (கஙஉ)

வேறு

விலலி ழந்தன னெனனினும விழித்தவாண முகத்தி
னெலலி ழந்தில னிழந்திலன வெங்கத மிடிக்குஞ
சொலலி ழந்திலன றோளவலி யிழந்திலன சொரியுங
கலலி ழந்தில னிழந்திலன கறங்கெனத திரிதல

இ - ள் வில இழந்தனன எனனினும - (அவன) விலலினையிழந்தா னெனறா லும, விழித்த ஆணமுகத்தின - (கணகளை யிமையாது) பாரத்த ஆணமைவிளங கிய முகத்தினது, எல - பிரகாசத்தை, இழந்திலன இழந்திலன - (சிறிதும) இழக கவேயிலலை, வெங்கதம இடிக்கும - கொடிய கோபத்தோடு சொலலுகினற சொல இழந்திலன - வாரத்தைகளை யிழந்தானிலலை, தோளவலி இழந்திலன - புயவலி யிழந்தானிலலை, சொரியும கல இழந்திலன - (பறித்துபபறித்து மழைபோலப) பொழிகினற மலைகளை இழந்தானிலலை, கறஙகென திரிதல இழந்திலன - காறறாடி யைபபோல(சசுழனறு) திரியுஞ செயலை இழந்தானிலலை

குறிப்பு—அகெகு - துணிவு. கோபத்தோடு கூறிய மொழிகள கேடபான மனத்தைப புணணாககுந தனமையனவாகலின 'இடிக்குஞ்சொல' எனறார. இவவ ரககன கையுங்காலும ஓயாதவனாயப பறித்துபபறித்தெறியும பருவதஙக ளனைத் தையும ஸ்ரீராமபிரான தன கணைகளால தூளாககிககொணடேயிருந்தானெனபது ஈறறிரணடடியானும போதரும கருத்து (கஙங)

ஆளி ரணடெனு நூளவென வந்தரத தொருவன
மூளி ருமபெரு மாயவெஞ செருமுயல வானைத
தாளி ரணடையு மிரணடுவெங கணைகளாற றடிந்து
தோளி ரணடையு மிரணடுவெங கணைகளாற றுணித்தான

இ-ள். (ஸ்ரீராமபிரான்) அந்தரத்து - ஆகாயத்தில், ஒருவன்—, இரண்டு நூறு ஆள் உள் என - இருநூறுபேரிருக்கின்றார்களென்னும்படி, மூள - கூடுகின்ற, இருபெருமாயம் - பெரிய மாயமாகிய, வெஞ்செரு முயல்வானை - கொடிய போரைச்செய்கின்ற திரிசிரனது, தாள் இரண்டையும் - இரண்டுகால்களையும், இரண்டு வெங்கணைகளால் தடிந்து - இரண்டு கொடிய பாணங்களால் துணித்து, தோள் இரண்டையும் - இரண்டு புயங்களையும், இரண்டு வெங்கணைகளால் - இரண்டு கொடிய பாணங்களால், துணித்தான் - அறுத்தான்.

குறிப்பு—உள்ளென்றபாலது உள்ளென நின்றது, திணை வழுவமைதி. சிரனைப்போலவே இருநூறுதிரிசிரர்கள் ஆகாயத்தினின்று போர்செய்வதாகத் தோன்றும்படி மாயவெஞ்செரு முயன்றான் என்க. இருபெரு - ஒருபொருட்பன்மொழி - நானூறு கால்களையும், நானூறு கைகளையுந் துணித்தான் என்னாது இரண்டு தாள் இரண்டு தோளென்றதனால் ஞானாதிரேகி அவன் மாயையை விலக்கிப் பின்னர் அவன் கால் கைகளைத் துணித்தமை பெறப்படும். (௧௩௪)

அற்ற தாளொடு தோளின னயிலெயி றிலங்கப்
பொற்றை மாமுழைப் புலாலுடை வாயினன் புகுந்து
பற்ற வாதரிப் பான்றனை நோக்கினன் பரியான்
கொற்ற வார்சிலைச் சரங்கொடு தலையையுங் குறைத்தான்.

இ-ள். அற்றதாளொடு தோளினன் - அறுபட்ட கால்களோடு புயங்களையுடையானும், அயில் எயிறு இலங்க - கூர்மைபொருந்திய பற்கள் விளங்கும்படி, பொற்றை மா முழை - மலையிலுள்ள பெரியகுகையாகிய, புலால் உடை வாயினன் - புலால் நாற்றத்தையுடைய வாயினையுடையானுமாகி, புகுந்து - பிரவேசித்து, பற்ற (தன்னைக்) கவ்வும்படி, ஆதரிப்பான் தனை - விருப்பங்கொள்வானாகிய திரிசிரனை, நோக்கினன் - பார்த்த ஸ்ரீராமபிரான், பரியான் - இரக்கமில்லாதவனாய், கொற்ற வார் சிலை சரங்கொடு - வெற்றிபொருந்திய நெடியவில்லிற்கோத்த கணையினால், தலையையும் குறைத்தான் - (அறுபடாது ஒழிந்த) தலையையும் அறுத்தான்.

குறிப்பு—கால்கை யறுபட்டுப் போர்புரியச் சக்தியில்லாத நிலைமையிலும் வாயாற்கவ்விக் கொன்றுவிட நினைத்தமையால் அவ்வரக்கன்மேல் எம்பிரானுக்கு இரக்கமில்லாமற்போயிற்று. (௧௩௫)

திரிசி ராவெனுஞ் சிகரமண் சேர்தலுஞ் செறிந்த
நிருத ரோடினர் தூடணன் விலக்கவு நில்லார்
பரிதி வாளினர் கேடகத் தடக்கையர் பரந்த
குருதி நீரிடை வார்கழற் கொழுங்குடர் தொடக்க.

இ-ள். திரிசிரா எனும் சிகரம் - திரிசிரா என்றுகூறும் மலைபோன்றவன், மண் சேர்தலும் - மண்ணில் வீழ்ந்த வளவில், தூடணன் விலக்கவும் நில்லார் - தூஷணன் தடுக்கவும் நில்லாதவர்களாகி, செறிந்த நிருதர் - நெருங்கிய அரக்கர்கள், பரிதி வாளினர் - சூரியனைப்போலும் ஒளிரிய வாளினையுடையவர்களும், கேடகம் தடம் கையர் - கேடகத்தைப்பிடித்த பெரிய கையினையுடையவர்களாய், பரந்த குருதி நீரிடை - பரவிய இரத்த நீரில், வார்கழல் - நெடிய வீரக்கண்டைகளில், கொழுங்குடர் - கொழுப்புள்ள குடல்கள், தொடக்க - மாட்டிக்கொள்ளும்படி, ஓடினர் - ஓடினார்கள்.

குறிப்பு — திரிசிரா - திரிசிரனது பெயர் திரிசிரனே என விளியுருக் கூறலும் மையும், மூன்று தலையுடைமை பற்றி இப்பெயர் போந்தது. திரிசிரன் படைத்தலைவர் யாவரினும் வலியனும் முதன்மையானுமாதல்பற்றி 'சிகரம்' என்றார். சிகரம் - மலையினுச்சி. தூஷணன் - தூஷணம் என்னும் வடசொல்லடியாகப்பிறந்த பெயர். இவன் அநேக கொடிய செய்கைகள் புரிந்து நிந்தனைக்குள்ளாவோனாதல்பற்றி இவனுக்கு இப்பெயர் போந்தது. இத்தூஷணனும், விஷம்போலும் உருவமுஞ் செயலும் பொருந்திய கரனும் சகோதரர்கள். இவர்கள் இராவணனது அன்னையாகிய கைகேசிக்கு உடன் பிறந்தாள் மக்களாதலின், இராவணனுக்குத் தம்பிமார்களானமை யறிக. "என்று தங்கை மனமுவப்ப வெல்லாப் பூசை களுமியற்றி, யொன்று குணத்தினுந்தாயருடனே பிறந்தாள் வயிறுதித்த, வென்றி வீரர் கரனுமவன் விரிந்த படைக்குத் தலைவனுந், துன்று விறகைத்தூடணனுந் தோலா வலிமுச் சிரத்தோனும்" என மேல்வரும் உத்தரகாண்டச் செய்யுளை யீண்டு நோக்குக. ஓடினவர்களும் தக்க வீரர்களேயென்பார் 'பரிதிவாளினர் கேடகத்தடக்கையர்' என்றார். கழல் - வீரர்காலில் அணிகின்ற அணி, இதனை "வீரத்தில் வீக்கிய கழலே யாடவர், கானமிசை யணிவடம்" என்பதனாலுணர்க. வார்தல் - அளாவுதலும், தடவுதலுமாம். இனி வார் என்பதைக் கொழுங்குடரோடு கூட்டலாம். கொழுங்குடல் - மணிக்குடல், இது மற்றைக் குடல்களைப்போலாது கொழுப்போடு கூடியிருப்பதாம். தொடக்குதல் - கட்டுதல், பொருத்துதல். (கசுகூ)

கணத்தின் மேனின்ற வானவர் கைப்புடைத் தார்த்தார்
பணத்தின் மேனிலங் குழியுறக் கால்கொடு பதைத்தார்
நிணத்தின் மேல்விழுந் தழுந்தினர் சிலர்சிலர் நிவந்த
பிணத்தின் மேல்விழுந் துருண்டன ருயிர்கொடு பிழைப்பார்

இ - ள். (அவ்வாறு ஓடிய அரக்கர்களைக்கண்டு), கணத்தில் - அந்நேரத்தில், மேல் நின்ற வானவர் - ஆகாயத்தில் நின்ற தேவர்கள், கைப்புடைத்து ஆர்த்தார் - கை கொட்டி ஆரவாரம் செய்தார்கள், சிலர் பணத்தின் மேல் நிலம் குழி உற - சில அரக்கர்கள் ஆதி சேஷனது பணமுடி மேலிருக்கிற பூமியானது குழிபடும்படி, கால் கொடு பதைத்தார் - கால்களால் (மிதித்து) விரைந்தோடினவர்களாய், நிணத்தின் மேல் விழுந்து அழுந்தினர் - கொழுப்பின்மேல் (வழுக்கி) விழுந்து (அந்நிணச்சேற்றில்) ஆழ்ந்துவிட்டார்கள், சிலர் நிவந்த பிணத்தின்மேல் - சிலர் உயர்ந்த பிணங்களின்மேல், விழுந்து - (இடறி) வீழ்ந்து, உருண்டனர் - புரண்டவர்களாய், உயிர் கொடு பிழைப்பார் - (அப்பிணக் குவியலுள் மறைந்து) உயிரைக் (காப்பாற்றிக்) கொண்டு பிழைத்திருப்பவரானார்கள்.

குறிப்பு — கணம் - க்ஷணம் என்னும் வடமொழித்திரிபு, இனி, மேல் கணத்தின் நின்ற வானவர் எனக்கொண்டு, ஆகாயத்தில் பதினெண் கணத்தோடு நின்ற தேவர் என்று கூறலுமாம். ஈண்டு, கணத்தின், இன் - உருபுமயக்கம். வானவர் - நால்வகைத் தேவரும் மற்றைத் தேவருங் கூடிய கூட்டத்தைக் குறித்த பொதுப் பெயர், "நால்வகைத் தேவரு மூவறு கணங்களும், பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து, வேறுவேறு கடவுளர் சாறுசிறந் தொருபால்" என்றார் இளங்கோவடிகள். "அமரர் சித்த ரசுரர் தைத்தியர், கருடர் கின்னரர் நிருதர் கிம்புருடர், காந்தரு வரியக்கர் விஞ்சையர் பூதர், பசாச ரந்தரர் முனிவருரகர், ஆகாய வாசியர் போகபூமியரெனப், பாகுபட்டன பதினெண் கணமே" என்பதனாற் கணவகையறிக. நால்வகை

தேவரென்றது முப்பத்து மூவரை "ஆதித்தர் பன்னிருவ ரச்சுவனிக ளிருவ, ரீசர் பதினொருவ ரெண்மர் வசுக்க,ளாக முப்பத்து மூவர்தம் பெயரே" மற்றைத் தேவரென்றது இந்திராதி திக்குப்பாலகர் முதலியவர்களை பணம் - பாம்பின்படம் நிணச்சேற்றில் வழுக்காவண்ணம் கால்களை ஊன்றியூன்றிவைத்து ஓடினரென்பர். 'நிலங்குழியுறக் கால்கொடு பதைத்தார்' என்றார் பதைத்தல் - பதறுதல், நடுங்கல், விரைதல். நிணம் - தசைச்சேறுமாம் உருண்டனர், உருள் - பகுதி, இனி, உருண்டனர் - இறந்தாரகளென்னுமாம், இப்பொருளில் உயிர்கொடு பிழைக்கக் கருதியவர்கள் இறந்தாரகளென்று கூறிமுடிக்க. (கூ௬எ)

வேய்ந்த வாளொடு வேலிடை மிடைந்தன வெட்ட
வோய்ந்து ளார்சில ருலந்தன ருதிரநீ யாற்றிற்
பாய்ந்து காற்பறித் தழுந்தினர் சிலர்சிலர் பயத்தா
னீந்தி னார்நெடுங் குருதியங் கடற்புகக் கிலையார்

இ - ள் சிலர் வேய்ந்த வாளொடு வேல இடைமிடைந்தன வெட்ட - சில அரக்கர்கள் அலங்கரித்த வாளாயுதங்களும் வேல்களும் நடுவழியில் நெருங்கினவை களாய(த் தமதுகால்களை) வெட்ட, (அதனால்), ஓய்ந்து உளார் உலந்தனர் - (ஓட வலியற்றுச்) சோர்ந்தவர்களாயிறந்தார்கள், சிலர் - சில அரக்கர்கள், உதிரம் நீயாற்றில் - அரத்த நீர் நதியில், பாய்ந்து - குதித்து, கால்பறித்து - (நிணச்சேற்றிற் பதிந்த தமது) கால்களைப் பிடுங்கி, அழுந்தினர் - (எடுக்கமுடியாமல் அச்சேற்றிலே யே) மூழ்கிப்போனார்கள், சிலர் - சில அரக்கர்கள், பயத்தால் - அச்சத்தினாலே, நெடுங்குருதி கடல்புக்கு - பெரிய அரத்தக்கடலிற்புகுந்து, நீந்தினார் - நீந்தி, நிலையார் - நிலையாதவர்களானார்கள் [இறந்தார்கள்]

குறிப்பு — வேய்ந்த - (இலைதழை) மூடிய என்னுமாம் அம் - சாரியை நீந்த முடியாமற் காலசையோய்ந்து அக்கடலில் மூழ்கி யிறந்தாரென்பார் 'நிலையார்' என்றார் (௩௬அ)

கச்சும வாளுந்தங் காற்றொடர்ந் தீர்வன காணா
ரச்ச மென்பதொன் றுருவுகொண் டாலென வழிவார்
ருச்ச வீரன்கைச் சுடுசர நிருதர்நெஞ் சுருவத்
தச்சு நின்றன கண்டன ரவ்வழித் தவிர்ந்தார்.

இ - ள் கச்சும வாளும் - அரைக்கச்சைகளும் வாள்களும், தம கால் தொடர்ந்து - தமது கால்களில் (நழுவிவீழ்ந்து) பற்றி, ஈர்வன - இழுப்பனவும் பிளப்பனவுமாகிய செயல்களை, காணார் - பாராமல், அச்சம் என்பது ஒன்று - பயமென்று சொல்வதாகிய ஒருகுணம், உருவுகொண்டால் என -உருவத்தையடைந்தாற்போல, அழிவார் - (மனநிலை) கெட்டோடு மரக்கர்கள், உச்சவீரன் உயர்ந்தவீரனாகிய ஸ்ரீராமபிரானது, கை சுடு சரம் கையினின்றும் விடுபட்ட கொடியபாணங்கள், நிருதர் நெஞ்சு - அரக்கர்களது மார்பினை, உருவ - உருவிச்செல்வதற்காக, தச்சுநின்றன - தைத்து நிற்பனவற்றை, கண்டனர் - பார்த்து, அ வழித் தவிர்ந்தார் - (தாம் செல்லும்) அந்தமார்க்கத்தினின்றும் நீங்கினார்கள்

குறிப்பு — கச்சும ஈர்வன வாளும ஈர்வன என நிரனிறையாகக் கூட்டிமுடிக்க. ஈர்தல் - இழுத்தலும் பிளத்தலுமாம், ஈர்வன இரட்டுறமொழிதல், மிகுந்த பயத்தோ

டும் ஓடினரென்பார் 'அச்சமென்பதொன்றுருவுகொண்டாலென்ன வழிவார்' என்றார் எல்லாம் வல்ல கடவுள் என்பார் 'உச்சவீரன்' என்றார் உச்சம் - உயர்ச்சி இனி, யுச்சவீரனெனக்கொண்டு யுத்தம் - உத்தமென மருஉவாய் எதுகை நயநோக்கி உச்சமெனத் திரிந்து நின்றதென்றேனும், பித்து - பிச்சு என வருதல்போலப் போலியாயிற்றென்றேனுங் கூறலாம் மற்றும், ஏகாதசா நாலவரோடு இரண்டாம் வீட்டிலுள்ள ரவியும் உச்சம் பெற்று ஒருவரையொருவர் நோக்கியதால் வலியிழந்தார் என்று கிடமின்றித் தான்பல மேறிநிற்குங்கால் ஜனித்த மஹானுபவன் என்பார் 'உச்சவீரன்' எனக்கூறி அவர் பலாபலமனைத்தும் அம்மொழிகளைத் தொகுத்துச் சுருங்கச்சொல்லி விளங்கவைத்தாரென்பாருமுளர் தைத்து - தச்சு என்பபோலி அல்ல நற சரங்கள் ஒன்றோடொன்று தொடுக்கப்பட்டுச் சரக்கூடமாய அரக்கர் ஓடுதற்கு வழியில்லாது மறிக்கமை விளங்கத் 'தச்சுநின்றன' என்றார் (௪௬௯)

மண்டி யோடினர் சிலர்நெடுங் கடகரி வயிற்றிற்
புண்டி றந்தமா முழைபிடை வாளொடும் புகுவார்
தொண்டை நீங்கிய கவந்தத்தைத் துணைவநீ யெம்மைக்
கண்டி லேனெனப் புகலெனக் கைத்தலைக் கொள்வார்

இ - ள் மண்டி ஓடினர் சிலர்-நெருங்கி ஓடிய சில அரக்கர்கள், நெடும் கடம் கரி வயிற்றில் - பெரிய மதம் பொருந்திய யானையின் வயிற்றில், திறந்த புண் -விரிந்த புண்ணாகிய, மா முழையிடை - பெரிய குகையில், வாளொடும் புகுவார் -வாளாயுதத்துடன் பிரவேசித்து, தொண்டை நீங்கிய கவந்தத்தை - தொண்டை யறுபட்டுத்தோன்றிய உடற்குறையை (கண்டு), துணைவ - சிநேகிதனே! நீ—, எம்மை - எங்களை, கண்டிலேன் என - (நான்) பார்க்கவேயில்லையென்று, புகல் என - சொல்வாயாகவென்று, கை - (தமது) கைகளை, தலை கொள்வார் - சிரசிற் கொள்வாராயினார் [நமஸ்கரித்தார்கள்],

கருத்து —ஒருவர்மே லொருவர் வீழ்ந்து ஓடி யானையின் பிளவுபட்ட வயிற்றி லொழிந்து கொண்ட அரக்கர் தொண்டை யறுபட்டு எதிரே நின்ற கவந்தத்தை நோக்கி ராமபாணத்தால் நேர்ந்த அச்சத்தால் சித்த சுவாதீனமற்றவராய்ச் சிநேகனே நீ எம்மைக் காணவில்லையென்று கூறுவாயாகவென நமஸ்கரித்தார் என்பதாம்

குறிப்பு —ஓடினர் - முற்றுத்திரிந்த பெயரெச்சம் பேடிகளென்பார் 'வாளொடும் புகுவார்' என்றார் தலையறுபட்டுமே அது உடலைவிட்டு நீங்காது ஒட்டிக்கொண்டிருந்ததென்பார் 'தொண்டை நீங்கிய கவந்தம்' என்றார் துணைவ - அண்மைவிளி ஒவ்வொருவரும் ஒவ்வொரு கவந்தத்தைக்கண்டு நமஸ்கரித்தார்களென்பது ஈற்றிரண்டடியின் கருத்து. (௪௭௦)

அனைய ராகிய வரக்கரை யாண்டொழிற் கமைந்த
வினைய நீங்கிய மனிதரை வெருவன்மி னென்ன
நினையு நானுமக் குரைப்பது முண்டென நின்றே
தனையும் வார்பரித் தேரினன் றூண்டினன் சொன்னான்

இ - ள் அனையர் ஆகிய அரக்கரை - அவ்வாறு அஞ்சி யோடி யொளித்தவராகிய அரக்கரை, தனையும் வார் பரி தேரினன் தூண்டினன் - விரைந்து செல்கின்ற

உயாந்த குதிரைகளைப் பூண்ட தேரினையுடைய தாசரனை (நோக்கி), நின்றே - (கம்பீரமாக) நின்று கொண்டே, ஆண தொழிறகு அமைந்த வினையம நீங்கிய - ஆண மைசெயலுக்குப பொருநதிய செயலகள ஒழிந்த, மனிதத்தரை வெருவல மின - மனிதாககு அஞசாதீாகள, அனன நினையும - அதசணமையாக [மனிதரைககணட ஞசததகாதென] நினைக்கினற, நான - யான, உமககு - உஙகளுககு, உரைப்பதும - சொலலவேணடிய விஷயமும, உணடு என உளது என்று, சொனனுன — ()

வசசை யாமெனும பயமனத துணடென வாழுங
கொசசை மாநதரைக கோலவளை மகளிருங கூசாா
நிசசய மமெனுங கவசநதா னிலைநிறப தனறி
யசச மெனனுமீ தாருயிாக கருநதுணை யாமோ

இ - ள வசசை எனும - பழியெனபதறகுக காரணமான, பயம - அசசமென பது, மனததுஉணடு என வாழும - தமமனததினிடததே யுளதெனனுமபடி வாழு கினற, கொசசை மாநதரை - தாழவுளள மனிதாகளை, கோலவளைமகளிரும - வளை நத வளையலகளை யணிநத பெணகளும, கூசாா - அஞசாாகள, நிசசயம எனும - இறககமாடடோம எனகிற, கவசம தான - கவசமெனபதே, நிலைநிறபது அனறி - நிலைநிறககூடியதலலாமல, அசசம எனனும ஈது - பயமெனறு சொலலுகிற இக குணம, ஆா உயிாககு - அரிய உயிருககு, அருநதுணையாமோ - அரியதுணையாகுமோ? [ஆகாது]

குறிப்பு—வசசை - வசை, விரிததல விகாரம. ஆம - அசை. இனி, வசசை - பெணபிளளை, யாம எனும - நாஙகள எனகினற எனனனுமாம இபபொருளில வச சை - வதஸெ எனனும வடமொழிததறபவம. கோலவளை - வினைததொழிற குடையிடையே வளைவுபொருநதிய வளையலெனறும பொருளாம. இனி, அழ கியவளையலெனனுமாம. இபபொருளில அழகெனனும பொருடபேறுடைய கோ லம எனனுஞசொல ஈறுகுறைநது நினறது. மகளிரும, உமமை - இழிவுசிறப்பு. நிசசயம - நிஸசயம எனனும ஆரியச சொறறிரிபு. குறைவிலலை யெனனுமபொரு டடு இறககமாடடோம எனனும தைரியததோடு நினறு போாபுரியின பகை யை வெலலலாம எனபான 'நிசசயமெனுங கவசநதானிலைநிறபது' எனறான. "கூறறுடனறு மேலவரினுங கூடி யெதிாநிறகு, மாறற லதுவே படை" "சிறுமை யுஞ சொலலாத துணியும வறுமையு, மிலலாயின வெலலும படை" எனறா நாய னாரும. கவசம உடலைககாபபதுபோல நிசசயமெனபது மனமபேதியாவாறு காக குமாகலின, 'நிசசயமெனுங கவசம' எனறான. ஈது - சுடடுநீணடது. ஆா - அருமையினதிரிபு. அதைரியததா லிஙகே இறநதுபோககககூடிய நீஙகள மறைந தோடிசசென்று பிழைகக நேரிடினும எமதாககினையா லிறபபீாக ளெனபான. துணையெனனுஞ சொறகு அருமையெனனும அடைமொழிதநது கூறினன. ஓகா ரம - எதிாமறை (௧௪௨)

பூவ ராவுவேற புரநதர னேடுதான பொனறு
மூவ ரோடுதான முனனினறு முடடிய முனையி
லேவ ரோடின ரிராககதா நுமககிடைந தோடுந
தேவ ரோடெற றறிநதுளி ராமெனத திகைததீா.

இ-ள் பூ அராவு வேல் - இலை போலும் அராவிய வேலினையுடைய, புரந்தரனோடு - தேவேந்திரனுடனேயும், பொன்று மூவரோடு - இறவாத திரிமூர்த்திகளுடனேயும், முன் நின்று முட்டிய முனையில் - எதிர் நின்று தாக்கிய போரில், இராக்கதர் எவர் ஓடினர் - அரக்கர்களுக்குள் எவர்கள் ஓடினவர்கள்? நமக்கு இடைந்து ஒடும் - (நீங்கள்) உங்களுக்குத் தோற்றோடுகின்ற, தேவரோடு - தேவர்களிடத்தில், கற்று அறிந்து உளிர் என - கற்றுத்தெரிந்திருக்கின்றீர்களென்று கூறும்படி, திகைத்தீர் - பிரமை கொண்டீர்கள்

குறிப்பு — பூவராவுவேல் - பொலிவுற்ற அராவிய வச்சிராயுதமுமாம், ததீசிமகாருஷியினுடைய முதுகெலும்பினை யராவி யாயுதமாகப் பட்டமையான் 'அராவுவேல்' எனப்பட்டது புரந்தரன் - சத்துருக்களுடைய பட்டினங்களை யழிக்கிறவனென்னும் பொருட்டு திரிமூர்த்திகளும் ஒரு மூர்த்தியே என்பது விளங்க 'பொன்று மூவர்' எனப்பட்டது மூவர் - பிரம விஷ்ணு ருத்திரர்க்குத்தொகைக் குறிப்பு தான், தான் - அசைகள் இராக்கதர் - வருத்துகிறவர் என்னும் பொருட்டு

இங்கொர் மானிடற்கித்தனை வீரர்க ளிடைந்தி
ருங்கைவாளொடு போய்விழுந் தூர்புக லுற்றீர்
கொங்கை மாபிடைக் குளிப்புறக் களிப்புறுங் கொழுங்க
ணங்கை மார்களைப் புலவுதி ரோநல நுகர்வீர்.

இ-ள் நலம் நுகர்வீர் - இன்பத்தை யனுபவிக்கின்ற அரக்கர்களே! (நீங்கள்), இங்கு ஒர் மானிடற்கு - இங்கு ஒரு மனிதனுக்கு, இத்தனை வீரர்கள் இடைந்தீர் - இவ்வளவு வீரர்களும் தோல்வியடைந்து, உம் கை வாளொடு போய் - உமது கையிலிருக்கிற வாளுடனே சென்று, விழுந்து - ஒருவர்மே லொருவர் முட்டிக்கொண்டு, ஊர் புகல் உற்றீர் - ஊரிற் புகக்கொண்டீர்கள், கொழுங்கண் நங்கைமார்களை - செழிப்புப்பொருந்திய கண்களையுடைய (உமது) பெண்சாதிகளை, கொங்கை - (அவர்கள்) முலைகள், மார்பிடை - (உங்கள்) மார்பினிடத்து, குளிப்புற அழுந்தும்படியாக, களிப்பு உற்றும் - (இனிச்) சந்தோஷத்தை யடைந்தும், புலவுதிரோ - அணைவீர்களோ? (௧௬௪)

செம்பு காட்டிய கண்ணிணை பாலெனத் தெளிந்தீர்
வெம்பு காட்டிடை நுழைதொறும் வெரிநுறப் பாய்ந்த
கொம்பு காட்டுதி ரோதட மார்பிடைக் குளித்த
வம்பு காட்டுதி ரோகுல மங்கையர்க் கம்மா.

இ-ள். செம்புகாட்டிய - (கோபத்தால்) செம்பினது நிறத்தைக்காட்டிய, கண் இணை - கண்களிரண்டும், பால் என தெளிந்தீர் - பால்போல (வெளுத்து) தெளிவடையப் பெற்றவர்களே! குலமங்கையர்க்கு - கற்புடைய மாதருக்கு, வெம்பு காட்டிடை - கொடியகானகத்தின்கண், நுழைதொறும் - பிரவேசிக்கும்போதெல்லாம், வெரிந் உற பாய்ந்த - முதுகிற்பதியத்தாக்கிய, கொம்பு காட்டுதிரோ - மரக்கொம்புகளைக் காட்டுவீர்களோ? தடம் மார்பிடை - அகன்ற மார்பினகண், குளித்த - முழுகிய, அம்பு காட்டுதிரோ - சரங்களைக் காட்டுவீர்களோ? [எதைக் காட்டுவீர்கள்.]

குறிப்பு — கோபப்பார்வை செந்நிறமுடைத்தாதலைப்பற்றி அதற்குச் செம்பினையும், கோபமுற்றவிடத்துக் கண்கள் இயற்கைவடிவாய வெளுத்தலைப்பற்றிப் பாலினையும் உவமைகூறினர் (௧௪௬)

ஏக்க மிங்கிதன் மேலுமுண் டோயிகன் மனித
னாக்கும் வெஞ்சமத் தாண்மையவ் வமரர்க்கு மரிதாந்
தாக்க ரும்புயத் தும்குலத் தலைமகன் றங்கை
மூக்கொ டன்றியு முதுகொடும் போம்பழி முயன்றீர்.

இ - ள், தாக்கரும் புயத்து உம் குலம் தலைமகன் - (யாவராலும்) எதிர்த்தற்கரிய உமது குலோத்துங்கனாகிய இராவணனது, தங்கை - தங்கையாகிய சூர்ப்பநகையினுடைய, மூக்கொடு அன்றியும் - மூக்குலைவந்த பழியோடல்லாமல், முதுகொடும் போம்பழி - (நீங்கள்) முதுகுடனே செல்கின்ற [முதுகுகாட்டி யோடுகின்ற] அபகீர்த்திக்கு, முயன்றீர் - முயற்சியடைந்தீர்கள், இகல் மனிதன் - பகைத்த மனிதன், அ அமரர்க்கும் அரிது ஆம் - அந்தத் தேவர்களுக்கும் அரியதென்பதாக, வெஞ்சமத்து ஆண்மை - வெவ்விய போரிலாண்மையை, ஆக்கும் - செய்வான், ஏக்கம் இதன்மேலும் உண்டே - விசாரம் இதற்குமேலுமுளதோ? [இல்லை] ()

ஆர வாழ்க்கையின் வணிகரா யமைதிரோ வயில்வேல்
வீர வாட்கொடு வேன்மடுத் துழுதிரோ வெறிபோர்த்
தீர வாழ்க்கையிற் றெவ்வரைச் செருவிடைப் பறித்த
வீர வாட்கையி ரெங்ஙனம் வாழ்திரோ விளம்பீர்

இ - ள் வெறி போர் தீரம் வாழ்க்கையில் - வீராவேசத்தையுடைய போர் வல்லமை பொருந்திய வாழ்வினுள்ளே, செருவிடை - போரில், தெவ்வரை பறித்த - பகைவரிடத்திலிருந்து பறித்துக்கொண்ட, வீரம் வாள் கையீர் - வலிய வாளினைப் பிடித்த கையினையுடையீர்! ஆரம் வாழ்க்கையின் வணிகராய் அமைதிரோ - முத்துக்களை விற்கும் ஜீவனத்தையுடைய வர்த்தகர்களாய் அமைவீர்களோ? அயில் வேல் வீரம் வாள்கொடு - கூர்மை பொருந்திய வேலையும் வலிய வாளினையுங் கொண்டு, வேல் மடுத்து - (அவற்றைக் கொழுவாக மற்றைய) வேல்களிற் பொருத்தி, உழுதிரோ - (பயிர் செய்நிலத்தை) உழுவீர்களோ? எங்ஙனம் வாழ்திரோ - (வேறு) எவ்வாறாக வாழ்வீர்களோ? விளம்பீர் - சொல்வீர்களாக (௧௪௭)

என்று தானுந்தன் னெறிகடற் சேனையு மிறைநி
ன்று காண்டிரென் னெடுஞ்சிலை வலியென நேர்ச்
சென்று தாக்கினன் றேவரு மருள்கொண்டு திகைத்தார்
நன்று காத்தியென் றிராமனு மெதிர்செல நடந்தான்.

இ - ள் என்று - என்று கூறியும், நீர் - நீங்கள், என் நெடுஞ்சிலை வலி - என்னது பெரிய வில்லினது வலிமையை, இறை நின்று - சிறிது நின்று, காண்டிர் என - பார்ப்பீர்களாக வென்று கூறியும், தானும் - அத்தூஷணனும், தன் - அவனுடைய, எறி கடல் சேனையும் - (ஆயுதங்களை) எறி கடல்போன்ற சேனையும், நேர் சென்று - ஒழுங்காகச் சென்று, தாக்கினன் - (ஸ்ரீ ராமபிரானை) எதிர்த்தான், (அதுகண்டு) தேவரு

ம் மருள்கொண்டு திகைத்தார் - தேவர்களும் மயக்கமடைந்து பிரமித்தார்கள், இராம னும் - ஸ்ரீ ராமபிரானும், நன்று காத்தி என்று - (நின் சேனையை) நன்றாகக் காத்துக்கொள் என்று கூறி, எதிர் செல நடந்தான் - (அவனுக்கு) நேராக நடந்து சென்றான். ()

ஊட்டறுப்புண்ட மொய்ப்படைக் கையொடு முயர்ந்த
கோட்டறுப்புண்ட குஞ்சரங் கொடிஞ்சொடு கொடியின்
காட்டறுப்புண்ட காலிய றோகதிரச் சாலி
சூட்டறுப்புண்ட வெனக்கழுத் தறுப்புண்ட துரகம்.

இ - ள் ஊடு அறுப்புண்ட - இடையே அறுபட்ட, மொய்ப்படை - நெருங் கிய ஆயுதங்களையுடைய, கையொடும் உயர்ந்த கோடு - துதிக்கைகளும் வளர்ந்த கொம்புகளும், குஞ்சரம் அறுப்புண்ட - யானைகள் அறுபடப்பெற்றன, கால் இயல் தோ- காற்றைப்போலும் (வேகம்) பொருந்திய இரதங்கள், கொடிஞ்சு ஒடு கொடியின் காடு - சிகரங்களும் துவசக்காடுகளும், அறுப்புண்ட - அறுபடப்பெற்றன, கதிர் சாலி சூடு அறுப்புண்ட என - கதிர்களாகிய நெற்பயிரின் தலைப்புறங்கள் அறுபட்ட னபோல, துரகம் கழுத்து அறுப்புண்ட - குதிரைகள் கண்டங்கள் அறுபடப்பெற் றன (௧௪௯)

துருவி யோடின வுயிர்நிலை சுடுசரந் துரந்த
கருவி யோடின கச்சையுங் கவசமுங் கழல
வருவி யோடின வெனவழி குருதியா றொழுக
வுருவி யோடின கேடகந் தட்டொடு முடலம்.

இ - ள் துரந்த - (ஸ்ரீராமபிரானது வில்லிலிருந்து) விடுபட்டனவும், உயிர் நிலை துருவி ஓடின - உயிரிருக்கும் இடத்தை ஆராய்ந்து சென்றனவுமாகிய, சுடுச ரம் - கொடிய பாணங்கள், கருவி ஓடின - ஆயுதங்களின்மேல் வரிந்த, கச்சையும் - அரைக்கச்சுகளும், கவசமும் - இருப்புச்சட்டைகளும், கழல - நெகிழும்படியாகவும், அருவி ஓடின என - மலையின் வீழாறுகள் சென்றனபோல, அழி குருதி யாறு ஒழுக அழிந்த அரத்த நதியோடும்படியாகவும், கேடகம் தட்டொடும் உடலம் - கேடகமெ ன்னும் பெயரினையுடையதாகிய இருப்புத்தட்டுகளிலும் (அவர்களுடைய) உடல் களிலும், உருவி ஓடின - உருவிச்சென்றன (௧௫௰)

ஆய்ந்த கங்கபத் திரங்களம்புக் கரக்கர் காவி
தோய்ந்த தோயிலாப் பிறைமுகச் சரஞ்சிரந் துமித்த
காய்ந்த வெஞ்சர நிருதர்தங் கவசமார் புருவப்
பாய்ந்த வஞ்சக ரிதயமும் பிளந்தன பலவும்.

இ - ள். ஆய்ந்த - (ஸ்ரீராமபிரானால்) ஆராய்ந்தெடுக்கப்பட்ட, கங்கபத்திரங் கள் - (சில) பாணங்கள், புக்கு - புகுந்து, அரக்கர் ஆவி தோய்ந்த - அரக்கர் உயிர் நிலையிற் கலந்தன, தோய்வு இலா - (அவ்வாறு உயிர் நிலையிற்) கலவாத, பிறை முகச்சரம் - அர்த்த சந்திர பாணங்கள், சிரம் துமித்த - தலைகளை அறுத்தன. காய்ந்த வெஞ்சரம் - (சில) சினந்த கொடிய பாணங்கள், நிருதர்தம் - அரக் கர்களுடைய, கவசம் மார்பு உருவ - கவசத்தையணிந்த மார்பினைக் கண் உருவிச் செல

லுமபடி, பாய்ந்த - தாக்கின, பல்லம் - (சில) அம்புகள், வஞ்சகர் இதயமும் பிளந்தன - (மாயைப் போர்புரியும்) வஞ்சகர்களாகிய (சில) அரக்கர்களினது (கெட்ட எண்ணங்கொண்ட) நெஞ்சினையும் பிளந்துவிட்டன (௪௫௧)

தூடணன் விடு சுடுசரம் யாவையுந் துணிய
மாடு நின்றவர் வழங்கிய படைகளு மாற
வாடல் கொண்டன னளப்பரும் பெருவலி யரக்கர்
கூடி நின்றவக் குரைகடல் வறள்படக் குறைத்தான்.

இ-ள். தூடணன் விடு சுடுசரம் யாவையும் துணிய - தூஷணன் எவிய கொடிய பாணங்களெவையும் அறுபடவும், மாடு நின்றவர் - (அவன்) பக்கத்தே நின்றவர்கள், வழங்கிய - செலுத்திய படைகளும் மாற - ஆயுதங்களும் மாறுபடவும், ஆடல்கொண்டனன் - (ஸ்ரீராமபிரான்) திருவிளையாடல் புரிபவனாய், அளப்பரும் - அளவிடமுடியாத, பெருவலி அரக்கர் - மிக்க வலிமையுடைய இராக்கதர்கள் கூடி நின்ற - சேர்ந்துநின்ற, அக் குரைகடல் - சப்திக்கின்ற அந்த (சேனை)க்கடல், வறள்பட - வற்றிப்போம்படி, குறைத்தான் - சங்கரித்தான் (௪௫௨)

ஆர்த்தெ ழுந்தன ரானவ ரருவரை மரத்தோ
டார்த்தெ ழுந்தன குருதியின் பெருநதி யிராமன்
றூர்த்த செஞ்சரந் திசைதொறுந் திசைதொறுந் தொடர்ந்து
போர்த்த வெஞ்சினத் தரக்கரைப் புரட்டின புவியில்

இ-ள் (அதுகண்டு) வானவர் ஆர்த்து எழுந்தனர் - தேவர்கள் பேரொலி செய்து எழுந்தார்கள், குருதியின் பெருநதி - அரத்தத்தாலாகிய பெரிய நதிகள், அருவரை மரத்தோடு - அரிய மலைகளையும் மரங்களையும், ஈர்த்து எழுந்தன - இழுத்துக்கொண்டு சென்றன, இராமன் தூர்த்த செஞ்சரம் - ஸ்ரீராமபிரான் பிரயோகித்த அம்புகள், திசைதொறும் திசைதொறும் தொடர்ந்து - திக்குகள் தோறும் தொடர்ந்து சென்று, போர்த்த - (அத்திசைகளை) மூடிய, வெஞ்சினத்து அரக்கரை - வெவ்விய கோபத்தினையுடைய இராக்கதர்களை, புவியில் புரட்டின - பூமியிற் புரளும்படி செய்தன (௪௫௩)

தோன்று மால்வரைத் தொகையெனத் துவன்றிய பிணச்சே
றூன்ற பாழ்வயிற் றலகையைப் புகல்வதெ னமர்வேட்
டூன்றி னாரெலா முலைந்தன ரொல்லையி லொழிந்தார்
கான்ற வின்னுயிர் காலனுங் கவர்ந்துமெய் மறந்தான்

இ-ள் அமர் வேட்டு - போரினைவிரும்பி, ஊன்றினார் எலாம் - நிலைநின்ற அரக்கர் முழுவதும், ஒல்லையில் - விரைவில், உலைந்தனர் ஒழிந்தார் - கெட்டொழிந்தார்கள், கான்ற இன் உயிர் - (உடலினின்றும்) வெளிப்பட்ட (அவர்களுடைய) இனிய உயிர்களை, கவர்ந்து - கைப்பற்றி, காலனும் மெய் மறந்தான் - யமனும் (சிரமத்தால்) தேகத்தை மறந்தான், (என்றால்), தோன்று - காணப்படுகின்ற, மால் வரை தொகை என - கரிய பெரிய மலைக்கூட்டங்களைப்போல, துவன்றிய - நெருங்கிய, பிணம் சேறு - (பிணங்களினது) கொழுப்பின் குழம்பு, ஊன்ற - நிறைந்த

பாழ்வயிறு - பாழ்த்தவயிற்றினையுடைய, அலகையை - பசாசுகளை, புகல்வது என்-சொல்வது யாது ? (கருச)

களிறு தேர்பரி கடுத்தவர் முடித்தலை கவந்த
மொளிறு பல்படைத் தங்குலத் தரக்கர்தம் முடலம்
வெளிறு சோர்நிண மிறங்கிய வடுக்கலின் மீதாகக்
குளிறு தோகடி தோட்டின னூட்டணன் கொதித்தான்.

இ - ள் களிறு - யானைகளும், தேர் - இரதங்களும், பரி - குதிரைகளும், கடுத்தவர் முடித்தலை கவந்தம் - கோபித்த வீரர்களது குடுமிச் சிரங்களும் தலையற்ற முண்டங்களும், ஒளிறு பல்படை - பிரகாசிக்கின்ற பல ஆயுதங்களையுடைய, தம் குலத்து அரக்கர்தம் உடலம் - அவர்கள் கூட்டத்தைச்சேர்ந்த இராக்கதர்களுடைய உடல்களுமாகிய வெளிறு சோர் - வெண்ணிறஞ்சோர்ந்த, நிணம்பிறங்கிய - கொழுப்பு விளங்கிய, அடுக்கலின்மீது ஆ - மலைகளின்மேலாக, குளிறுதேர் - பேரொலி செய்கின்ற இரதத்தை, தூண்டனன் - தூண்டினன், கடிது - விரைவில், ஓட்டினன் கொதித்தான் - ஓட்டிக் கொதிப்புற்றான்.

குறிப்பு — முடித்தலைக் கவந்தம் என்பனவற்றைக் களிறு தேர் பரி கடுத்தவர் என்னும் நால்வகைத்தானையொடுங் கூட்டுக. எதிர்த்துப் போர்புரிந்தோரென்பார் 'கடுத்தவர்' என்றார். அங்ஙனங் கடுத்தவரோடு சேர்ந்து எதிர்க்கவந்து புறங்காட்டினவர் என்பதும் அன்னோர் ஆயுதங்களைச் சிறிதும் உபயோகிக்காமல் வீணே சுமந்தனர் என்பதும் அவரை இராமபாணங்கள் அறக்கருதிப்பாயாதிருந்தும் அச்சத்தால் இறந்தார் என்பதும் தோன்ற 'ஒளிறு பல்படைத் தங்குலத் தரக்கர்தம் முடலம்' என்றார். ஒளிறல் - அரத்தக்கறை தோயாது பிரகாசித்தல். உடலம் - உறுப்புகளறுபடாமல் வீழ்ந்திறந்த சரீரம். (கருரு)

அறங்கொ ளாதவ ராக்கைக ளடுக்கிய வடுக்கல்
பிறங்கி நீண்டன கணிப்பில பெருங்கடு விசையாற்
கறங்கு போன்றுள தாயினும் பிணப்பெருங் கட்டத்
திறங்கு மேறுமத் தேர்பட்ட தியாதென வுரைப்பாம்.

இ - ள் அறம் கொளாதவர் ஆக்கைகள் - தருமத்தைப்பெறாத அரக்கர்களின் உடல்கள், அடுக்கிய - அடுக்கின, அடுக்கல் - மலைகள், பிறங்கி நீண்டன - விளங்கியுயர்ந்தன, கணிப்பு இல - எண்ணிக்கையற்ற அம்மலைகள், பெருங்கடுவிசையால் - (தேரின்து) மிக்க வேகத்தினு(லுண்டாகிய காற்றினு)ல், கறங்கு போன்று உளது ஆயினும் - காற்றாடிபோல உள்ளனவாயினும், பிணம் பெருங்கட்டத்து - பிணங்களாகிய பெரிய கட்டத்தில், இறங்கும் ஏறும் - இறங்கி யேறுகின்ற, அத்தேர் - அந்த இரதம், பட்டது - அடைந்த கஷ்டம், யாது என உரைப்பாம் - யாதென்று கூறுவாம். (கருசா)

அரிதி னெய்தின னையந்து கொய்யுளைப் பரிமா
வுருளு மாழிய தொருதனித் தேரின னுலகத்
திருளை நீக்கிய விருதுவிற் பொலிகின்ற விராமன்
றெருளும் வார்கணைக் கூற்றெதி ராவிசென் றெனன்.

இ-ள். உலகத்து இருளை நீக்கிய - புவியினது இருட்டை விலக்கிய, இந்துவில் - சந்திரனைப்போல, பொலிகின்ற இராமன் - விளங்குகின்ற ஸ்ரீராமபிரானது, தெருளும் - ஆராய்கிற, வார்கணை - நீண்ட பாணம் ஆகிய, கூற்று எதிர் - யமனுக்கு முன்னே, ஆவி சென்றென்ன - உயிர் (தானே எதிர்) சென்றாற்போல, கொய் உளை - கொய்த பிடர்மயிரினையுடைய, ஐயைந்து பரிமா - இருபத்தைந்து குதிரைகளைப் பூட்டிய, உருளும் ஆழி பத்து - உருண்டு செல்கின்ற சக்கரத்தினையுடையதாகிய, தனி - ஒப்பற்ற, ஒரு தேரினன் - ஒரு இரதத்தினையுடைய தூஷணன், அரியின் எய்தினன் - (ஸ்ரீராமபிரானுக்குச்) சமீபத்திற் சேர்ந்தான். (௬௭)

சென்ற தேரையுஞ் சிலையுடை மலையெனத் தேர்மே
னின்ற தூடணன் றனையு நோக்கிய நிமல
னன்று நன்றுநின் னிலையென வருளிறை நயந்தா
னென்ற காலத்தவ் வெய்யவன் பகழிமூன் றெய்தான்

இ-ள். சென்ற தேரையும் - (அவ்வாறு) சென்ற இரதத்தையும், சிலை உடை மலை என - வில்லினையுடைய மலையைப்போல, தேர்மேல் - அவ்விரதத்தின் மீது, நின்ற —, தூடணன் தனையும் - தூஷணனையும், நோக்கிய - பார்த்த, நிமலன் - ஸ்ரீராமபிரான், நின் நிலை - நினது நிலைமை, நன்று நன்று என - மிகவும் நன்றாயிருக்கின்றதென்று, அருள் - கருணையோடு, இறை நயந்தான் என்ற காலத்து - சிறிது மதித்தானென்றபொழுது, அ வெய்யவன் - அந்தக் கொடிய தூஷணன், மூன்று பகழி எய்தான் - மூன்று கணைகளை எய்தான்.

குறிப்பு — நிமலன் - மலரகிதன். நன்று நன்றென்னும் அடுக்கு உவகைப்பொருட்டு. நிலை - இத்தனை வீரர்களும் சேனைகளும் இறந்தும் சிறிதும் அஞ்சாமல் அவன் தனியே போர்க்கு வந்ததன்மை. இனி, நிலை - யுத்தநிலையுமாம். விற்றொடுத் தம்பினையெய்வார்க்குரிய நிலை - நால்வகைப்படும்; அவையாவன: பைசாசம், மண்டிலம், ஆலீடம், பிரத்தியாலீடம் என்பன. "நவையறு பைசாச நிலையு மண்டிலமு, மாலீட நிலையும் பிரத்தியா லீடமு, மெனக்கொரு நிலையுமொருநால் வகையே" அவற்றுள் "ஒருகா னிலைநின் றொருகால் முடக்குப, பரிசாய நிலையது பைசாச நிலையே" "இருகால் மண்டலித் திருத்தன் மண்டிலநிலை" "வலக்கால் மண்டிலித் திடக்கால் முந்துறீஇ, லதற்பெய ராலீட நிலைய தாகும்" "வலக்கால் முந்துற் றிடக்கால் மண்டி, லித்த, திடற்பெயர் பிரத்தியா லீட நிலையே" என்றார் பிங்கலந்தையில். (௬௮)

தூர வட்டவெண் டிசைகளைத் தனித்தனி சுமக்கும்
பார வெட்டினோ டிரண்டினி லொன்றுபார் புரக்கப்
பேர விட்டவ னுதலணி யோடையிற் பிறழும்
வீர பட்டிகை பட்டன விண்ணவர் வெருவ

இ-ள். தூரவட்டம் எண் திசைகளை - சேய்மையிலுள்ள வட்டமாகிய எட்டுத் திக்குகளையும், தனி தனி சுமக்கும் - தனித்தனியாகச் சுமக்கின்ற, பாரம் எட்டினோடு - சுமையையுடைய அஷ்டகஜங்களோடு, இரண்டினில் - (புவிச்சுமையையுடைய) ஆதிசேஷன் கூர்மமென்னும் இரண்டினில், ஒன்று - ஒன்றாகிய ஆதிசேஷனை [பாதுகையை], பார் புரக்க - புவியை இரட்சிக்கும்படி, பேரவிட்டவன் - (தனது திருவடியினின்றும்) பிரிந்து போம்படி விட்ட ஸ்ரீராமபிரானது, நுதல் - நெ

றதில், அணி - பூணுகின்ற, ஓடையில் - நெற்றிப்பட்டம்போல், பிறழும் - விளங்குகின்ற, வீரபட்டிகை - வீரபட்டிகையில், விண்ணவர் வெருவ - தேவர்கள் அச்சங்கொள்ளும்படி, பட்டன - (அம்மூன்று கணைகளும்) தாக்கின.

குறிப்பு — தூர - தூரம், வடமொழித் தற்சமம் "தூரவிடல்" (நாலடி) திசைகளைச் சுமக்கும் எட்டென்வே அஷ்டகஜங்களையும், எட்டிரேடிரண்டென்வே சேடனையுங் கூர்மத்தையும், இரண்டினிலொன்று பாரபுரக்கவென்வே ஆதிசேடனையும், பேரவிட்டவன் எனவே பாதுகையையுங் குறிப்பிற்கோடலாயிற்று. ஆதிசேடன் எம்பிரானுக்கு நடக்கும்பொழுது குடையாகவும், வீற்றிருக்கும் பொழுது சிங்காசனமாகவும், நிற்கும் பொழுது மரவடியாகவும், பின்னும் புணை, மணிவிளக்கு, பூம்பட்டு அணையென்பனவாகவும் இருந்து கைங்கரியம் புரிவானாகலின் ஈண்டுச் சேடனைப் பாதுகையென்று கூறலாயிற்று. "சென்றாற் குடையா மிருந்தாற் சிங்காசனமா, நின்றான் மரவடியா நீள்கடலுள் —, என்றும், புணையா மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கு, மணையாந் திருமாற் கரவு" என்றார் பொய்கைப்பிரானும். பேர - பெயரவென்பதன் விகாரம். இனி, தூரம் - ஆகாயம், வட்டம் - உலகம் எனவும், இரண்டினிலொன்பது துருவசக்கரத்தையும் சேடனையும் எதிர்நிரனிறையாகக் குறிப்பதாகவுங்கொண்டு, ஒன்றென்பதைச் சராசரமாகிய பரதன் மேலேற்றிக் கூறுதலும் பொருந்தும். வீரபட்டிகையை நுதலணியோடொக்க உவமித்தலின் ஸ்ரீராமனையும் யானையோடுவமித்தாராயிற்று. (௧௫௯)

எய்த காலமும் வலியுநல் லெனநினைந் திராமன்
செய்த சேயொளி முறுவலன் கடுங்கணை தெரிந்தா
னொய்தி னங்கவ னொறில்பரித் தேர்பட நூறிக்
கையின் வெஞ்சிலை யறுத்தொளிர் கவசமுங் கடிந்தான்

இ - ள். எய்த காலமும் வலியும் நல்ல என - (தூஷணன் கணைகளை) எய்த நேரமும் (அவன்) வீரமும் நல்லவையென்று, நினைந்து - நினைத்து, இராமன் - ஸ்ரீராமபிரான், செய்த—, சேயொளி முறுவலன் - செய்ய ஒளிபொருந்திய புன்னகையுடையானாகி, கடுங்கணை தெரிந்தான் - கொடியபாணத்தையுணர்ந்து, நொய்தின் - விரைவில், அவன் - அத்தூஷணனது, நொறில் - விரைவுள்ள, பரி தேர் - குதிரைகளைப்பூண்ட இரதம், பட - நாசமாம்படி, நூறி - அழித்தும், கையின் வெஞ்சிலை அறுத்து - (அவன்) கையிலிருந்த கொடியவில்லைத்துண்டித்தும், ஒளிர் - பிரகாசிக்கின்ற, கவசமும் - கவசத்தையும், கடிந்தான் - அழித்தான்.

குறிப்பு — நல்லென, அகரம் - தொகுத்தல். பற்கள் வெளிப்படாமல் வாய்மூடியவண்ணம் புன்னகைபுரிந்தானென்பார் 'சேயொளி முறுவலன்' என்றார். சேயொளி - செம்மையொளி, இதழின் நிறம். தெரிந்தான் - முற்றெச்சம். கரவேகச் சரவேகம் விளங்க, 'தெரிந்தான், கடிந்தான்' என்றார். (௧௬௦)

தேவ ரார்த்தெழ முனிவர்க டிசைதொறுஞ் சிலம்பு
மோவில் வாழ்த்தொலி நாற்கடன் முழக்கென வோங்கக்
காவ டாவிது வல்லையே னீயெனக் கணையொன்
றேவி னானவ னெயிறுடை நெடுந்தலை யிழந்தான்.

இ - ள். தேவர் ஆர்த்து எழ - தேவர்கள் பேரொலி செய்தெழும்படிக்கும், முனிவர்கள் - இருடிகள், திசைதொறும் சிலம்ப - திக்குகள்தோறும் (சென்று) ஆசிர்வதிக்கின்ற, ஓவு இல் வாழ்த்து ஒலி-குறைவில்லாத ஆசிர்வாதத்தினது சப்தமானது, நால் கடல் முழக்கு என - நான்குகடலின் பேரொலிபோல, ஓங்க - விளங்கும்படிக்கும், (ஸ்ரீராமபிரான்), நீ வல்லையேல் - நீ வல்லமையுடையாயாகில், இது - இக்கணையை, கா அடா என - காத்துக்கொள் அடா! என்று, கணை ஒன்று - ஒரு பாணத்தை, ஏவினன் - செலுத்தினன், (அதனால்), அவன் - அத்தூஷணன், எயிறு உடை நெடுந்தலை இழந்தான் - பற்களையுடைய பெரியதலையை இழந்தான்.

குறிப்பு —முனிவர் நான்மறைச் சுருதிகளால் வாழ்த்தினமையால் அவ்வாழ்த்தொலிக்கு நான்குகடலை யுவமைகூறினார். பல்லிளித்துக்கொண்டு இறந்தானென்பார் 'எயிறுடை நெடுந்தலை யிழந்தான்' என்றார். (௧௬௧)

வேறு

தம்பிதலை யற்றபடி யுந்தய ரதன்சே
யம்புபடை யைத்துணி படுத்தது மறிந்தான்
வெம்புபடை விற்கைவிச யக்கரன் வெகுண்டான்
கொம்புதலை கட்டிய குலக்கரி கடுப்பான்

இ - ள். கொம்பு - மருப்பு, தலைகட்டிய - தலையிற்கட்டின [தலையிற்படியப் பெற்ற], குலம் கரி கடுப்பான் - அஷ்டகஜங்களை ஒப்பானாகிய, வெம்பு படை வில் கை - கொதிக்கின்ற ஆயுதங்களோடு வில்லினைப்பற்றிய கையினையுடைய, விசயம் கரன் - வெற்றிபொருந்திய கரன், தம்பி தலை அற்றபடியும் - தம்பியாகிய தூஷணனது தலையற்ற விதமும், தயரதன் சேய் - சக்கரவர்த்தி திருக்குமாரனது, அம்பு - கணைகள், படையை துணிபடுத்ததும் - (அத்தூஷணனது) சேனைகளை அறுத்துத்தள்ளியதும், அறிந்தான் வெகுண்டான் - அறிந்து சினங்கொண்டான். (௧௬௨)

அந்தகனு முட்கிட வரக்கர்கட லோடுஞ்
சிந்துரம் வயப்புரவி தேர்திசை பரப்பி
யிந்துவை வளைக்குமெழி லிக்குல மெனத்தான்
வந்துவரி விற்கைமத யானையை வளைத்தான்

இ - ள். (அவ்வாறு வெகுண்டகரன்), அந்தகனும் உட்கிட - யமனும் பயப்படும்படி, அரக்கர் கடலோடும்-ராக்ஷஸசேனாசமுத்திரத்துடனே, சிந்துரம்-யானைகளையும், வயம் புரவி- வலிமையையுடைய குதிரைகளையும், தேர் - இரதங்களையும், திசைபரப்பி - திக்குகளிற் பரவிவரும்படி செய்து, இந்துவை வளைக்கும் எழிலி குலம் என வந்து-சந்திரனைச் சூழ்ந்துகொள்கின்ற மேகக்கூட்டத்தைப்போல வந்து, வரி வில் கை-கட்டமைந்த வில்லினைப்பிடித்த கையினையுடைய, மதம் யானையை - மதம்பொருந்திய யானையையொத்த ஸ்ரீராமபிரானை, வளைத்தான் - வளைத்துக்கொண்டான். (௧௬௩)

அடங்கலில் கொடுந்தொழி லரக்கரவ வந்தன
படங்கிழி தரப்படி தனிற்பல விதப்போர்
கடங்கலுழ தடங்களிறு தேர்பரி கடாவித்
தொடங்கினர் நெடுந்தகையும் வெங்கணை துரந்தான்.

இ - ள் அடங்கல் இல - அடங்குதலில்லாத [மேலு மேலும் விருத்தியா கின்ற], கொடுந்தொழில் - தீய செயலினையுடைய, அரக்கர் - இராக்கதர்கள், அந்தன் படம் கிழிதர - அந்த ஆதிசேடனது படங்கிழியும்படி, படிதனில் - பூமியில், கடம் கலுழ் தடம் களிறு - மதம் பொழிகின்ற பெரிய யானைகளையும், தேர் - இரதங்களையும், பரி - குதிரைகளையும், கடாவி - நடத்தி, பல விதம் போர் தொடங்கினர் - பலவிதமான யுத்தத்தைச்செய்ய ஆரம்பித்தார்கள், நெடுந்தகையும் - ஸ்ரீராமபிரானும், வெங்கணை துரந்தான் - கொடியபாணங்களைப் பிரயோகஞ் செய்தான்.

குறிப்பு — இது காறும் அரக்கர்களின் தீயசெயலை யடக்கினாரில்லை யென்பார் 'அடங்கலில் கொடுந்தொழில்' என்றார். அந்தன்—அந்தமில்லாதவன், சேடன். ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமான ஆயுதங்களை யேவிப்போர்செய்தார் என்பார் 'பலவிதப்போர்' என்றார். மல யுத்தம் முதலியன கோடற்கு எம்பிரான் சேனையோடில்லாமையாலியலாமையறிக. நெடுந்தகை - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. (கசுச)

துடித்தன கடக்கரி துடித்தன பரித்தேர்
துடித்தன முடித்தலை துடித்தன தொடித்தோள்
துடித்தன மணிக்குடர் துடித்தன தசைத்தோல்
துடித்தன கழற்றுணை துடித்தன விடத்தோள்.

இ - ள் கடம் கரி துடித்தன - மதத்தினையுடைய யானைகள் பதறிவீழ்ந்தன, பரித்தேர் துடித்தன - குதிரைகளைப்பூட்டிய இரதங்கள் குதித்தன [முறிபட்டு நிலைகுலைந்து வீழ்ந்தன], முடித்தலை துடித்தன - கிரீடத்தினையுடைய தலைகள் குதித்தன [அறுபட்டு வீழ்ந்தன], தொடித்தோள் துடித்தன - வீரவளைகளையுடைய புயங்கள் அறுபட்டு வீழ்ந்தன, மணிக்குடர் துடித்தன - மணிக்குடல்கள் அறுபட்டு வீழ்ந்தன, தசைத்தோல் துடித்தன - மாமிசத்தோடுகூடிய தோல்கள் அறுபட்டு வீழ்ந்தன, கழல் துணை துடித்தன - தாளிணைகள் அறுபட்டு வீழ்ந்தன, இடத்தோள் துடித்தன - (பின்னின்றோர் அனைவருக்கும்) இடது புயங்கள் துடித்தன.

குறிப்பு — முடி தோள் குடல் முதலியன அறுபட்டுப் பாணவேகத்தால் தூரத்தே வீழ்ந்தன என்பார் 'துடித்தன' என்றார். முடித்தலை - குடுமிச் சிரமுமாம். தொடி - வீரவளை, "தொடித்தோட் டுப்பிற ழுழந்த வல் 'யின'" எனனும் புறப்பாட்டில் இப்பொருட்டாதல் காண்க. (கசுடு)

வாளினவனம் வேலினவனம் வாரிலை வனந்திண்
டோளினவன மென்றிவை துவன்றிநிரு தப்பே
ராளினவன நின்றதனை யம்பினவன மென்னுங்
கோளினவன வன்குழுவி னிறகுறை படுத்தான்.

இ - ள் வாளின வனம் - வாளாயுதக்காடு, வேலின வனம் - வேலாயுதக்காடு, வாரிலை வனம் - நெடிய வில்லுக்காடு, திண் தோளின வனம் - வலிய தோள்களின்காடு, என்று இவை துவன்றி - என்று இக்காடுகள் நெருங்கி, நிருதர் பேராளின வனம் நின்றதனை - அரக்கர்களாகிய பெரிய ஆள்களின் காடு (எதிர்த்து) நின்றதை, அம்பினவனம் என்னும் - அம்புக்காடு என்கிற, கோளின வனவனகு

மூவில் - கொலலுந தொழிலையுடைய அழகிய வலிய கூட்டத்தினாலே, குறை படுத்தான குறையுமபடி செயதான (௧௬௬)

தானுருவு கொணட தரு மந்தெரி சரநதான
மீனுருவு மேருவை விலஙகுருவு மேலாம
வானுருவு மணணுருவும வாளுருவி வநதா
ரூனுருவு மெனனுமி துணாததவு முரிததோ.

இ - ள தான உருவுகொணட தருமம - தான உருவமாககொணட தருமத தை, தெரி - அறிநத, சரம - ஸ்ரீராமபாணமானது, மீன உருவும - நடசததிரஙகளை யுருவிசசெலலும, மேருவை - பொனமலையை, விலஙக உருவும - (இடமவிடடுப பெயாநது) விலகுமபடி உருவிசசெலலும, மேல ஆம வான உருவும - உயாவாகிய ஆகாயததை யுருவிசசெலலும, மண உருவும-பூமியை யுருவிசசெலலும, (எனறால), வாள உருவிவநதா - வாளாயுதததை யுருவிககொணடுவநத அரககாகளினுடைய, ஊன - உடலை, உருவும எனனும இது உணாததவும உரிததோ - உருவிசசெலலும எனகிற இவவிஷயம தெரியபபடுததவும தகுதியுடையதோ? [அனறு]

குறிப்பு —ஸ்ரீராமபிரானது தருமகுணததை அவா அமபினமேலேறறி 'தானு ருவுகொணட தருமந தெரிசரநதான' எனறா, எனவே இராமபாணஙகள புறமுது கிடடோரைககோறல புரியாது விடடனவெனபது பெறறும (௧௬௭)

அனறிடை வளாநதவா குலஙகளொ டடஙகச
செனறுலை வுறுமபடி தெரிநதுகணை சிநத
மனறிடை நலிநதுவலி யோாகளெளி யோரைக்
கொனறனா நுகாநதபொரு ளிறகடிது கொனற

இ - ள அனறு இடைவளாநதவா - அறமைபபோழதிற குழநதுகொணட அரககாகள, குலஙகளொடு- தமது கூடடஙகளோடு, அடஙக - நிறைவாக, செனறு- போய, உலைவு உறுமபடி - அழிநதுபோமபடி, தெரிநது - அறிநது, கணை சிநத - (ஸ்ரீராமபிரான) பாணபபிரயோகஞசெயய, (அககணைகள), வலியோாகள - செலவ முடையவாகள, மனறு இடை - நியாயசபையில், நலிநது - வருநதி, எளியோரை கொனறனா - எளியவாகளைககெடுதது, நுகாநத - (அபகரிதது) அனுபவிதத, பொ ருளில - பொருளைபபோல, கடிதுகொனற - விரைவாகக கொனறன

குறிப்பு —அவரவரேவிய கணைகட்கெதிா கணையேவினு னெனபாா 'தெரிநது கணை சிநத' எனறா தாம கூறுமொழியை நியாயாதிபதி மெயயெனறு கருதுமாறு நடிததுக காடடினு ரெனபாா 'நலிநது' எனறா. பொருளுடையாா எசசெயலு மியறற வலலுநராகலின 'வலியோா' எனறா, "கலலானே யானாலுங கைபபொரு ளொனறுணடாயி, னெலலாருஞ் சென்றங கெதிாகொளவாா" எனபவாகலின. இனி வாயில வலலவரெனலுமாம, "சொலலவலலன சோாவில னஞசா னவனை, யிகலவெ லலல யாாககு மரிது" "பொயயுடை யொருவன சொல்வன மையினன, மெயபோ லுமமே மெயபோலுமமே" எனபவறறானுணாக. வலியோாகளெளியோரைக் கொ னறனா நுகாநத பொருள எனவே பொருட் பறறுடையோா தீவினையியறறசசிறி துமஞசாரெனபதாம் எனனை? "உயிாககொலை புரிதலுண்ணு முணவுயா முடடுஞ்

செய்த, வயிர்ப்பிலா நண்பர் மாட்டு மமைதரக் குய்யஞ் செய்தல், பயிர்ப்புமிக் குற்றல் லோரைப் பழித்தல் பொய்க் கரியுரைத்தல், செயிர்ப்பிலா வயத்திட்டத்துஞ் சென்று பட்டிமையி யற்றல்" "இவைமுதற் பலவு மாந்தரியற்றிநாள் கழியா நிற்ப, ஏனையெல்லாம் பொருணிமித்த மாகும்பொருளைப் பெற்றார், குவையுறப் புதைத்து வைத்துக் குந்துதுப் படைந்து காத்து, நவையுறு பண்பே யென்னும் நாமமும் பெறுவாரா தோ" என்பவாகலின். கொன்றனர்- முற்றெச்சம். "பொச்சாப் புண்டு பொருளுரையாளர், நச்சுக்கொன் றேற்கு நன்னெறி யுண்டோ" என்புழிக்கொன்றேனென்றற்குக் கெடுத்தே னென்றுபொருள் கூறினார் அடியார்க்கு நல்லார். "பொருளில்லார்க், கிவ்வுலக மில்லாகி யாங்கு" என்றவாறு இவ்வுலகவின்பத்திற் கின்றியமையாத பொருளில்லையேல் "வாழ்விலலாச் சங்கடத்திற் சாவதே நன்று" என்றவாறு இறப்பது நன்றாகுமாகலின் எளியார் தம்மிடத்திலுள்ள சிறிது பொருளும் இழந்தபின் இறந்தவரேயாவார் என்பார் 'கொன்றனர்' என்றார். என்னனுமாம். மன்றோரஞ் சொல்லிக்கவர்ந்தபொருள் அங்ஙனங் கவர்ந்தனுபவிப்போரை நாசஞ்செய்யும் என்பதை "வேதாளஞ் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே, பாதாள மூலி படருமே,— மூதேவி, சென்றிருந்து வாழ்வளே சேட்டன் குடிபுகுமே, மன்றோரஞ் சொன்னார் மனை" என்பதனாலுணர்க. (௧௬௮)

கடுங்கர னென்பெயர் படைத்தகழல் வீர
னடங்கலு மரக்கரழி வுற்றிட வழன்று
ஒடுங்கலி னிணக்குருதி யோதமக முள்ளா
னெடுங்கடலின் மந்தர மெனத்தமிய னின்றான்

இ - ள். கடுங்கரன் என - கொடியகரன் என்று, பெயர்படைத்த - நாமத்தைப் படைத்த, கழல்வீரன் - வீரக்கழலைத்தரித்த ஆண்மையையுடையான், அரக்கர் அடங்கலும் - இராக்கதர் முழுவதும், அழிவு உற்றிட - நாசமடைந்ததால், அழன்று - கோபமுற்றவனாகி, ஒடுங்கல் இல் - சுருங்குதலில்லாத, நிணம் குருதி ஓதம் அகம் உள்ளான் - கொழுப்போடுகூடிய இரத்தக்கடலிலிருக்குமவன், நெடுங்கடலில் - பெரியசமுத்திரத்தில், மந்தரம் என - மந்தரமலை யென்னும்படி, தமியன் நின்றான் - தனித்தவனாய் நின்றான். (௧௬௯)

செங்கணெரி சிந்தவரி விற்பகழி சிந்தப்
பொங்குகுரு திப்புணரி யுட்புகையு நெஞ்சன்
கங்கமொடு காகமிடை யக்கடலி னோடும்
வங்கமென லாயதொரு தேரின்மிசை வந்தான்

இ - ள். புகையும் நெஞ்சன் - எரிகின்ற மனத்தினையுடையானாகிய அக்கரன், பொங்குகுருதி புணரியுள் - மிகுகின்ற இரத்தக்கடலில், கடலின் ஓடும் - சமுத்திரத்திற் செல்லுகின்ற, வங்கம் எனல் ஆயது ஒரு தேரின்மிசை - கப்பல் என்று சொல்லும்படியானதாகிய ஒரு இரதத்தின்மேல், செங்கண் எரிசிந்த - (தனது) சிவந்த கண்களினின்றும் அக்கினி சிந்தும்படியாகவும், வரிவில் - கட்டமைந்த வில்லினின்றும், பகழிசிந்த - பாணங்கள் சிந்தும்படியாகவும், கங்கம் ஒடு காகம் மிடைய - (தனது தேர்மேல்) பருந்துகளும் காக்கைகளும் நெருங்கும்படியாகவும், வந்தான்.—

செறுத்திறுதியிற் புவனி தீயவெழு தீயின்
மறத்தின்வயி ரத்தொருவன் வந்தணுகு முந்தைக்
கறுத்தமணி கண்டர்கட வுட்சிலை கரத்தா
லிறுத்தவனும் வெங்கணை தெரிந்தனனெதிர்ந்தான்

இ-ள். இறுதியில் - யுகாந்தகாலத்தில், புவனி தீய - உலகம் எரிந்துபோம்படி, எழு தீயில் - புறப்படுகின்ற நெருப்பைப்போல, மறத்தின் வயிரத்து ஒருவன் - கோபத்தையுஞ் சலஞ்சாதித்தலையுமுடைய ஒருவனாகிய கரன், வந்து அணுகுமுந்தை - வந்து நெருங்குமுன்பு, கறுத்த மணிகண்டர் - கரிய நிறங்கொண்ட அழகிய கழுத்தினையுடைய சிவபிரானது, கடவுள் சிலை - தெய்வத்தன்மைபொருந்திய வில்லை, கரத்தால் - (தனது) கையினால், இறுத்தவனும் - ஒடித்த ஸ்ரீராமபிரானும், வெங்கணை தெரிந்தனன் - கொடிய சரங்களைத் தெரிந்தெடுத்தவனாகி எதிர்ந்தான் - (கரனை) எதிர்சென்றான். (௧எ௪)

தீயுருவ காலவிசைய செவ்வியன வெவ்வா
யாயிரம் வடிக்கணை யரக்கர்பதி பெய்தான்
தீயுருவ காலவிசைய செவ்வியன வெவ்வா
யாயிரம் வடிக்கணை யிராமனு மறுத்தான்

இ-ள். தீ உருவ - தீப்போலும் உருவமுள்ளனவும், காலவிசைய - காற்றைப்போலும் வேகமுள்ளனவும், செவ்வியன - அழகுள்ளனவுமாகிய, வெவ்வாய - கொடியவாயினையுடைய, வடி - கூர்மைபொருந்திய, ஆயிரம் கணை - ஆயிரம்பாணங்களை, அரக்கர்பதி - கரன், எய்தான்—, தீ உருவ காலவிசைய செவ்வியன வெவ்வாய ஆயிரம் வடிக்கணை - அந்தகைய ஆயிரம் பாணங்களால், இராமனும் - ஸ்ரீராமபிரானும், அறுத்தான் - (கரன்கணை ஆயிரத்தையும்) துண்டித்தான். (௧எ௫)

ஊழியெரி யிற்கொடிய பாய்பகழி யொன்பா
னேழுலகி னுக்குமொரு நாயகனு மெய்தான்
சூழ்சுடர் வடிக்கணை யவற்றெதிர் தொடுத்தே
யாழிவரி விற்கரனு மன்னவை யறுத்தான்.

இ-ள். ஏழ் உலகினுக்கும் - ஏழுலகங்களுக்கும், ஒருநாயகனும் - ஒப்பற்ற தலைவனாகிய ஸ்ரீராமபிரானும், ஊழி எரியில் கொடிய - ஊழித்தீயைப்பார்க்கிலுங் கொடியவையான, பாய்பகழி ஒன்பான் - (மார்பில்) ஊடுருவிச்செல்லும் ஒன்பது கணைகளை, எய்தான்—, ஆழிவரிவில் கரனும் - கடல்போன்ற கட்டமைந்த வில்லை ஏந்திய கையினையுடைய கரனும், சூழ்சுடர் - சூழ்ந்த சுவாலையையுடைய, வடிக்கணை அவற்றெதிர் தொடுத்து - கூர்மைபொருந்திய அக்கணைகளுக்கு எதிராக (ஒன்பது கணைகளைச்) செலுத்தி, அன்னவை அறுத்தான் - (ஸ்ரீராமபிரான் ஏவிய) அவ்வொன்பது கணைகளையும் அறுத்தான். (௧எ௬)

கள்ளவமர் மாயவினை கல்வியின் விளைத்தான்
வள்ளலொரு வைப்பகழி மாரியின் மறைத்தா

னுள்ளமுலை வுறறமர ரோடின ரொளிததா
வெளளெயி றிதழபபவள வீரனும வெகுணடான

இ - ள (அரககன), கலவியின - (தனது) படிபபினுலே, களளம அமா - திருட்டுததனமான போரையும, மாயவினை - மாயசசெயலகளையும, வினைததான - செயது, பகழி மாரியின - சரவருஷததால, வளளல உருவை மறைததான - ஸ்ரீராம பிரானது திருமேனியை மறையுமபடிசெயதான, அமரா - தேவாகள, உளளம உலைவு உறறு - மனமழிநதவாகளாய, ஒடினா ஒளிததா - ஓடி யொளிததுககொண டாாகள, (அதனுல), வெள எயிறு - வெணமைநிறம பொருநதிய பறகளையும, இதழ பவளம- இதழாகிய பவளததினையுமுடைய, வீரனும - ஸ்ரீராமபிரானும, வெகுண டான - கோபிததானுகி

குறிபபு —களளவமா - உருமறைநது நினறு செயயுமபோா மாயவினை - பல ரூபமாகவும பலவகைபபடட வேறு வேறு ரூபமாகவும நினறு போாவிளைபபது இமமாயவினை கலைஞானம அறுபததுநானகுள இநதிரசாலம, மகேநதிரசால முத லியவறறுளடஙகுமாகலின 'கலவியின விளைததான' எனருா ஓடினா - முற றெசசம (௧௭௪)

வே று

முடிபபெ னினறொரு மொயகணை யாலெனுத
தொடுதது நினறுயா தோளுற வாஙகினுன
பிடிதத திணசிலை பேரகல வானிடை
யிடிபபி னேசை படககடி திறறதே.

இ - ள (ஸ்ரீராமபிரான), இனறு - இறைப்பொழுது, ஒருமொய - ஒரு போரை, (ஒரு) கணையால - ஒருபாணததினுல, முடிபபென எனு - முடிததுவிடு கிறேன எனறு கூறி, நினறு - நினறுகொணடு, தொடுதது - (ராமபினை விலலிற) பூடடி, உயாதோள உறவாஙகினுன - (அவவமபின அடிபபுறமானது தனது) உயா நத புயததிற பொருநதுமபடி யிழுததான, (அப்போழ்து), பிடிதத திணசிலை - (அவன கையிற) பிடிததிருநத வலியவிலலானது, அகலவான இடை போ இடிப பின ஓசைபட - அகனற ஆகாயததில உணடாகும பேரிடியினது ஓசையுணடாகு மபடி, கடிது இறறது - விரைவாக முறிபபடடது (௧௭௫)

வெறறி கூறிய வானவா வீரனவி
லிற்ற போது துணுககமுறா றேஙகினுா
மறறொா வெஞசிலை யினமை மனககொளா
வறற தாலெம வலியென வஞசினுா

இ - ள. வெறறி கூறிய வானவர் - சயததைக கூறிய தேவாகள, வீரனவில இறறபோது - ஸ்ரீராமபிரானது வில்லொடிநதபொழுது, துணுககம உறறு ஏஙகி னுா - அசசமடைநது விசாரஙகொணடவாகளாய, மறறு ஓா வெஞ்சிலை இனமை- (ஸ்ரீராமபிரானுககு) வேறொரு கொடியவில்லிலலாம விருப்பதை, மனககொளா - மனததிறகொணடு, எம வலி - எஙகளுடைய தாஷடீகம அறறது என அஞ்சினுா- அறறுபபோயிற றெனறு பயநதாாகள. (௧௭௬)

என்னு மாத்திரத தோநதிய காாமுகளு
சின்ன மென்றுந தனிமையுஞ சிநதியான
மனனா மன்னவன செமமன மாபினுற
பினனு றததன பெருஙகா நீட்டினன.

இ-ள் என்னும மாததிரதது-(தேவாகள எமவலியறறது) என்று கூறு மளவில, எநதிய காாமுகம-தாஙகிய விலலினுல, சின்னம என்றும-சிறுமையா யிறறென்றும, தனிமையும-தனிததிருபபதையும, சிநதியான-கருதாதவனுகி, மனனா மனனவன செமமல-அரசாகளுககு அரசனுகிய தசரதச சககரவாததியின திருககுமாரனுகிய ஸ்ரீராமபிரான, மரபினுல-(க்ஷததிரியதருமம) வொழுஙகினுல, (புறஙகாட்டாமல), தன பெரும கரம-தனது பெரியகரததை, பின உற நீட்டினன-பினபககததிற சோ நீட்டினன (கஎஎ)

கணடு நினறு கருததுணாந தானென
வணடா நாதன் றடககையி னததுணை
பணடு போாமழு வாளியைப பணபினுற
கொணட விலலை வருணன கொடுததனன.

இ-ள் வருணன-வருணதேவன, கணடு-(விலலிற்றைதப்) பாாதது, நினறு-(அருகில) நினறுகொணடு, கருதது உணாநதான என-(ஸ்ரீராமனது) நினைபபை யறிநதவனபோல, பணடு-முறகாலததில, போாமழுவாளியை-போா ககுரிய பரசாயுததததினையுடையானை [பரசுராமனை], பணபினுல்-தகுதியினுல, (வென்று), கொணட-கைபபறறிய, விலலை-கோதணடததை, அ துணை-அநதசசமயததில, அணடா நாதன-தேவாகளுககு நாயகனுகிய ஸ்ரீராமபிரானது, தடம கையின-பெரிய கையில, கொடுததனன-கொடுததான.

குறிப்பு—பாசுாமன தநத விலலினை வளைதது அவனுடு போாபுரியாமல அவவிலலினைககைபபறறியதால் 'பணபினுற கொணடவில' என்றூா "பூமழை பொழிநதனா புகுநத தேவருள, வாமவேல வருணனை மான வெஞசிலை, சேமியென றுத விததன சேனை யாாதெழ, நாமநீ ரயோததி மா நகா நணணினுன" எனககீழககூறிய வாறு பரசுராமனுற பெறறு வருணனிடததுககொடுதது வைததிருநத விலலினை அவன இததிகொடுததானெனக சிவபிரானும ஸ்ரீமகாவிஷ்ணுவும பிரமதேவனது தநதிரததினுலே போாசெயதகாலதது அவவிருவரும கைககொணட விறகளில சிவபிரானுல முனனரே பழுதடைநதவில் ஜனகமகாராஜன வசமிருநதது ஸ்ரீ மகாவிஷ்ணு தானகொணட விலலைத தவததிறசிறநத இரிசிகாகருததா அவா ஜமதககினி கருததா அசசமதககினியால பரசுராமனடைநதான இவவிறகளில ஒனறு மிதிலையில முறிபட்டது மறறென்று வருணனிடஙகொடுககப படடிருநத தென்றறிக.(கஎஅ)

கொடுதத விலலையக கொணட னிறததினு
னெடுதது வாஙகி வலஙகொண டிடககையிற
பிடிதத போது நெறிபிழைத தோாககெலாந
துடிதத வாவிடக கணணெடு தோளுமே.

இ - ள் அக்கொண்டல் நிறத்தினானை - அந்த மேகம்போன்ற நிறத்தினையுடைய ஸ்ரீராமபிரானை, கொடுத்த வில்லை - வருணன் கொடுத்த வில்லினை, எடுத்து - தூக்கி, வலங்கொண்டுவாங்கி - வலதுகரங்கொண்டு வளைத்து, இடம் கையில் பிடித்தபோது - இடது கையிற் பிடித்தகாலத்தில், நெறி பிழைத்தோர்க்கு எலாம் - தருமமார்க்கந் தவறினவர்களுக்கெல்லாம், இடம் கண்ணொடு தோளும் - இடதுகண்களும் இடதுதோள்களும், துடித்த - துடித்தன (கஎகூ)

ஏற்றி நாணிமை யாமு னெடுத்தது
கூற்றி னாருங் குனிக்கக் குனித்தெதிர்
ராற்றி னானவ னாழியந் தேர்ச்சர
நூற்றி னானுண் பொடிபட நூறினான்.

இ - ள் (ஸ்ரீராமபிரான்), இமையாமுன் - கண்மூடித் திறப்பதற்குமுன்பு, நாண் ஏற்றி - நாரிபூட்டி, எடுத்தது - எடுத்த வில்லினை, கூற்றினாரும் - யமனையொத்தவர்களும், குனிக்க - மதிக்கும்படி, குனித்து - வளைத்து, எதிர் ஆற்றினான் அவன் - எதிர்த்தல்செய்த [எதிர்த்த] கரனுடைய, ஆழி அம் தேர் - சக்கரங்களையுடைய அழகிய இரதத்தை, சரம் நூற்றினான் - நூறுபாணங்களால், நுண்பொடிபட - சிறுதூளாய் அழியும்படி, நூறினான் - அழித்தான் (கஅ0)

எந்தி ரத்தடந் தேரழிந் தானிழந்
தந்த ரத்திடை யார்த்தெழுந் தம்பெலாஞ்
சுந்த ரத்தனி வில்லிதன் றோளெனு
மந்த ரத்தின் மழையின் வழங்கினான்

இ - ள் எந்திரம் தடம் தேர் அழிந்தான் - சக்கரங்களையுடைய பெரிய இரதம் அழியப்பெற்றகரன், இழந்து - (சேமத்தேர்களையும்) இழந்தவனாகி, ஆர்த்து - பேரொலிசெய்து, அந்தரத்து இடை எழுந்து - ஆகாயத்திற் கிளம்பி, சுந்தரம் தனி வில்லிதன் - அழகுபொருந்திய ஒப்பற்ற வில்லினையுடைய ஸ்ரீராமபிரானது, தோள் எனும் மந்தரத்தின் - புயமென்கிற மலையின்மேல், மழையின் - மேகத்தைப்போல, அம்பு எலாம் வழங்கினான் - சரமுழுவதையும் எய்தான் (கஅக)

தாங்கி நின்ற தயரத ராமனுந்
தூங்கு தூணி யிடைச்சுடு செஞ்சரம்
வாங்கு கின்ற வலக்கையொ டோர் வாளியால்
வீங்கு தோளொடு பார்மிசை வீழ்த்தினான்

இ - ள் தாங்கி நின்ற - (கரன்கணைகள் மீளாவாறு) காத்து நின்ற, தயரதராமனும் - தாசரதியும், தூங்கு - (அம்புகள் குறைந்து) தளர்ந்திருக்கின்ற, தூணி இடை - தூணீரத்தின்கண், சுடு செஞ்சரம் - தகிக்கின்ற நல்ல பாணங்களை, வாங்குகின்ற - எடுக்கின்ற, வலக்கை - (கரனது) வலதுகையினை, வீங்கு தோள் ஒடு - பருத்த புயத்துடனே, பார்மிசை - பூமியின்மேல், ஓர் வாளியால் - ஒரு சரத்தினால், வீழ்த்தினான் - (அறுந்து) விழும்படிசெய்தான்.

குறிப்பு — கரன் சொரிந்த சரவருஷத்தைத் தன்கணைகளால் மாற்றினானென்பார் 'தாங்கி நின்ற' என்றார். தூக்கு, தூங்கெனமெலித்தல் விகாரம் பெற்றதென்னலுமாம். (கசஉ)

வலக்கைவீழ்தலு மற்றைக்கை யால்வெற்றி
யுலக்கை வானத் துருமென வோச்சினா
னிலக்கு வற்குமுன் வந்த விராமனு
மிலக்கி னொன்று வெங்கதிர் வாளியால்

இ-ள். (அக்கரன்), வலக்கைவீழ்தலும் - (தனது) வலதுகை வீழ்ந்தவுடனே, மற்றை கையால் - இடதுகையினால், வெற்றி உலக்கை - வெற்றியையுடைய (இருப்பு) உலக்கையை, வானத்து உரும் என - மேகத்தினிடியைப்போல, ஓச்சினான் - வீசியெறிந்தான், இலக்குவற்குமுன் வந்த இராமனும் - இளையபெருமாளுக்கு முன்னே (போர்செய்ய) வந்த ஸ்ரீராமபிரானும், ஒரு வெங்கதிர் வாளியால் - ஒரு கொடியபிரகாசமுள்ள அம்பினால், விலக்கினான் - (அவ்வுலக்கையைத் துணித்து) நீக்கினான்.

குறிப்பு — போர்க்கோலங்கொண்ட இளையபெருமாளைத் தடுத்து நிறுத்திவிட்டு வந்தானென்பார் 'இலக்குவற்கு முன்வந்த' என்றார். இனி, இலக்குவற்கு முன்னே பிறந்தோனென்னலுமியையும். (கசங)

விராவ ருங்கடு வெள்ளெயி றிற்றபி
னராவ ழன்ற தனையதன் னாற்றலான்
மராம ரங்கையில் வாங்கிவந் தெய்தினா
னிராம னங்கோர் தனிக்கணை யேவினான்

இ-ள். விராவரும் - கலத்தற்கருமையான [நீண்டமுடியாத], கடு - விஷத்தினையுடைய, வெள் எயிறு - வெள்ளைப்பற்கள், இற்றபின் - முறிப்பட்டபின்பு, அரா - பாம்பு, அழன்றது அனைய - சீறியதையொத்த, தன் ஆற்றலான் - தனது வலிமையினாலே, (கரன்), மராமரம் - ஒரு மராமரத்தை, கையில் வாங்கிவந்து - கையிலெடுத்துவந்து, எய்தினான் - சேர்ந்தான், இராமன் - ஸ்ரீராமபிரான், ஓர் தனி கணை ஏவினான் - ஒப்பற்ற ஒரு பாணத்தைப் பிரயோகஞ்செய்தான். (கசச)

குறிப்பு — உலக்கையை விலக்கியபோது கரனதுபற்களும் முறிப்பட்டனவென்பது இச்செய்யுளாற் றுணியக்கிடந்தது.

வரம ரக்கன் படைத்தலின் மாயையி
னுரமு டைத்தன்மை யாலுல கேழையும்
பரமு ருக்கிய பாவத்தி னாலவலக்
கரமெ னக்கரன் கண்டமுற் றானரோ

இ-ள். அரக்கன் வரம் படைத்தலின் - ராக்ஷஸனாகிய அக்கரன் வரங்கள் பெற்றதினாலும், மாயையின் - மாயச்செயலினாலும், உரம் உடை தன்மையால் - பலமுடைய தன்மையினால், உலகு ஏழையும் - உலகங்கள் ஏழையும், பரம் - முற்காலத்

தில், உருககிய - அழசசெயத, பாவததினுல் - பாபததினுலே, கான - அவன, வலக கரம என -(தனது) வலதுகையைபபோல, கணடம உறருன - கழுததை (அறுபடக) கொணடான (கஅ௫)

ஆாதசெ ழுநதன ராடினா பாடினா
தூாதத மைநதனா வானவா தூயமலா
தீாதக னுமபொலிந தானகதி ரோனறிசை
போாதத மெனபனி போககிய தெனனவே.

இ - ள. வானவா - தேவாகள, ஆாதது எழுநதனா ஆடினா பாடினா - ஆரவாரஞ்செயது எழுநது கூததாடிப பாடி, தூயமலா - பரிசுததமான புஷபஙகளைக கொணடு, தூாதது அமைநதனா - (ஸ்ரீராமபிரானது திருமேனியை) மறையசசெயது அடககினாாகள, கதிரோன - சூரியன, திசைபோாதத - திககுகளைமூடிய, மெல பனி - இலேசாகிய பனியை, போககியது எனன - நீககிவிடடதுபோல, தீாதத னும - ஸ்ரீராமபிரானும, பொலிநதான - விளஙகினன

குறிபபு — தீாததன - பரிசுததன, ஆலோசனைககாரன, நியமிபபவன், மேனமையுடையவன கதிரோன - ஸ்ரீராமபிரானுககும மெனபனி அரககனுககும உவமை.

முனிவா வநது முறைமுறை மொயபபுற
வினிய சிநதை யிராமனு மேகினு
னனிக வெஞசமத தாருயிா போகததான
றனிபி ருநத வுடலனன தையலபால.

இ - ள முனிவா வநது - இருடிகள வநது, முறைமுறை - கிரமபபடி, மொயபபு உற - சூழநது கொளவதால, இனிய சிநதை இராமனும- மகிழசசிபொருநதிய மனததினையுடைய ஸ்ரீராமபிரானும, அனிகம வெஞசமதது - கூடடமான கொடியபோருககு,ஆா உயிாபோக - (தனது) அரிய உயிா மாததிரம செலல, தனி இருநத - (அதனேடு செலலாமல) தனிததிருநத, உடல அனன - உடலையொதத, தையலபால - சீதாபிராடடியின பககததில, ஏகினன - போயினன. (கஅஎ)

விணணி னீஙகிய வெயயவா மேனியின
புணணி னீரும பொடிகளும போயுக
வணணல வீரனைத தமபியு மனனமுங
கணணி னீரினிற பாதங கழுவினா

இ - ள. விணணில நீஙகிய - ஆகாயததில (மறைநது கொளளுமபொருடடு) விலகிய, வெயயவா - கொடிய ராகூஸாகளுடைய, மேனியின - உடலினது, புணணினீரும - அரததமும, பொடிகளும - தூசிகளும, போய உக - நீஙக, தமபியும அனனமும -இளையபெருமாளும சீதாபிராட்டியும, கணணின் நீரினுல -(தமது) கணணீரினுல, அணணல் வீரனை - பெருமையிற சிறநத வீரனுகிய ஸ்ரீராமபிரானது, பாதம கழுவினா - திருவடிகளைச சுததஞசெயதாாகள (கஅஅ)

மூதத மொனறின முடிநதவா மொயபுணீா
நீதத மோடி நெடுநதிசை நேருறக

கோதத வேலைக குரலென வானவ
ரோதத வீர னினிதிருந தானரோ.

இ - ள் மூததம ஒனறில - ஒர முகூாததததில, முடிநதவா - இறநத அரககா களினது, மொயபுணீா நீததம ஓடி -மிகுநத அரததவெளளஙகள விரைநது செனறு, நெடுநதிசை - நெடிய திசைகளின கண, நோ உற சோதத - ஒழுஙகாகக கோககப படடன, வானவா வேலைகதுால என எதத - விணணவாகள சமுததிரகோஷடம போலத துதிசெயய, வீரன - ஸ்ரீராமபிரான, இனிது இருநதான - மகிழவாக இருநதான (௧௮௯)

இஙகு நினற துரைதது மிராவணன
றஙகை தனகை வயிறு தகாததனள
கஙகு லனன கரனைத தழீஇநெடும
பொஙகு வெஙகுரு திபபுரண டாளரோ

இ - ள் இஙகு- இவவிடததில, நினறது- (சொலலாமல) நினற மறறைசசங கதிகளை, உரைததும - கூறுவாய, இராவணன தஙகை சூாபபநகை, தனகை - தனது கையினால, வயிறு தகாததனள - வயிறறிலைபபிசைநதவளாகி [வயிறறிலடிதது கொணடு], கஙகுல அனனகரனை தழீஇ - (நிறததில) இருளை யொததகரனைத தழுவி, நெடும - நெடிய, பொஙகு வெஙகுருதி - பொலிவுறறவெவவிய அரததத தில, புரணடாள - புரணடழுதாள. (௧௯௦)

ஆககி னேனமனத தாசையவ வாசையென
மூககி னோடு முடிய முடிநதிலேன
வாககி னாலுஙகள வாழவையு நாளையும
போககி னேனகொடி யேனெனறு போயினாள

இ - ள் மனதது ஆசை -மனததினகண ஆசையை, ஆககினேன- (விளையச) செயதேன, அ ஆசை - அநத ஆசையானது, என மூககினோடு முடிய - எனது மூக குடனே முடிவாக, முடிநதிலேன - இறவாமலிருககிற நான, வாககினால - (என) வாயமொழியினால, உஙகள வாழவையும - உஙகளுடைய வாழககையையும, நாளையும - ஆயுளையும, போககினேன - அழிதது விடடேன, கொடியேன எனறு - (நான மிகவும) பொலலாதவள எனறு கூறி, போயினாள - சென்றாள். (௧௯௧)

அலஙகல வேறகை யரககரை யாசறக
குலஙகள வேரறப பானகுறித தாளுயிர
கலஙகு சூறைவன போாநெடுங காலென
விலஙகை மாநகா நொயதிறசென றெயதினாள

இ - ள் அலஙகல வேல் கை அரககரை - வெறறி மாலையையணிநத வேலினை யேநதிய கையினையுடைய இராககதாகளையும, குலஙகள - (அவாகள) கூடடஙகளை யும, ஆசு அற - குறறம நீஙகுமாறு, வோ அறுபபான-அடியோடு தொலைககும பொ ருடடு, குறிததாள - கருதிய சூாபபநகை, உயிா கலஙகு -உயிா கலஙகறகுக காரா

ணமான, சூறை - சுழல் காற்றைப்போலவும், வன்போர் நெடுங்கால் என - (மேரு வுடன்) வலிய போரினைச்செய்த பெரிய காற்றைப்போலவும், நொய்தில் சென்று - விரைவிற்சென்று, இலங்கைமா நகர் எய்தினுள் - இலங்கையாகிய பெரிய நகரத் தையடைந்தாள்.

குறிப்பு—அரக்கரை பாவத்தைப்போக்கித் தேவராக்குந் தன்மையையுடைய ராமபாணத்துக்கு இரையாக்கக் குறித்தாளென்பார் 'ஆசற' என்றார். இராமபாணந் தன்னைத்தொடருமோ என்னும் அச்சத்தாலும், அவர்மேற்கொண்ட காமவிச்சையா லும் அடிக்கடி திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டு சென்றனளென்பது தோன்றச் சூறைக்காற்றையும், மேருவைப்பறிக்கக் காற்றெழும்பியதுபோல் பாலங்கையைப் பறிக்க இவள் புறப்பட்டாளென்பது தோன்ற வன்போர் நெடுமொன புய உவமை கூறினார் ...மை) மனை, (கக உ)

ஆறாவது கானவதைப் படலம்

முற்றிற்று.

ஆகப்படலம் சு கரு விருத்தம் ருருஅ

ஏழாவது மாரசனவதைப படலம



இரைக்குநெடும் பணையரக்க ரிறந்ததனை மறந்தனள்போ லிராமன் றுங்க
வரைப்புயத்தி னிடைக்கிடந்த பேராசை மனங்கவற்ற வாற்றா ளாகித்
திரைப்பரவைப் பேரகழித் திண்ணகரிற் கடிதோடிச் சீதை தன்மை
புரைப்பெனெனச் சூர்ப்பநகை வரவிருந்தா னிருந்தபரி சுரைத்து மன்றே

இ - ள் சூர்ப்பநகை—, இரைக்கும் நெடும்பணை அரக்கர் - ஒலிசெய்கின்ற பெரிய பேரிகைகளையுடைய இராக்கதர்கள், இறந்ததனை - இறந்துபோனதை, மற ந்தனள் - மறந்தாளாகிய, இராமன் - ஸ்ரீராமபிரானது, துங்கம் - பெருமைபொருந் திய, வரை புயத்தின் இடை - மலைபோன்ற புயங்களினிடத்தில், கிடந்த - தங்கியி ருந்த, பேராசை - பெரிய ஆசையானது, மனம் கவற்ற - (தனது) மனத்தை வரு த்த, ஆற்றாள் ஆகி - சகியாதவளாகி, திரை பரவை போ அகழி - அலைகளையுடைய கடலாகிய பெரிய அகழிசூழ்ந்த, திண் நகரில் - வலிய (மதிலையுடைய) இலங் கைநகரத்தின்கண், கடிது ஓடி - விரைவாகச் சென்று, சீதை தன்மை - சீதாபிரா ட்டியினது நிலைமையை, உரைப்பென் என வர - சொல்லுவேன் என்று வந்ததால், இருந்தான் - (சபையைவிட்டுச் செல்லுதலினின்று மொழிந்து) வீற்றிருந்த இராவ ணன், இருந்த பரிசு - கொலுவீற்றிருந்த (பெருந்தன்மையின்) விதத்தை, உரைத் தும் - கூறுவாம்—

குறிப்பு—அரக்கர் கொட்டிய முரசொலியின் இரைச்சல் செவியைவிட்டு நீங்கா இச்சிறிய காலவரையறையுள் மறந்தது வியப்பென்பார் 'இரைக்கும்' என் ருர். பணை - மற்றைத்தோற் கருவிகளுக்கு உபலக்கணம். அரக்கர் - கரதூஷண

தியர் போல - ஒப்பில்போலி இச்சரித்த முழுதும் எம்பிரானது தோளாற்றலாய் முடிதலால் 'துவக்கம்' என்றார் இதுபற்றியே கீழ்க்கூறிய பாலகாண்டத்து, "இராமன் றோள்வலி கூறுவோர்க்கே" என்றார் வரை - ஆகுபெயர். எங்கோவும் இளங்கோவும் இணங்காமையானும், மூக்கு முதலியன அறுபட்டதானும், கரனாதியர் இறந்ததானும் மாறிய ஆசையெனப்பர் 'கிடந்த' என இறந்தகாலத்துக்கூறினார். இப்பொருட்கியைப்போ என்றது பெயராந்த எனப் பொருள்கூறுதலுமாம். போ - பெருமையின்றிரிபு மீண்டும் அவ்வாசையுடைமையுற்றுத் தடைகளைக் கருதிவருந்த மேயாத்தமைதோன்ற 'மனங்கவற்ற' என்றார் பாவை - பரந்திருப்பது, ஐ - கருத்தாப்பொருள் விகுதி அகழி - தோண்டப்படுவது, இ - செயப்படுபொருள் விகுதி அகழியை அடுத்ததினை என்றமையால் மதிலென்றும் இனி, காவற்பொருந்திய இலங்கையெனலுமாம் தனக்கு மாற்றவளாய்ச் சீதாபிராட்டி யிருந்தனளெனவும், அதுபற்றித் தன் எண்ணம் நிறைவேறாமற் போயிற்றெனவும், அவளைப் பிரித்தலின்றித் தான் கருதியது முடியுமெனவும் எண்ணங்கொண்டு, கரதூஷணாதியர் இறந்ததனைத் தெரிவிப்பது அவசியமானதாயிருந்தும் அதனை யொழித்துச் சீதைதன்மை யுரைப்பேனென்று சென்றுள்ளாள் வர - இச்செயவெனெச்சம் காரணப்பொருட்டா யிறந்தகாலந் தழுவி இருந்தான் என்னும் வினைகொண்டு முடிந்தது இதனால் அந்தப்போது குறிப்பிக்கப்பட்டது இருந்தான் - வினையாலணையும் பெயர், மன் ஒ - அசைகள். (௧)

நிலையிலா வுலகினிடை நிற்பனவு நடப்பனவு நெறியி னீந்த
மலரின்மே னான்முகற்கும் வகுப்பரிது நுணிப்பதொரு வரம்பி லாற்ற
லுலைவிலா வகையுழந்த தருமமென நினைந்தவெலா முதவுந் தச்சன்
புலமெலாந் தெரிப்பதொரு புனைமணிமண் டபமதனிற் பொலிய மன்னோ.

இ - ள். நிலை இலா - நிலையாயிருத்தலில்லாத, உலகினிடை - இவ்வுலகத்தின்கண், நிற்பனவும் - அசரவஸ்துக்களையும், நடப்பனவும் - சரவஸ்துக்களையும், நெறியின் ஈந்த - ஒழுங்காகப்படைத்து அளித்த, மலரின்மேல் நான்முகற்கும் - தாமரைமலரின் மேலிருக்கிற பிரமதேவனுக்கும், வகுப்பரிது - செய்தற்கருமையானதும், நுணிப்பது ஒரு வரம்பு இல் ஆற்றல் - உற்றாராய்வதாகிய எல்லையில்லாத ஒப்பற்ற அறிவினாலே, உலைவு இலா வகை உழந்த தருமம் என - கெடுதலில்லாத விதத்தில் வருந்திச்செய்த தருமத்தைப்போல, நினைந்த எலாம் - நினைத்த பொருள்கள் எல்லாவற்றையும், உதவும் - கொடுக்கின்ற, தச்சன் - (மயன் என்னுந்தேவ) தச்சனது, புலம் எலாம் தெரிப்பது - அறிவு முழுதுந் தெரியக்காட்டுவதுமாகிய, ஒரு ஒப்பற்ற, புனைமணி மண்டபம் அதனில் பொலிய - அலங்கரித்த ரத்நக்கசிதமான மண்டபத்திற் சிறக்கும்படி.

குறிப்பு — வருணித்துக் கூறுதற்கியலாத மேன்மைபொருந்திய இம்மண்டபமும் இதில் வீற்றிருக்கும் இராவணனது செல்வமும் அழிவனவாக அல்லவோவிருக்கின்றவென்று பின்னர் நிகழுஞ் செயலைக்கருதி யிரங்குவார் உலகினியற்கையாகிய நிலையின்மையை முன்னிட்டு 'நிலையிலா' என்றார். இனி, பிரமதேவனது கைத்தொழில் வல்லமையைப் புகழ்வார் உருவங்களொவ்வொன்றும் வெவ்வேறு விதமாகவுள்ளனவெனினும் பொருளில் 'நிலையிலா' என்றாரெனினுமாம், ஈண்டு, (நிலை - ஒருதன்மையில், இலா - இல்லாத,) எனப்பொருள் காண்க. நிற்பன நடப்பன - வினை

யாலனையும் பெயர்கள், சராசரமென்றவாறு. நான்முகற்கும், உம்மை - உயர்வுசிறப்பு அறமானவை இன்னின்ன, அறமல்லாதவை இன்னின்னவென்று அறிதற்குரிய நூல்களை நன்காராய்ச்சிசெய்து ஒவ்வொரு விஷயத்திலும் நன்மை தீமைகளைக் கவனித்து இயற்றுதல் அறம் மறமாக முடியுமாதலின் 'நுனிப்பதொரு வரம்பிலாற்ற லுலைவிலா வகையுழந்த தருமம்' என்றார். "மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன், ஆகுல நீர பிற" "அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ னான்கு, மிழுக்கா வியன்ற தறம்" என்பனவும் பிறவும் கண்டுதெளிக. "சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங் காக்க மெவனோ வுயிர்க்கு" என்றவாறு நினைத்தவெல்லாந் தரவல்ல தருமத்தைத் தச்சனுக்கு உவமை கூறவே அவன்தாற்றலின் மிகுதிக்கெல்லையில்லையென்பதூஉம், மண்டபத்தின் சிறப்பை வருணித்தற்கியலாதென்பதூஉம் விளக்குவதாயிற்று. புலம் - புலனென்பபோலி. மண்டபம் அதனில், அது - பகுதிப்பொருள் விகுதி. இனி, மண்டபம் அதனில் பொலிய எனக்கொண்டு, மண்டபம் அழகோடு விளங்க என்னலுமாம். நினைந்தவெலா முதவுந்தச்சனென்னவே மயனைக் கூறினும், அம்மயனை அசுரதச்சனென்றுங் கூறுப. (உ)

பண்டலங்க றிசைக்களிற்றின் பணைமருப்பி னிணையொடியப் படர்ந்த பொ
விண்டலங்க ளுறவீங்கி யோங்குதய மால்வரையின் விளங்க மீதிற்[றோள்
குண்டலங்கள் குலவரையை வலம்வருவா னிரவிகொழுங் கதிர்சூழ் கற்றை
மண்டலங்கள் பன்னிரண்டு நாலைந்தாய்ப் பொலிந்தவென வயங்க மன்னோ

இ - ள். பண்டு - முற்காலத்தில், அலங்கு அல - அசைதலில்லாத, திசைக்களிற்றின் - திக்கியானைகளினுடைய, பணை - பருத்த, மருப்பின் இணை - கொம்புகளினிரட்டைகள், ஒடிய - முறியும்படி, படர்ந்த - விசாலித்த, பொன் தோள் - அழகிய புயங்கள், விண்தலங்கள் உற வீங்கி - விண்ணுலகங்களெல்லாம் அளாவும்படி பருத்து, ஓங்கு மால் உதயவரையின் விளங்க - உயர்ந்த பெருமைபொருந்திய உதயகிரியைப்போல விளங்க, குலவரையை வலம்வருவான் - மேருமலையையும் அதனைச் சூழ்ந்த எழுமலைகளையுஞ் சுற்றிவருகின்ற, கொழும் கதிர் கற்றைசூழ் - செழிப்புற்ற கிரணத்தொகுதி சூழ்ந்த, இரவிமண்டலங்கள் பன்னிரண்டும் - சூரியமண்டலங்கள் பன்னிரண்டும், நாலைந்தாய் பொலிந்த என - இருபதாய் விளங்கின என்னும்படி, மீதில் - அத்தோள்களின்மேல், குண்டலங்கள் - காதிலணிந்த குண்டலங்கள், வயங்க - பிரகாசிக்கவும்.

குறிப்பு — நிலைகலைத்தாங்கி யசையாது நிற்றலின் 'அலங்கல் திசைக்களிறு' என்றார். "கம்பமி றிசையி னின்ற களிறும்" என்றார் கரன்வதைப் படலத்தும். இனிப் பிறராற்றலுக்கு இளைத்து அசையாத களிறு என்னலுமாம். அலங்கு திசைக்களிறு எனும் பாடத்திற்கு இராவணனாற்றலுக் காற்றாமல் அசைகின்ற திசைகளிலுள்ள யானைகளெனக. உயர்ச்சியும் வெற்றியுந் தோன்ற 'விண்டலங்க ளுறவீங்கி' என்றார். குலவரை - கூடமாகிய மலையே, மேன்மைபொருந்திய மலையே யென்றாகலின், மேருவையும் அதனைச்சூழ்ந்த கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், எமகூடம், நீலகிரியென்னுஞ் சப்தகுலாசலங்களையும் கூறினும். இங்ஙனங் கூறியது இராவணனது புயமிகுதிக் குவமைநோக்கி. வலம் வருதல் - பிரதட்சணம். வருவான் - முற்றுத்திரிந்த பெயரெச்சம். இனி, வரு + வான் இரவியென்றும் பிரிக்கலாம். மண்டலம் - வட்டம். சூரியமண்டலம் பன்னிரண்டாதலை "வைகர்த்தன விவசுவத மார்த்தாண்டன், பாஸ்கர னிரவியு லோகப்பிரகாச, லுலோ

கசாடசி திரிவிக்கிரம, ஞுதித்தன றிவாகர னங்கிசமாலி, யாகச் சூரியர் பன்னிரண் டெனப்" என்பதனு னுணர்க. (௫)

புலியின்த ளுடையானும் பொன்னுடை புனைந்தானும் பூவி னானு
நலியும்வலத் தாரல்லர் தேவரினிங் கியாவரினி நாட்ட லாவார்
மெலியுமிடை தடிக்குமுலை வேயிளந்தோட் சேயரிக்கண் வென்றி மாதர்
வலிய நெடும் புலவியினும் வணங்காத மகுடநிரை வயங்க மன்னோ

இ - ள். புலியின் அதள் உடையானும் - புலியினது தோலாகிய ஆடையையுடைய சிவபிரானும், பொன் ஆடை புனைந்தானும் - பீதாம்பர மணிந்த ஸ்ரீ மகாவிஷ்ணுவும், பூவினானும் - தாமரை மலரிலிருப்பவனாகிய பிரமதேவனும், நலியும் - (இராவணனை) வருந்தச்செய்யும், வலத்தார் அல்லர் - பலமுடையாரல்லர், (என்றால்), இனி—, தேவரின் - தேவர்களில், யாவர் நாட்டல் ஆவார் - எவர்கள் (உவமை) கூறுதற்கு (உரியர்) ஆவார்கள்; மெலியும் இடை - மெலிகின்ற இடையையும், தடிக்கும் முலை - பருமனாகின்ற முலைகளையும், வேய் இளந்தோள் - மூங்கில் போலும் இளந்தன்மை பொருந்திய தோள்களையும், சேயரி கண் - சிவந்த வரிகளையுடைய கண்களையும், வென்றி - வெற்றியையுமுடைய, மாதர் - பெண்களினது, வலிய நெடும் புலவியினும் - தணித்தற்கருமையான நெடிய ஊடலினும், வணங்காத - தாழாத, மகுடம் நிரை - கிரீடங்களின் வரிசை, வயங்க - விளங்கவும்.

குறிப்பு — நலியும் என்னுந் தன்வினை பிறவினைப்பொருள் பட்டுநின்றது. இங்கு அசைநிலை. மெலிந்த தடித்த என்னாது மெலியும் தடிக்கும் என்றது, அழகின் றன்மையோடு சாமமுடைமையும் விளங்குதற்கு. ஆடவரைத் தமக்கு அடிமையாக்கிக் கொள்ளும் பேரழகுடையார் என்பார் 'வென்றிமாதர்' என்றார். புலவி — தலைவனுந் தலைவியும் ஒருபடுக்கையிற் கூடியிருந்தவிடத்து அவனிடத்து ஒருகாரணம்பற்றிப் பிணங்குதலும், பிணங்குதற்குக் காரணமில்லாதிருக்கவும் ஆசையதிகப்படுதலால் நுட்பமாகிய ஒருகாரணம் இருக்கிறதாகவுட்கொண்டு அதனை அவன் மேலேற்றி அவள் பிணங்குதலுமாம். வி - தொழிற்பெயர் விகுதி. எதுவினைச் சமாதானஞ் செய்யினும் இணங்காமை தோன்ற 'வலியநெடும்புலவி' என்றார். "புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு நீரியைந் தன்னாரகத்து" என்றவாறு புலவியாற் பெரிதான இன்பங்கிடைத்தலாயிருந்தும் அதனைப் பொருட்டாயெண்ணித் தன்பெருமை குன்றத் தாழான் என்பதூஉம், இவ்விடத்தே தாழாதவன் மற்றையோரைத் தாழுவனோ என்பதூஉம் பயத்தலின் உம்மை சிறப்புமெச்சமுமாம். இனி, வென்றிமாதர் என்றற்கு எதிரிடமாட்டாமற் சாய்ந்து [தோற்று] புணர்ச்சியினிடத்தே பேரின்பமடைதலால் வெற்றியையுடைய மாதரென்றுங் கூறலாம், "ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங், கூடலிற் காணப்படும்" என்றாராகலின். இங்ஙனங் கூறுமிடத்துப் பிணங்கிய மாதர் இராவணனது பெருமைக்கஞ்சி அவன் சொற்படியிணங்குதலன்றி யவன் சிறிதும் வணங்கானெனப்பொருள் படுதல்காண்க. (௬)

வாளுலா முழுமணிகள் வயங்கொளியின் றொகைவழங்க வயிரக் குன்றத்
தோளெலாம் படிசுமந்த விடவரவின் படநிரையிற் றோன்ற வான்ற
நாளெலாம் புடைதயங்க நாமநீ ரிலங்கையிற்றன் வாரி யிட்ட
கோளெலாங் கிடந்தநெடுஞ் சிறையன்ன நிறையாரங் குலவ மன்னோ.

இ - ள். வாள் உலாம - ஒளியுலாவுகினற, முழுமணிகள - பெரிய ரததினங களை, வயஙகு ஒளியின தொகை வழஙக - ஒளி வீசுகினற பிரகாசததினது கூட டததை யளிககுமபடி, படிசுமநத விடம அரவின படம நிரையில - புவியைததாங கிய விஷததிஃனயுடைய ஆதிசேடனெனனும பாமபினது படஙகளின வரிசை யைபபோல, வயிரம குனறம தோள எலாம தோனற - வலிபொருநதிய மலைகளை யொதத புயஙகள எலலாம விளஙகவும, ஆனற நாள எலாம - அமைநத நடசததிர ஙகளெலலாம, புடைதயஙக - பககததிற சூழநது பிரகாசிககுமபடி, தான - அவவி ராவணன, நாமநீர இலஙகையில - பெருமைபொருநதிய கடலசூழநத இலஙகை யினகண, வாரி இடட - கவாநது அடைததுவைதத, கோள எலாம - கிரகஙகள முழுவதும [நவககிரகஙகள], கிடநத - தஙகியிருநத, நெடிம சிறை அனை பெரி யசிறைசசாலையையொதத, நிறை ஆரம - நிறைநத இரததினமாலை, குலவ - விள ஙகவும

குறிபபு —உலாவும எனபத னீறறுமிசை யுகரம மெயயொடுங கெடடு 'உலாம' என நினறது இவவிராவணனது புயஙகள புவியைத தாஙகுதலானும, ஒனறோ டொன றிணைககபபடடு வரிசையாகக காணபபடுதலானும, கணடோாககு அசசத தை விளைவிததலானும, அபபுயஙகளினமேல இரததினமாலை கிடபபதானும இவன புயஙகளுககு மணிகளபொருநதிய படிசுமநத விடவரவினபட நிரையை யுவமை கூறினா நாளனறது - இருபானேழு நடசததிரஙகளை இநநடசததிரஙகள உள ள ராசிகளில நவககிரக சஞசாரமுளதாகலின, 'புடைதயஙக' எனறா நாமம - அச சமுமாம கோளெலாம எனறகு நவககிரகஙகளோடு குளிகன முதலிய மறறைக கிரகஙகளையுங கூறலாம இநதிரஜிதது ஜனிததகாலதது அவன எலலாரினுஞ சிற நதவனாதறபொருடடு நவககிரகஙகளை ஓரிடதது இராவணன சிறைவைததானெனறு கூறுவா (௫)

வேறு

ஆயவருமபெருவலி யரககராதியோா
நாயகா நளிாமணி மகுட நணணலாற
றேபவுறக தேயவுறப பெயாநது செஞசுட
ராயமணிப பொலனகழ லடிநின றாபபவே.

இ - ள ஆயவு அருமபெருவலி அரககா ஆதியோா நாயகா - ஆராயவதற கருமையான மிகக வலிமையையுடைய இராககதா முதலினோாது தலைவாகளினுடை ய, நளிா - பெருமை பொருநதிய, மணிமகுடம நணணலால - ரதநகிரீடஙகள (அவா வணஙகுநசோறுநதன கழனமிசைச) சோதலால, தேயவு உற தேயவுஉற - தேயததேய, (அதனால) பெயாநது - வேறுபடடு, செஞசுடா ஆய - நலலபிரகாசததை யுடைய தாகி, மணி பொலன கழல - இரததினஙகளை யழுததிப பொனனினாற செயத வீர கணடை, அடி நினறு - (தன) பாதததின கணணிருநது, ஆாபப - பேரொலி செ யயவும

குறிப்பு —'ஆய்வரும்' எனபதன் பொருளைககீழ அகததியபபடலததின ஐந தாவது செயயுளி னுரையின கடசாணக ஆதியோா எனறது - வானவா தானவா முதலானவாகளை அடுககு -மிகுதிபபொருளின கணவநதது. அரசா காறகுப பொ னனணி பூணுதறகுரியராகலின பொனனினாறசெயத கழலெனறும ''பூஙகழலாக

சன வந்து பொலங்கழ லிலங்கை வேந்தை" என்றார் உயுத்தகாண்டத்தும் ஆய்மணி-ஆராய்ந்தெடுத்த மணியுமாம் (௬)

மூவகை யுலகினு முதலவர் முந்தையோ
ரோவல ருதவிய பரிசி னோங்கலபோற்
றேவரு மவுணரு முதலி னோர்திசை
தூவிய நறுமலர்க் குப்பை துன்னவே

இ - ள் மூவகை உலகினும் - திரிலோகங்களினும், முதலவர் - முதன்மையாகிய, முந்தையோர் - முற்காலத்திய வள்ளல்கள், ஓவலர் - ஒழியாதவர்களாய், உதவிய - கொடுத்த, பரிசின் ஓங்கல்போல - கொடைத்திரவியத்தின் மலையைப்போல, தேவரும் அவுணரும் முதலினோர் - தேவர்களும் அசுரர்களு முதலாகிய பேர்கள், திசை - திக்குகளில் தூவிய - சிந்திய, நறுமலர் குப்பை - மணமுள்ள புஷ்பங்களின்குவியல்கள், துன்ன - விளங்கவும். (எ)

இன்னபோ திவ்வழி நோக்கு மென்பதை
யுன்னலர் கரதலஞ் சுமந்த வுச்சியர்
மின்னவிர் மணிமுடி விஞ்சை வேந்தர்க
டுன்னினர் முறைமுறை துறையிற் சுற்றவே.

இ - ள். இவ்வழி இன்னபோது நோக்கும் என்பதை உன்னலர் -இன்ன இடத்தில் இன்ன நேரத்தில் (இராவணன்) பார்ப்பான் என்பதைத் தெரிந்து கொள்ளாதவர்களும், கரதலம் சுமந்த உச்சியர் - கரங்களைச்சுமந்த சென்னியையுடையவர்களும் [தலைமேற்கைகுவித்து நமஸ்கரிப்பவர்களும] ஆகிய, மின் அவிர் மணி முடி - ஒளி வீசுகின்ற ரத்நகிரீடத்தையுடைய, விஞ்சை வேந்தர்கள் - வித்தியாதரர்கள், முறைமுறை - வரிசைக்கிரமப்படி, துன்னினர் - கிட்டினவர்களாய், துறையில் சுற்ற - சபையினிடத்தே சுற்றிக்கொண்டிருக்கவும் (அ)

மங்கையர் திறத்தொரு மாற்றங் கூறினுந்
தங்களை யாமெனத் தாழுஞ் சென்னிய
ரங்கையு முள்ளமுங் குவிந்த வாக்கையர்
சிங்கவே றெனத்திறற் சித்தர் சேரவே.

இ - ள். மங்கையர் திறத்து-பெண்கள் விஷயத்தில், ஒருமாற்றம் கூறினும்-ஒருவார்த்தை சொன்னாலும், தங்களை என - (அம்மாற்றம்) தம்மை(க்குறித்துச் சொன்னது) என்று, தாழும் சென்னியர் - வணங்குகின்ற தலையினையுடையவர்களும், அங்கையும் உள்ளமும் குவிந்த ஆக்கையர் - அகங்கையும் மனமும் குவிந்துற்ற உடலை யுடையாருமாகிய, திறல் சித்தர் - வலிமையையுடைய சித்தர்கள், சிங்கம் ஏறு என சேர - ஆண்சிங்கங்களைப்போல வந்து கூடவும்.

குறிப்பு —பெருமையங்கிடந்த நெஞ்சினர் என்பது முதலிரண்டடிகளின் கருத்து ஆம் - அசை அகம்+கை - அங்கை, "அகமென் கிளவிக்குக் கைமுன் வரினே, முதனிலை யொழிய முன்னவை கெடுதலும், வரைநிலை யின்றே யாசிரியர்க்க, மெல்லெழுத்து மிகுத லாவயி னான" என்றார் தொல்காப்பியனார், அங்கை குவிதல-

கும்பிடுதல் உள்ளங்குவிதல்-பயபக்தி விசுவாசங் காட்டுதல். ஆக்கை யாக்கையென மருஉ. (௯)

அன்னவ னமைச்சரை நோக்கி யாண்டொரு
நன்மொழி பகரினு நடுங்குஞ் சிந்தைய
ரென்னைகொல் பணியென விறைஞ்சு கின்றனர்
கின்னரர் பெரும்பயங் கிடந்த நெஞ்சினர்

இ-ள். அன்னவன் - அத்தகைய இராவணன், அமைச்சரை நோக்கி - மந்திரிமார்களைப்பார்த்து, ஆண்டு - அவ்விடத்து, ஒரு நல் மொழி பகரினும் - ஒரு நல்வார்த்தை சொன்னாலும், (அவ்வார்த்தை தம்மைக்குறித்ததோ வென்னவையுற்றஞ்சி), நடுங்கும் சிந்தையர் - நடுங்குகின்ற எண்ணத்தினையுடையவர்களும், பணி - கட்டளை, என்னை கொல் என இறைஞ்சுகின்றனர் - யாதோ? என்று வணங்குகின்றவர்களும், பெரும் பயம் கிடந்த நெஞ்சினர் - பெரிதான அச்சம் தங்கியிருக்கின்ற மனத்தினையுடையவர்களுமாகிய, கின்னரர் - கின்னரர்களும்

குறிப்பு — ஆண்டு - சுட்டு நீண்டது. நடுங்குஞ் சிந்தையர் - பலவாறுகச் சிந்திய எண்ணத்தினை யுடையவர்கள். கொல் - ஐயம். தம்மேல் யாது குற்றங்கண்டு எத்தண்டனை யியற்ற ஆலோசிக்கின்றானோ என்று அச்சங்கொண்டா ராதலின் 'பெரும்பயங்கிடந்த நெஞ்சினர்' என்றார். அமைச்சர் - மந்திரிகள், இஃது அமாத்தியரென்னும் வடமொழிச்சிதைவு, இவர்கள் அரசர்க்குரிய ஐம்பெருங்குழுக்களில் ஒருவகையினர், "அமைச்சர் புரோகிதர் சேனாபதியர், தவாத்தொழிற் றூதுவர் சாரண ரென்றிவர், பார்த்திபர்க் கைம்பெருங் குழுவெனப் படுமே" என்றாராகலின்.

பிரகர நெடுந்திசைப் பெருந்தண் டேந்திய
கரதலத் தண்ணலைக் கண்ணி னோக்கிய
நரகின ராமென நடுங்கு நாவின
ருரகர்கட் டம்மன முலைந்து சூழவே.

இ-ள். பிரகரம் - மிகுந்த கொலைத்தொழிலையுடைய, நெடுந்திசை - நெடிய (தென்) திக்கிலிருக்கிற, பெருந்தண்டு ஏந்திய - பெரிய தண்டாயுதத்தை யேந்தியிருக்கின்ற, கரதலத்து - கையினையுடைய, அண்ணலை - பெருமையிற்சிறந்த நமனை, கண்ணில் நோக்கிய - கண்ணுறப்பார்த்த, நரகினர் என - நரகத்திலுள்ளவர்களைப்போல, நடுங்கு நாவினர் - நடுங்குகின்ற நாவினையுடையவர்களாகிய, உரகர் - நாகர்களும், தம் - தங்களுடைய, மனம் உலைந்து - மனநிலை மாறுபட்டவர்களாய், சூழ - சூழ்ந்து நிற்கவும்

குறிப்பு — பிரகர நெடுந்திசையெனவே தென்றிசையாயிற்று. தண்டதரனென்னும் நமனது பெயரைக் கூறுவார் 'பெருந்தண் டேந்திய கரதலத் தண்ணல்' என்றார். "இயமனரி யந்தகன் றென்றிசைக் கிழவன், சமனே தண்டன் சண்பன் றருமன், நமனே மறலி தண்ட தரனே." என்பதால் நமனப் பெயருடைமையறிக. ஆம் - அசை. நடுங்குநாவினர் - தடுமாறு மொழியினையுடையவர்கள். தென்னிலங்கை யிராவணனுக்குத் தென்றிசை நமனும், பயங்கரம் பயத்தலினால் ராஜசபைக்கு நரகும், நடுங்குநாவினர் சிந்தையராதலின் அச்சபையிலுள்ள உரகர்க்கு நரகினரும் உவமை. (௧௧)

திசையுறு கரிகளைச் செற்றுத் தேவனும்
வசையுறக் கைலையை மறித்து வானெலா
மசையுறப் புரந்தர னடாத்த தோளகளி
னிசையினைத் தும்புரு விசையி னேத்தவே.

இ - ள். திசை உறு கரிகளை செற்று - திக்கயங்களைச் சினந்து [வென்று] தேவனும் வசை உற - சிவபிரானும் பழிப்பையடையும்படி, கைலையை மறித்து - வெள்ளியங் கிரியைக்கீழ்மேலாகும்படி தூக்கி, வான் எலாம் - விண்ணவரெல்லாரும், அசை உற - அஞ்சும்படி, புரந்தரன் - இந்திரனோடு, அடாத்த - போர்புரிந்த, தோள்களின் - (இருபது) புயங்களினது, இசையினை - கீர்த்தியை, தும்புரு - தும்புரு வென்னும் பெயரினனை வீணையினது, இசையின் - இசைப்பாட்டினால், ஏத்த - துதி செய்யவும்

குறிப்பு — தேவனும், உம்மை - உயர்வு சிறப்பு. மறித்தல் - கீழ்மேலாக்கச் செய்தல், இது இப்பொருட்டாதலை "மலைபுரை யானை மறிந்து" என்னும் புறப்பொருள் வெண்பாவின் உரையினகட்காண்க வான் - இடவாகுபெயர் அசை - முதனிலை தும்புரு - இரட்டுறமொழிதல், ஒரு கந்தருவன் பெயரையும், வீணையையும், வீணைப் பரீட்சையுள்ளவரையும் குறிக்கும் பலபொருளொருசொல் பலவியற்பாக்களுடனே சிறந்ததையிசைத்தலாலிசை யென்றற்கு இசைப்பாட்டென்றும், "பாவோ டணைந்த விசையென்றூர் பண்ணென்றூர், மேவார் பெருந்தான மெட்டானும் - பாவா—, லெடுத்தன முதலா விரு நான்கும் பண்ணிப், படுத்தமையாற் பண்ணென்று பார்" எனபவாகலின் (சஉ)

சேணுயர் நெறிமுறை திறம்ப லின்றியே
பாணிகள் பணிசெயப் பழுதில் பண்ணிடை
வீணையி னரம்பிடை விளைத்த தேமறை
வாணியி னாரதன் செவியின் வார்க்கவே.

இ - ள். சேண உயர் நெறி முறை திறம்பல் இன்றி - தேவலோகத்தி லியற்றும் உயர்ந்த விதியினது ஒழுங்கு தவிராமல், பழுது இல் பண்ணிடை - குற்றமில்லாத இசைப்பாட்டினிடையிடையே, பாணிகள் பணிசெய - கரங்கள் தாளங் கொட்டவும், நாரதன் - நாரதமாமுனிவன், வீணையின் நரம்பு இடை விளைத்த தேம் மறை - வீணையினது நரம்பிலுண்டாக்கிய இனிய வேதத்தை, வாணியின் - சரசுவதியைப்போல, செவியின் - காதுகளில், வார்க்க - பெய்யவும்

குறிப்பு — நாரதாதியர் சண்டுமகிழவுறப் பணிபுயறிஞரெனபார் 'சேணுயர் நெறிமுறை திறம்ப லின்றியே' என்றூர் இனி, நெடுங்காலமாயுள்ள உயர்ந்த சாஸ்திரவிதியினொழுங்கு தவிராமலெனலுமாம். பாணி - கை, இனி, பாணி - இருவகைத் தாளமுமாம், "ஆடல் பாட லிசையே தமிழே, பண்ணே பாணி தூக்கே முடமே" எனபுழிப் பாணியை இருவகைத் தாளமென்றூர் அடியார்க்குநல்லார். கீழ் எடுத்துக்காட்டிய "பாவோ டணைந்த விசையென்றூர் பண்ணென்றூர்" என்னும் வெண்பாவின்படி பெருந்தான மெட்டானும் கிரியைக ளெட்டானும் பண்ணிப் படுத்தலாற் பண்ணென்று பெயராயிற்று. அவற்றுள் பெருந்தான மெட்டாவன நெஞ்சும், மிடறும், நாக்கும், மூக்கும், அண்ணுக்கும், உதடும், பல்லும், தலையு

மென விவை. கிரியைகளோடடாவன எடுத்தல, படுத்தல, நலிதல, கமபிதம், குடிலம், நலி, உருட்டு, தாக்கு என வினை வீணைவாயிலாக வேத சுருதிகளைப பாடினரெனபார 'வீணையி னரமபிடை விளைத்த தேமறை' எனறா வாணியின, இன - உவமவுருபு வாணி - சொலலபபடுபவளெனனும பொருட்டு (௧௩)

வேறு

மேகமென றுருததி கொணடு விணணவா தருவும விஞசை
நாகமுஞ சுரநத தீநதேம புனலொடு மளாவி நவவித
தோகையா துகிலிற றோயு மெனபதோா துணுககத தோடுஞ
சீகர மகரவேலைக காவலன சிநத மனறே.

இ - ள மகரமவேலை காவலன - மீனகள நிறைநத கடலுக்கு அரசனாகிய வருணதேவன, விணணவா தருவும - தேவாகளுடைய விருட்சஙகளாகிய பாரிசாத முதலிய மரஙகளிலும், விஞசை நாகமும - விஞசைபபதியிலிருககினற புனனை மர ஙகளிலும், சுரநத - ஊறிய, தீம தேம புனலொடு - இனிமையும மணமும பொருந திய நீருடனே, அளாவி - (கடல நீரைக) கலநது, நவவி தோகையா - மானையு மயிலையும போனற பெணகளினது, துகிலில தோயும எனபது ஓா துணுககத தோடும - ஆடையிற படியுமெனகிற ஒரு பயததுடனே, மேகம என துருததி கொணடு - மேகமெனறு சொலலுகினற துருததியினால, சீகரம - மழைததுளிகளை சிநத - சிநதவும

குறிபபு — விஞசை - விஞசைபபதி, விததியாதரரிருபபிடம ''சேணியும விஞ சைபபதியுஞ சேடியும, யாணா நகரும விததியாதரரிடம்'' எனறா பிங்கலமுனிவ ரும. தேனொடு பனிநீரெனபாா 'தீநதேம புனல' எனறா (௧௪)

நறைமலாத தாதுந தேனு நளிரநெடு மகுட கோடி
முறைமுறை யறையச சிநதி முரிநதுகு மணியு முததுந
தறையிடை யுகாத முனனந தாஙகினன றழுவி வாஙகித
துறைதொறுந தொடாநது நினறு சமீரணன றுடைபப மனறே

இ - ள சமீரணன - வாயுதேவன, நறை மலா தாதும - வாசனையையுடைய புஷபஙகளின மகரநதபபொடிகளும, தேனும - மதுவும, நளிா நெடுமகுடகோடி - பெருமைபொருநதிய பெரிய கிரீட மிகுதிகள, முறைமுறை - அடிககடி, அறைய - (ஒனறோடொனறு) மோதபபடுவதால, முரிநது சிநதி உகுமணியும முததும - முரி படடுச சிதறிச்சிநதுகினற (மாணிகக முதலிய) இரததினஙகளும முததுககளும, தறை இடை உகாத முனனம -நிலததில வீழாத முனபு, தாஙகினன தழுவி வாஙகி- தாஙகித்தழுவி யெடுதது, துறைதொறும தொடாநது நினறு - (அரககா வானவா தானவா முதலியோா கூடிய) ஒவவொரு இடஙகளிலும தொடாநது சென று நினறு, துடைபப - சுததி செயது கொணடிருககவும

குறிபபு — நறை - நறமை யெனனும பணபின ஈறு போயிடையுகரமையா யிறறு கோடி - இவவெணணுபபெயா மிகுதி யெனனும பெயா மாததிரையாய நினறது முறைமுறை - பலதரமெனறுகலின அடிககடி யென்றும. தறை - தரை தாஙகினன - முறறெசசம தாதுதேன முதலியவறறின மிகுதியும அவை நிலததிற

சிறிதும் வீழ்ந்தில வென்பதும் தோன்ற 'தாங்கினன்றழுவி வாங்கி' னென்றார் சமீரணன் - எல்லாப்பொருளையும் எடுத்து எறிவோன், சமீரணம் - எறிதல், வீசுதல். ()

வேறு

மின்னுடை வேத்திரக் கையர் மெய்ப்புக்கத்
துன்னெடுங் கஞ்சுகத் துகிலர் சோர்விலர்
பொன்னொடு வெள்ளியும் புரந்த ராதியர்க்
கின்னியன் முறைமுறை யிருக்கை யீயவே

இ-ள். மின் உடை வேத்திரம் கையர் - பிரகாசத்தினையுடைய பொற்பிரம் பேந்திய கையினையுடையவர்களும், மெய்ப்புக - உடல் முழுதும் புகும்படி, துன் - விளங்குகின்ற, நெடுங்கஞ்சுகம் துகிலர் - நீண்ட சட்டைத்துணியை யுடையவர்களுமாகிய, சோர்வு இலர் - தளர்விலலாத வே[illegible]பாடகள், புரந்தராதியர்க்கு - இந்திரன் முதலினோர்க்கு, முறைமுறை - வரிசைக்கிரமப்படி, இன் இயல் - இனிமை பொருந்திய, பொன்னொடு வெள்ளியும் - பொன்னும் வெள்ளியுமாகிய, இருக்கை - ஆசனங்களை, ஈய - கொடுக்கவும்.

குறிப்பு — மின்னுடை வேத்திரமெனவே பொற்பிரம்பென்றாம். புரந்தராதியர் - வடமொழிப் புணர்ச்சி. இன் - இனிமையின்றிரிபு. இன்னியல் என்றது - அவரவர் யோக்கியதைக்குத் தக்கபடி உபசாரஞ் செய்தமை விளங்கற்கு. இருக்கை - தொழிற்பெயர், இஃது ஆசனமாத்திரையாய் நின்றது. (௪௯)

சூலமே முதலிய துறந்து சுற்றிய
சேலையாற் சிறியவாய் புதைத்துச் செங்கையின்
தோலுடை நெடும்பணை துவைக்குந் தோறெலாங்
காலன்வந் திசைக்குநாட் கடிகை கூறவே

இ-ள். தோல் உடை நெடும்பணை துவைக்கும் தோறு எலாம் - தோற்போர்வையையுடைய பெரிய முரசை முழக்கும்போதெல்லாம், காலன் - யமன், சூலமே முதலிய துறந்து - சூலாயுதமே முதலாகிய படைகளை நீக்கி, சுற்றிய சேலையால் - சுற்றிய உத்தரீயத்தாலும், செங்கையின் - சிவந்த கையினாலும் சிறியவாய்புதைத்து - (தனது) சிறிய வாயை மூடிக்கொண்டு, வந்து —, இசைக்கும் - (தான்) கூறுகின்ற, நாள் கடிகை - நாளினது நாழிகையை [நாழிகைக் கணக்கை], கூற - சொல்லவும்.

குறிப்பு — சூலமே, ஏகாரம் - பிரிநிலை. யமன் தனது செயலொழிந்தமை தோன்ற 'சூலமே முதலிய துறந்து' என்றும், அவன் அரக்கர் மாட்டுப் பயபக்தி விசுவாசத்தோடு அடங்கி யொடுங்கி நடக்கும் எழைமைதோன்ற 'சுற்றிய சேலையாற் சிறியவாய் புதைத்து' என்றுங் கூறினார். புலியைப்பொருது கொன்று நின்று சிலைத்துக் கோட்டுமண்கொண்ட ஏறு இறந்தழி அதன் உரிவையை யெடுத்து மயிர் சீவாமற் போர்த்த முரசு என்பார் 'தோலுடை' யென்றார். 'உயிர்ப்பலி யுண்ணு முருமுக்குரல் முழக்கத்து, மயிர்க்கண் முரசொடு வான்பலி யூட்டி' என இளங்கோவடிகளும், "புண்மருப்பு பழுந்தக் குத்திப் புலியொடு பொருது வென்ற, கண்குரா லுருமுச் சீறக் கதழ்விடை யுரிவை போர்த்த, துணைக்குரல் முரசத் தானை" எனத் **திருத்தக்கதேவரும்**, "கொல்லேற்றுப் பசுந்தோல் சீவாது போர்த்த, மயிர்க்கண்

முரசம் மோவல விரங்க" எனப் பிறரும் கூறியது காண்க. "எற்றுநீ போதந்த விடியுரு முழக்கிற், கூற்றுக்கண் விளிக்கும் குருதிவேட்கை முரசு" என்னும் மணிமேகலைச் செய்யுளான் எற்றுநீ போதந்த முரசு கூற்றினை யழைக்கு முரசாதல் அறிக. காலன் - காலத்தைக் கணக்கிடுகிறவன். கடிகை - வடமொழித் தற்பவம். நாழிகைக் கணக்கைக் கூறுவோர்க்குக் கடிகையார் என்பது பெயர். அவர் அரசனுக்குச் சென்ற நாழிகைக்குக் கவி சொல்லுவார், "பூமன் கணையும் பொருசிலையுங் கைக்கொண்டு, காமனறிரியுங் கருவூரா - யாமக்கை, ளொன்றுபோ யொன்றுபோ யொன்றுபோய் நாழிகையு, மொன்றுபோ யொன்றுபோ யொன்று" என நாழிகை வட்டிவிடுவாரு மென்ப "சூதரேத்த மாகதர் நுவல, வேதாளிகரொடு நாழிகை யிசைப்ப" என்றார் பிறரும் என்று அடியார்க்கு நல்லார் கூறியவாறு ஈண்டு நமன் இராவணனுக்கு நாழிகைக் கணக்கைக் கூறுவோனாதல் காண்க. அங்ஙனம் நாழிகைக் கணக்கைக் கூறுதலே யமனுக்கு உரிய தொழிலாதலை வற்புறுத்த 'இசைக்கும்' என்றார். (௧௭)

நயங்கிளர் நானநெய் யளாவி நந்தலில்
வியங்கருப் பூரமென் பஞ்சின் மீக்கொளீஇக்
கயங்களின் மரைமலர்க் காடு பூத்தென
வயங்கெரிக் கடவுளும் விளக்க மாட்டவே

இ-ள். வயங்கு எரி கடவுளும் - பிரகாசிக்கின்ற அக்கினித்தேவனும், நயங் கிளர் - நன்மைமிகுந்த, நானம் நெய் - வாசனையையுடைய நெய்யுடன், நந்தல் இல் - குறைவில்லாத, வியம் - பெருமைபொருந்திய, கருப்பூரம் - சூடனும், அளாவி - கலந்து, மென் பஞ்சின் மீ - மெல்லிய பஞ்சின்மேல், கொளீஇ - கொளுத்தி, கயங்களின் மரை மலர் காடு பூத்தென - குளங்களில் தாமரை மலர்க்காடு பூத்தாற்போல, விளக்கம் மாட்ட - விளக்குக்களை யேற்றவும்.

குறிப்பு:—நானம் - நெய்யுமாம், ஈண்டு 'நானநெய்' — ஒருபொருட் பன்மொழி. கருப்பூரமும் நெய்யுங் கலந்து அதிற் பஞ்சின் திரிபோட்டுக் கொளுத்திய தீபமென்பது கருத்து. இனி, கருப்பூர மென்கின்ற பஞ்சின்மேல் நெய் அளாவிக் கொளுத்தி என்று கூறலுமாம். ஈண்டுக் கருப்பூரம்-பஞ்சின் வெண்மை நிறத்துக்கும், பற்றியெரியும் மென்மைத்தன்மைக்கும் உவமை. கொளீஇ - கொளுத்தி. "பூநாறு நறுந்த புகை கொளீஇ" என்றார் புறப்பாட்டினும். கயங்கள் - அகல்களுக்கும், மரைமலர்க்காடு - மிகுதியான விளக்கின் சோதிகளுக்கும் உவமை. தாமரை - மரையெனல் விகாரம். விளக்கம், அம் - வினைமுதற் பொருண்மை விகுதி. (௧௮)

அதிசய மளிப்பதற் கருள றிந்துநற்
புதிதலர் கற்பகத் தருவும் பொய்யிலாக்
கதிர்நெடு மணிகளுங் கறவை யான்களு
நிதிகளு முறைமுறை நின்று நீட்டவே.

இ-ள். அதிசயம் அளிப்பதற்கு - நூதனமான பொருள்களைக் கொடுப்பதற்கு, அருள் அறிந்து - (இராவணனது) கட்டளையையறிந்து, புதிது அலர் நல் கற்பகம் தருவும் - அன்று பூத்த நல்ல கற்பக விருட்சங்களையும், பொய் இலா - பொய்த்தலில்லாத, கதிர்நெடுமணிகளும் - பிரகாசம் பொருந்திய சிந்தாமணி முதலிய மணிகளையும், கறவை ஆன்களும் - கறத்தலையுடைய காமதேனு முதலிய பசுக்களையும்,

நிதிகளும் - நிதிகளையும், முறைமுறை - அடிக்கடி, நின்று - (கொணர்ந்து) நின்று, நீட்ட - (அரக்கராகியோர்க்கு வேலையாளர்கள்) கொடுத்துக்கொண்டிருக்கவும்.

குறிப்பு — அதிசயம்-அதிசயமான பொருளுக்கு ஆகுபெயர். கண்சாடை முதலியன கண்டு என்பார் அறிந்து என்றார். திவ்விய சாரமாகிய நானாவித பானங்களை யுதவும் மத்தியாங்கம், நானாவித வாத்தியங்களை யுதவும் தூரியாங்கம், அநேகவித வாபரணங்களை யுதவும் பூஷணாங்கம், அநேகவித இரத்தின தீபங்களை யுதவுந் தீபாங்கம், பிராஸாத மண்டபாதிகளை யுதவுங் கிருகாங்கம், சந்திராதித்தர் ரொளியினை யடக்கு மொளியினை யுதவுஞ் சோதிராங்கம், நானாவித ரசத்தன் வாகிய நானா குவகை யுணவினையு முதவும் போசனாங்கம், வேண்டியகலன்களை யுதவும் பாசனாங்கம், விசித்திர வஸ்திரங்களை யுதவும் வஸ்திராங்கம் எனப்பெயர் பெற்ற கற்பகத்தருவின் வகைகளைக் கூறுவார் 'நல' என்றார். மாற்றுட்டமில்லாத மணியென்பார் 'பொய்யிலா' என்றார். மணிகள் என்றது தெய்வ மணிகளாகிய சிந்தாமணி, சூளாமணி, சிமந்தகமணி, சூடாமணி, கௌஸ்துவமணி யென்பவற்றோடு நவமணிகளை. மனத்தில் நினைத்தன வெல்லாந் தரற்பாலன வென்பார் 'கறவையானைகள்' என்றார். 'மறவியொன் றானுமின்றி மனத்ததே சுரக்கும் பால், கறவையிற் கறக்குந் தம்மாற் காமுறப் பட்ட வெல்லாம்'' என்றார் திருத்தக்க தேவரும். நிதிகள் என்றது - சங்கநிதி, கற்பநிதி, பதுமநிதி, நந்தநிதி, நீலநிதி, மகாநிதி, மகாபதுமநிதி, முகுந்தநிதி யென்னும் நவநிதிகளை. (௧௯)

குண்டல முதலிய குலங்கொள் பேரணி
மண்டிய பேரொளி வயங்க வீசலா
லுண்டுகொ லிரவினி யுலக மேழினு
மெண்டிசை மருங்கினு மிருளின் றென்னவே

இ - ள் குண்டலம் முதலிய-குண்டலங்கள் முதலாகிய, குலம் கொள்-மேன்மைபொருந்திய, பேர் அணி - பெரிய ஆபரணங்கள், மண்டிய - நெருங்கிய, பேர் ஒளி வயங்க வீசலால் - பெரிதான பிரகாசம் விளங்கும்படி வீசுதலால், இனி இரவு உண்டுகொல் - இனி இராத்திரி யென்பது உண்டோ? உலகம் ஏழினும் - ஏழுலகங்களிலும், எண் திசை மருங்கினும் - எட்டுத் திக்குக்களின் பக்கத்திலும், இருள் இன்று என்ன - இருளென்பது இல்லையென்று கூறவும். (௨௦)

கங்கையே முதலிய தீர்த்த கன்னியர்
கொங்கைகள் சுமந்திடை கொடியி னொல்கிடச்
செங்கையி னரிசியு மலருஞ் சிந்தினர்
மங்கல முறைமுறை கூறி வாழ்த்தவே

இ - ள் கங்கையே முதலிய தீர்த்தகன்னியர் - கங்கையே முதலாகிய புண்ணிய நதிகளாகிய பெண்கள், கொங்கைகள் சுமந்து - முலைகளைச் சுமப்பதால், இடை - (அவர்கள்) இடையானது, கொடியின் - கொடியைப்போல, ஒல்கிட - தளர்வடைய, செங்கையின் - (தமது) செய்ய கையிலே, அரிசியும் - அட்சதைகளையும், மலரும் - புஷ்பங்களையும், சிந்தினர் - சிந்தி, முறைமுறை - அடிக்கடி, மங்கலம் கூறிவாழ்த்த - சுபங் கூறி ஆசீர்வாதஞ் செய்யவும்.

குறிப்பு — சுமந்து என்னும் வினைதந்தது - கொங்கையின் பாரமிகுதி விளங்கற்கு சுமந்து - சுமக்கவென்னுஞ் செயவெனெச்சத்திரிபு. சிந்தினா-முற்றெச்சம்.

ஊருவிற் றோன்றிய வுயிர்ப்பெ யோவியங்
காரினிற் செருக்கிய கலாப மஞ்ஞைபோல்
வார்விசிக் கருவியோர் வகுத்த பாணியி
னாரிய ரருநட நடிப்ப நோக்கியே

இ-ள். ஊருவில் தோன்றிய உயிர் பெய் ஓவியம் - (பிரமதேவனது) துடையின் கட்பிறந்த உயிர் உள்ள சித்திரப்பாவைபோன்ற உருப்பசியானவள், காரினில் செருக்கிய கலாபம் மஞ்ஞைபோல் - கார்காலத்திற் களித்த தோகை மயிலைப்போல், வார் விசி கருவியோர் - தோல் வாரினாலே கட்டப்பட்ட தோற்கருவியையுடையவர்கள், வகுத்த —, பாணியில் - பாட்டின்படி, நாரியர் அருநடம் - பெண்கள் நடிக்கும் அக்கூத்தாகிய அரிய நடனத்தை, நடிப்ப - நடிப்பதை, நோக்கி - பார்த்து.

குறிப்பு — ஊருவிற் றோன்றிய வுயிர்ப்பெ யோவிய மெனவே யுருப்பசியென்றும். உயிர் பெய் ஓவியம் வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. கார் - மேகம், பண்பாகுபெயர். கார் - இராவணனுக்குவமம், மஞ்ஞை - களிப்போடு நடிக்கும் ஊர்வசிக்கும் உவமை. வார்விசிக்கருவியோ ரென்றது,— எல்லாக்கூத்துக்களும், எல்லாப்பாட்டுக்களும், எல்லாவிசைகளும், எல்லாப்பண்களும், இருவகைத்தாளங்களும், எழுவகைத்தூக்குக்களும், இவற்றின் குற்றங்களும், இயற்சொல் முதலிய நால்வகைச்சொற்களுமென்று சொல்லப்பட்டன வற்றை நுண்ணிதாக வுணர்ந்து ஓரோருருவை யிரட்டிக்கிரட்டி சோதித்து விடத்து நெகிழாதபடி நிரப்பி நிறுத்தவும், அவ்விடத்துப்பெறும் இரட்டியேயாய்ப் பாசவுருவானவழி நிறகுமான நிறுத்திக்கழிப்புமாணங் கழிக்கவும், வல்லனாய், இப்படி நிகழ்ந்த வுருக்களில் யாழ்ப்பாடலும் குழலின் பாடலும் கண்டப்பாடலும் இயைந்து நடக்கிறபடி கேட்போர் செவிக்கொள்ள அமைந்த காரணத்தாற் குறியறிந்து சேர்வாசித்து மற்றைக்கருவிக ளிற் குறை நிரப்புதலும் மிகுதியடக்குதலும் ஆக்கு மிடத்தும் அடக்கு மிடத்தும் இசையில் இரந்திரங்கோன்றுதபடியே செய்தலும் செய்யு மிடத்துக்கைத்தொழில் அழகுபெறச்செய்து காட்டலும் வல்லுநராயமைந்த தண்ணுமை யாசிரியன் முதலி னோரை வகுத்த என்றது - அத்தண்ணுமையாசிரியன் முதலினோர் தொடங் கிய பாட்டோடு தாளத்தின்படி யென்பது தோன்றற்கு. "மாயோன் பாணியும்" என் புழிப்பாணியைப் பாட்டென்றார் அடியார்க்குநல்லார். பாணியின் அருநடமென்ன லும் பாட்டுக்கியைந்த அவிநயத்தோடு கூடிய நடனமாதல் காண்க. மற்றும், பாணி- தாளமுமாம், "கொட்டுமசையுந் தூக்கு மளவு,மொட்டப்பட் டுணர்ப்பது பாணியாகும்" என்றாராதலின் இப்பொருள் கூறுமிடத்துப் பாணியின் என்புழி இன் என்பதைத் தவிழி வந்தசாரியையென நீக்கிப் பாணியோடு கூடிய அருநடமெனக் கொள்க. ஆடவரும் ஆண்மை திரிந்த பெண்மைக்கோலத்தாரும் ஆடுகின்ற அல்லியம், கொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல், முதலிய வற்றோடு பேடுமாகிய புறக்கூத்துக்களை நீக்க 'நாரியருநடம்' என்றார். நாரியர் என்பது - அக்கூத்தென்னும் பெயர் மாத்திரை யாய் நின்றது. இனி, நாரியர்கள் ஊர்வசியைப்போலவும் மயிலைப்போலவும் தண் ணுமை யாசிரியர்கள் வகுத்த பாணியில் அருநடம் நடிப்ப எனப்பொருள் கோடலு மாம். இங்ஙனம் பொருள் கூறுகறியார் ஆற்றொழுக்கின்மைநீக்க வேற்றுமை தோ

னற ஊருவிறரேனறிய நாரியா எனககொணடு பிரமதேவன தனடயினகட பிறநத மேனகைககௗெனபபொருள கூறியிடாபபடுவோராயினா (௨௨)

இருநதன னுலகஙக ளிரணடு மொனறுநதன
னருநதவ முடைமையி னளவி லாறறலிற
பொருநதிய விராவணன புருவக காமுகக
கருநதடங கணணியா கணணின வெளளததே.

இ - ள உலகஙகள இரணடும ஒனறும - திரிலோகைசுவரியஙகள அனைததும, தன அருநதவம உடைமையின - தனது அரியதவததாலும, அளவு இல ஆறறலின - அளவிலலாத (தனது) வலிமையினாலும், பொருநதிய - பொருநதபபெறற இராவணன—, புருவம காமுகம - புருவமாகிய விலலினையுடைய, கருநதடம கணணியா - கரிய பெரிய கணணினையுடைய மாதாகளினது, கணணின வெளளதது - பாாவையின மிகுதியில, இருநதனன - இருநதான (௨௩)

தஙகையு மவவழித தலையிற றாஙகிய
செஙகையள சோரியின றாரை சேநதிழி
கொஙகையண மூககினள குழையில காதினள
மஙகுலி னொலிபடத திறநத வாயினள.

இ - ள தஙகையும - அவன தஙகையாகிய சூாபபநகையும, அ வழி - அவவிடதது, தலையில தாஙகிய செஙகையள - தலைமேல வைதத செயய கையையுடையவளும, சோரியின தாரை சேநது இழி கொஙகையள மூககினள குழை இல காதினள - அரததவொழுககுச சிவநது வடிநத முலைகளையுடையவளும மூககினையுடையவளும குணடலமிலலாத காதினையுடையவளும, மஙகுலின ஒலிபட திறநத வாயினள - மேகமுழககம தோனறுமபடி திறநதவாயினையுடையவளும (௨௪)

முடிமிடை வாயிலின முறையிட டாாகலிக
கடையுகக கடலொலி காடடக காநதுவாள
குடதிசைச செககரிற சேநத கூநதலாள
வடதிசை வாயிலின வநது தோனறினாள

இ - ள முடிமிடை வாயிலின - கிரீடஙகள நெருஙகிய அரணமனை வாசலின கண, கடையுகம ஆாகலிகடல ஒலிகாடட - யுகாநத காலததிய நிறைநத ஒலியினையுடைய கடலபோனற பேரொலி காடடுமாறு, முறை இடடு காநதுவாள - குறைகூறிககோபிபபவளும, குடதிசை செககரில - மேறகுததிசையின கடடோனறுஞ செவவானமபோல், சேநத - சிவநத, கூநதலாள - கூநதலையுடையவளுமாக, வடதிசைவாயிலின வநது தோனறினாள - வடககுததிசைவாசலின கணவநது காணபபடடாள (௨௫)

தோனறலுந தொனனக ராககா தோகைய
ரேனறெதிா வயிறலைத திரஙகி யேஙகினாா
மூனறுல குடையவன றஙகை மூககில
ளானறனி யவள்வரத தரிகக வலலரோ.

இ-ள் தோன்றலும் - (அவ்வாறு சூர்ப்பநகை) தோன்றிய அளவில், தொல் நகர் - பழமையாகிய இலங்கை நகரத்திலுள்ள, அரக்கர் தோகையர் - ராக்ஷசப்பெண்கள், மூன்று உலகு உடையவன் தங்கை - திரிலோகங்களையு முடையவனாகிய இராவணனது தங்கையானவள், மூக்கு இலள் - மூக்கில்லாதவளாய, அவள்—, தனி வர - தனித்துவந்ததால், தரிக்க வல்லரோ - (தாம் இருக்கும் இடத்தே) இருக்கவல்லமையுடையவர்களோ? [வல்லவர் அல்லர்], (ஆகலின்), என்று - பொருந்தி, எதிர் - (அவள்) எதிரே, வயிறு அலைத்து - வயிற்றிலடித்துக்கொண்டு, இரங்கி - உருகி, ஏங்கினார் - அழுதார்கள்

குறிப்பு —சூர்ப்பநகையைப்போல விரித்த கூந்தலும் அழுத கண்ணும் முறையிடுகின்ற வாயுமாக வந்தார்களென்பார் 'என்று' என்றார் ஓகாரம் - எதிர்மறை

பொருக்கென நோக்கினர் புகலவ தோர்கில
ரரக்கரு மிரைத்தன ரசனி யாமெனக்
கரத்தொடு கரங்களைப் புடைத்துக் கண்களை
நெருப்பெழ விழித்துவாய் மடித்து நிற்கின்றார்

இ-ள் பொருக்கென நோக்கினர் - (அச்சூர்ப்பநகையை) விரைந்து பார்த்தவர்களும், புகலவது ஓர்கிலர் - (தாம் அவளோடு) சொல்லவேண்டிய விஷயம் (இன்னதென்று) தெளிந்துகொள்ளாதவருமாகிய, அரக்கரும்—, அசனி என - இடியைப்போல, இரைத்தனர் - பேரொலிசெய்து, கரத்தொடு கரங்களை புடைத்து - கரங்களோடு கரங்களை மோதி, கண்களை—, நெருப்பு எழ விழித்து - அக்கினி புறப்படும்படி பார்த்து, வாய்மடித்து நிற்கின்றார் - வாயை மடித்துக்கொண்டு நின்றார்கள்.

குறிப்பு —பொருக்கென்பது - விரைவுக்குறிப் புணர்த்தும் மோரிடைச்சொல் அரக்கரும், உம்மை - இறந்தது தழீஇய எச்சம் (உ௭)

இந்திரன் மேலதோ வுலக மீன்றபெ
ரந்தணன் மேலதோ வாழி யானதோ
சந்திர மௌலிபாற் றங்கு மேகொலோ
வந்தர மென்றுநின் றழுங்கி னாரசிலர்

இ-ள் சிலர் - சில ராக்ஷஸர்கள், அந்தரம் - (இந்தத்) தீமை, இந்திரன் மேலதோ - தேவேந்திரன் மேலுற்றதோ? உலகம் ஈன்றபெர் அந்தணன் மேலதோ - உலகத்தைப்பெற்ற [படைத்த] பெரிய அந்தணனாகிய பிரமதேவன் மேலுற்றதோ? ஆழியானதோ - சக்கரதரனான விஷ்ணுவின் மேலுற்றதோ? சந்திர மௌலிபால் தங்குமேகொலோ - பிறையை யணிந்த தலைமுடியினையுடைய சிவனிடத்துச்சாருமோ? என்று - என்றுகூறி, நின்று - (ஒன்றுந் தோன்றாதவர்களாய்) நின்று, அழுங்கினார் - மனங்கொதிப்படைந்தார்கள்.

குறிப்பு —அந்தரம் - தீது, "மற்றுந் தீதின் பெயர் - ஆங்கது மாயமு மந்தரமு மென்ப" என்றார் பிங்கலமுனிவர். இனி, அம் + தரம் எனக் கண்ணழித்து அழகாயிருக்கின்றது என்று பொருள்கோடலுமாம், ஈண்டு அம் - அழகு, தரம் - தகுதி. ()

செப்புற்ற குரியவர் தெவ்வர் யாருளர்
முப்புறத் துலகமு மடங்க மூடிய
விப்புறத் தண்டத்தோர்க் கியைவ தன்றிது
வப்புறத் தண்டத்தோ ராமென் றார்சிலர்.

இ - ள். சிலர் - சிலராக்ஷஸர்கள், செப்பு உற்றற்கு - சொல்லலுறுதற்கு [சொல்வதற்கு], உரியவர் தெவ்வர் - பொருந்தியவராகிய பகைவர், யார் உளர் - எவரிருக்கின்றார்கள்? முப்புறத்து உலகமும் அடங்க மூடிய -(கீழ்மேல் நடுவாகிய) மூன்று பக்கங்களிலுள்ள திரிலோகங்களும் அடங்கும்படி மூடியிருப்பதான, இப்புறத்து அண்டத்தோர்க்கு -இப்பக்கத்திலுள்ள அண்ட கோளத்தி லுள்ளார்க்கு, இது இயைவது அன்று - இச்செய்கை பொருந்துவதன்று, (ஆதலால்), அப்புறத்து அண்டத்தோர் ஆம் என்றார் - (செய்தவர்) இத்திரிலோகத்திற்கும் அப்பாலிருக்கிற அண்டத்திலுள்ளவர்கள் என்று கூறினார்கள் (௨௯)

என்னையே யிராவணன் றங்கை யென்றபி
னன்னையே யென்றடி வணங்க லன்றியே
யுன்னவே யொண்ணுமோ வொருவ ராலிவ
டன்னையே யரிந்தன டானென் றார்சிலர்.

இ - ள். சிலர் - சில ராக்ஷஸர்கள், என்னையே - ஈதென்ன அதிசயம்? இராவணன் தங்கை என்றபின் - இராவணனுக்குத் தங்கையென்று இவள் கூறியபின்பு, அன்னையே என்று அடி வணங்கல் அன்றி - (எமது) தாயேயென்று கூறி (இவள்) பாதத்தில் வணங்குதலல்லாமல், ஒருவரால் - எவரொருவராலும், உன்னவே ஒண்ணுமோ - வேறுவிதமாக நினைக்கவே முடியுமோ? இவள் தன்னையே அரிந்தனள் என்றார் - இவள் தன்னைத்தானே யறுத்துக்கொண்டாளென்று கூறினார்கள் (௩௦)

போரிலான் புரந்தர னேவல் பூண்டனன்
னருளா நேமியா னாற்றற் றோற்றுப்போய்
நீரினன் னெருப்பினன் பொருப்பி னன்இனி
யார்கொலா மீதெலா மறைகின் றார்சிலர்.

இ - ள். புரந்தரன் - இந்திரன், போரிலான் -பேரொழிந்தவனாகி, ஏவல் பூண்டனன் - (இராவணனுக்குப்) பணிவிடைசெய்யுந் தொழிலை மேற்கொண்டிருக்கின்றான், ஆர் உலாம் நேமியான் - சோதிவிளங்குகின்ற சக்கராயுதத்தையுடைய விஷ்ணு, ஆற்றல் தோற்றுப்போய் - வலிமை யிழந்துபோய், நீரினன் -கடலி லிருப்பவனாயினன், நெருப்பினன் பொருப்பினன் - (நெற்றிக்கண்ணிடத்தும் மழுவிடத்தும்) அக்கினியையுடைய சிவன் மலையிலிருப்பவனாயினன், ஈது (செய்தவர்) - இச்செய்கை செய்தவர்கள், இனி—, யார்கொல- எவர்களோ? என அறைகின்றார்-என்று சொன்னார்கள். (௩௧)

சொற்பிறந் தார்க்கிது துணிய வொண்ணுமே
யிற்பிறந் தார்தமக் கியைவ செய்திலர்

கறபிறந தாளெனக கரனகொ லாமிவள
பொற்பிறந தாக்கினன புகனறென ருாசிலா.

இ - ள். சிலா—, சொல பிறநதாககு இது துணிய ஒணணுமே - இனனவ ரெனறு குறிப்பிடடுச சொல்லததகுநதவாககு இசசெயல துணிநது செயயககூடு மோ? [செயய மனமவராது.] இல பிறநதாா தமககு இயைவ செயதிலல - குடி யிற பிறநத பெணகளுககுப பொருநதிய நறசெயகைகளைச செயயாத விவள், கறபு இறநதாள என - கறபினை யிழநதாளெனறு, புகனறு - (கோபிதது இனிக கிரம மாக நடவெனறு) சொலலி, இவள - இவளது, பொறபு இறநத ஆககினன - அழக னைததும ஒழிநதனவாகச செயதவன, கரனகொல எனருா - கராாகூஸன தானோ எனறு கூறினாாகள

குறிபபு —ஒணணுமே, ஏகாரம - எதிாமறை அநாமதேயா இசசெயலபுரிந திருப்பாாகள எனபாாகள 'சொறபிறந தாாககிது துணிய வொணணுமே' எனருா கள. சொறபிறநதாா எனறது - இராவணனுககு மிகவும நெருஙகிய கரன முத லிய சுறறததாாலலாத மறறை ராகூஸ வீராகளை. இறநதாககினன - அகரந தொகு ததல (கூஉ)

தததுறு சிநதையா தளருந தேவரிற
பிததுற வலலரே பிழைபபில சூழச்சியாா
மூதகிறத துலகைய முடிகக வெணணுவா
ரிதத்றம புணாததன ரெனகின ருாசிலா.

இ - ள தததுஉறு சிநதையா - தததளிககினற மனததினையுடையாராகிய, தளரும தேவரில - சோாவடைகினற தேவாகளைபபோல, பிதது உற அலலா மயககம அடையாதவரும, பிழைபபு இல சூழசசியாா - தவறுதல இலலாத யோச னையையுடையவாகளுமாகிய, மூ திறதது உலகையும முடிகக எணணுவாரே - மூவ கையுலகததையும அழிகக நினைககபபடடவாகளே, இ திறம புணாததனா எனகின ருா - இககாரியம செயதாாகள எனறு கூறினாாகள.

குறிபபு —வலலுநாபோ லரககரோடு போாபுரிநது இளைதது அவாககடிமை களாகி வாழநது உடபகையும வெளியுறவுங கொணடிருககும தேவரைப்போலச சொறபமதியுடையாா அலலா எனபது முதலிரணடடிகளின கருதது ஏகாரம மாறுக, தேறறம (கூகூ)

இனியொரு கறபமுண டெனனி னனறியே
வனைகழல வயஙகுவாள வீரா வலலரோ
பனிவருங கானிடைப பழிபபி னோனபுடை
முனிவாா வெகுளியின முடிபென ருாசிலா

இ - ள சிலா—, இனி ஒரு கற்பம் உணடு எனனின அன்றி - இனிமேல் மறறொரு கறபகாலம உணடெனறு சொன்னாலலலாமல், வனைகழல வயஙகுவாள வீரர்வல்லரோ - அணிநத கழலையும பிரகாசிககினற வாளையுமுடைய வீராகள (இத தொழிலசெயய) வலலமையுடையவாகளோ? (இசசெயல), பனிவரும்- அசசமுண

டாகின்ற, கான் இடை - கானகத்தில், பழிப்பு இல் நோன்பு உடை - குற்றமில்லாத தவத்தினையுடைய, முனிவர் வெகுளியின் முடிபு என்றார் - முனிசிரேஷ்டர்களுடைய கோபத்தினது முடிவாகும் என்று கூறினார்கள்.

குறிப்பு — கற்பம் - கலபம். முதலிரண்டடிகளில் இராவணனது நீடித்த ஆயுள் நாளும் அவனை வெல்லும் வீரனின்மையும் குறிப்பிக்கப்பட்டன. வல்லரோ, ஓகாரம் - வினா. பனி - குளிர்ச்சியுமாம். (௧௪)

கரையறு திருநகர்க் கருங்க ணங்கைமார்
நிரைவளைத் தளிர்க்கைக ணெரித்து நோக்கினார்
பிரையுறு பாலென நிலையிற் பின்றிய
வுரையினொ ரொருவர்முன் னொருவ ரோடினார்.

இ - ள். கரையறு திருநகர் கருங்கண் நங்கைமார் - அளவற்ற செல்வம் பொருந்திய இலங்கை நகரத்திலிருக்கிற கரியகண்களையுடைய பெண்கள், நிரைவளை தளிர் கைகள் - வரிசையாகிய வளையல்களை யணிந்த (இளந்) தளிர்போன்ற கைகளை, நெரித்து—, நோக்கினார் - பார்த்தவர்களும், பிரை உறு பால் என - உறைமோர் உற்றபாலைப்போல, நிலையில் பின்றிய - நிலைமையிற் பின்னடைந்த, உரையினார் - சொற்களையுடையவர்களுமாகி, ஒருவர்முன் ஒருவர் ஓடினார் - ஒருவருக்குமுன் ஒருவர் ஓடினார்கள். (௧௫)

முழவினில் வீணையின் முரளி யாழினிற்
றழுவிய குழலினிற் சங்கிற் றாரையி
லெழுகுர லின்றியே யென்று மில்லதோ
ரழுகுரல் பிறந்ததவ் விலங்கைக் கன்றரோ.

இ - ள். முழவினில் - முழவினிலும், வீணையின் - வீணையிலும், முரளி - முரளியிலும், யாழினில் - யாழிலும், தழுவிய குழலினில் - (அந்தயாழினிசையோடு) தழுவி வாசிக்கலுற்ற குழலிலும், சங்கில் - சங்கிலும், தாரையில் - சிறு சின்னத்திலும், எழு - எழும்புகின்ற, குரல் இன்றி - தொனியில்லாமல், என்றும் இல்லது - எக்காலத்திலுமில்லாததாகிய, ஓர் அழு குரல் - ஒரு அழுகைச்சப்தமானது, அன்று - அற்றைநாள், அ இலங்கைக்கு - அவ்விலங்கை நகரத்தினகண், பிறந்தது - உண்டாயது.

குறிப்பு — முழவு எழுவகைப்படும் அவை, அகமுழவு, அகப்புறமுழவு, புறமுழவு, புறப்புறமுழவு, பண்ணமைமுழவு, நாண்முழவு, காலைமுழவு என்னும் இவை இவற்றுள் அகமுழவாவன - உத்தமமான மத்தளம், சல்லிகை, இடக்கை, கரடிகை, பேரிகை, படகம், குடமுழா என்னுமிவை. அகப்புறமுழவாவன. மத்திமமான தண்ணுமை, தக்கை, தகுணிச்சமுதலாயின. புறமுழவாவன. அதமக்கருவியான கணப்பறை முதலியன புறப்புறமுழவாவன நெய்தற்பறைமுதலாயின பண்ணமை முழவாவன முரசு, நிசாளம், துடுமை, திமிலை யென்னுமிவை நாண்முழவு. நாட்பறை, நாழிகைப்பறை. காலைமுழவு, துடி ["பேரிகை படக மிடக்கை யுடுக்கை, சீர்மிகு மத்தளஞ் சல்லிகை கரடிகை, திமிலை குடமுழாத் தக்கை கணப்பறை, தமருகந் தண்ணுமை தாவி றடாரி, யந்தரி முழவொடு சந்திர வளைய,மொந்தை முரசே கண்விடு தூம்பு நிசாளந் துடுமை சிறுபறை யடக்க, மாசி றகுணிச்சம் விரலேறு பாகந், தொக்க வுபாங்

கந் துடிபெரும் பறையென, மிக்க நூலோர் விரித்துரைத் தனரே"] வீணை - ஓசை யாழ் முரளி - மூக்கால் வாசிக்குங்குழல் யாழ் நால்வகைப்படும், அவை பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழென்பன இவை நாலும் பெரும்பான்மை சிறுபான்மையான வருவனவுமுள, என்னை? "பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன், சீர்பொலியுஞ் செங்கோடு செப்பினார், தார்பொலிந்த, மன்னுந் திருமார்ப வண்கூடற் கோமானே, பின்னு முளவே பிற" என்றாராகலின். குழல் வங்கியம், இது - மூங்கில், சந்தனம், வெண்கலம், செங்காலி, கருங்காலி யென்பவற்றாற் செய்யப்படுவது என்னை? "ஓங்கிய மூங்கி லுயர்சந்து வெண்கலமே, பாங்குறு செங்காலி கருங்காலி—, பூங்குழலாய், கண்ணனுவந்த குழற்கிவைக ளாமென்றார், பண்ணமைத்த நூல்வல்லோர் பார்த்து" என்றாராகலின் இவற்றுள் மூங்கிலிற் செய்வது உத்தமம் வெண்கலம் மத்திமம் ஏனைய அதமமாம். யாழுங்குழலும் ஒருவழியாக வாசிக்கப்பட்டன என்பார் "யாழினிற்றழுவிய குழலினில்" என்றார். "கருவிகளெல்லாங், குழல்வழி நின்றது யாழே யாழ்வழித், தண்ணுமை நின்றது தகவே" என்றார் இளங்கோவடிகளும் எழு குரல் - முழவு, வீணை, முரளி, யாழ், குழல், சங்கு, தாரை யென்னும் எழுவகைக்கருவிகளின் எழுவகைக்குரல்களுமாம் இனி, சரிகமபதநி என்னும் ஏழ் எழுத்தினையும் மாத்திரைப்படுத்தித் தொழில் செய்யப்பிறக்கும் சட்சம், இடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிடாதமென்னும் ஏழிசையுமாம். என்னை? "சரிக மபதநியென் றேழெழுத்தாற் றானம், வரிபரந்த கண்ணினாய் வைத்துத், தெரிவரிய—, வேழிசையுந் தோன்று மிவற்றுள்ளே பண்பிறக்குஞ், சூழமுதலாஞ் சுத்தத் துளை" என்றாராகலின் (௬௬)

கள்ளுடை வள்ளமுங் களித்த தும்பியு
முள்ளமு மொருவழிக் கிடக்க வோடினார்
வெள்ளமு நாணுற விரிந்த கண்ணினார்
தள்ளுறு மருங்கினார் தழீஇக்கொண் டேகினார்

இ - ள் கள் உடை வள்ளமும் - மதுவினையுடைய கிண்ணங்களும், களித்த தும்பியும் - (அம்மதுவினால்) களிப்புற்ற வண்டுகளும், உள்ளமும் - (அம்மதுவின்கண் மிக்க விருப்பமுடைய தமது) மனமும், ஒருவழி கிடக்க - ஓரிடத்திற் றங்க, ஓடினார் - ஓடிவந்த பெண்கள், வெள்ளமும் நாண் உற - நீர்ப்பெருக்கும் வெட்கமுறும்படி, விரிந்த கண்ணினார் - (நீர்த்துளிகள்) பெருகிய கண்களையுடையவர்களும், தள்ளுறு மருங்கினார் - துவளுகின்ற இடையினையுடையவர்களுமாகி, தழீஇ கொண்டு ஏகினார் - (சூர்ப்பநகையைத்) தழுவிக்கொண்டு போனார்கள்

குறிப்பு—உடை - உடைய தாம் பருகும் மதுவினை விட்டேக மனம்வாராமையும் சூர்ப்பநகைக்கெய்திய துன்பினை விசாரியாம் விருப்பத்தறிகியலாமையும் விளக்க 'வள்ளமும் உள்ளமும் ஒருவழிக்கிடக்க' என்றார் களித்த தும்பியெனவே இப்பெண்கள் மதுவைப் பருகிக் களியாமை குறிப்பிக்கப்பட்டது. தும்பி - வண்டில் ஒருசாதி கண்ணீர் சோரவிட்டு அழுதமையும் விசனத்தால் இளைத்துச் சோர்வுற்றமையும் விளங்க 'வெள்ளமு நாணுற விரிந்த கண்ணினார், தள்ளுறு மருங்கினார்' என்றார் இனி, கடலும் வெட்கமுறும்படி விசாலித்த கண்களையுடையவர்களாகிய துவளுகின்ற இடையினையுடைய பெண்கள் ஓடினார் ஆகித் தழீஇக்கொண் டேகினார் என்று முடித்தலு மமையும். (௬௭)

நாந்தக வுழவரை நாட்டு தண்டத்தார்
காந்திய மனத்தினார் புலவி கைம்மிகச்
சேந்தக ணதிகமுஞ் சிவந்து நீருக
வேந்தனுக் கிளையவ டாளின் வீழ்ந்தனர்.

இ - ள். நாந்தகம் உழவரை - வாள் வீரராகிய கணவரிடத்தில், நாட்டும் தண்டத்தார் - நடத்துகின்ற தண்டனையையுடையவராகி, காந்திய மனத்தினார் - வெதும்பிய மனத்தினையுடைய (ஊடல்கொண்ட) பெண்கள், புலவி கைமிக - ஊடல் மிகுந்ததால், சேந்தகண் - சிவந்த கண்கள், அதிகமும் சிவந்து - மிகவும் சிவப்புற்று, நீர் உக - நீர்வடிய (அழுது), வேந்தனுக்கு இளையவள் - (தமது) அரசனாகிய இராவணனுக்குத் தங்கையாகிய சூர்ப்பநகையினுடைய, தாளின் வீழ்ந்தனர் - பாதங்களில் விழுந்து வணங்கினார்கள்

குறிப்பு — நாந்தகவுழவர் - படைவீரராகிய நிலத்தை வாள்கொண்டு உழுபவர்கள், வில்லேருழவர் என்பது போன்றது. உழவரை - உருபுமயக்கம். புலவியின் பெருமை கூறுவார் 'நாந்தக வுழவரை நாட்டு தண்டத்தார்' என்றார். கைம்மிக, கை - உபசருக்கம். மிக உக என்னும் செயவெனெச்சங்கள் முறையே காரண காரியப்பொருட்டில் நின்று சேந்தவென்னும் பெயரெச்சக்கிளவியையும் வீழ்ந்தனர் என்னும் வினைமுற்றையுங்கொண்டு முடிந்தன. புலவியிற்கொண்ட கோபத்தோடு சூர்ப்பநகைக்கு இக்கேடிழைத்தவர் யாவர் என்று கோபித்தாரென்பது தோன்ற 'அதிகமுஞ் சிவந்து' என்றார். (௩௮)

பொற்றலை மரகதப் பூக நேர்வுறச்
சுற்றிய மணிவடந் தூங்கு மூசலின்
முற்றிய வாடலின் முனிவுற் றேங்கினார்
சிற்றிடை யலமரத் தெருவு சேர்கின்றார்

இ - ள் (சிலபெண்கள்), பொன்தலை - அழகிய தலையினிடத்து, மரகதம் - மரகதம்போலும் பச்சை நிறத்தினையுடைய, பூகம் - கமுகமரங்களுக்கு, நேர்வு உற - சமமாகும்படி, சுற்றிய மணி - சூழ்ந்திருக்குமாறு கட்டியிருக்கிற இரத்தினங்களையுமுடைய, வடம் தூங்கும் ஊசலின் - சங்கிலிகளிற் றொங்கப்பட்ட ஊசலிலிருந்து, முற்றிய ஆடலின் - (ஆடும்) அதிகமான விளையாட்டில், முனிவு உற்று ஏங்கினார் - வெறுப்படைந்து அழுதவர்களாகி, சிறு இடை அலமர - சிறிய இடையானது துவண்டுவருந்த, தெருவு சேர்கின்றார் - தெருவில் வந்து சேர்ந்தார்கள்.

குறிப்பு — மரகதம் - மற்றை நிறங்கட்கும் உபலக்கணம். பாளை குலைமுதலியன குஞ்சங்களோடு மணிகளுக்கும், பூகம் - வடத்துக்கும் உவமை. சூர்ப்பநகைக்கு நேரிட்டதனைப் பத்தைக் கேள்விப்பட்டதால் முனிவுற்றேங்கினரெனக். கீழ்க்கவியில் புலவியிற் சினந்தோர் சினந்தது வியப்பலாகலின் இக்கவியில் முற்றிய வாடலின் முனிவுற்றாரைக் கூறினார் (௩௯)

எழுவென மலையென வெழுந்த தோள்களைத்
தழுவிய வளைத்தளிர் நெகிழ்ந்த தாமரை

முழுமுகத் திருக்கயன் முத்தி னொளிகள்
பொழிதரச் சிலருளர் பொருமி விம்முவார்.

இ-ள். எழு எனும் மலை எனும் எழுந்த தோள்களை - தம்பங்கள் போலும் மலைகள்போலும் தோன்றிய (தமது கணவரின்) புயங்களை, தழுவிய —, வளை தளிர் - வளையல்களையணிந்த தளிர் போன்ற கைகள், நெகிழ - விலக, தாமரை முழு முகத்து இருகயல் - தாமரை மலர் போன்ற முகமுழுதிலுமிருக்கிற இரண்டு கெண்டை மீன்கள் போன்ற கண்கள், முத்தின் - முத்துக்களைப்போல, ஒளிகள் பொழிதர - நீர்த்துளிகள் சிந்தும்படி, உளர் சிலர் - இருப்பவர்களாகிய சில பெண்கள், பொருமி விம்முவார் - தேம்பி யழுதார்.

குறிப்பு — கயல் - உவமவாகுபெயர். முழுமுகம் - முகமுழுதும் என்று எண்டு பொருள் கூறியவாறே "முழுநீர் வார முழுமெய்யும் பனித்து" என்புழி அடியார்க்குநல்லாரும் மெய் முழுதும் எனப் பொருள் கூறினமை காண்க. இங்ஙனங்கூறியது கண்களின் பெருமை விளங்குதற்கு. வளைத்தளிர் - அன்மொழித் தொகை. (௪0)

வேறு.

செயங்கிளைய வேலரச னேருநரை யில்லா
னிங்கிலை யுணர்ந்தபொழு தெங்கிலைய னென்று
மைங்கிலை நெடுங்கண்மழை வானிலைய தாகப்
பொய்ங்கிலை மருங்கினர் புலம்பினர் புரண்டார்.

இ-ள் பொய் நிலை மருங்கினர் - பொய்த் தோற்றமுற்ற இடையையுடைய சில பெண்கள், செய நிலைப் வேல் அரசன் - (பகைவரது) நிணந்தங்கிய வேலினையேந்திய அரசனும், நேருநரை இல்லான் - (தனக்கு) ஒப்பாரை யில்லாதவனுமாகிய இராவணன், இ நிலை உணர்ந்த பொழுது - (சூர்ப்பநகைக்கு நேர்ந்த) இந்த நிலைமையை யறிந்தபொழுது, எ நிலையன் என்று - எத்தன்மையனாவானென்று கூறி, மை நிலை நெடுங்கண் - மை தோய்ந்த (தமது) பெரிய கண்கள், மழைவான நிலையது ஆக - மழையைச் சொரிகின்ற மேகத்தினது தன்மையை யுடையனவாகும்படி, புலம்பினர் புரண்டார் - புலம்பி (பூமியில் வீழ்ந்து) புரளுதலுற்றார்கள். (௪௧)

மன்றலை வருங்கணவ ரின்சுவை மறந்தார்
கன்றலை வருங்குழ லொசிந்து கலைசோர
நன்றலைய கொங்கைக டதும்பிட நடந்தா
ரன்றரிள மங்கைய ரழுங்கியயர் கின்றார்

இ-ள். அன்றர் இள மங்கையர் - களவை யுடைமையாலுண்டான செருக்கினையுடைய இளமை பொருந்திய பெண்கள், மன்ம தலைவரும் கணவரின் சுவை மறந்தார் - (தமது) மனத்தில் முதன்மையாக (நினைக்க) வருகின்ற நாயகர்களுடைய (சையோக) இன்பத்தை மறந்தும், கன்ம தலைவரும் குழல் ஒசிந்து - கிளைத்தாகிய தலையில் உள்ள கூந்தல் (அவிழ்ந்து) அசைந்தும், கலை சோர - உடை நெகிழவும், நன்றலைப் கொங்கைகள் - அகன்ற இடத்தினை யுடையதாகிய முலைகள், ததும்பிட - குலுங்கவும், நடந்தார் - நடந்தும், (வந்து) அழுங்கி அயர்கின்றார் - அழுது சோர்வடைந்தார்கள்

குறிப்பு —சமபோக இனபததிலே யாழநது அவவினபத்திற்கயலான வேறு சிநதனையை யறியாதவாகளெனபாா 'மனநதலைவரும' எனறுா. மறநதாா, நடநதாா எனபன முறறெசசஙகள. அரககியா கூநதல செநநிற முடைததாதலால கனம எனறகு மேகமெனறு பொருள கூறுதல பொருநதாமை காணக நனநதலை ஒரு சொல, அகனற இடம. "பாழ செயதனை யவா நனநதலை நலலெயில', என்றுா புறப்பாட்டினில. அனநதா எனபது இபபொருடடாதலை "பழஞசெருககுறற அனநதாபபாணியும" எனனும மணிமேகலைச செயயுளுரையானும, "அனநதா நடுககமலலதி யாவதும" எனனும பொருநராற்றுப்படையின உரையானு முணாக. (சஉ)

அஙகையி னரன்கையிலை கொணடதிற லையன
றஙகைநிலை யிஙகிதுகொ லெனறுதளா கினறுா
கொஙகையிணை செஙகையின மலைநதுகுலை கோதை
மஙகையாக ணஙகையெதிா வநதுவிழு கினறுா.

இ-ள. குலை கோதை மஙகையாகள - அவிழநத கூநதலையுடைய (சில) பெணகள, அரன கையிலை அஙகையின கொணட திறல ஐயன - சிவபிரானது வெள்ளி மலையை (தனது) அககைகயில எடுதத வலிமையையுடைய இராவணனது, தஙகை நிலை இது கொல எனறு தளாகினறுா - தஙகையினுடைய நிலைமை யிதுவோ? எனறு கூறிச சோாவடைநது, செஙகையின இணை கொஙகை மலைநது - (தமது) செயயகைகளால இரணடு முலைகளைபபொருது, நஙகை எதிா வநது விழு கினறுா - சூாபபநகைககு எதிரேவநது வீழநதாாகள,

குறிபபு —இஙகு அசை தளாகினறுா முறறெசசம மாாடிததுககொணடு வநதாா எனபாா 'கொஙகையிணை செஙகையின மலைநது' எனறுா (சங)

இலஙகையில விலஙகுமிவை யெயதலில வெனறும
வலஙகையி லிலஙகுமயின மனனனுள னெனன
நலஙகையி லகனறதுகொ னமமினென னைநதாா
கலஙகலி னிலஙகணிணை வாரிகலுழ கினறுா

இ-ள இலஙகையில - இலஙகை நகரததில, விலஙகும - மிருகஙகளுககூட, இவை - இததுனபஙகள, எய்தல இல - அடைதலிலலாமல இருககினறன, என றும - எககாலததும, வலஙகையில - வலதுகையில, இலஙகும - விளஙகுகினற, அயில - வேலினையுடைய, மனனன - இராவணேசுவரன, உளன - (அரசு புரிநது கொணடு) இருககினறுன, (இராவணனது பேரரசு விளஙகும இககாலததிலும), நலம - இனபமானது, நமமின - நமககுளளே,;கையில் அகனறது - கைவிடடு நீஙகி யது, எனனென - யாது காரணம? எனறு, நைநதாா - மெலிநது, கலஙகலின - மனஙகலஙகுதலினலே, இணை கண வாரி - இணையாகிய கணகளினது நீா, நிலம கலுழகினறுா - நிலததில வீழுமபடி அழுதாாகள,

குறிப்பு :—எனறும வலஙகையில் இலஙகும அயில மனனன் எனறகு, சூரிய னும (மதிலினது) வலதுபுறததிலே பிரகாசிககினற மதிலையுடைய இராவணன என றும் பொருள் கோடலாம. இப்பொருள கொளளுங்கால இலஙகை நகரததின

சூரியன் பிரகாசியாமல் ஒரு பக்கமாய் ஒதுங்கிச் செல்லுகின்றானென்று கூறுக. விலங்கும், உம்மை - இழிவு சிறப்பும் எச்சமுமாம். என்றும், உம்மை - உயர்வு சிறப்பு. திரிலோகைசுவரிய நலமனைத்தும் கைக்கொண்டு அனுபவிப்போராதலின் 'கையிலக்கன்றது' என்றார்கள். சொல - அசைநிலை கொத்தார் - முற்றெச்சம். (௫௪)

என்றினைய வன்றுய ரிலங்கைநக ரெய்தத்
தின்றவ ரிருந்தவரொ டோடுநெறி தேடக்
குன்றினடி வந்துபடி கொண்டலென மன்னன்
பொன்றிணி கருங்கழல் விழுந்தனள் புரண்டாள்

இ - ள் என்ற இனைய வல் துயர் இலங்கைநகர் எய்த - என்று கூறிய இத்தன்மையான வலியதுயரத்தை இலங்கைநகரத்திலுள்ளவர்கள் அடையவும், நின்றவர் இருந்தவர் ஓடு ஓடு நெறிதேட - (இராவணனது சபையினகண்) நின்றவர்களும் இருந்தவர்களும் ஓடட்டங்கொள்ளும் வழியை ஆராயவும், குன்றின் அடி வந்துபடி கொண்டல் என - மலைக்குன்றின்கீழ் வந்து தங்குகின்ற மேகம்போல, (அசூர்ப்பநகை), மன்னன் - இராவணனது, பொன் திணி - அழகு திணிந்த [அழகுபொருந்திய], கருங்கழல் - கரியநிறமுள்ள பாதத்தின்கீழ், விழுந்தனள் புரண்டாள் - விழுந்து புரண்டாள்

குறிப்பு—என்றினைய, அகரம் தொகுத்தல் இலங்கைநகர் - இடவாகுபெயர் குன்று - இராவணனுக்கும், கொண்டல் சூர்ப்பநகைக்கும் உவமை. பொன்றிணி கருங்கழல் என்றது, பொன்னும் வலிமையும் பெருமையும் பொருந்திய வீரகணடையென்று பொருள்கோடலுமாம் (௫௫)

மூடின திருட்படலை மூவுலகு முற்றச்
சேடனும் வெருக்கொடு சிரக்குவை நெளித்தா
னாடின குலக்கிரி யருக்கனு மயிர்த்தா
னோடின திசைக்கரிக ளும்பரு மொளித்தார்

இ - ள் மூவுலகும் முற்ற - திரிலோகங்களும் நிறையும்படி, இருள் படலை - இருளினது பரந்தவடிவானது, மூடினது - மூடிக்கொண்டது, சேடனும் வெருக்கொடு சிரம் குவை நெளித்தான - ஆதிசேடனும் அச்சங்கொண்டு (தனது) தலைக்கூட்டத்தை நெளிக்கலுற்றான், குலம் கிரி ஆடின - சப்தகுலாசலங்கள் அசைவுற்றன, அருக்கனும் அயிர்த்தான் - சூரியனும் ஐயங்கொண்டான், திசை கரிகள் ஓடின - திக்கயங்கள் ஓட்டங்கொண்டன, உம்பரும் ஒளித்தார் - தேவர்களும் மறைந்துகொண்டார்கள்.

குறிப்பு—இராவணனது கோபத்துக்கு அஞ்சிச் சந்திரன் நட்சத்திரம் அக்கினி என்பன மறைந்தமையால் இருட்படலை மூடினதென்றும், இராவணன் கோபித்து நிலத்திற் காலூன்றி யெழுந்த அதிர்ச்சியினால் சேடன் சிரக்குவை நெளிக்கவும் குலக்கிரி யாடவும் திசைக்கரிகள் ஓடவும் உம்பர் ஒளிக்கவும் நேரிட்டதென்றும் கூறுக. சூரியன் அஸ்தமித்து வேறுவகையடைந்தானாதலின் இவ்வதிர்ச்சியின் காரண மறியானாயச் சந்தேகிக்க நேரிட்டதென் றுணர்க. (௫௬)

விரிந்தவலை யங்களிடை தோள்படர மீதிட்
டெரிந்தநய னங்களெயி றின்புற மெரிப்ப
நெரிந்தபுரு வங்களிடை நெற்றியினை முற்றத்
திரிந்தபுவ னங்களவினை தேவரு மயிர்த்தார்.

இ - ள். விரிந்த வலயங்கள் இடை - விசாலமான வாகுவலயங்களை நெருங்கிய, தோள்படர - (இராவணனது) புயங்கள் பூரிக்க, மீது இட்டு எரிந்த நயனங்கள் - (அப்புயங்களின்) மேல் நோக்கித் (தீப்போலும்) எரிதலுற்ற (அவனிருபது) கண்களும், எயிறின் புறம் எரிப்ப - வக்கிர தந்தங்களின் பக்கத்தே சுவாலைவீச, நெரிந்த புருவங்கள் இடை நெற்றியினை முற்ற - நெரிதலுற்ற புருவங்கள் இடை நெற்றிவரைசெல்ல, (அதனால்) புவனங்கள் திரிந்த - எல்லாவுலகங்களும் சுழலலுற்றன, வினை தேவரும் அயிர்த்தார் - பணித்தொழிலையுடைய தேவர்களும் சந்தேகித்தார்கள்.

குறிப்பு — இராவணன் தனது ஆண்மையைக்கருதியது விளங்க 'தோள்படர மீதிட்டெரிந்த நயனங்கள்' என்றார். எயிற்றின், வினைத்தேவர் என்றபாலன -எயிற்றின், வினைத்தேவரெனச் சந்தவின்பநோக்கி நின்றன. (சஎ)

தென்றிசை நமன்றனொடு தேவர்குல மெல்லா
மின்றிறுதி வந்தது நமக்கென விருந்த
நின்றுயிர் நடுங்கியுடல் விம்மிநிலை நில்லா
ரொன்றுமுறை யாடலில ரும்பரினொ டிம்பர்.

இ - ள். தென்திசை நமன்தன் ஒடு - தெற்குத்திசையிலிருக்கிற யமனுடன், தேவர் குலம் எல்லாம் - தேவர்களுடைய வகுப்புகள் முழுதும், இன்று நமக்கு இறுதிவந்தது என - இன்று நமக்கு முடிவுகாலம் வந்துவிட்டது என்று, இருந்த நின்ற உயிர் உடல் நடுங்கி - இருந்த நின்ற உயிரும் உடலும் நடுக்கமுற்று, விம்மி - ஏங்கி, நிலை நில்லார் - (ஓரிடத்தும்) நிலைத்து நிற்கமாட்டாதவர்களாயினார்கள், உம்பரினொடு இம்பர் - (இராவணனது சபையிலிருந்த) தேவர்களும் இவ்வுலகத்தவர்களும், ஒன்றும் உரையாடல் இலர் - யாதொருவிஷயமும் பேசுதல் இல்லாதவராயினார்கள்.

குறிப்பு — குலம் எல்லாம் என்றது நால்வகைத்தேவர் மூவறு கணங்கள் முதலிய தேவர் வகுப்புகளை. நீரிலே இருந்த உயிர் நின்ற உடல் என்று கூட்டிப்பொருள்காண்க. இருந்த நின்ற என இறந்த காலத்துக் கூறியது நிலை நில்லாமை நோக்கி. நின்றுயிர்- அகரந்தொகுத்தல். (சஅ)

மடித்தபில வாய்கடொறும் வந்துபுகை முந்தத்
துடித்ததொடர் மீசைகள் சுறுக்கொள வுயிர்ப்பக்
கடித்தகதிர் வாளெயிறு மின்கனல மேகத்
திடித்தவுரு மொத்துரறி யாவர்செய லென்றான்.

இ - ள். மடித்தபிலம் வாய்கள்தொறும் - (இராவணனது) மடிப்புற்ற குகைபோன்ற வாய்கள் எல்லாவற்றிலும், புகைவந்து முந்த - (கோபாக்கினியின்) புகை

வந்து முறபட, துடித்த தொடா மீசைகள சுறுககொள உயிாப்ப - துடிபபுறற தொடாசசியுள்ள மீசை ரோமஙகள கூாமை கொளளுமபடி சுவாசம கிளமப, கடித்த கதிாவான எயிறு மினகலுல - (உதடடிலைக) கடித்த பிரகாசம பொருநதிய வாள போனற பறகளில மினனல எழுமப, மேகதது இடித்த உருமு ஒதது உரறி - மேகததிலே இடிதத இடியைபபோலப பேரொலி செயது, யாவா செயல எனறுன - (இது) எவருடைய செயகை யெனறு வினவினன ?

குறிபபு —சுறு - சுறுககு எனபதன விகாரம். (௪௯)

கானிடை யடைநதுபுவி காவலபுரி கினறுா
மீனுடை நெடுஙகொடியி ஞேனையா மேலகீ
ழூனுடை யுடமபுடைமை யோருவமை யொவவா
மானுடா தடிநதனாகள வாளுருவி யெனறுள.

இ - ள புவி காவல புரிகினறா - புவியைக காபபவாகளும, மீன உடை நெடுஙகோடியினேன அனையா - மீனுருவமெயதிய நீணட துவசததை யுடையா னுகிய மனமதனை யொததவாகளும, மேல கீழ - மேலுலகததிலும கீழுலகததிலு மிருககிற, ஊன உடை உடமபு உடைமையோா - மாமிசததையுடைய தேககதைை யுடையவாகளில, உவமை - (குறிககபபடும) உவமைககு, ஒவவா - பொருநதாத [தம க்குததாமே உவமையாயுள்ள], மானுடா - மனிதாகள, கான இடை அடைநது - காடடில வநது, வாள உருவி தடிநதனாகள எனறுள - வாளையுருவி அறுததா கள என்று கூறினுள

குறிபபு —மேல கீழ எனபன சுவாககலோகததுககும பாதாள லோகததுககும ஆகுபெயா அனறியும இவவுலகததுககும உபலககணம (௫௦)

செபதனாகண மானுட ரெனததிசை யனைதது
மெயதநகை வநதெரி சிநதினக ணெலலா
நொயதவா வலிதொழி னுவனறமொழி யொனறோ
பொயதவிா பயதைதயொழி புககபுக லெனறுன

இ - ள. மானுடா செயதனாகள என - (இசசெயகை) மனிதாகள செயதாா கள என்று (சூாபபநகை) சொலல, திசை அனைததும எயத - எலலாத திககுககளி லும அடையுமபடி, நகைவநதது - (இராவணனுககுச) சிரிபபுணடாயிறறு, கண எலலாம எரிசிநதின - (அவனுடைய) கணகள எலலாம நெருபபைககொடடின, (அவவிராவணன சூாப்பநகையை நோககி), நொயதவா - அறபவலியை யுடையவா களது, வலி தொழில - வலலமைச செயலகளை, நுவனற மொழி ஒனறோ - சொன னவாாததை ஒனறோ? [நீ பலவாாததைகளைச சொனனுய], பொயதவிா - பொய சொலலுதலை ஒழி; பயததை ஒழி - அசசததை நீககிவிடு, புககபுகல - நடநத சஙகதி களைச சொல, எனறுன்— (௫௧)

மனமதனை யொபபாமணி மேனிவட மேருத
தனனெழி லழிபபாதிர டோளினவலி தனனு
லெனனதனை யிபபொழு திசைபபதுல கேழின
னமத னழிபபரொ ரிமைபபினனி விலலான.

இ - ள் மணிமேனி - அழகிய திருமேனியால், மன்மதனை ஒப்பார் - மன்மதனை ஒப்பார்கள், திரள் தோளின்வலி தன்னால் - திரண்ட புஜங்களின் பலத்தால், வட மேரு தன் எழில் அழிப்பார் - மேருமலையினது அழகை நாசப்படுத்தி விடுவார்கள், இப்பொழுது அதனை இசைப்பது என் - இப்பொழுது அதைச்சொல்வதினால் என்ன பயன்? தனிவில்லால் - பெருமை பொருந்திய (தங்கள்) வில்லினாலே, ஓர் இமைப்பின் - ஒரு இமைப்பொழுதில், உலகு ஏழின் - ஏழுலகங்களின், நல் மதன் - நல்ல வலியை, அழிப்பார் - கெடுத்து விடுவார்கள்.

குறிப்பு — மதன் - வலிமை, அழகு, மாட்சிமை முதலியன குறிக்கும் பல பொருள் ஒரு சொல், "வலியு மழகு மலர்க்கணை வேளு, மாட்சிமைப் பெயரு மதனெனலாகும்" எனபது பிங்கலந்தை. தனி - பெருமை, "தனியு மீளிய நறும் பாடும், தணியும் பணையும் விறலுஞ் சேரும், பீடு மகிழ்வம் பெருமைப் பெயரே" என்பதனாலுணர்க. (௩௨)

> வந்தனை முனித்தலைவர் பாலுடையர் வானத்
> திந்துவின் முகத்தரெறி நீரிலெழு நாளக்
> கந்தமல ரைப்பொருவு கண்ணர்கழல் கைய
> ரந்தமி றவத்தொழில ராரவரை யொப்பார்.

இ - ள் முனி தலைவர்பால் வந்தனை உடையார் - முனிசிரேஷ்டர்களிடத்து வணக்க முடையவர்கள், வானத்து இந்துவின் முகத்தர் - ஆகாயத்திலுள்ள சந்திரனைப்போன்ற முகத்தையுடையவர்கள், எறி நீரில் - (அலைகளை) வீசுகின்ற ஜலத்தில், எழு - தோன்றுகின்ற, நாளம் - பூந்தண்டினையுடைய, கந்தம் மலரை - வாசனையுள்ள தாமரைமலரை, பொருவு - ஒப்பாகின்ற, கண்ணர் - கண்களையுடையவர்கள், கழல் கையர் - (அம்மலரை ஒப்பாகின்ற) பாதங்களையுங் கைகளையுமுடையவர்கள், அவரை - அம்மானிடர்களுக்கு, அந்தம் இல் தவம் தொழிலர் - முடிவில்லாத தவத் தொழிலையுடையவர்களில், ஆர் ஒப்பார் - எவர் உவமையாவர். (௩௩)

> மறக்கலையர் வார்கழலர் மார்பினணி நூலர்
> விறக்கலையர் வேதமுறை நாவர்தனி மெய்ய
> ருறக்கலைய ருன்னையொர் துகட்டனையு முன்னார்
> சொறக்கலை யெனத்தொலைவி றூணிகள் சுமந்தார்.

இ - ள் மறக்கலையர் - மரவுரியை யுடையவர்கள், வார்கழலர் - நெடியவீரக் கழலை யுடையவர்கள், மார்பின் அணிநூலர் - மார்பினிடத்தே அழகிய பூணூலை யுடையவர்கள், வில் கலையர் - தநுர்வேத முணர்ந்தவர்கள், வேதம் உறை நாவர் - வேதங்கள் வசிக்கின்ற நாவினையுடையவர்கள், தனிமெய்யர் - மிகவும் சத்தியத்தை யுடையவர்கள், உறகு அலையர் - உன்னால் துன்பமடையமாட்டார்கள், உன்னை ஓர் துகள் தனையும் உன்னார் - உன்னை ஒருதூள் அளவும் (மதிப்பாக) எண்ணமாட்டார்கள், சொல் கலை என - சொற்களாலாகும் சாஸ்திரங்களைப்போல, தொலைவு இல் - அழிவில்லாத, தூணிகள் சுமந்தார் - அம்புப் புட்டிலங்களைச் சுமந்திருக்கிறார்கள்.

குறிப்பு — அணிநூலர் - வினைத்தொகையுமாம், கலை - கலாசப்தபமம். வேத முறை நாவர் - வேதங்களை யோதுகின்றவர். (௩௪)

ஆறுபுல னஞ்சின மரக்கரை யெனச்சென்
றேறுநெறி யந்தண ரியம்பவுல கெல்லாம்
வேறுமென நுங்களகுலம் வேரொடு மடங்கக்
கோறுமென முந்தையொரு சூளுறவு கொண்டார்

இ - ள். ஏறு நெறி அந்தணர் - உயர்ந்த ஒழுக்கங்களையுடைய வேதியர்கள், சென்று - (அம்மாணிடர்களபால்) போய், அரக்கரை - இராக்கதரால், ஆறுபுலன் - ஆறு அறிவும், அஞ்சினம் என - அஞ்சியிருக்கின்றோமென்று, இயம்ப - சொல்ல, (அவர்கள்), உலகு எல்லாம் வேறும் எனும் - உலகங்கள் எல்லாவற்றையும் வெல்லுவோம் என்று கூறுகின்ற, நுங்கள் குலம் - (இராக்கதர்களாகிய) உங்கள் குலத்தை, வேரொடும் அடங்க - முழுதும் அடங்கும்படி, கோறும் என - கொல்வேம் என்று, முந்தை - முற்காலத்தில், ஒரு சூள் உறவு கொண்டார் - ஒரு சபதம் செய்திருக்கிறார்கள்.

குறிப்பு — மக்களெனப்படுவோர் ஐம்பொறி யுணர்வேயன்றி மனம் எனப்படுவோர் அறிவும் உடையவர் ஆகலின் ஐம்புலனெனலே யொழிந்து 'ஆறுபுலன்' என்றார் "மக்க டாமே யாறறி வுயிரே, பிறவு முளவே யக்கிளைப் பிறப்பே" என்றார் தொல்காப்பியனார் ஆறுபுலன் எனபுழி இன்னதென வறியும் உமமை விகாரத்தால் தொக்கது. இனி, ஆறுபுலன் - ஆறியபுலனுமாம் (௫௫)

மாரருள ரேயிருவ ரோருலகின் வாழ்வார்
வீரருள ரேயவரின் வில்லதனில் வல்லா
ராரொருவ ரன்னவரை யொப்பவர்க ளையா
வோரொருவ ரேயிறைவர் மூவரையு மொப்பார்.

இ - ள் ஐயா - ஐயனே! ஓர் உலகின் வாழ்வார் - ஒரு உலகத்தில் வாழ்பவர்களாகிய, இருவர் மாரர் உளரே - இரண்டு மன்மதர்கள் இருக்கின்றார்கள், அவரின் - அம்மனிதர்களைப் பார்க்கிலும், வில் அதனில் வல்லார் - வில்லில் வல்லவர்களாகிய, வீரர் உளரே - வீரர்களிருக்கின்றார்களோ? [இல்லை], அன்னவரை ஒப்பவர்கள் - அத்தன்மையானவரை ஒப்பாகும் பேர்களில், ஒருவர் ஆர் - ஒருவர் எவர்? ஓர் ஒருவரே - (அவர்களில்) ஒவ்வொருவருமே, இறைவர் மூவரையும் ஒப்பார் - திரிமூர்த்திகளையும் நிகர்ப்பார்கள்

குறிப்பு — மாரருளரே, ஏகாரம் - தேற்றம் வீரருளரே, ஏகாரம் - எதிர்மறை ஒருவரே, ஏகாரம் - பிரிநிலை இறைவர் - எப்பொருட்குந் தலைவராகிய கடவுளர். அவரின், இன் - எல்லைப்பொருட்டு. (௫௬)

தாரவலய நேமியுழ வன்றய ரதப்பேர்ப்
பாரவரு லகத்தொருவன் மைந்தர்பழி யில்லார்

விராவரு வனததவன விளமபவுரை கினறு
ரிராமனு மிலககுவனு மெனபாபெய ரெனறுள

இ - ள. தராவலயம - பூமி வட்டததை நேமி உழவன - ஆஞஞாசககரஞ செலுததி யாளுபவனுகிய, தயரதப்போ - தசரதன எனனும பெயரையுடைய, பராவரு நலதது ஒருவன - புகழததக கருமையான நனமையையுடைய ஒருவனுககு, மைநதா - குமாராகள, பழி இலலா - குறறமறறவாகள, அவன விளமப - அதத யரதன (நீவிாகானடைநது வாழுதிா எனறு) சொனனதால, விராவரு வனதது உறைகினறா - கலததறகருமையான [வசிததற கியலாத பயஙகரததை விளை விபபதான] வனததில வசிககினறாகள, பெயா - (அவாகளுடைய) நாமததை, இராமனும இலககுவனும எனபா - இராம லட்சுமணாகள எனறு கூறுவாாகள, எனறுள—, (௫௭)

மருநதனைய தஙகைமணி நாசிவடி வாளா
லரிநதவரு மானுட ரரிநதுமுயிா வாழவாா
விருநதனைய வாளொடும விழிததிறையும வெளகா
திருநதன னிராவணனு மினனுயிாகொ டினனும

இ - ள. மருநது அனைய தஙகை - அமிாததையொதத (அருமையான) தங கையாகிய சூாபபநகையினது, மணிநாசி - அழகிய மூககை, வடிவாளால அரிநதவ ரும - கூாமைபொருநதிய வாளினுல அறுததவாகளும, மானுடா - மனிதாகளா யிருககினறாகள, அரிநதும - அவவாறு மூககினையறுததும, உயிாவாழவாா - பிழை ததிருபபவராஞாகள, இராவணனும - இராவணனுகிய நானும, விருநது அனைய வாளொடும - புதுமையையொதத வாளாயுதததுடனே, விழிதது - பாாததுககொ ணடு, இறையும வெளகாது - சிறிதும வெடகமுறுமல, இனனும இன உயிாகொடு- இனனும இனிய உயிரை வைததுககொணடு, இருநதனன - இருககினறேன

குறிபபு —தஙகைமேல தனககுளள அனபுதோனற 'மருநதை' உவமைகூறி ஞன. அரிநதவரும, உமமை - இழிவுசிறபபு இருநதனன எனபது - தெளிவின வநத காலவழுவமைதி இருநதனன, அன எனனும தனமை யொருமை விகுதி, புதியன புகுதல இராவணன - இடவழுவமைதி. இராவணனும, உமமை - உய ாவு சிறபபு (௫௮)

கொறறமது முறறிவலி யாலரசு கொணடே
னுறறபயன மறறிதுவொல காவுரை யிறநதேன
முறறவுல கததுமுதல வீராமுடி யெலலா
மறறபொழு ததிது பொருநதுமென லாமே

இ - ள. வலியால - (எனனுடைய) பராககிரமததால், கொறறம அது முறறி- வெறறி யதிகரிதது, அரசுகொணடேன - ஆளுகையைபபெறறவனுகிய நான, உற றபயன இது - அடைநத பிரயோசனம இவவபகீாததியே, ஒலகா உரை இறநதேன- நீஙகாத புகழை இழநதேன, முறற - முழுவதும, உலகதது முதலவீரா - இவவுலக ததிலுளள முதனமைபொருநதிய வீராகளுடைய, முடி எலலாம - சிரஙகள எல லாம, அறறபொழுதது - அறுபட்ட காலததில, இது - இசசெயகை, பொருந தும எனலாம - பொருததமுடையதாகும எனறு கூறலாம,

குறிப்பு —மறறு - அசை, உரை - புகழ, "வரைமாாபின வேனமூழ வாளமூவந தாஙகி, யுரைமாலை சூடிஞ ஞூா" எனறூா ஐயனூாதனூம. இது பொருநதுமெனலாமே யெனபதறகு - உலகததிலுளள தலைமை வீராகளது முடிகளை யெலலாமொருஙகே, சூாபபநகைபொருடடு அறுபபினும, இவள மூககுப பழைய கணமையெயதாதே யெனறு இராவணன தகவிததானெனறு பொருள கோடலும பொருநதும முறைமிறநதேன எனனும பாடததிற்கு ஒழுஙகையிழநது எனறு பொருளகூறி இறநதேன எனபதை முறறெசச மாககுக. பொழுததது, அதது - சாரியை. (௫௯)

முளுமுள தாயபழி யெனவயின முடிததோ
ராளுமுள வாமவா தாருயிரு முணடாம
வாளுமுள தோதவிட முணடவன வழஙகு
நாளுமுள தோளுமுள நானுமுளே னனறூ.

இ - ள உளது ஆய - (எனறும) இருபபதாகிய, மூளும்பழி - வளாகினற இகழசசிசசொலலை, என வயின முடிததோா ஆளும உள ஆம - என மாடடுசசெயத மனிதாகளு மிருககினறூாகளாம, அவாது ஆா உயிரும உணடு ஆம - அவாகளுடைய அரிய உயிரும இருககினறதாம, வாளும உளது - (எனகரததில) வாளாயுதமும இருககினறது, ஓத - (புகழநது) சொலலுமபடி யாக, விடம உணடவன வழஙகு நாளும உள - விஷததையுணடருளிய சிவபிரான கொடுதத (நெடிய ஆயுள) நாடகளும இருககினறன, தோளும உள - (எனககு இருபது) புயஙகளும இருககினறன, நானும உளன - யானும இருககினறேன. (௬௦)

புததுற வுறபபழி புகுநததென நாணித
தததுறுவ தெனனைமன னேதளா லமமா
வெததுய ருனககுள தினிபபழி சுமககப
பததுள தலைபபகுதி தோளகளபல வனறே

இ - ள மனனே - (என) மனமே! புது உறவு - புதுமை யுறுதலாக, உற பழி - பழியானது மிகுதியாக, புகுநதது என - (குறற மறற நமது கொறறததுட) பிரவேசிததடுதனறு, நாணி - வெடகபபடடு, சதது உறுவது எனனை - பாயவது [பலவிதமாயாலோசிபபது] எதன பொருடடு? இனி பழி சுமகக - இனி பழி (யாகிய இபபெருஞசுமையைச) சுமததறகு, தலை பகுதி - தலையின பகுபபுகள, பதது - பததும, தோளகள பல - புயஙக ளநேகமும, உள - இருககினறன, (ஆதலால), உனககு எ துயா உளது - உனககு எககிலேச மிருககினறது, தளரல - தளாசசியடையாதே (௬௧)

எனறுரைசெ யாநகைசெ யாவெரி விழிபபான
வனறுணையி லாவிருவா மானுடரை வாளாற
கொனறிலாக ளாநெடிய குனறுடைய கானி
னினறகர னேமுதலி னோாிருத ரெனறூன.

இ - ள எனறு உரை செயா - எனறு கூறி, நகை செயா - நகைதது, எரி விழிபபான - நெருப்பைபபோற பாாப்பவனுகிய இராவணன, வல துணை இலா - வலிய சகாயம இலலாத, இருவா மானுடரை - இரணடு மனிதாகளை, நெடிய குனறு உடைய கானில - பெரிய மலைகளை யுடைததாகிய கானகததிலே, நினற -

இருந்த, கரனே முதலினோர் இருந்தார் - கரனே முதலாயினோராகிய இராக்கதர்கள், வாளால் - (தங்கள்) வாள்களினாலே, கொன்று இலர்களோ - கொல்லாமல் விட்டு விட்டார்களோ? என்றனன் - என்று வினவினன், (௯௨)

## வேறு

அற்றவ னுரைத்த லோடு மழுதிழி யருவிக் கண்ணா
ளெற்றிய வயிற்றள் பாரி னிடைவிழுந் தேங்கு கின்றாள்
சுற்றமுந் தொலைந்த தைய நொய்தெனச் சுமந்த கைய
ளுற்றது தெரியும் வண்ண மொருவகை யுரைக்க லுற்றாள்

இ-ள் அவன் - அவ்விராவணன், அற்று - அத்தன்மையை மொழியை, உரைத்தலோடும் - கூறியவளவில், அழுது இழி அருவி கண்ணள் - அழுது சிந்திய அருவி போலும் நீரினை யுடையதாகிய கண்ணினை யுடையவளும், எற்றிய வயிற்றள் - (தன் கை கொண்டு) அடித்த வயிற்றினை யுடையவளுமாகி, பாரின் இடை விழுந்து ஏங்குகின்றாள் - நிலத்தின்கண் வீழ்ந்து அழுகின்ற சூர்ப்பணகை, சுமந்த கையள் - (தலையிற்) சுமந்த கையையுடையவளாய், நொய்து - விரைவில், ஐய - வியக்கும்படியாக, சுற்றமும் - உறவினர்களும், தொலைந்தது என - நாசமாய்விட்டார்கள் என்று, உற்றது - நடந்த சங்கதியை, தெரியும் வண்ணம் - (இராவணன்) அறிந்து கொள்ளுமாறு, ஒரு வகை உரைக்கல் உற்றாள் - ஒரு விதத்திற் கூறுவாளாயினள் —

குறிப்பு — அற்று - அத்தன்மைத்து, சுட்டடியாகப் பிறந்த குறிப்பு வினையாலணையும் பெயர் அ என்னும் பகுதியும், று என்னும் ஒன்றன்பால் விகுதியும் பெற்று, விகுதி றகர வல்லொற்று மிகுந்து முடிந்தது (௯௩)

சொல்லென்றென் வாயிற் கேட்டார் தொடர்ந்தெழு சேனை யோடுங்
கல்லென்ற வொலியிற் சென்றார் கரன்முதற் காளை வீர
ரெல்லொன்று கமலச் செங்க ணிராமனென் றிசைத்த வேந்தல்
வில்லொன்றிற் கடிகை மூன்றி லேறினார் விண்ணி லென்றாள்.

இ-ள். சொல் என்று - (நினக்குக்கேடிழைத்தார் யாவர்) சொல்லாய் என்று கூறி, என் வாயில் கேட்டார் - என்வாய் மொழியாற் கேட்டறிந்தவர்களும், தொடர்ந்து எழு சேனையோடும் - பின்பற்றியெழுந்த சேனையுடனே, கல்லென்ற ஒலியில் சென்றார் - கல்லென்ற சப்தத்தோடு சென்றவர்களுமாகிய, கரன் முதல் காளை வீரர் - கரன் முதலிய ருஷபம்போன்ற வீரர்கள், எல் ஒன்று - ஒளிபொருந்திய, கமலம் - தாமரைமலர்போலவதாகிய, செங்கண் - செய்யகண்ணிணையினையுடைய, இராமன் என்று இசைத்த ஏந்தல் - இராமன் என்று கூறிய பெருமையிற் சிறந்தோனது, வில் ஒன்றில் - ஒரேவில்லினால், கடிகை மூன்றில் - நாழிகை மூன்றுக்குள், விண்ணில் ஏறினார் என்றாள் - விண்ணுலகத்தின்கண் ஏறினார்கள் [இறந்தார்கள்] என்று கூறினள்

குறிப்பு — கல்லென்ன ஒலிக்குறிப்புணர்த்து மொழியிடைச்சொல். கோபமில்லாது விளையாட்டாயப் போர்புரிந்த தன்மையும், தன்னுள்ளங்கவர்ந்த குறிப்புந் தோன்றச் செங்கண் என்றதற்குக் கமலம் என்ற அடைதந்து கூறினள். ஒலியில — உருபு மயக்கம். ஓடு, உம்மை - இசைநிறை. ஸ்ரீராமபிரான் செய்த போர்முன

இவர்க்காசெய்த போர் சிறப்பமைமையெனபது தோனறக் கேட்டார் சென்றார் என்றவள் போர்புரிந்தார் எனபதைக் கூறுதொழிந்தாளெனக. (௬௪)

தாருடைத் தானை யோடுந் தமபியர் தமியன செயத
போரிடை மடிந்தா ரென்ற வுரைசெவி புகாத முன்னங
காரிடை யுருமின மாரி கனலொடு பிறககு மாபோ
னீரொடு நெருபபுக கான்ற நிறைநெடுங கணகளெல்லாம்.

இ - ள் தார் உடைத் தானையோடும் - அணிவகுப்பினை யுடைய சேனையுட னே, தமபியர் - (தனது) தமபிமாரகளாகிய கரதூஷணாகள், தமியனசெயத போர் இடை - ஒருமனிதன செயத யுததததில, மடிந்தார் என்ற உரை - இறந்துபோனார் களென்று கூறியவார்ததையானது, செவிபுகாத முனனம - (தனது) காதுகளிற பிர வேசியாததறகு முனபே, காரிடை - மேகததினகண, உரும மாரி கனல ஓடு பிறக கும் ஆ போல - இடியோடுகூடிய மழையானது நெருபபுடனே தோனறுமாறுபோ ல, நிறை - (வரிசையாக) நிறைந்த, நெடுங்கணகள் எல்லாம் - (அவனுடைய) பெரிய விழிகள் அனைததும், நீர் ஓடு நெருபபு கான்ற - ஜலததையும அககினியை யுங கொட்டின

குறிபபு —உருமின, இன - தவிர வழிவந்த சாரியை கனலொடு, ஒடு - உட னிகழசசிபபொருட்டு ஆறு - ஆவென விகாரம நீரொடு, ஒடு - எணணுப்பொரு டடு. வாயவிட்டுக்கததறிய ஒலிககு உருமும, அழுகைககு மாரியும், கோபததிறகுக கனலும், இராவணனுக்குக காருமஉவமை (௬௫)

ஆழியிடை யெழுந்த சீறறந் தழுந்திய துனப மாழித்
தீயிடை யுருககு நெயயிற சீறறததிற கூறறஞ செயய
நீயிடை யிழைதத குறற மெனனைகொ னினனை யினனே
வாயிடை யிதழு மூககும வலிந்தவா கொயய வெனறான

இ - ள் ஆழியிடை - அவவிடததில, எழுந்த சீறறதது - கிளமபிய கோபத தால, அழுந்திய துனபம - (மனததில) பதிந்த துயரமானது, ஆழி தீயிடை உருக கும் நெயயில - கடலிறறோனறும வடவா முகாககினியிற கொட்டிய நெயயைப போல, சீறறததிறகு ஊறறம செயய - (முனனுறற) கோபததுககு வலிமையைக கொடுதது நிறக (கோபம வளர), அவர் - இராமலக்ஷ்மணாகள், நினனை - உன னுடைய, வாயிடை இதழும - வாயிடததிலுள்ள உதட்டையும, மூககும - மூக்கை யும், வலிந்து - வலிமைசெயது, கொயய - இபபொழுதே கொயதறக, நீ இடை இழைதத குறறம எனனை - நீ (அவாகள்) இடததுசசெயத பிழையாது, எனறான - என்று வினவினான்.

குறிபபு —நினனை - வேறறுமை மயககம கொல - அசை (௬௬)

எனவயி னுறற குறறம யாவாக்கு மெழுதொ ணாத
தனமைய னிராம னோடு தாமரை தவிரப போந்தாண [டாள
மினவயின மருஙகுல கொணடாள வேயவயின மெனறோள் கொண
பொனவயின மேனி கொணடாள பொருட்டினாற புகுந்த தெனறாள்.

இ - ள் என வயின உறற குறறம் - எனனிடததுச சம்பவிதத குறறமானது, யாவாககும எழுத ஒணுத - எவராலும எழுத முடியாத, தனமையன - அழகின தனமையை யுடையானுகிய, இராமனேடும - இராமனுடனே, தாமரை தவிர போநதாள - தாமரை மலராசனம நீஙகும்படியாக வநதவளும், மின வயின மருஙகுல கொணடாள - மினனலினிடததே யிடையைப பெறறுககொணடவளும், வேயவயின மெல தோள கொணடாள - மூஙகிலினிடததே மெலலிய தோளைப பெறறுக கொணடவளுமாகிய, பொன வயின மேனி கொணடான பொருட்டினுல பொனனினிடததே திருமேனியைக கொணடவன நிமிததததாலே, புகுநதது என ருன - சமபவிததது எனறு கூறினுன

குறிபபு —யாவாககும - உருபு மயககம எழுதொணுத அசரநதொகுததல. எழுதுதல - சிததிரநதீட்டுதல இராமனேடும, ஓடு - உடன நிகழசசிபபொருட்டு தாமரை தவிரப போநதாளெனறது - இவள ஸ்ரீ மகா லட்சுமியேயாமெனபது விளஙகறறு. மினனலினது செயலும, வேயினது மெயயும, பொனனினது உருவும உவமையாமே யனறி மருஙகுல் தோள மேனி எனபவறறின தனமை யனைததுககும அவை யுவமையாகா வெனபது தோனற 'மின வயின மருஙகுல கொண டான வேயவயின மெனறேள கொணடான பொனவயின மேனி கொணடாள' எனருன (௬௭)

ஆரவ ளெனன லோடு மரசகியு மைய வாழநது
தேரவ டிரணட கொஙகை செமபொனசெய குலிகச செபபு
பாரவள பாதந தீணடப பாககியம படைதத தமமா
பேரவள சீதை யெனறு வடிவெலாம பேச லுறருள.

இ - ள் அவள - அபபெண, ஆா எனனலோடும - யார? எனறு (இராவணன) வினவிய வளவில, அரககியும - சூாபபநகையும, ஐய—! ஆழநது தேர - செமமையாக ஆலோசிததுபபாாததுத தெளிநதுகொள, அவள திரணட கொஙகை - அவளுடைய திரணட முலைகள, செமபொன செய குலிகம செபபு - செமபொனனினுறசெயத சாதிலிஙகச சிமிழபோனறுளளன, அவள பாதம தீணட - அவளுடைய பாதஙகளைத தொடுதறகு, பாா - பூமியானது, அமமா—! பாககியம படைததது - அதிரஷ்டமடைநதது, அவள பேர சீதை எனறு- அவளுடைய நாமம சீதையெனறு கூறி, வடிவு எலாம பேசல உறருன - (அசசீதாபிராட்டியினது) அழகனைததும (எடுததுச) சொலலத தொடஙகினுள

குறிப்பு —சீதையின அழகு முழுவதுஙு சொலல முடியாது எனபாள ஆழநது தோ,' எனருள தெயவப்பெணகளின பாதநதீணடுதல பூமிககு இனமையாகவும இததெயவப பெணகளினும் மேமபட்டவளாகிய சீதாபிராட்டியின பாதந தீணடப பெறற பூமியின தவபபலன பெரிது எனபான பாரவள பாதநதீணடப பாககியம படைததெனருன (௬௮)

காமர முரலும பாடல களளெனக கனிநத வின்சொற
றேமலா நிரநத கூநதற றேவாககு மணஙகா மெனனத
தாமரை யிருநத தையல சேடியாந தரமு மலலள்
யாமுரை வழஙகு மெனப தேழைமைப பால தனறே

இ - ள் காமரம் முரலும பாடல கள என - வண்டுகள் பாடுகினற பாடலும தேனுமபோல, கனிந்த இனசொல - முதிாநத மாதுரியமான வாாததைகளையுடைய, தேம மலா நிரநத கூநதல-வாசனை பொருநதிய (பாரிசாத முதலிய) மலாகள நிறை நத கூநதலையுடைய, தேவாககும - தேவாகளுககும, அணஙகு ஆம எனன - (அதி சயிககுமபடியான மிகக) அழகு (இது) ஆரும என்று சொலலுமபடி, தாமரை இருந்த தையல - தாமரை மலரில வீறறிருநத இலககுமிதேவி, சேடி ஆம தாமும அல்லள - (அபபெணணுககு) அடிமைககாரி [தோழி] ஆகுநதகுதியு முடையாளல லள, (எனறால) யாம உரை வழங்கும எனபது - நாம (அவளுடைய அழகை எடுத துக) கூறுவோம என்று கூறுவது, ஏழைமை பாலது அனறோ- அறிவினமை யிடத தது அலலவா?

குறிபபு — உததமமான இசைகளுககுள வணடின ஒலியும ஒனறாதலின அவவ ணடிஞததைச சொறகு உவமை கூறினுள, நிரததல - கலததல, நிறைதல. தேவ ாககும. உமமை - உயாவு சிறபபு வழஙகும வழஙகுறும எனபதன விகாரம (கூக)

மஞசொககு மளக வோதி மழையொக்கும வடிதத கூநதல
பஞசொககு மடிகள செயய பவளததின விரலக ளைய
வஞசொறக ளமுதி லளளிக கொணடவள வதன மைதீா
கஞசததி னளவிற றேனுங கடலினும பெரிய கணகள.

இ - ள அளகம ஒதி - குழறசியாகிய கூநதல - நீளமாக (அவிழதது) விட்ட கூநதல, மழை ஒககும - மழைததாரைகளை யொககும, அடிகள பஞசு ஒககும - பாதஙகள பஞசை ஒககும, செயய பவளததின விரலகள - சிவநத பவளமபோலும விரலகளுளளன, ஐய—! அம சொலகள - அழகிய வாாததைகளை, அமுதில அள ளிககொணடவள - தேவாமிாததததிலிருநது வாரிககொணட அபபெணணினது, வதனம - முகமானது, மைதீா - குறறமறற, கஞசததின அளவிறறேனும - தாமரை மலரினது அளவினை யுடையதாயினும, கணகள கடலினும பெரிய - விழி கள கடலைப பாககிலும பெரியனவா யிருககினறன

குறிப்பு — மஞசெனபது ஈணடு கரிய மேகம எனனும பொருளில நினறது. அளகம - மயிாக குழறசிககுப பெயா, குழறசி - சுருட்டி முடிததல பயனுவமப பொருளாகிய மழை யெனபது - ஈணடு மெயயுவமமாய மழைததாரை மாததிரை யாய நினறு அததாரையினது நீணட மெயயோடு வடிதத கூநதல ஒபபிடபபட்டது பவளததின, இன - உவமவுருபு தனனை நுகாநதாா பிறிது நுகராமறறுககும மென மையும உயாநதவாககே கிடடும உரிமையுமுடைய அமுதினினறுஞ சொறகளெடு ததுககொணடவளெனவே அச்சொறகளைக கேடடோா செவிகள பிறா சொறக ளைக கேடக விருமபமாட்டா வெனபதும அசசொறகளின இனபததை அவவிராம னே யடைதறகுரியானனறி மறறையோரடைதற பாலரலல ரென்பதும விளஙகு தல காணக. (௭0)

ஈசனா கணணின வெநதா னெனனுமி திழுதைச சொலலிவ
வாசனா ரேறுதி யாளைக் கணடனன வலல வாறறாற

பேசலாந் தகைமைத் தல்லாப் பெரும்பிணி பிணிப்ப நீண்ட
வாசையா லழிந்து தேய்ந்தா னநங்கனவ் வுருவ மம்மா.

இ - ள் அநங்கன் - மன்மதன், இ வாசம் நாறு ஓதியாளை - வாசம் வீசுகின்ற கூந்தலையுடைய இவளை, கண்டனன் - பார்த்து, வல்ல ஆற்றால் - வலியவழியாலும், பேசல் ஆம் தகைமைத்து அல்லா - பேசுதற்காகிய தன்மையையுடையது அல்லாத, பெரும்பிணி பிணிப்ப - பெரியநோய் தொடரும்படி, நீண்ட - மிகுதலுற்ற, ஆசையால் - (இவளை மேற்கொண்ட) ஆசையினாலே, அ உருவம் - (அவனடைந்திருந்த அழகிய) அந்தவுருவம், அழிந்து தேய்ந்தான் - தேய்ந்து அழிந்துபோனான், (இங்ஙனமிருக்க) அம்மா—! ஈசனார் கண்ணின் வெந்தான் என்னும் இது - சிவபிரானுடைய (நெற்றிக்) கண்ணால் வெந்துபோனான் என்று கூறுகின்ற இவ்வார்த்தை, இழுதை சொல் - பொய்வார்த்தையேயாம் (எ௪)

தெவ்வுல கத்துங் காண்டி சிரத்தினிற் பணத்தி னோர்க
ளவ்வுல கத்துங் காண்டி யலைகட லுலகிற் காண்டி
வெவ்வுலை யுற்ற வேலை வாளினை வென்ற கண்ணா
ளிவ்வுல கத்தா ளங்கம் யாவர்க்கு மெழுதொ ணாதாள்

இ - ள் தெவ் உலகத்தும் காண்டி - பகையுலகமாகிய தேவலோகத்திலும் பார்ப்பாயாக, சிரத்தினில் பணத்தினோர்கள் அ உலகத்தும் காண்டி - தலையிலே படத்தையுடைய சர்ப்பசாதியாருடைய அப்பாதாள வுலகத்தும் பார்ப்பாயாக, அலைகடல் உலகில் காண்டி - அலையையுடைய சமுத்திரஞ் சூழ்ந்த இவ்வுலகத்திலும் பார்ப்பாயாக, (எவ்வுலகத்தினும் இவளை ஒப்பாகும் பெண்ணைப்பார்க்கமாட்டாய்), வெம்மை உலை உற்ற வேலை - வெப்பம்பொருந்திய கொல்லுலையையடைந்த வேலாயுதத்தையும், வாளினை - வாளாயுதத்தையும், வென்ற கண்ணாள் - வெற்றிகொண்ட கண்களையுடைய இப்பெண், இ உலகத்தாள் - இந்த உலகத்திலிருப்பவள், அங்கம் யாவர்க்கும் எழுதொணாதாள் - (ஓவியத்துறைகைபோயவர்) எவராலும் தீட்டுதற்கரிய திருமேனியையுடையவளா யிருக்கின்றாள் (எ௫)

தோளையே சொல்லு கேனோ சுடர்முகத் துலவு கின்ற
வாளையே சொல்லு கேனோ வல்லவை வழுத்து கேனோ
மீளவுந் திகைப்ப தல்லாற் றனித்தனி விளம்ப லாற்றே
னாளையே காண்டி யன்றே நானுனக் குரைப்ப தென்னோ

இ - ள். தோளையே சொல்லுகேனோ - (அவளுடைய) தோள்களையே (எடுத்துச்) சொல்லுவேனோ? சுடர் முகத்து உலவுகின்ற வாளையே சொல்லுகேனோ - பிரகாசம் பொருந்திய (அவளுடைய) முகத்தின்கண் உலாவுகின்ற வாள்போன்ற கண்களையே (எடுத்துச்) சொல்லுவேனோ? வல் அவை வழுத்துகேனோ - சொக்கட்டான் காய்கள் போன்ற முலைகளையே (எடுத்துச்) சொல்லுவேனோ? (எது எடுத்துச் சொல்வதற்கு இலேசானது), மீளவும் திகைப்பது அல்லால் - (வருணிப்பதற்குச் சக்தி யில்லாமல் மயங்குகின்ற யான் சொல்லப் புகுமிடத்துத்) திரும்பவும் மயங்கும்படி நேர்வதல்லாமல், தனி தனி விளம்பல் ஆற்றேன் - ஒவ்வொன்றாய் (வருணித்துச்) சொல்லுதல் செய்யேன் [சொல்ல வறியேன்], நாளையே காண்டி அன்றே -

(நீ) நாளைக்கே (அவளைப் பார்ப்பாயல்லவா? (ஆதலால்), நான்—, உனக்கு—, உரைப்பது என் - சொல்வது யாது?

குறிப்பு — வாள் - கண்களுக்கும், வல் - முலைகளுக்கும் இலக்கணை வல்லவை, அவை - பகுதிப்பொருள் விகுதி இனி, வல்லவை என்பதை அல்லவை யெனக் கொண்டு மறைய அவயவங்களை யெனக் கோடலுமாம். (௭௬)

வில்லொக்கு நுதலென் றாலும் வேலொக்கும் விழியென் றாலும்
பல்லொக்கு முத்தென் றாலும் பவளத்தை யிதழென் றாலுஞ்
சொல்லொக்கும் பொருளொவ் வாவாற் சொல்லலா முவமை யுண்டோ
நெல்லொக்கும் புல்லென் றாலு நேருரைத் தாக வற்றே.

இ - ள். நுதல் வில் ஒக்கு மென்றாலும் - புருவமானது வில்லை யொக்குமென் றுகூறினும், விழி வேல் ஒக்கும் - கண்கள் வேலாயுதத்தை யொக்கும், என்றாலும் —, பல் முத்து ஒக்கும் - தந்தங்கள் முத்துக்களை ஒக்கும், என்றாலும் —, பவளத்தை இதழ் என்றாலும் - பவளத்தை அதரத்துக்கு உவமானப்பொருளென்றாலும், சொல் ஒக்கும் - (உவமை கூறும்) சொற்கள் ஒக்குமேயல்லாமல், பொருள் ஒவ்வா - (வில் முதலிய உவமானப்) பொருள்கள் ஒக்கும் தன்மையனவல்ல, (ஆதலால்) சொல்லலாம் உவமை உண்டோ - சொல்லத்தக்கவான உவமானங்கள் உண்டோ, இல்லை நெல் - நெல்லானது, புல் ஒக்கும் என்றாலும் - புல்லை ஒத்திருக்கு மென்னினும், நேர் - உரைத்து ஆக வற்று - ஒத்த வுரையையுடையதாக வலியுறற்றாகும்.

குறிப்பு — வளையுந் தொழிலைப்பற்றி வில் நுதலுக்கு உவமையென்பாராயினும் அவ்வில் நுதல்போல எப்போதும் வளைவுபெற்றிராமல் வளைக்கப்படும்பொழுது வளைவுறுதலால் வினைக்கும், வில்லுக்கு நாணமிகையாய் உள்ளதால் மெய்க்கும், நிற வேற்றுமையால் உருவுக்கும், வில்வளைவுறும்பொழுது கண்டார் அஞ்சுதலும் நுதல் வளைவுறும்பொழுது கண்டார் மகிழ்தலுமாகிய வேற்றுமையாற் பயனுக்கும் உவமையாகாமற் போயினமையாற் பொருள் ஒவ்வா வென்றார் இதைப்போல வேல் முத்து, பவளம் எனபவற்றிற்கும் பொருள் விரித்துக்கொள்க. இங்ஙனம் ஒவ்வா வில் முதலியனபோல உவமை கூறுதற்கு வேறுபொருளின்மையாலும், அவைதாம் கூறு தற்கு ஒருவாறு தகுதியுடையவெனக் கருதிப் பெரியோர்கள் அவற்றையே உவமையாகக் கொண்டதனாலும் 'சொல்லொக்கும்' என்றார் புல்லென்றது- அரிபட்ட நெல்லின்தாளை. நெல் ஓரறிவுயிரென்றும் புல் அத்தகைத்தது மன்றெனினும் பொருள்பட "நெல்லும் புல்லு நேரா ரணடே" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார் நெல்லைப்போல புல்விளைவு தராததினாலும் நெல்லுக்கும் புல்லுக்கும் மெய்யும் உருவும் வேறுபட்டிருத்தலானும் நெல் பலவகையான வுணவாயப் பயன்தருதல்போலப் புல் பயன்தராமையாலும் புல் நெல்லை ஒக்கும் எனபதியலாதாயினும் நெல்லிலிருந்து புல்லும் புல்லிலிருந்து நெல்லும் பிறந்த சம்பந்தம்பற்றி ஒருகால் ஒன்றற்கு ஒன்றை உவமைகூறினும் கூறலாம் அதுபோல வில் முதலியவற்றிற்கும் நுதல் முதலியவற்றிற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லையாதலின் எங்ஙனம் உவமை கூறுவதெனபது ஈற்றடியின் கருத்து. இனி, "நெல்லொக்கும்.... வற்றே" என புல்லென்னுமொருவகைத் தானியம் நெல்லையொக்குமென்று சொல்வார் சொல்லி னும், அவை தம்முள் நேர் என்று கூறுதல் வலியுடைத்தாமோ? என்றும் பொருள் கோடலாம். கொண்டு, வில்முதலியபொருள்களை நுதல் முதலியவற்றிற் குவமை

கூறுதல் சொனமாததிரையேயன்றி பொருடபெறறியிலனறு ஞெறறியறபாலது சொலலொககும பொருளெனறகு, மறறையவறறிறகு ஒருவிதமா வுவமை கூறலா மாயினும, சொலலிறகுவமை கூறுதல கூடாதே யெனறுரைபபினும பொருநதும. மேலே சொறகளை அமுதி னளளிககொணடவள எனறதும இககருததுபபறறியே

இநதிரன சசியைப பெறறா னிருமூனறு வதனத தோனறன
றநதையு முமையைப பெறறான றாமரைச செஙக ணானுஞ
செநதிரு மகளைப பெறறான சீதையைப பெறறாய் நீயு
மநதரம பாரககி னனமை யவாககிலலை யுனககே யையா

இ - ள் இநதிரன சசியை பெறறான - இநதிரன இநதிராணியை அடைந தான, இரு மூனறு வதனததோன தன தநதையும உமையை பெறறான - ஆறுமுக ககடவுளுடைய தநதையாகிய சிவபிரானும உமாதேவியை அடைநதான, தாமரை செஙகணணும செநதிருமகளை பெறறான - தாமரை மலாபோனற செயய கணகளை யுடைய விஷணுவும அழகிய இலககுமிதேவியை அடைநதான, நீயும சீதையை பெறறாய - (அவாகள நலல அழகுடைய பெணகளை அடைநததுபோல) நீயும சீதையை அடைநதாய, அநதரம பாரககின - (அவாகளுககும உனககும உளள) பேததைப்பாரககு மிடதது, அவாககு - அவவிநதிரன முதலியோாககு, நனமை இலலை - சுகமிலலை, ஐயா—! உனககே - (சுகம) உனககேதான.

கருதது —அவவிநதிரன முதலிய போகள இசசீதையைப்போலும பேரழகு டைய பெணகளை அடையும பாககிய மிலலாதிருநதலால அவாகள அனுபவிககும இனபம ஓா இனபம அலல உனயோகமே யோகம எனபதாம.

குறிபபு —அநதரம—பேதம, விததியாசம. இனி, அம + தரம எனபபிரி தது - அழகிய தகுதி எனபபொருள கோடலுமாம நனமையவாககு உனககு இலலை எனககொணடு அவாகள சசிமுதலிய பெணகளை நியாயவழியில தாமபததினி களாககொணடிருபபதால அவாகளுககு நனமை யுணடு எனறும நீ அககிரமவழி யிற சீதையைபபெறுவாயாதலால உனககு நனமையிலலை யெனறும உண்மையாய நிகழும விஷயததை யெடுததுச சொனனாளெனனலுமாம பினனும, நீயும சீதை யைபபெறறாய ஆதலால அநதரம அவாகளுககு- தேவலோகததிலுளளவாகளுககும, பாரககு - பூமியிலுளளவாகளுககும இனல மை - இனனலும (துனபமும) மையும (குறறமும) இலலை அவவினனலுங குறறமும உனககே யாம எனறு கூறினு ளெனனலுமாம சீதையைபபெறறாய - சீதையையடைநத அளவில நீயும அநதரம- ஈயும் முடிவுபெறுவாய, எனககொணடு கூடடிக கூறலுமாம. (௭௫)

பாகததி லொருவன வைததான பஙகயத திருநத பொனனை
யாகததி லொருவன வைததா னநதண னாவில வைததான
மேகததின மினனை மூனனே வெனறநுண ணிடையை நீயு
மாகததோள வீர பெறறா லெஙஙனம வைதது வாழதி

இ - ள் மாகம தோள வீர - ஆகாயததை யளாவுமபடி பருததுயாநத தோள களையுடைய வீரனே! ஒருவன பாகததில வைததான - ஒருவன (உமா தேவியைத தனது இடப) பாகததில வைததான, ஒருவன பஙகயதது இருநத பொனனை ஆகத

தில் வைத்தான் - ஒருவன் தாமரை மலரின்மேலிருந்த இலக்குமி தேவியைத் (தனது) மார்பில் வைத்தான், அந்நணன் நாவில் வைத்தான் - பிரமதேவன் (சரஸ்வதியைத் தனது) நாவினகண் வைத்தான், முன்னே—, மேகத்தின் மின்னே - மேகத்தின் கட்டோன்று மின்னலே, வென்ற - (ஒளியினாலும் தோன்றி மறையுஞ் செயலாலும்) வெற்றிகொண்ட, நுண் இடையை - நுட்பமாகிய இடையினையுடையாளாகிய அசீதையை, நீயும் பெற்றால் - நீயும் அடைந்தால், எங்ஙனம் வைத்து வாழ்தி - எவ்விடத்தில் வைத்து வாழ்வாய்?

குறிப்பு—ஆகம் - அகம் என்பதன் விகாரம் நுண்ணிடை - அன்மொழித்தொகை நுண்ணிடை என்பதைப் பெண்ணென்னும் பெயர் மாத்திரையாகக் கொண்டு - கரிய மேகம்போன்ற ஸ்ரீராமபிரானைச் சீதாபிராட்டியார் தழுவந் தோற்றத்தால் மேகத்தின் மின்னே வென்றவள் என்று பொருள் கோடலும் ஆம் அத்தகைய தோற்றத்தை இவள் முன்னே கண்டுள்ளாளாதலின் 'முன்னே' எனக் கூறினள் எனக மாகத்தோள் - ஆகாயத்தின் கணுள்ள புயம் என விரித்துக்கொள்க "பொற்றோள் விண்டலக்க ளுறவீங்கி யோங்குதய மால் வரையின் விளங்க" என்றார் பிறரும் ஒருவன் பாகத்திலும் ஒருவன் மார்பிலும் ஒருவன் நாவிலுமாக மூர்த்திகள் மூவரும் தமது மனைவிகளை வைத்துக்கொண்டார் அதுபோல அம்மூவிடங்களில் ஒன்றில் இசீதையை வைப்பின் இவளது பெருமைக்குக் குறைவாகும் அம்மூவருடைய தேவிகளிருக்குந் தானங்களினும் உயர்ந்த தானமாகிய சிரசின் கண் தான் வைக்கவேண்டும் என்னுங் கருத்தோடு 'எங்ஙனம் வைத்து வாழ்தி' என்று வினவினள் இனி, (உனக்கு மடியுங்காலம் கிட்டிவிட்டதால்) எப்படி வைத்து வாழ்வாய் (வாழமாட்டாய்) என்னும் ஓர் அறவுரையும் உள்ளடங்கியிருத்தலறிக

பிள்ளைபோல் பேசினாளைப் பெற்றபின் பிழைக்கலாற்றாய
கொள்ளைபோகின்ற செல்வ மவளுக்கே கொடுத்தி யைய
வள்ளலே யுனக்கு நல்லேன் மற்றுநின் மனையில் வாழுங்
கிள்ளைபோன் மொழியார்க் கெல்லாங் கேடுசூழ் கின்றே னன்றே

இ-ள் ஐய வள்ளலே - அழகனே! கொடையாளனே! பிள்ளைபோல பேசினாளை - மகவுபோது மழலைச்சொற்களையுடைய அப்பெண்ணை, பெற்றபின் - (நீ) அடைந்த பிறகு, பிழைக்கல் ஆற்றாய - (அவளைவிட்டு) நீங்கியிருத்தற்குச் சக்கமாட்டாய், கொள்ளை போகின்ற செல்வம் - கொள்ளை போகின்ற (நின்) செல்வத்தை, அவளுக்கே—, கொடுத்தி - கொடுப்பாய், உனக்கு நல்லேன் - (நான்) உனக்கு நல்லவளாயினேன், மற்று—, நின் மனையில் வாழும் - நின்வீட்டில் வாழ்கின்ற, கிள்ளைபோல் மொழியார்க்கு எல்லாம் - கிளியைப்போன்ற சொற்களையுடைய பெண்களுக்கெல்லாம், கேடுசூழ்கின்றேன் அன்றே - கெடுதிசெய்கின்றேனல்லவா?

குறிப்பு—பறவை நாய் முதலியவற்றின் இளமைக்குரிய பிள்ளைப்பெயர் ஈண்டு மக்கட்கண் வந்தது மரபு வழுவமைதி "குழவியு மகவு மாயிரண் டல்லவை கிழவ வல்ல மக்கட்கண்ணே" என்ற சூத்திரத்தால் மக்களிளமைக்குப் பிள்ளைப் பெயரில்லையென்பதாம், 'பெண்ணு மாணும் பிள்ளையு மவையே" என மீஇ வந்து முடிந்த மரபுணர்த்துஞ் சூத்திரத்தால் அப்பெயர் கோடலாம் என்பதும் விளங்குதலறிக பிழைத்தல் - தவறுதல்- பூமண்டலத்தும் விண்டலத்தும் பாதலத்தும் வதிநாய ஆசைப்பட்டார் யாவரும் தாமாசைப்பட்டபொருள்களைத் தடையி

னறிந்து தாமே யெடுத்துக்கொள்ளுமாறு கட்டளையிட்டுத் திறந்துவைத்த போகவிஷத்தையுடையான் என்பது தோன்ற 'கொள்ளைபோகின்ற செல்வம்' என்றான். "பூதலத்து ளெல்லாப் பொருளும் வறியராய்க், காதலித்தார் தாமே கவர்தலால் - நீதி—, யடுத்துயர்ந்த சீர்த்தி யரபாயர் யார்க்குங், கொடுத்திலெனக் கொள்கின்றிலேம்" என்பதிண்டு நோக்கற்பாலது. நீ சீதையைப்பெற்றபின்பு அவளைவிட்டுப் பிரியவும் மாட்டாய்; உன் மனைவிகளை விரும்பவும் மாட்டாய்; அதனால் அவர்களுக்கெல்லாம் நான்கேடு சூழ்பவளாய்க் கெட்டவளாகின்றேன் என்றாளெனக். இனி, பிள்ளைபோலப் பேசினளைப்பெற்றபின்—, பிழைக்கல் ஆற்றாய்=உய்தல்செய்யாய் [பிழைக்கமாட்டாய், இறந்துபோவாய்], (பின்பு) கொள்ளைபோகின்ற செல்வம்= பகைவரால் கொள்ளைபோகப்படுகின்ற செல்வத்தை, அவளுக்கே கொடுத்தி - அவளுக்கு ஒப்பித்துவிடுவாய், நல்லேன்=விண்ணோர்க்கும் மண்ணோர்க்கும் நல்லவளாகின்ற நான், உனக்கும் இன்னே போன்மொழிபார்க்குங் கேடுசூழ்கின்றேன்—, என வேறுரையுங் கொள்ளுதலுமாம். (௭௭)

தோர்தந்த வல்குற் சீதை தேவர்தம் முலகி னிம்பர்
வார்தந்த கொங்கை யார்தம் வயிறுதந் தாளு மல்லட்
டார்தந்த கமலத் தாளைத் தருக்கினர் கடையச் சங்க
நீர்தந்த ததனை வெல்வா னிலந்தந்து நிரம்பிற் றன்றே

இ - ள். தோர்தந்த அல்குல் சீதை - இரதம்போன்ற அல்குலையுடைய சீதையானவள், தேவர்தம் உலகின் - இம்பர் - தேவலோகத்திலும் இவ்வுலகத்திலுமிருக்கிற, வார்தந்த கொங்கையார்தம் - கச்சிட்ட முலையையுடைய பெண்களினது, வயிறுதந்தாளும் அல்லள் - வயிற்றில் வந்தவளுமல்லள், தருக்கினர் கடைய - செருக்குற்ற தேவாசுரர்கள் கடைந்ததால், சங்கம் நீர் - பாற்கடலானது, தார்தந்த கமலத்தாளை - மலர்தந்த தாமரையிலிருப்பவளை [திருமகளை], தந்தது - கொடுத்தது, அதனை வெல்வான் - அக்கடலை வெல்லும்பொருட்டு, நிலம் - பூமியானது, (இச்சீதையை), தந்து - கொடுத்து, நிரம்பிற்று - நிறைவடைந்தது.

குறிப்பு:—தோர்தந்த, தந்த - உவமவாசகம். சங்கநீர் என்றது, யாறுகள் சங்கமமாகின்ற நீர் என்றேனும், சங்குகளை யெறியும் நீரென்றேனும், சங்கைப்போலும் வெண்மைத்தாகிய நீரென்றேனும் பொருள்கொள்க. தருக்கினர் சங்கம் கடைய நீர் தந்தது எனக்கொண்டு சங்கம் என்றதற்குக் கூட்டமென்றுபொருள் கோடலுமாம். நீர் திருமகளைத்தந்த களிப்பால் விருத்தியுற்றுப் பொங்கக்கண்டு பொறாமை யுற்றடைந்த துயராற் கரைந்த நிலமானது அத்திருமகளினுஞ் சிறந்த இச்சீதையைத்தான் தந்து அத்துயரொழிந்து தன்னைப்போற் கடல்பொறாமையுற்று எய்தத்தால் தான் விருத்தி யுற்றது என்னுங்கருத்து விளங்க 'நிரம்பிற்று' என்றான். (௭௮)

மீன்கொண்டூ டாடும் வேலை மேகலை யுலக மேத்தத்
தேன்கொண்டூ டாடுங் கூந்தற் சிற்றிடைச் சீதை யென்னு
மான்கொண்டூ டாடி நீயுன் வாள்வலி யுலகங் காண
யான்கொண்டூ டாடும் வண்ண மிராமனைத் தருதி யென்பாள்.

இ - ள். மீன் - மச்சங்கள், கொண்டு - (தமக்கு இருப்பிடமாகக்) கொண்டு, ஊடாடும் - நடமாடுகின்ற, வேலை மேகலை - கடலாகிய மேகலையையுடைய, உலகம் ஏத்த-

உலகத்திலுள்ளவர்கள் துதிசெய்யுமாறு, தேன் - வண்டுகள், கொண்டு - (தமக்குருப்பிடமாகக்) கொண்டு ஊடாடும் - நடமாடுகின்ற, கூந்தல் - கூந்தலையும், சிறு இடை - சிறிய இடையையுமுடைய, சீதை என்னும் மான்கொண்டு - சீதையென்கிற மானைக்கைக்கொண்டு, நீ—, ஊடாடு - (அதனோடு) பழகுவாயாக, ஊடு - இடையே, யான் கொண்டு நான (இராமனைக்கைக்) கொண்டு, ஆடும் வண்ணம் - (என் சினந்தீருமபடி) விளையாடுமாறு, உன் வாள்வலி உலகம் காண - உனது வாளாயுதத்தினுடைய வலிமையை உலகத்திலுள்ளோர் காணும்படி, (வென்று), இராமனை—, என்பால் - என்னிடத்து, தருதி - (பிடித்துத்) தருவாயாக. (எசு)

தருவது விதியே யென்றாற் றவம்பெரி துடைய ரேனும்
வருவது வருநா ளன்றி வந்துகை கூட வற்றோ
வொருபது முகமுங் கண்ணு முருவமு மார்புந் தோள்க
ளிருபதும் படைத்த செல்வ மெய்துவ தினிநீ யெந்தாய்

இ - ள் எந்தாய்—, பெரிது தவம் உடையரேனும் - மிகுந்த தவமுடையராயினும், தருவது விதியே என்றால் - (அவர் விரும்பியதை யவர்க்குத்) தருவது ஊழே யென்றிருக்குமாயின், வருவது - வரத்தக்கது, வருநாள் அன்றி - வரப்பட்டகாலத்தில் அல்லாமல், வந்து கைகூடவற்றோ - (அகாலத்தில்) வந்து கைகூடும்வலிமையுடையதாமோ, ஒருபது முகமும் - பத்துமுகங்களும், கண்ணும் - (இருபது) கண்களும், உருவமும் - (பெரிய) ரூபமும், மார்பும் - (திடமபொருந்திய) நெஞ்சும், தோள்கள் இருபதும் - இருபதுபுயங்களும், படைத்தசெல்வம் - பொருந்தியசிறப்பை, நீ எய்துவது - நீ அடைவது, இனி - இனிமேல்தான்.

குறிப்பு —இதனமுன்பு பெற்ற இன்பமெல்லாம் ஓரின்பமல்ல சீதையைப் பெற்றபின் எய்தும் இன்பமே இன்பம் என்பாள் 'எய்துவதினி, என்றாள். (அ0)

இன்னவ டன்னை யுன்பா லுய்ப்பலென் றெடுக்க லுற்ற
வென்னையவ் விராமன் றம்பி யிடைபுகுந் திலங்கு வாளான்
முன்னைமூக் கரிந்து விட்டான் முடிந்ததென் வாழ்வு முன்னின்
சொன்னபி னுயிரை நீப்பான் றுணிந்தனெ னென்னச் சொன்னாள்.

இ - ள். இன்னவள் தன்னை - இத்தன்மையுடையவளை, உன்பால் - உன்னிடத்து, உய்ப்பல் என்று - சோப்பேனென்று நினைத்து, எடுக்கல் உற்ற என்னை - எடுத்த என்னை, அ இராமன் தம்பி - அந்த இராமனுடைய தம்பி (இலக்குமணன்), இடை புகுந்து - மத்தியிற் புகுந்து, இலங்குவாளால் - பிரகாசிக்கின்ற வாளாயுதத்தால், முன்னை - முதலில், மூக்கு அரிந்து விட்டான் - (என்) மூக்கையறுத்து விட்டான், முன்னின் - யோசிக்குங்கால், (மூக்கறுபட்ட அன்றே), என் வாழ்வு முடிந்தது - என்னுடைய வாழ்க்கை முடிந்து போய் விட்டது, சொன்னபின் - (இச்சங்கதியை உன்னிடத்திற்) சொல்லிய பிறகு, உயிரை நீப்பான் - உயிரை நீக்கும் பொருட்டு, துணிந்தனென் - நிச்சயித்தேன், என்ன சொன்னாள் - என்று கூறினாள்

குறிப்பு —தமையன் 'முன்னிலையில் முலையையரிந்தமை கூறுதலியலாதாதலின் அதனைச் சொல்லாமலே அவனறிந்து கொள்ளுமாறு 'முன்னை மூக்கரிந்து விட்டான்' என்றாள். முடிந்ததென் வாழ்வும் எனக்கொண்டு உன்னின் சொன்னபின் என்றது உன்னிடத்திலிதைச் சொல்லிய பிறகு எனக்கொள்ளினுமமையும். ()

கோபமு மறனு மானக் கொதிபபுமென் றினைய வெலலாம்
பாபநின் றிடதது நிலலாப பெறறிபோற பறறு விடட
தீபமொன் றொன்றை யுறறூ லென்னலாஞ் செயலிற புககத
தாபமுங காம நோயு மாருயிர் கலநத வனறே

இ - ள். கோபமும்—,மறனும - வீரமும, மானம கொதிப்பும - வெடகததா லாகிய உளளககொதிப்பும, எனற இனைய எலலாம - எனற இததனமையனவனைத தும, பாபம நினற இடதது நிலலா பெறறிபோல - பாபமானது நிலைததிருநத இடததில நிறகாத செலவமபோல, பறறுவிடட - பறறுசலவிடடன, தீபம ஒனறு ஒனறை உறறூல் எனனல ஆம செயலில - ஒருதீபம மறறொருதீபததை யடைநதா லெனறு கூறுதலிலாகினற செயலைபபோல, புககதாபமும காமநோயும - (தனம னததிற) புகுநததனபமும காமநோயும, ஆர உயிாகலநத - அரிய உயிரிறகலநதன

குறிபபு —பெறறி - பேறு, மணிமேகலை மநதிரஙகொடுததகாதையில் "பிறவி யளாயினள பெறறியமைதென" எனவும, சிலப்பதிகாரம் அடைககலககாதையில "பிணிபபறுத தோரதம பெறறி யெயதவும்" எனவுங கூறியவிடததுப பெறறியென பது பேறு எனனுமபொருளில வநதமையறிக ஒரு தீபவொளியோடு மறறொருதீ பததின ஒளியும சோநதால அததீபததினொளியிது இததீபததினொளி யதுவெனறு பிரிததுக் கூறுதறகு இயலாததனமையாய ஒரே ஒளியாய தோனறுவதுபோலத தாபமுங காமமும பிரிததுக கூறுதறகியலாமல ஒனறாய அவனுயிரிறகலநதன வெனபது ஈறறிரணடடியின கருதது ஈணடு உயிரெனறது - உருவம், வேதனை, குறிபபு, பாவனை, விஞ்ஞானமெனனும பஞசஸகநதககூடடததை. "கவையொப பன கைவிர லைநதுகளு, மிவையிபபடி கைபிடி யெனறதுபோ, லவையபபடி கநத ஙகளைநதுகளு, நவையபபடு நலலுயி ராமெனவும" எனனும நீலகேசித்திரட்டு, புததவாதசசருககச செயயுளால பஞசஸ்கநதககூடடம உயிராதல காணக. அக கநதம ஐநதனுள உருவம எனபது - பூதவுரு உபாதாயவுருவென விருவகைப்படும. பூதவுரு - பிருதுவி, அபபு, தேயு, வாயுவெனனு நானகுமாம. உபாதாயவுரு - வலி, கநதம, இரதம, வனனமெனனு நானகுமாம. வேதனை எனபது குசலவேதனை (சுகவறிவு), அகுசலவேதனை (துககவறிவு), குசலாகுசலவேதனை (சுகதுககவ றிவு) எனனு மூனறுமாம குறிபபு எனபது - மெய, வாய, கண, மூககு, செவி எனனும ஐநதும மன மொனறுமாகிய ஆறுமாம பாவனையாவது மனோவாககுக காயஙகளினுணடாகும நலவினை பததும, தீவினை பததுமாகிய இருபதுமாம தீவி னை பதது - கொலை, களவு, காமம, பொய, குறளை, கடுஞசொல, பயனிலசொல, வெஃகல, வெகுளல, பொலலாககாடசி யெனபன நலவினை பதது - பளளி வலமபுரிதல, தவஞசெயதல், தானஞசெயதல, மெயயுரை, நலவாாததை, இனியன கூறல, பயனபடு சொறகூறல, அருணினைவு, ஆசையறுததல, தவபபறறு எனபன இவவுருவம, வேதனை, குறிபபு, பாவனை எனனும நாலவகையினும எயநது ஐய மற வெணணும எணணம விஞ்ஞானமாம.

'சுவரும் மரமும ஆககையும் கறறையுஙகூடின சமுதாயததை வீடெனறு வழ ஙகுமாறு போலவும, பலவூருஙகூடின சமுதாயததை நாடென்று பறறெனறு வழ ஙகுமாறுபோலவும், பஞசஸ்கநதககூட்டததை ஆனமாவெனறு வழஙகுமது கறப ஞாமமெனக கொளக' என்றும, 'மரம கறறை முதலியவற்றைப் பிரிததால வீடில் லையாறைற போலவும் ஊாகளைப்பிரித்தாற் பற்றும நாடுமில்லையாறைறபோலவும ஐந

துஸ்கந்தங்களையும் பிரித்துணருங்கால் ஆன்மா இல்லையாமெனத் தோன்ற' என்றும் விளங்க அதற்கிறகு உதாரணங் காட்டினருமனா. (சிவஞானசித்தியார், பரபக்கவுரையாசிரியர்) மேறகூறிய ஐந்துஸ்கந்தங்களுளடங்கிய மனோவாக்குக் காய முதலியன வெல்லாம் அக் காமதாபமயமாகவே இருந்தன என்பார் 'ஆருயிர்கலந்த' என்றார். (அ௨)

கரனையு மறந்தான் றங்கை மூக்கினைக் கடிந்து நின்ற
வுரனையு மறந்தா னுற்ற பழியையு மறந்தான் வெற்றி
யரனையுங் கொண்ட காம னம்பினான் முன்னைப் பெற்ற
வரனையு மறந்தான் கேட்ட மங்கையை மறந்தி லாதான்.

இ - ள். கேட்ட மங்கையை மறந்திலாதான் - (சூர்ப்பணகை சொல்லக்) கேள்வியுற்ற (சீதையென்னும்) பெண்ணை மறவாத இராவணன், கரனையும் மறந்தான் - கரன் இறந்துபோனதையும் மறந்துபோனான், தங்கை மூக்கினை கடிந்து நின்றான் உரனையும் மறந்தான் - (தனது) தங்கை சூர்ப்பணகையினது மூக்கையறுத்து நின்றவனுடைய வலிமையையும் மறந்துபோனான், உற்ற பழியையும் மறந்தான் - (தனக்குச்) சம்பவித்த அபகீர்த்தியையும் மறந்து போனான், வெற்றி கொண்ட அரனையும் காமன் அம்பினால் - ஜயங்கொண்ட சிவபிரானால் வருந்திய மன்மதனது (புஷ்ப) பாணத்தினாலே, முன்னை - பூர்வகாலத்தில், பெற்ற - அடைந்த, வரனையும் - தேவ வீகையையும் [சாபத்தையும்] மறந்தான்—,

குறிப்பு—உரன் - உரம், வரன் - வரம். காமனம்பினான் முன்னைப்பெற்ற வரமென்றது—அளகை நாயகன் றன்மகனாய நளகூபரனை விரும்பிவந்த அரம்பையைக்கண்டு காமுற்றுக் காமனம்பால் நொந்த விராவணன் அவ்வரம்பையை அவனெண்ணத்துக்கு விரோதமாக வலிந்துபுணர்ந்ததொடங்க அவள் சினந்து "வந்தி யாக்கீ மாநில மாதர்க்கு, சிந்தை யாலன்றி யாவரைத் தீண்டினும், கந்த வார்குழலார் கற்பெரியினால், வெந்து வீழ்தி....." என்று அவள் கூறிய சாபத்தை (அ௩)

சிற்றிடைச் சீதை யென்னு நாமமுஞ் சிந்தை தானு
முற்றிரண் டொன்றாய் நின்று லொன்றொழித் தொன்றையுன்ன
மற்றொரு மனமு முண்டோ மறக்கலாம் வழிமற் றியாதோ
கற்றனர் ஞான மின்றேற் காமத்தைக் கடக்க லாமோ.

இ - ள். சிறு இடை சீதை என்னும் நாமமும் - சிறிய இடையையுடைய சீதை யென்கின்றபெயரும், சிந்தைதானும் - (தன்) மனமும், உற்று - பொருந்தி, இரண்டு - (அவை) இரண்டும், ஒன்றாய் நின்றால் - ஒன்றேயாய் (பேதமில்லாமல்) நின்றனவாயின், ஒன்று ஒழித்து ஒன்றை உன்ன - (அவற்றுள்) ஒன்றை நீக்கி மற்றொன்றை நினைப்பதற்கு, மற்று ஒரு மனமும் உண்டோ - வேறு ஒருமனமும் இருக்கின்றதோ? [இல்லை], (ஆகவே) மறக்கல் ஆம் வழி மற்று யாதோ - மறத்தற்காகிய மார்க்கம் வேறு எதுவோ? [எதுவும் இல்லை], கற்றனர் - படித்தோர்களுக்கு, ஞானம் இன்றேல் - அறிவில்லாமற்போனால், காமத்தை—, கடக்கல் ஆமோ - கடப்பதற்கு முடியுமோ? (அ௪)

மயிலுடைச் சாய லாளை வஞ்சியா முன்ன நீண்ட
வெயிலுடை யிலங்கை நாத னிதயமாஞ் சிறையில் வைத்தா

னயிலுடை யரக்க னுள்ள மவ்வழி மெல்ல மெல்ல
வெயிலுடை நாளி லுற்ற வெண்ணெயபோல வெதுமபிற் றன்றே.

இ-ள் நீண்ட எயில உடை இலங்கை நாதன் - நெடிய மதிலையுடைய இலங்கைக்கு அரசனாகிய இராவணன், மயில் உடை சாயலாளை - மயிலினுடைய சாயலையுடையாளாகிய சீதாபிராட்டியை, வஞ்சியா முன்னம் - வஞ்சனைசெய்து கொணராத முன்னமே, இதயம் ஆம் சிறையில் வைத்தான் - (தன்) மனமாகிய சிறைச்சாலையினிடத்தே வைத்தான், அயில உடை அரக்கன் உள்ளம் - வேலாயுதத்தையுடைய (இராவணனென்னும்) அவ்வரக்கனது மனமானது, அவ்வழி - அவ்விடத்து, வெயில உடைநாளில் உற்ற வெண்ணெயபோல - வெயிலையுடைய காலத்தில் [சூரியகிரணம்படுவதில்] சேர்ந்த வெண்ணெயைபபோல், மெல்ல மெல்ல வெதுமபிற்று - மெள்ள மெள்ள வெப்பங்கொண்டு வாட்ட முற்றது. (௮௫)

விதியது வலியி னானு மேலுள விளைவி னானும
பதியுறு கேடு வந்து குறுகிய பயத்தி னானும
கதியுறு பொறியின வெய்ய காமநோய கலவி நோக்கா
மதியிலி மறையச செய்த தீமைபோல வளாந்த தன்றே

இ-ள் விதியது வலியினானும - ஊழினது வலிமையினாலும், மேல உள விளைவினாலும - இனிமேல உள்ள சமபவிப்புக்களாலும, பதி உறு கேடுவந்து குறுகியபயத்தினாலும - (தனது) பட்டினமாகிய இலங்கைக்குச் சமபவிக்கினற பொல்லாங்கு கிட்டியபயனாலும், கதி உறு பொறியின - விரைதலுற்ற அறிவினாலே, வெய்ய - கொடிய, காமநோய - காமப்பிணியானது, கலவி நோக்கா - படிப்பைக்கருதாத, மதியிலி - அறிவீனன், மறைய செய்த - தோன்றாமற போகும்படிசெய்த, தீமைபோல - பொல்லாங்கைப்போல, வளாந்தது - வளாந்தேறறது.

குறிப்பு — இவ்விராவணன் மூவுலகத்திகளையும் வென்று வரத்தினும் பலத்தினுஞ் சிறந்தவனாயினும் இவனும் அழிவது திண்ணம் என்பது தோன்ற 'விதியது வலியினானும்' என்றார் "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந்துறும்" என்றார் நாயனாரும். வேதவதியென்பவளுடைய கையை இராவணன் அக்கிரமமாயத் தொட்டகாலத்து அவள் சினந்து "ஏடா வுனக்கு மிலங்கைக்கு முன்னிலைக்குங் கேடாகத் தோன்றுவேன்" என்று கூறியபடி நடக்கப்போகிற செயல்கள் விளங்க 'பதியுறு கேடு வந்து குறுகிய பயத்தினானும்' என்றார் மாரீசன் இறத்தலும் சடாயு மடிதலும் கவந்தன் ஒழிதலும் சவரி முத்தியடைதலும் வாலி மடிதலும் சுக்கிரீவன் அரசுகோடலும் முதலிய சமபவங்கள் விளங்க 'மேலுள விளைவினானும்' என்றார் சீக்கிரத்திற் சீதையைக்கொணர்ந்து நினைத்தபடி முடிக்க ஆத்திரப்பட்ட அறிவினையுடையானென்பார் 'கதியுறு பொறியின' என்றார். "ஆத்திரக்காரனுக்கு அறிவு மட்டு" என்பது பழமொழி. கல்வியறிவில்லாதவன் செய்யுந் தீமைகளுக்கும், அத்தீமைகளின் பயனாக அவன் அடையுந் துன்பங்களுக்கும் அளவில்லையென்பதுபோல இராவணன் அறிவிழந்தவனாய்க்கொண்ட காமத்துக்கும், அதனால் அவனுக்கு நேருந் துன்பங்களுக்கும் அளவில்லையென்பது ஈற்றிரண்டடியின் கருத்து. (௮௬)

பொன்மய மான நங்கை மனமபுகப் புன்மை பூண்ட
தன்மையோ வரக்கன் றன்னை யயர்த்ததோர் தகைமை யாலோ

மனமதன வாளி தூவி நலிவதோா வலதத ளுனை
வனமையை மாறறு மாறறல காமததே வதிநத தனறே

இ - ள. பொன மயமான நஙகை - பொனனின மயமான (சீதையெனனும) பெணணிற சிறநதாள, மனம புக - (தன) மனததிற புகுமபடி, பூணட - அடைநத, தனமையோ - தனமையினுலேயோ? அரககன - அவவிராவணன, தனனை அயாததது ஓா தகைமையாலோ - தனனை மறநதிருபபதாகிய ஒரு தனமையினுலே யோ? மனமதன—, வாளி தூவி - பாணபபிரயோகஞசெயது, நலிவது ஓா வலததன ஆளுன - (அவவிராவணனை) வருததபபடுததுவதில வலலமையையுடையவனுனை வனமையை - (இராவணனது) வலிமையை, மாறறும - வேறு படுததும, ஆறறல - வலிமையானது, காமததே - (அவன கொணட) காமததினுல, வதிநதது - (மனமதன மாடடுத) தஙகியது

குறிபபு—இனி, ஈறறடிககு (தனனை வருததிய காமன மேற் சினஙகொளளாமல இராவணன தனது) வலிமையை வேறுபடுததும பொறுமையானது (அவன கொணட) காமததால (அவனிடததுத) தஙகியது எனறும பொருளகோடலாம. ()

எழுநதன னிருககை நினறுண டேழுல கததுளோரு
மொழிநதன ராசி யோசை முழஙகின சஙக மெஙகும
பொழிநதன பூவின மாரி போயினா புறததோ ரெலலா
மழிநதழி சிநதை யோடு மாடகக கோயில புககான.

இ - ள இருககை நினறு எழுநதனன - (இராவணன) தன இருபபிடததி னினறு மெழுநதான, ஆணடு - அபபொழுது, ஏழ உலகதது உளோரும - ஏழுலகத திலிருபபவாகளும, ஆசி மொழிநதனா - வாழததுககூறினுாகள, எஙகும சஙகம ஓசை முழஙகின - எவவிடததுஞ சஙகநாதஙகள முழஙகின, பூவின மாரிபொழிநதன - பூமழைபெயதன, புறததோா எலலாம போயினா - பககததிலிருபபவாகளெலலாரும (அவாவாிருபபிடததிறகுச) சென்றுாகள, அழிநது அழி சிநதையோடும - (அவவிராவணன) அழிநது அழிகினற [கெடடுததேறுத லிலலாது பினனுஙகெடுகினற] மனததுடனே, ஆடகம கோயில புககான - பொனனினுலாகிய ராஜமாளிகையிற புகுநதான (௮௮)

பூவினுல வேயநது செயத பொஙகுபே ரமளி கொஙகைத
தேவிமாா குழுவு நீஙகச சோநதனன சோத லோடு
நாவிநா றோதி நவவி நயனமுங குயமும புககுப
பாவியாக கொடுதத வெமமை பயபபயப பரநத தனறே

இ - ள பூவினுல வேயநது செயத பொஙகுபோ அமளி - புஷபஙகளினுல அலஙகரிததுச செயத உயாநத பெரிய படுககையினிடதது, கொஙகை தேவிமாா குழுவு நீஙக - முலைகளையுடைய (தன) மனைவிகளின கூடடம நீஙகலாக, சோநதனன - அடைநதான; சோதலோடும - (அஙஙனஞ) சோநதவளவில, பாவியா - (தனமனததில சீதாபிராடடியின உருவைப) பாவனைசெயது, (அபபாவனையால்) நாவிநாறு ஓதி - கஸ்தூரிவாசங கமழகினற கூநதலும, நவவிநயனமும - மானபோனற விழிகளும, குயமும - தனஙகளும், புக்கு - (தனமனததிற) புகுநது, கொடு

தத - (அவை) கொடுத்த, வெம்மை - வெப்பமானது, பயபபயப் பரந்தது - மெள்ள மெள்ள அதிகரித்தது,

குறிபபு —பயபபய - பையப பைய (அக)

வேறு

நூககலாக லாதகாத னூறு நூறு கோடியாயப
பூககவாச வாடைவீசு சீதநீர பொதிநதமென
சேககைவீக ரிநதுதிக கயஙகளெட்டை வெனறதோ
ளாககைதீய வுள்ளமைய வாவிவேவ தாயினுன

இ - ள நூககல் ஆகலாதகாதல -நீககுவதறகாகாத ஆசையானது, நூறுநூறு கோடியாய பூகக - நூறுநூறு கோடியாயுண்டாக, (அதனுல), வாசவாடை வீசு - வாசனைபொருநதிய காறறை வீசுகினற, சீதம நீர்பொதிநத - குளிர்சசிபொருநதிய நீர்தஙகிய, மெல சேககை - மிருது வான படுககையினது, வீ - புஷ்பஙகள, கரிநது-கருகி, திககயஙகள எட்டைவெனறதோள - திககியானைகள எட்டையும வெனற புயஙகளும, ஆககை - யாககையும [உட்லும்], தீய- தீநதுபோகவும, உள்ளம மைய - மனநதுககிககவும, ஆவி - (தனது) உயிர, வேவது ஆயினுன-வேகுவதானுன

தாதுகொண்டசீ தமேவு சநதுசநத மெனறளிர
போதுகொண்ட டுததபோது பொஙகுதீ மருநதினுல
வேதுகொண்ட தெனனமேனி வெநதுவெநது விமமுதீ
யூதுவன றுருததிபோ லுயிரததுயிரத துயஙகினுன

இ - ள சீதமேவுசநது - குளிர்சசிபொருநதிய சநதனததையும, சநதம மெல தளிர - அழகிய இளநதளிர்களையும, தாதுகொண்டபோது - மகரநதததைககொண்ட புஷ்பஙகளையும, கொணடு - (எடுததுக) கொணடு, அடுததபோது - (பணிவிடைபபெணகள) சமீபிததபொழுது, பொஙகு - மிகுகினற, தீ - நெருபபாகிய, மருநதினுல—, வேது கொண்டது என்ன - வேதுகொண்டதுபோல, மேனி - உடல, வெநது வெநது - மிகவும வேகுதலுறறு, தீ ஊது வல விமமு துருததி போல- நெருபபை ஊதுகினற வலிய பருதத துருததிபோல, உயிரதது உயிரதது- அடிககடி பெருமூசசுவிட்டு, உயஙகினுன - மனததளர்சசியடைநதான, (கூ௪)

தாவியாது தீதெனுது தையலாளை மெயயுறப
பாவியாத போதிலாத பாவிமாழை பானலவேல
காவியான கண்ணிமேனி காணமூளு மாசையா
லாவிசால நொநதுநொந தழுஙகுவானு மாயினுன

இ - ள. தையலாளை - சீதாபிராட்டியை, மெய உற பாவியாதபோது -; உண்மையாகத் (தனமனததுப) பாவனை செயயாத காலததில, இலலாதபாவி - (அழுஙகுதல) இலலாத பாவததையுடையராவணன, தா யாது-பகையெது, தீது (யாது)- குறறம் எது, எனுது - எனறுநினையாமல, மாழைபானல் வேல காவி ஆன - மாவடுவும கட்லும வேலும நீலோறபலமுமாகிய, கண்ணி - கணகளையுடைய சீதாபிராட்டியினது, மேனி காண மூளும ஆசையால் - திருமேனியைபபாரகக வேணடுமென

று எழுகின்ற அவாவினால், ஆவி - உயிரானது, சால நொந்து நொந்து - மிகவும் வருந்தி வருந்தி, அழுங்குவானும் ஆயினான் - துன்பமடைவானுமானான் எ-று.

குறிப்பு — தாவியாத, இ-சாரியை தாவியாது நின்றெனது கண்ணிமேனி காணமூளு மாசையாலென்கே அவ்வாசையே வேகந்தீயுமாமென்பதாயிற்று. நொந்து நொந்து - இவ்வடுக்கு மிகுதிப்பற்றி வந்தது. (௯௨)

பரங்கிடந்த மாதிரம் பரித்தபாழி யானையின்
கரங்கிடந்த கொம்பொடிந் திரங்கவென்ற காவலன்
மரங்குடைந்த தும்பிபோ லனங்கனவாளி வந்துவந்
துரங்குடைந்து நொந்துநொந் துளைந்துளைந் தொதுங்கினான்.

இ - ள். பரங்கிடந்த - பாரந்தங்கிய, மாதிரம் - திக்குக்களை, பரித்த - சுமந்த, பாழி - வலிமையையுடைய, யானையின் - அஷ்டகஜங்களினது, கரம் - துதிக்கையினிடத்து, கிடந்த - தங்கியிருந்த, கொம்பு - கொம்புகள், ஒடிந்து - ஒடிதலுற்று, இரங்க - (அவ்யானைகள்) அழும்படியாக, வென்றகாவலன் - வெற்றிகொண்ட மன்னனாகிய இராவணன், மரங்குடைந்த தும்பிபோல - மரத்தைத்துளைத்த வண்டுபோல, அநங்கனவாளி - மன்மதனது பாணங்கள், வந்து வந்து - அடிக்கடிவந்து, உரம் குடைந்து - (தன்) மார்பைக்குடைய (அதனால்), நொந்து நொந்து - மிகவுங் காமநோயுற்று, உளைந்து உளைந்து - மிகவும் உபாதியடைந்து, ஒதுங்கினான் - பதுங்கினான் [மன்மதன் காணுவாறு ஒளியலுற்றான்],

குறிப்பு — குடைந்து - செயவெனெச்சத்திரிபு. (௯௩)

கொன்றைதுன்று கோதையோடோர் கொம்புவந்தெ னெஞ்சிடை
நின்றதுண்டு கண்டதென் றழிந்தழுங்கு நீர்மையான்
மன்றலங்க லங்கன்மாரன் வாளிபோல மல்லிகைத்
தென்றல்வந்தெ திர்ந்தபோது சீறுவானு மாயினான்.

இ - ள். கொன்றை துன்று கோதையோடு ஓர் கொம்பு - கொன்றை மலர்கள் நெருங்கிய கூந்தலுடனே ஒரு கொம்புபோல்வாள், வந்து —, என் நெஞ்சிடை நின்றது கண்டது உண்டு என்று - என் நெஞ்சினிடத்து நிற்றலைக் கண்டதுண்டு என்று கூறி, அழிந்து - (தன் மனநிலை) கெட்டு, அழுங்கு நீர்மையான் - அழுகின்ற தன்மையை யுடையானாகிய அவ்விராவணன், மன்றல் தங்கு அலங்கல் மாரன் வாளிபோல - வாசனை தங்கிய (மகிழம்பூ) மாலையையுடைய மன்மதனது பாணம் போல, மல்லிகைத் தென்றல் - மல்லிகை மலர் நாற்றத்தோடு கலந்த தென்றற்காற்று, வந்து —, எதிர்ந்தபோது - சந்தித்தபொழுது, சீறுவானும் ஆயினான் - கோபிப்பவனுமானான். (௯௪)

அன்னகாலை யங்குநின் றெழுந்தழுங்கு சிந்தையா
னின்னவாறு செய்வெனென்றொ ரெண்ணிலா னிரங்குவான்
பன்னுகோடி தீபமாலை பாலையாழ் பழித்தசொற்
பொன்னனாரெ டுக்கவங்கொர் சோலையூடு போயினான்.

இ - ள். அன்னகாலை - அப்பொழுது, அங்குநின்று எழுந்து - அவ்விடத்தினின்றெழுந்து, அழுங்குசிந்தையான் - வருந்திய மனத்தினையுடையானும், இன்ன ஆறு செய்வென் என்று ஓர் எண் இலான் - (தன் துன்பந் தணித்துக்கொள்ளப் பரிகாரம்) இன்னவிதம் செய்வேன் என்று எண்ணும் ஒரு எண்ணமில்லாதவனும், இரங்குவான் - அழுகின்றவனுமாகிய அவ்விராவணன், பன்னு - (புகழ்ந்து) சொல்லப்படுகின்ற, பாலையாழ் - பாலையாழை, பழித்த—, சொல் - சொற்களையுடைய, பொன் அனார் - பொன்போன்ற (மேனியையுடைய) பெண்கள், கோடிதீபமாலை எடுக்க - ஒருகோடி தீபங்கள் வரிசையாக எடுத்துவர, ஓர் சோலை ஊடுபோயினான் - ஒரு சோலையினகட் சென்றான்.

குறிப்பு —எண் - எண்ணுவது, கருத்தாப்பொருள் விகுதி புணர்ந்துகெட்டது. பாலையாழ் - பாலைநிலத்தியாழ், இப்பாலையாழ்ன்ளே ஏழு பாலையிசை பிறக்குமாதலின் சிறப்புடைத்தாயிற்று, [சிலப்பதிகாரம், ஆய்ச்சியர்குரவை, ௨௦௫-வது பக்கத்தைப்பார்த்து இப்பாலையாழின் தன்மையுணர்க] பழித்த - பயனிலையுவமவுருபு, "அன்ன பிறவுங் கூறுங் காலைப் பலகுறிப்பினவே" என்ற தொல்காப்பியச் சூத்திரவிதிப்படி போந்தது, [என்ன' என்னும் உருபின் வேறுபாடு]. அனார், அன்ன என்னும் வினையுவமவுருபு, ஈண்டு உருவினுவமமாக நின்றது, "அன்னவென் கிளவி பிறவொடு சிவணும்" என்றாராகலின் [தொல்காப்பியம், உவமவியல் 2௦8] அங்கு - அசைநிலை. (௧௰)

வேறு.

மாணிக்கம் பனசம் வாழை மரகதம் வயிரந் தேமா
வாணிப்பொன் வேங்கை கோங்கம் அரவிந்த ராகம் பூகஞ்
சேணுயக்கு நீலஞ் சாலங் குருவிந்தந் தென்னம் வெள்ளி
பாணித்தென் பளிங்கு நாகம் பாடலம் பவள மன்றே

இ - ள் பனசம் மாணிக்கம் - பலாமரங்களுக்கு மாணிக்கத்தையும், வாழை மரகதம் - வாழை மரங்களுக்கு மரகதத்தையும், தேமா வயிரம் - மாமரங்களுக்கு வயிரத்தையும், வேங்கை ஆணிப்பொன் - வேங்கை மரங்களுக்கு ஆணிப்பொன்னையும், கோங்கம் அரவிந்தராகம் - கோங்கமரங்களுக்கு அரவிந்தராகத்தையும், பூகம் சேண் உய்க்கு நீலம் - கமுகமரங்களுக்கு நெடுந்தூரங்கடுநிறைச் செலுத்தும் நீலத்தையும், சாலம் குருவிந்தம் - ஆச்சாமரங்களுக்கு குருவிந்தத்தையும், தென்னம் வெள்ளி - தென்னை மரங்களுக்கு வெள்ளியையும், நாகம் பளிங்கு - புன்னை மரங்களுக்குப் பளிங்கினையும், பாடலம் பவளம் - பாதிரிமரங்களுக்குப் பவளத்தையும், பாணித்து - மதித்து [உவமை கூறி], என் - யாதுபயன் ?

கருத்து.—மரங்கள் இரத்தினங்களினுஞ் சிறப்புற்றிருந்தன வென்பதாம்.

குறிப்பு —மரகதம்—மரதகம். வயிரம்—வஜ்ரம் அரவிந்தராகம்—பதுமராகம், அசுவத்தாமாவைப் பரித்தாமாவென்று கூறுதல்போல இப்பதுமராகத்தைச் சாதுரியமாக இங்ஙனம் கூறுவர். நீலம்—நீலகாந்தி; சௌகந்தி யென்பதுமது. குருவிந்தம்—செம்மணி, இதனை இரத்தவிந்து என்றுங் கூறுவர். இம்மணிகளின் திறம் முதலியவற்றைச் சிலப்பதிகாரம், ஊர்காண்காதை 345, 346 பக்கங்களினும் கல்லாடம் 100-வது அகவற்பாவினுங்கண்டு தெளிக. (௧௧)

வானுற நிவந்த செங்கேழ் மணிமரந் துவன்றி வான
மீனொடு மலராக டமயின வேறுமை தெரித றேற்று
தேனுகு சோலை நாப்பட் செம்பொனமண் டபத்து ளாங்கோர்
பானிற வமளி சேர்ந்தான் பையுளுற் றுயங்கி னைவான்.

இ-ள் நிவந்த - உயர்ந்த, செங்கேழ்மணிமரம் - செந்நிறம்பொருந்திய இரத்தினம்போன்ற மரங்கள், வான உற துவன்றி - ஆகாயத்திற்பொருந்த நெருங்கி, வானம் மீன ஓடு மலர்கள் - வானத்திலுள்ள நட்சத்திரங்களும் (அங்கேத்தமரங்களிலுள்ள) புஷ்பங்களும், தமமின - அவற்றுள், வேறுமை தெரிதல் தேற்று - (இவை மலர்கள் இவை நட்சத்திரங்கள் என்னும்) வித்தியாசந் தெரிந்துகொள்ளுதலை அறியியாத, தேன உகு சோலை நாப்பண - தேன்சொரிகின்ற சோலைக்கு நடுவேயுள்ள, செம்பொனமண்டபத்துள் ஓர்பால நிற அமளி சேர்ந்தான- செம்பொனனிலாகிய மண்டபத்திலிருக்கிற பாலபோலும் வெண்ணிறமுள்ள ஒரு படுக்கையிற் சேர்ந்து, பையுள் உற்று உயங்கினைவான - (அவ்விராவணன்) துன்பமுற்று மனந்தளர்ந்து மெலிவானுயினன்,

குறிப்பு —ஆங்கு - அசை (௩௭)

கனிகளின மலரின வந்த கள்ளுணடு களிக ளன்ன
வனிதையா மழலை யினசொற் கிளளையுங் குயிலும் வணடு
மினியன மிழற்று கின்ற வியாவையு மிலங்கை வேந்தன
முனியுமென றவிந்த வாய மூங்கையா போன்ற வன்றே.

இ-ள கனிகளின - பழவர்க்கங்களினும், மலரின - புஷ்பவர்க்கங்களினும், வந்த - வந்ததான, கள - தேனை, உணடு - குடித்து, களிகள அன்ன - கட்குடித்து வெறியுற்றவர்களையொத்த, மழலையினசொல - மழலைச்சொற்போன்ற இனிய சொற்களையுடைய, வனிதையா - பெணகளும், கிளளையும - (மழலையின சொலலையுடைய) கிளிகளும, குயிலும - குயில்களும, வணடும - வணடுகளும, இனியனமிழற்றுகின்ற யாவையும - இனியவார்த்தைகளைப் பேசுகின்ற மற்ற எல்லாப்பறவைகளும, இலங்கை வேந்தன முனியும என்று - இலங்கைக்கரசனுகிய இராவணன கோபிப்பான என்று, அவிந்தவாய - பேசசொழிந்த வாயினையுடையனவாகி, மூங்கையா போன்ற - ஊமையர்களை ஒத்திருந்தன

குறிப்பு —மழலையின சொல - மதிப்பதீபம் (௩௮)

பருவத்தால் வாடை வந்த பசும்பனி யங்கக பாண
முருவிப்புக கொளித்த புண்ணிற குளித்தலு முளைந்து விம்மி
யிருந்ததான யாத டாவென றியம்பின னியமப லோடும
வெருவிப போயச சிசிர நீங்கி வேனிலவந் திறுத்த தன்றே.

இ-ள. பருவத்தால - (சிசிரம் என்னும்) இப்பருவத்தால், வாடைவந்த பசும்பனி - வடகாற்றோடு வந்த குளிர்ந்த பனியானது, அங்கண பாணம - மன்மதனது பாணமானது,* உருவி புகுந்து ஒளித்தபுண்ணில்- உருவிப்புகுந்து மறைந்த (மார்பின்) புண்ணினிடத்தே, குளித்தலும - படிந்தவளவில், உளைந்து விம்மி - கைகாலமுதலிய

விய உளைதலுற்று அழுது, அடா—! இருதுதான் யாது என்று இயம்பினன் - (இப்போதுற்ற) ருது எது? என்று சொன்னான்; இயம்பலோடும் - அங்ஙனம் சொன்னவளவில், வெருவி - அச்சமடைந்து, சிசிரம் நீங்கி போய - சிசிரகாலம் நீங்கிப் போய், (உடனே) வேனில் வந்து இறுத்தது - வேனிற்காலம் வந்து சேர்ந்தது,

குறிப்பு—இருது - பருவம் சிசிரம் - பின்பனிக்காலம் 'பருவத்தால் வாடை வந்த பசும்பனி, எனவே இக்காலம் பின்பனிக்காலத்துக்குரிய பங்குனிமாதமென்றல் காண்க, "வெங்கணேவேள் வில்விழாக் காணும், பங்குனி முயக்கத்துப் பனியரசியாண்டுளன்" என்றார் இளங்கோவடிகளும் (௯௯)

வன்பணை மரமுந் தீய மலைகளுங் குளிர வாழு
மென்பனி யெரிந்த தென்றல் வேனிலை விளம்ப லாமோ
வன்பெனும் விடமுண் டாரை யாற்றலா மருந்து முண்டோ
வின்பமுந் துன்பந் தானு முள்ளத்தோ டியைந்த வன்றே

இ - ள் தீய வல் பணைமரமும் - (வெயிலின் கொடுமையால்) உஷ்ணத்தை யுடையவும் வலிய கிளைகளையுடையவுமாகிய மரங்களும், தீய மலைகளும் குளிர - (அவ்வெயிலாற் பெருஞ் சூடேறிய) மலைகளும் குளிர்ச்சியடையவும், வாழும் - வாழ்கின்ற, மெல் பனி-மென்மையான (சிசிரகாலத்துள்ள) பனியும், எரிந்தது என்றல் - வெதும்பியதென்றல், வேனிலை விளம்பல் ஆமோ - வேனிற் காலத்தின் வெம்மையைச்சொல்ல முடியுமோ? [முடியாது] அன்பு எனும் விடம் உண்டாரை ஆற்றல் ஆம் மருந்தும் உண்டோ - (கிடைத்தற்கரிய பெண்மேற் கொண்ட) ஆசையென்று கூறுகின்ற விஷத்தையுண்டவரைத் தணிப்பதற்காகிய மருந்தும் உண்டோ? [இல்லை], இன்பமும் துன்பந்தானும் - இன்பதுன்ப மென்னும் இவ்விரண்டும், உள்ளத்தோடு இயைந்த - (அவன்) உள்ளத்திற் பொருந்தின

குறிப்பு—தீய - மதிப்ப தீயம் தீயமரம்-கொடுமையையுடைய கள்ளி முதலியனவாம் "உருப்பமொண் டிறைக்குங் கள்ளி நீழல்" என்றார் பரஞ்சோதிமுனிவர். இன்பம் - வேனிலாற்சற்றே மகிழலாமென்று கொண்ட மகிழ்ச்சி. பணை -பருமையுமாம் வேனல் என்னும் பாடத்துக்கும் வேனில் என்றே பொருள் "வேனற்பாணிக் கலந்தாண் மென்பூந் திருமுகத்தைக், காணற்பாணிக்கலந்தாய் காண" என்புழி வேனல் வேனிலாதல் காண்க [சிலப்பதிகாரம், வேனிற்காதை 210-வது பக்கம்] வேனில் - இளவேனில், வசந்தகாலம் (௪00)

மாதிரத் திறுதி காறுந் தன்மனத் தெழுந்த மையல்
வேதனை வெப்பஞ் செய்ய வேனிலும் வெதுப்புங் காலை
யாதிங் கிதனின் முன்னைச் சிசிரநன் றிதனை நீக்கிக்
கூதிராம் பருவந் தன்னைக் கொணருதி விரைவி னென்றான்.

இ - ள். தன்மனத்து எழுந்த மையல் வேதனை வெப்பம் - (இராவணன்) தனது மனத்தின்கண் எழுந்த காமவெறியாற்கொண்ட வேதனையாலாகிய வெப்பமானது, மாதிரத்து இறுதி காறும் செய்ய - திசைகளின் முடிவுவரையிலும் (வெம்மையைச்) செய்துநிற்க, வேனிலும்-இளவேனிலும், வெதுப்பும் காலை-(அவன்மேனியை) வாட்டும்பொழுது, இது யாது - இந்த ருதுயாது? இங்கு - இவ்விடத்து, இத

னின் - இந்த ருதுவைக்காட்டிலும், முன்னை சிசிரம் வேறு - முந்திய பின்பனிப்பருவம் நன்மையையுடையது, இதனை நீக்கி - இந்த வசந்தருதுவை நீக்கி, கூதிர் ஆம் பருவந்தன்னை - (ஐப்பசி கார்த்திகை மாதங்களில் நிகழ்வதாகிய) குளிர்காலத்தை, விரைவின் கொணருதிர் என்றான் - விரைவிற் கொண்டுவாருங்கள் என்று கூறினான்.

கூதிர்வந் தடைந்த காலை கொதித்தனன் குலவுத் திண்டோள்
சீதமுஞ் சுடுமோ முன்னைச் சிசிரமே காணி தென்றான்
ஆதியா யருளு மன்றே யருளல தியற்ற வென்ன
யாதுமிங் கிருந்து வாகா தியாவையு மகற்று மென்றான்

இ - ள். கூதிர் வந்து அடைந்த காலை - (அவனிட்ட கட்டளையின்படி) கூதிர்ப்பருவம் வந்து சேர்ந்தபொழுது, குலவு திண்டோள் கொதித்தனன் - (அவனுடைய) திரட்சிபொருந்திய வலிய புயங்கள் கொதிப்புற்றன, சீதமும் சுடுமோ - குளிர்ச்சியென்பதும் சுடுமோ? [சுடாது] இது முன்னை சிசிரமே காண் என்றான் - இது முன் வந்த சிசிரமே தான் என்று (அவ்விராவணன்) கூறினான், (அப்போது ஏவல் செய்வோர்கள்), ஆதியாய் - முதல்வனே! அருள் அலது இயற்ற - கருணையல்லாததைச் செய்ய, அருளும் அன்றே - இப்பருவங்கள் பயப்படுமல்லவா? என்ன - என்று கூற, இங்கு - இவ்விடத்து, இருந்து யாதும் ஆகாது - பருவம் எதுவும் (நன்மையைச் செய்யுமென்று கருதற்கு) ஆகாது, யாவையும் அகற்றும் என்றான் - பருவங்களெல்லாவற்றையும் நீக்கிவிடுங்களென்று (அவ்விராவணன்) கூறினான். (௪௦௨)

என்னலு மிருது வெல்லா மேகின யாவுந் தத்தம்
பன்னரும் பருவஞ் செய்யா யோகிபோற் பற்றுநீத்த
பின்னரு முலக மெல்லாம் பிணிமுதற் பாசம் வீசித்
துன்னருந் தவத்தி னெய்துந் துறக்கம்போற் றோன்றிற் றன்றே.

இ - ள். என்னலும் - என்று கூறியவளவில், இருது எல்லாம் ஏகின - ருதுக்களெல்லாம் சென்றன, (அன்றியும்), யாவும் - அவ்வருதுக்களனைத்தும், பன்னரும் - சொல்லுதற்கரிதான, தத்தம் பருவம் செய்யா - தத்தமக்குரிய பருவங்களினது செயல்களைச் செய்யாமல், யோகிபோல் - யோகிகளைப்போல், பற்று நீத்த - பற்று நீத்தன, பின்னரும் - பின்னும், உலகம் எல்லாம் - உலகம் முழுதும், பிணிமுதல் பாசம் வீசி - நோய்முதலாகிய பந்தங்களை யறத்தொலைத்து, துன் - விளங்குகின்ற, அருந்தவத்தின் - அருமையான தவத்தினால், எய்தும் - அடைகின்ற, துறக்கம் போல - தேவலோகம்போல, தோன்றிற்று - காணப்பட்டது, அன்று, ஏ - அசைகள்.

குறிப்பு—காக்கத் தோலுரித்தாற்போல அகப்பற்றும் புறப்பற்றும் அறத்து இந்திரியவசமறுத்து முற்றத்துறந்து இருக்கும் யோகியர்களைப்போலப் பொய் கொலை களவு காமம் பொருளாசை முதலிய வெல்லாச் செயலுமற்று அசைவற்றிருந்ததாக என்பது முன்னிரண்டடியின் கருத்து. யோகம் எண்வகைய, அவை - இயமம், நியமம், ஆசனம், வளிநிலை, தொகைநிலை, பொறைநிலை, நினைதல், சமாதி யென்பன. அவற்றுள், "பொய்கொலை களவே காமம் பொருளாசை, இவ்வகை யைந்து மடக்கிய இயமம்" எனவும், "பெற்றதற் குவத்தல் பிழம்புகணி வெறுத்தல், கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை, பூசனைப் பெருமைய மாசாற களித்தலொடு, பயனுடை மரபி னிய

மமைந்தே" எனவும், "நிற்ற லிருத்தல் கிடத்த னடத்தலென், றொத்த நான்கினுள் நா னிலைமையோ, டின்பம் பயக்குஞ் சமய முதலிய, வந்தமில் சிறப்பி னாசன மாகும்" எனவும், "உந்தியொடு புணர்ந்த விருவகை வளியுந், தந்த மியக்கந் தடுப்பது வளிநிலை" எனவும், "பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாமை, யொருவகைப் படுப்பது தொகைநிலை யாமே" எனவும், "மனத்தினை யொருவழி நிறுப்பது பொறைநிலை" எனவும், "நிறுத்திய வம்மன நிலைதிரி யாமற், குறித்த பொருளொடு கொளுத்த லதுநினைவே" எனவும், "ஆங்ஙனங் குறித்த வம்முதற் பொருளொடு, தான்பிற னாகாத் தகையது சமாதி" எனவும் வருவனவற்றாலறிக. அநித்தியமாய்த் தன்பத்திறக்கடமாய உயிரின் வேறாயுள்ள உடம்புக்கு வருத்தம்வருமென்று விடாமல் தவத்தைச் செய்து அதன்முன் அநாதியாய பிறப்பு, பிணி, மூப்பு, இறப்பு என்பவற்றால் துன்பப்பட்டுக்கொண்டு வருமுயிரானது ஞானம்பெற்று மோட்சத்தையடைதல்போல அங்ஙனம் யோகநிலையடைந்தோர் இராவணன் ஏவலில்விளைந்த செயலாற் கடவுளைக்கருதித் துதிக்கும் ஞானத்தையடைந்து மோட்சம் பெற்றாற்போன்றிருந்தமையால் அவ்விலங்கை வீடுபோன்றிருந்ததென்பது பின்னிரண்டடியின் கருத்து. இக்கருத்துக்கியையத் துறக்கம் என்றற்கு வீடு என்றும் துன்னருந்தவம் என்பதற்குத் துன்னுதற்கு அரியதவமென்றும் பொருள்கூறுக. "தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வாரம்மற் றல்லா, ரவஞ்செய்வா ராசையுட் பட்டு" என்னுந் திருக்குறளானும், "நற்றுணைஞ் சில நடுங்காத் தவமறிவர் சிறப்பிந் நான்கும், மற்றாங்குச் சொன்ன மனைவியர் நால்வரவர் வயிற்றுட் டோன்றி, யுற்றொருத்தனே மேற்கதிக்குக் கொண்டுபோ மாவோன்" "இந்நால்வர் துணைவியராகக் காதன்மக்களிவனுடையார் போகிப், பொன்னார் மாபிற புரந்தரராய்ப் பூமி முழுது மாண்டு, மன்னார் முக்குடைக் கீழ் வாமன் சிறப்பியற்றி வரம்பிலின்பம், பின்னு விளைவித்துப் பிறவா வுலகெய்தல் பேசலாமே" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுட்களானும் தவத்தால் வீடுபெறுதலுணர்க. இனி, தவமுயன்றோர் போக பூமியின் இன்பத்தைப்பெற்றுப் பின்னர் அதனை இழந்துவிடுதல்போல இவ்விலங்கையாகுற்ற யோகநிலை யழிந்துவிடும் என்னுங் கருத்துந்தோன்றக் கூறினாரென்னலுமாம். இப்பொருட்குத் துறக்கம் தேவலோகமென்று பொருள் கூறுக. "பொன்னிலத் திட்ட வித்திற் புறக்கென விளைந்து போகம், பின்னெனத் துறக்கும்" என்னுஞ் சிந்தாமணிச்செய்யுளான் போகபூமியினின்பம் நிலையில்லாமையாதல் உணர்க. "தேனெய் தோய்ந்தன் திவ்விய திருமணி யனைய, வானி னுய்ப்பன வரகதி தருவன மதியோர்" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுட்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'தேனுகாவாகக்கு, அதுபுளிச் சுவையையுந் தருதலின், நிலையில்லாத துறக்கந்தருகின்ற அறத்திற்கு உவமையாயிற்று துறக்கத்தையும், வீட்டையுந்தருகின்ற இருவகையறமுங் கூறுகின்றது" என்று கூறிய வுரையும் ஈண்டு நோக்கற்பாலது. (௪௦௬)

கூலத்தா ருலக மெல்லாங் குளிர்ப்பொடு வெதுப்பு நீங்க
நிலத்தா ரரக்கன் மேனி நெய்யினற் றெரிந்த தன்றே
காலத்தால் வருவ தொன்றோ காமத்தாற் கனலும் வெந்தீச்
சீலத்தா லவிவ தன்றிச் செய்யத்தா னுவ துண்டோ.

இ - ள். கூலத்து ஆர் உலகம் எல்லாம் - கடற்கரையின் கண் தங்கிய உலக முழுதும், குளிர்ப்பொடு வெதுப்பு நீங்க - குளிர்ச்சியும் வெப்பமும் நீங்கினதால

நீலத்து ஆர் அரக்கன் மேனி - நீலத்தின் நிறத்தில் தங்கிய (இராவணன் என்னும்) அவ்வரக்கனுடைய உடலானது, நெய் இன்றி எரிந்தது - நெய்யில்லாமல் (நெருப்புப்பற்றி எரிவதுபோல்) எரிந்தது, காலத்தால் வருவது ஒன்றோ - காலத்தால் வரப்பட்டது ஒன்று தானோ? [ஒன்றல்லபல], காமத்தால் கனலும் வெந்தீ - காமத்தினாலே (உடலிற்பற்றி) எரிகின்ற கொடிய தீயானது, சீலத்தால் அவிவது அன்றி - நல்லறிவினால் அவியுந் தன்மையது அல்லாமல், செய்ய ஆவது உண்டோ - (இதரபரிகாரங்கள்) செய்வதால் (அவியுமச்செயல்) உண்டாவது முண்டோ? [உண்டாக மாட்டாது]

குறிப்பு—ஒவ்வொரு பருவத்தினும் அவ்வப்பருவங்களுக்கு ஏற்றபடி நிகழுஞ் சுக துக்கங்களையும், மன நிலைக்குத் தக்கபடி காலங்கள் நல்லவை தீயவையாகத் தோன்றுவதையும் உளப்படுத்தி 'காலத்தால் வருவதொன்றோ' என்றார். (௧௦௪)

நாரமுண் டெழுந்த மேகந் தாமரை வளைய நாறு
சாரமுண் டிருந்த சீத சந்தனத் தளிர்மென் றாதோ
டாரமுண் டிருந்துஞ் சிந்தை யயர்கின்றா னயனின் றாரை
யீரமுண் டென்ப ரோடி யிந்துவைக் கொணர்மி னென்றான்

இ - ள். நாரம் உண்டு எழுந்த மேகம் - நீரைப்பருகி எழுந்த மேகம்போன்ற இராவணன், தாமரை வளையம் - தாமரை வளையங்களும், நாறு சாரம் உண்டு இருந்த - பலவிதமான (வாசனைத்திரவியங்களுடைய) சாரங்களை யுண்டிருந்த, சீதம் சந்தனம் - குளிர்ச்சி பொருந்திய சந்தனத்தில் தோய்த்த, தளிர் - இளந்தளிர்களும், மெல் தாதோடு ஆரமும் - மெல்லிய பூந்தாதுகளும் பூமாலைகளும், உண்டு இருந்தும் - (தனது உடலில்) பொருந்தப்பெற்றிருந்தும், சிந்தை அயர்கின்றான் - மனந் தளர்கின்றவனாகி, அயல் நின்றாரை - பக்கத்தில் நின்ற சிலரை (நோக்கி), ஈரம் உண்டு என்பர் ஓடி - (எம்மனத்தே) கருணையுண்டு என்று சொல்பவர் (உங்களில் யாரோ? அவர்கள்) விரைந்து சென்று, இந்துவை கொணர்மின் என்றான் - சந்திரனைக்கொண்டு வாருங்களென்று கூறினான்

குறிப்பு—மேகம் - உவமவாகுபெயர் இவ்விராவணன் மேனியிற் குளிர்ந்த சந்தனாதிகள் சேர்ந்த தன்மைக்கும் அம்மேனியின் நிறத்துக்கும் நாரமுண்டெழுந்த மேகம் உவமை. தாமரை வளையம் - தாமரைப் பூச்சுருள், பீசமென்பதுமது ஆரம் தனிச்சந்தனமுமாம் ஈரமுண்டென்பர் என்றது - இராவணன் தனது ஆணைவழிநின்று ஏவல் செய்வோரைத் தன்பாற் கருணை புரியும்படி வேண்டி முகமன் கூறின தன்மை விளங்குகிறது. இனி, நெருப்பின் தன்மை பொருந்திய இச்சந்தனாதிகளிடத்துக் குளிர்ச்சியிருக்கிறதென்று சொல்லுங் கொடியோரெவரோ அவர்கள் என்கண்முன் நில்லாது ஓடிச்சந்திரனைக்கொண்டு வரக்கடவர் என்று கோபத்தோடு கட்டளையிட்டான் என்பது விளங்குகிறதென்று கூறலுமாம். அன்றியும் ஈரமுண்டென்பர் - (சந்திரனிடம்) குளிர்ச்சியுண்டென்று (உலகத்தார்) சொல்வார்கள், (ஆதலால்), என்னினுமமையும். (௧௦௫)

வெஞ்சினத் தரக்க னுண்ட வியன்கார் மீது போது
நெஞ்சில னொதுங்கு கின்ற நிறைமதி யோனை நோக்கி
யஞ்சலை வருதி யென்னை யழைத்தன னரச னென்னச்
சஞ்சலந் துறந்து தானச் சந்திர னுதிக்க லுற்றான்.

இ - ள். வெஞ்சினத்த அரக்கன் ஆண்ட வியல் நகர் மீது போதும் நெஞ்சினை ஒதுங்குகின்ற நிறை மதியோனை நோக்கி - வெவ்விய கோபத்தையுடைய (இராவணன் என்னும்) அரக்கன் அரசாட்சிசெய்த பெருமை பொருந்திய (இலங்கையென்னும்) நகர் மேற்செல்லும் மனமில்லாதவனாய் (அந்நகரத்துப்புறத்தே) ஒதுங்கிச்செல்கின்ற பூரணசந்திரனை (அச்சிலதாகள்) பார்த்து, அரசன் நின்னை அழைத்தனன் அஞ்சலை வருதி என்ன - (நமது) அரசன் உன்னை அழைத்தான் பயப்படாமல் வருவாயாக வென்று கூற, அ சந்திரன் சஞ்சலம் துறந்து உதிக்கல் உற்றான் - அந்தச்சந்திரன் மனக்கலக்கமொழிந்து உதயஞ்செய்தான்.

குறிப்பு — போதும் - செய்யுமென்னெச்சம், போதுதல் - செல்லுதல். தான் - அசை இனி, தானம் சந்திரனெனப்பிரித்துத் தானமென்றது வான் எனப் பொருள் கூறுதலுமாம். (௫௦௬)

> அயிருறக் கலந்த நன்னீ ராழிநின் றாழி நீத்துச்
> செயிருறக் கலந்த தாண்டோர் தேய்வுவந் துற்ற போது
> வயிரமுற் றுடைந்து சென்றோர் வலியவற் செல்லு மாபோ
> லுயிர்தெறக் கால னென்பா னொத்தன னுதயஞ் செய்தான்.

இ - ள். அயிர் உற கலந்த நல் நீர் ஆழிநின்று ஆழி நீத்து செயிர் உற கலந்தது - ஐயம் உறும்படியாக (நிலவோடு) கலந்த நன்மைபொருந்திய நீர்நிறைந்த கடலின் மேலநின்று வட்டவடிவை யொழித்துத் (தன்மனத்தில்) துன்பம் பொருந்தும்படி வந்து சோர்ந்ததாகிய அச்சந்திரன், ஆண்டு - அவ்விடத்து, உடைந்து வயிரம் உற்று சென்றோர் - (வலிய பகைவனால்) தளர்வுற்று வயிராக்கியத்தையடைந்து சென்றவர்கள், தாம் தேய்வு வந்து உற்றபோது - (அப்பகைவனுக்கு) ஒரு மெலிவுவந்து சமயம் வித்தபொழுது, வலியவன் செல்லும் ஆ போல - அவ்வலியவன்மேல் (அவர்கள் எதிர்த்துச்) செல்லுமாறுபோல, உயிர் தெற - (இராவணனது) உயிரை அழிக்க, காலன் என்பான் ஒத்தனன் - யமன் என்பவனை ஒத்தவனாகி, உதயம் செய்தான்.

குறிப்பு — நிலவின் ஒளியால் இத்தோற்றம் நிலவோ? கடல்நீரோ? என்று ஐயமுறுமாறு கடல்மேல் நிலவொளி பரந்ததென்பார் 'அயிருறக்கலந்த' என்றார். அயிர் - முதனிலைத்தொழிற்பெயர் அயிர் என்றது நுண்மணலென்று பொருள் கூறுதல் சிறப்பன்றாம். கடலால் உலகுக்குப் பலவகையான நன்மையுள வாதலானும், புவியையுண்ணுந் தன்மைத்தாயிருந்து மகனைமியற்றுது வரம்புக்குட்பட்டுப் பொறுமையோடிருத்தலானும் 'நன்னீர்' என்றார். கீழ்க்கவியிற் கூறியவாறு பூரணவுருவோடிருந்த அச்சந்திரன் இராவணனால் எத்தீங்கு நேருமோ என்றுற்ற ஏக்கத்தால் உருவழிந்து இளைத்தான் என்பார் 'ஆழிநீத்து' என்றார். இக்கவியிற் செயிருற என்றவர் கீழ்க்கவியிற் 'சஞ்சலந்துறந்தான்' எனக்கூறியதெற்றுக்கோவெனின், தன்னுள்ளத்துக் கவலையிருப்பினும் அதனை வெளிப்படுத்தாது இருப்பின் நலமென்றும் அன்றேல் அதுவே ஓர் குற்றமாக முடியுமென்றும் கருதினமை விளங்கற்கென்க. இராவணனது நிலைமைநோக்கித் தான் அஞ்சவேண்டுவதில்லையென்றும் தன்பகையைத் தீர்த்துக்கொள்வதற்கு இதுதான் தருணமென்றும் பெருமகிழ்ச்சியுற்றுப் பூரிப்புற்றுக் கோபித்துக் கோடிசூரியன்போல வெப்பங்கொண்டெழுந்தமை விளங்க அம்மதிக்கு மேற்கவியில் அரானவை துயிலும் அண்ணலின் நிலைமை உவமை கூறினார். (௫௦௭)

பராவரு கதிர்க ளெங்கும் பரப்பிமீப் படர்ந்து வானிற்
றராதலத் தெவரும் பேண வவனையே சலிக்கு நீரா
லராவணை துயிலு மண்ணல் காலமோர்ந் தற்ற நோக்கி
யிராவண னுயிர்மே லுய்த்த திகிரியு மென்ன லானான்.

இ - ள். (அச்சந்திரன்) வானில் மீப்படர்ந்து - (பூரித்துச் செருக்குற்று) ஆகாயத்தின்மேல் நடக்கலுற்று, பராவரு கதிர்கள் எங்கும் பரப்பி - புகழ்தற்கரிய (தனது) கிரணங்களை எவ்விடத்தும் பரவச்செய்து, தராதலத்து எவரும் - பூமியிலுள்ள எத்தகையாரும், பேண - விரும்ப, அவனையே சலிக்கும் நீரால் - (காமநோயுற்ற காலத்து) அச்சந்திரனையே சலித்துக்கொள்ளும் தன்மையினால், அரா அணை துயிலும் அண்ணல் - சர்ப்ப சயனத்தில் நித்திரைசெய்தருளுகின்ற ஸ்ரீ மகாவிஷ்ணு, காலம் ஓர்ந்து - (கெடுதி சம்பவிக்கும்) காலத்தை யறிந்தும், அற்றம் நோக்கி - (மெலிவுற்ற) சமயம் பார்த்தும், இராவணன் உயிர்மேல் —, உய்த்த - செலுத்திய, திகிரியும் என்னல் ஆனான் - சக்கராயுதத்தையும் (ஒத்தான்) என்று கூறுதற்கு (கோடி சூரியப்பிரகாசத்தை யுடையவனும்) ஆயினான். (௪௦௮)

அருகுறு பாலின் வேலை யமுதெலா மளைந்து வாரிப்
பருகினன் பரந்து பாய்ந்த நிலாச்சுடர்ப் பனிமென் கற்றை
நெரியுறு புருவச் செங்க ணரக்கற்கு நெருப்பி னாப்ப
ணுருக்கிய வெள்ளி யள்ளி வீசினா லொத்த தன்றே.

இ - ள். பாலின் வேலை - பாற்கடலில், அருகு உறு அமுது எலாம் - பக்கத்திலுற்ற அமிர்தம் முழுவதையும், அளைந்து வாரி - குழைத்து எடுத்து, பருகினன் - பருகி (குடித்து), பரந்து பாய்ந்த - பரவிப்பாய்தலுற்ற, நிலாச் சுடர் பனி மெல் கற்றை - நிலாவினது பிரகாசம் பொருந்திய குளிர்ச்சியையுடைய மெல்லிய திரளானது, நெரி உறு புருவம் செங்கண் அரக்கற்கு - நெரிதலுற்ற புருவத்தினையும் சிவந்த கண்ணையுமுடைய இராவணனுக்கு, நெருப்பின் நாப்பண் உருக்கிய வெள்ளி அள்ளி வீசினால் ஒத்தது - அக்கினியினிடையே உருக்கிய வெள்ளியை அள்ளி வீசினதை ஒத்திருந்தது.

குறிப்பு — சந்திரன் பாற்கடலிற் பிறந்த பொழுது அமுதம் பிறந்ததாதலால் 'அருகுறு' என்றார். இனி, அருகுறு என்றற்கு - அருகுறலுற்ற [சுருங்குதலுற்ற] என்று பொருள்கொண்டு கடலுக்கு அடையாக்கிக் கடைந்து அக்கடலிலுள்ள சத்துக்களையெல்லாம் கவர்ந்துகொண்டதால் சுருங்குதலுற்றதென்று கூறுதலும் அமையும். கோபித்து விழித்துப் பார்த்தமை விளங்க 'நெரியுறு புருவச் செங்கண்' என்றார். (௪௦௯)

மின்னிலந் திரிந்த தன்ன விழுநிலா மிதிலை சூழ்ந்த
செந்நெலங் கழனி நாடன் றிருமகள் செவ்வி கேளா
னென்னலந் தொலைந்து சோரு மரக்கனை நாளுந் தோலாத்
துன்னல னொருவன் பெற்ற புகழெனச் சுட்ட தன்றே.

இ - ள். விழுநிலா - மேன்மைபொருந்திய சந்திரன், மின்னிலம் திரிந்தது அன்ன - மின்னல் நிலத்தின்கண் திரிந்ததையொத்த, செந்நெல்சூழ்ந்த அம் கழனி மிதிலைநாடன் திருமகள் - தேடசெண்ணடைசூழ்ந்த அழகிய வயல்களையுடைய மிதி

லைநாட்டு வேந்தனாகிய ஜனகமகாராஜனது செல்வியாகிய சீதாபிராட்டியின் நாயக னாகிய ஸ்ரீராமபிரானது, செவவி - அழகினை, கேளா - கேளவியுறறு, நல நலம தொ லைநது சோரும அரககனை- நலல மகிழசசிநீஙகித தளாகினற இராவணனை, நாளுட- னறும, தோலா - தோலவியடையாத, தனனலன ஒருவனபெறற - ஒருபகைவன அடைநத, புகழ என - புகழைப்போல, சுட்டது—,

குறிபபு —மகன - கணவன. புகழ சநதிரனுககு உவமை ௧௪௦)

கருஙகழற கால னஞசுங காவலன கருததது நோககித
தருஙகதிர்ச சீத யாககைச சநதிரற றருதி ரெனன
முருஙகிய தணலின மூரி விடததினை முககககுஞ சீறறத
தருஙகதி ாருககன றனனை யாரழைத திரக ளெனறான

இ - ள. கருஙகழல காலன அஞசும காவலன - பெருமை பொருநதிய கழலினை யணிநத காலினையுடையானாகிய காலனும அஞசுகினற அரசனாகிய இராவணன, கருததது நோககி - (என) உளளககருததை யறிநது, தரும கதிர - தருகினற கிரணஙகளையுடைய, சீத யாககை - குளிர்சசிபொருநதிய உடலினையு டைய, சநதிரன தருதிர எனன - சநதிரனைக கொணடுபீாகள என்று (யான) கூற, முருஙகிய தணலின - கெட்ட நெருபபைபபோனற, மூரி விடததினை -வலிய விஷ ததை, முககும - முககினற, சீறறதது - கோபததினையுடைய, அருஙகதிர அருக கன தனனை -அரிய கிரணஙகளையுடைய சூரியனை, யார அழைததீாகள எனறான ஏவர அழைததுவநதீாகள? என்று கூறினான.

குறிபபு —காலன - யமன முகததல - மொளளல. (௧௪௧)

அவவழிச சிலதா ரஞசி யாதியா யருளில லாரை
யிவவழித தருது மெனப தியமபலா மியலபிற றன்றால
செவவழிக கதிரோ னென்றுந தேரினமே லனறி வாரான
வெவவழித தெனினுந திஙகள விமானததின மேல தென்றார

இ - ள. அவழி சிலதா அஞசி - அவ்விடததிய வேலைககாராகள பயநது, ஆதியாய - முதலவனே! அருள இலலாரை - கருணையிலலாதவாகளை, இவ்வழிதரு தும எனபது இயமபல ஆம இயலபிறறு அன்று - இவவிடதது (அழைததுவநது) தருவோம என்று சொலவதானது சொலவதறகாகிய தனமையையுடையதன்று, செவவழி கதிரோன -நேரவழியையுடைய சூரியன, என்றும - எககாலததும, தேரி ன மேல அனறி வாரான - இரததினமேல அலலாமல வரமாட்டான, வெவவழி த்து எனினும -வெவவிய தனமையையுடையதென்றாலும, விமானததின மேலது - விமானததினமேலிருபபது, (ஆதலால), திஙகள -(காணபபடுவது) சநதிரனே, என்றா- என்று வறபுறுததினாாகள.

வேறு

பணநதா மூலகுற பனிமொழியாாக கனபு பட்டார படுஙகாமக
குணநதான முனன மறியாதான கொதியா நினறான மதியாலே
தணநதா மரையின றனிபபகைஞ னென்னுந தனமை யொருதானே
யுணாநதா னுணாவுற றவன்மேலிட்டு யிாதந துயகக வுரைசெய்வான.

இ - ள். பணம் தாழ் அல்குல் பனிமொழியார்க்கு - பாம்பின்படம் போன்ற அல்குலையும் குளிர்ந்த சொல்லினையுமுடைய பெண்களுக்காக, அன்புபட்டார் - ஆசைப்பட்டவர்கள், படும் - அடைகின்ற, காமம் குணம் - காமத்தினது தன்மையை, முன்னம் அறியாதான் - (இதற்கு) முன் அறியாதவனும், மதியாலே—, கொதியா நின்றான் - கொதிக்கின்றவனுமாகிய இராவணன், தண் அம் தாமரையின் தனி பகைஞன் - குளிர்ச்சி பொருந்திய அழகிய தாமரைக்கு ஒருபகைவனாகிய சந்திரன், என்னும் - என்று கூறும், தன்மை - நிலைமை, ஒருதானே - ஒன்று மட்டுமே, உணர்ந்தான் - அறிந்து, (பின்னர் அதன் மூலமாக), உணர்வு உற்று - உணர்ச்சியடைந்து, அவன்மேல் இட்டு - அச்சந்திரன்மேல் (நாட்டம்) வைத்து, உயிர் தந்து உய்க்க - உயிரைக்கொடுத்து இரட்சிக்கும்படி, உரை செய்வான் - சில சொற்களைக் கூறுவானாயினன்.

குறிப்பு —தாழ் - உவமவாசகம், மதி-சந்திரன், அறிவு, சந்திரனால் கொதிக்கின்றானெனவும், குளிர்ந்த சந்திரனால் மகிழவேண்டியிருக்க அதற்கு விரோதமாகக்கொதிப்பது அவன் புத்திமாறுபட்டதா லென்றும் இருவகையாகப் பொருள் படுமாறு 'கொதியா நின்றான் மதியாலே' என்றார். இனி, பணந்தாழ் . . .அறியாதான், என்வே இதுவரை எவ்வெம்மாதரை யிவனிச்சிப்பினு மவரையெல்லா மூறின்றெய்தினன் காமத்தாலொருவிதவுஹிம்சையு மநுபவித்திலன் என்பது குறிப்பிக்கப்பட்டது. சந்திரனை முதலிற் சூரியனென்று கருதிய ராவணன், தன்மேனியிற் கட்டிய தாமரை மலர்கள் தன்னைச் சுடுதலை நோக்கி, இக்கதிர் சூரியனே யாயின் இத்தாமரைகள் மகிழ்ந்து குளிர்ச்சியைத்தரும் சந்திரனன்மையால் அவை வெகுண்டு வெம்மை தருகின்றன என்று கருதிய ஒரு காரணத்தைக்கொண்டு தோன்றிய கதிரைச் சந்திரனென்று தீர்மானிக்க உணர்ச்சி பிறந்தது என்பது ஈற்றிரண்டடியின் கருத்து ஒருதானே - ஒப்பற்றதானே என்றும்பொருள்படும் (௧௧௩.)

தேயா நின்றாய் மெய்வெளுத்தா யுள்ளங் கறுத்தாய் நிலைதிரிந்து
காயா நின்றாய் நீயுங் கண்டார் சொல்லக் கேட்டாயோ
பாயா நின்ற மலர்வாளி பறியா நின்றா ரின்மையலா
லோயா நின்றே னுயிர்காத்தற் குரியா ரியாவ ருடுபதியே.

இ - ள் உடுபதியே - நட்சத்திரங்களுக்கு அரசனாகிய சந்திரனே! (மெய்) தேயாநின்றாய் - உடல் தேய்கின்றாய், மெய்வெளுத்தாய் - உடல் வெளுப்புற்றாய், உள்ளம் கறுத்தாய் - மனத்திற் கோபமடைந்தாய், நிலைதிரிந்து - (உன்) தன்மை வேறுபட்டு, காயாநின்றாய் - காய்கின்றாய், ஒரு நீயும் - (என்னைப்போல) ஒருவனாகிய நீயும், கண்டார்சொல்ல கேட்டாயோ - (சீதையைக்) கண்டவர் (அவளழகையெடுத்துச்) சொல்லக் கேள்வியுற்றாயோ? பாயாநின்ற மலர்வாளி - (மையலுற்றார் மேற்) பாய்கின்ற புஷ்பபாணங்களை, பறியாநின்றாரின்மையலால் - பறிக்கின்ற பெண்மேற்கொண்ட காமவெறியினாலே, ஓயாநின்றேன் - தளர்கின்றேனுடைய, உயிர்காத்தற்கு - உயிரை இரட்சிப்பதற்கு, யாவர் உரியார் - எவர் உரிமையுடையவர்கள்.

குறிப்பு.—சந்திரனே! நீ என்னைப்போல் தேய்ந்தும் வெளுத்தும் உள்ளங் கறுத்தும் காய்கின்றதன்மையைப் பார்க்குமிடத்து நீயும் சீதையின் அழகைக்கேட்டு விரகமுற்றாய்போலும். நான் காமுற்ற தகைமையால் மன்மதன் பாணங்கள் என்மேற் பாய்கின்றன. நான் எவள்மேல் மையல்கொண்டேனோ அவள் என்போலும் மையல்கொள்ளாமையால் அம்மன்மதபாணங்களாகிய புஷ்பங்களைப்பறித்து வினை

யாமென்றான் அது எனக்குப் பொருமையா யிருக்கின்றது என உடலையந்த வெ ப்பத்தைக் குளிர்ந்த அமிர்தகிரணங்களையுடைய உன்னால் தணித்துக்கொள்ளலா மென உன்னை அழைத்தேன் நீயும் என்போல வெப்பங்கொண்டிருப்பதால் இனி எவரால் என் வெப்பச்சைத் தணித்துக்கொண்டு பிழைப்பேனென்று னென்பதாம்

ஆற்று ராகிற் றம்மைக்கொண் டடங்கா ரோவென் னுருயிர்க்குக்
கூற்றுய நின்ற குலச்சனகி குவளை மலர்ந்த தாமரைக்குத்
தோற்று யதனு னகங்கரிந்தாய் மெலிந்தாய் வெதும்பத் தொடங்கிணுய
மாற்றுர் செல்வங் கண்டழிந்தால் வெற்றி யாக வற்றுமோ

இ - ள் ஆற்றுர் ஆகில் - (தாங்கொண்ட விரகதாபத்தைத்) தணித்துக்கொள ளாதாராயின், தம்மை கொண்டு அடங்காரோ - (அவர்) தமது அறிவைக்கொண்டு அடங்கியிருக்க மாட்டார்களோ? என் ஆர் உயிர்க்கு கூற்றுய நின்ற குலம் சன கி - எனது அரிய உயிருக்கு யமனுய் நின்ற மேன்மை பொருந்திய ஜானகியினு டைய, குவளை மலர்ந்த - குவளைப் புஷ்பங்கள் விரிந்துள்ள [குவளைபோன்ற கண் களையுடைய], தாமரைக்கு - (முகமாகிய) தாமரைமலர்க்கு, தோற்றுய - தோல் வியடைந்தாய், அதனுல் - அக்காரணத்தால், அகம் கரிந்தாய் - மனங்கருகுதலுற் றும், மெலிந்தாய் - (உடல்) தேய்தலுற்றும், வெதும்ப தொடங்கிணுய - சினக்குறி ப்புக்காட்டத் தொடங்கிணுய, மாற்றுர் - பகைவருடைய, செல்வம் கண்டு - செல் வத்தைப்பார்த்து, அழிந்தால் - மனநிலை வேறுபட்டால், வெற்றி ஆக அற்று ஆ மோ - வெற்றி போலும் அத்தன்மைத் தாகுமோ?

கருத்து.—தாம் இச்சித்தபெண் தமக்குக்கிட்டி அவளைக்கொண்டு தமது விரக நோயை ஆற்றிக்கொள்ள முடியாதென்று ஏற்பட்டால் "கிட்டாதாயின் வெட்டெ ன மற" என்றவாறு மறந்து தமமறிவைக் கொண்டடங்கி விடுவார்கள் அதுபோல இராவணனுல் இச்சிக்கப்பட்ட பெண்ணை விரும்புவதிற் பயனில்லையென்று நீயே உன் அறிவைக்கொண்ட டங்கிவிடுவாய் ஆதலால் நீ விரகசாபத்தால் இளைத்தாய் என்று கூறுதற்கு நியாயமில்லை மற்றென்னையெனின், தாமரை மலர்கள் எல்லாம் நின்னைக்கண்டவுடன் வாட்டங்கொண்டு குவிதல்போலச், சீதையினுடைய முகமெ ன்னுந் தாமரையானது நின்னைக்கண்டு வாடாமல் மலர்ந்திருக்குந் தன்மை நோ க்கி, இதனை வெல்லுதற்கு வலியற்றேனே என்று நீகொண்ட விசனத்தால் இங்ங னந் தேய்ந்து வெதும்பத் தொடங்கிணுயேயல்லாமல் வேறல்ல என்பேன் மாற்று ருடைய செல்வங்கண்டு பொருமைப்படுதல் வெற்றியாகமாட்டாது. உனக்கு வலியில்லை யாயினும் உன் அரசனுகிய மன்மதனை அப்பெண்மேற் போர்செய்யச்செ ய்து யான் விரகதாப முற்றதுபோல அவளுக்கும் விரகதாபத்தை யுண்டாக்கிப் பின்னர் நீ செல்வாய் ஆகில் அவள் முகத்தாமரையைவெற்றி கொள்ளலாமென்று கூறினுனென்பதாம்　　　(௧௧௫)

என்னப் பன்னி யிடருழவா விரவோ டிவனைக் கொண்ட கற்றி
முன்னைப் பகலும் பகலோனும் வருக வென்றுன் மொழியாமு
னுன்னற் கரிய வுடுபதியு மிரவு மொழிந்த வொருநொடியிற்
பன்னற் கரிய பகலவனும் பகலும் வந்து பரந்தவால.

இ - ள். என்ன பன்னி இடர் உழவா - என்று சொல்லித் துன்பத்திலே வரு ந்தி, இரவோடு இவனை கொண்டு அகற்றி - இராக்காலத்தையும் இச்சந்திரனையும்

நீக்கிவிட்டு, முன்னை பகலும் பகலோனும் வருக என்றான் - முந்திய பகற்காலமும் சூரியனும் வரக்கடவதென்று கூறினன், மொழியா முன் - அங்ஙனங்கூறி முடிப்பதற்கு முன்னமே, உன்னற்கு அரிய உபேதியும் இரவும் ஒழிந்த - நினைத்தற்கரிய சந்திரனும் இராக்காலமும் ஒழிந்துபோயின, ஒருநொடியில் - ஒருநொடிப்பொழுதுக்குள், பன்னற்கு அரிய பகலவனும் - சொல்லுதற்கரிய சூரியனும், பகலும் - பகற்காலமும், வந்து—, பரந்த - பரவதலுற்றன.

குறிப்பு—இரவிற் காணப்படும் பொருள்களை இவை இன்னவையேயாமென்று நன்கு தெளிந்தறிதற்கியலாமையால் 'உன்னற்கரிய' என்றார் இனி, காமவிஷயங்களில் ஈடுபட்டு அடையும் அளவற்ற லீலைகளும் அவற்றிற்கு அநுசரணையாயிருக்கின்ற சந்திரன், தென்றல், மலர்கள், வாசனைத்திரவியங்கள், யாழ்ப்பாடல் முதலிய பாடல்கள், இன்சொற்கள், ஊடல் முதலியவைகளும் அளிக்கின்ற இன்பங்களை யெல்லாம் இத்தன்மையன வென்று ஒன்றொன்றாய்ப் பிரித்துக் கருதுதற்கரிய இரவு என்பப் பொருள்கோடலுமாம் (௧௧௬)

இருக்கின் மொழியா ரெரிமுகத்தி னீந்த நெய்யி னவிர்செம்பொ
னுருக்கி யனைய கதிர்பாய வனல்போல் விரிந்த துயர்கமல
மருக்க னெய்த வமைந்தடங்கி வாழா வடாத பொருளெய்திச்
செருக்கி யிடையே திருவிழந்த சிறியோர் போன்ற சேதாம்பல்

இ - ள் (அருக்கன் எய்த—), இருக்கின் மொழியார் - இருக்கு என்னும் வேதத்தின் சுருதிகளைச் சொல்லி யாகஞ்செய்பவர், எரி முகத்தின் ஈந்த - (யாககுண்டத்து) நெருப்பில் அளித்த [வார்த்த], நெய்யின் - நெய்யைப்போல, அவிர் செம்பொன் உருக்கி அனைய கதிர் - பிரகாசிக்கின்ற செம்பொன்னை உருக்கினாற்போன்ற (அச்சூரியனுடைய) கிரணங்கள், பாய—, (அதனால்), உயர் கமலம் - உயர்ந்த தாமரைமலர்கள், அனல்போல விரிந்தது - (அந்த யாககுண்ட) நெருப்பைப்போல மலர்ந்தன, அருக்கன் எய்த - சூரியன்வர, சேதாம்பல் - செய்ய ஆம்பல்மலர்கள், அடாத பொருள் எய்தி - (தாமடைதற்குத்) தகாத (உயர்ந்த) பொருளை அடைந்து, அமைந்து அடங்கி வாழா - (அப்பொருளடைந்ததற்கேற்ப) பொருத்தமாய் அடங்கி வாழாமல், செருக்கி - அகங்கரித்து, இடையே - மத்தியகாலத்தில், திரு இழந்த - அப்பொருளை யிழந்துவிட்ட, சிறியோர் போன்ற - சிறியவர்களை ஒத்திருந்தன

குறிப்பு—இருக்கின்மொழியார் - முனிவர். முகம் - ஏழனுருபு. நெய்யின்பாய என்று கூட்டுக. யாககுண்டத்துப் பெய்யும் நெய் சூரியகிரணத்துக்கும், யாகாக்கினி தாமரைமலருக்கும், முனிவர் - சூரியனுக்கும், அடாத பொருள் - சந்திரனுக்கும் உவமை. அருக்கனெய்த - இடைநிலைத் தீவகம் சந்திரகிரணத்தால் மகிழ்ந்து மலர்ந்த சேதாம்பல்கள் சூரியனுதித்தலுங் குவிந்தன என்பது ஏற்றிரண்டடியின் கருத்து. இராக்கால முடிதற்கு முன்பு சூரியனுதயமாய்ச் சேதாம்பல்களுகுவிய நேரிட்டமையான், அவற்றிற்குத் திருவிழந்த சிறியோரை உவமை கூறினார் இருக்கின் மொழியார் வெங்கதிருடனே சூழ்வரும் விளங்கிய சடையினையுடையாராகலின், அவர் சூரியனுக்கு உவமையானாரெனக. "நிலமிசை வாழ்நர்ரலமர றீரத், தெறுகதிர்க் கனலி வெம்மை தாங்கிக், காலுண வாகச் சுடரொடு கொட்கு, மவிர்சடை முனிவரும்" என்றார் புறப்பாட்டினும். (௧௧௭)

நாணி நின்ற வொளி மழுங்கி நடுங்கா நின்ற வுடம்பினனாய்ச்
சேணி னின்று புறஞ்சாய்ந்து கங்குற் றாரம் பின்செல்லப்
பூணின் வெய்யோ னொருதிசையே புகுதப் போவான் புகழ்வேந்த
ராணை செல்ல நிலையழிந்த வரசர் போன்றா னல்லாண்டான்.

இ - ள். அல் ஆண்டான் - இராக்காலத்தை ஆண்ட சந்திரன், பூணின் வெய்யோன் ஒரு திசையே புகுத - ஆபரணங்களை யணிந்த சூரியன் ஒரு திக்கிலே பிரவேசிக்க, (அதனால்), நாணிநின்ற ஒளிமழுங்கி - நாணம் அடைந்து நின்ற (தன்) ஒளியானது (முற்றும்) மழுங்குதலுற்று, நடுங்கா நின்ற உடம்பினனாய் - நடுங்குகின்ற உடம்பினையுடையானாகி, சேணில் நின்று புறம் சாய்ந்து - வானிலிருந்து ஒருபக்கமாகச்சாய்தலுற்று, கங்குல் தாரம் பின்செல்ல - இரவாகிய மனைவி (தன்) பின்னே செல்லும்படி, போவான் - செல்லுவோனாகி, புகழ்வேந்தர் ஆணைசெல்ல- புகழையுடைய அரசர்களது ஆணையானது நடக்க, (அதனால்), நிலை அழிந்த அரசர் போன்றான் - (தம்) நிலைமை கெட்ட அரசரை யொத்தானாயினன்,

குறிப்பு — ஆணை - ஆக்கினை, வெற்றி புகழ்வேந்தர் - சூரியனுக்கும், ஆணை - கிரணங்களுக்கும், நிலையழிந்தஅரசர் - சந்திரனுக்கும் உவமை (௧௧௮)

வேறு

மணந்தபே ரன்பரை மலரின் சேக்கையுட்
புணர்ந்தவ ரிடையொரு வெகுளி பொங்கலால்
கணங்குழை மகளிர்கள் கங்கு னீங்கிட
வுணர்ந்திலர் கனவினு மூடல் தீர்ந்திலர்.

இ - ள். கணம் குழை மகளிர்கள் கூட்டமாகிய குண்டலங்களை யணிந்த ராக்ஷஸப்பெண்கள், மணந்த - விவாகஞ்செய்து கொண்ட, பேர் அன்பரை - பெரிதான அன்பினையுடைய தங்கணவரை, மலரின் சேக்கையுள் - மலர்களால் வேய்ந்த படுக்கையினிடத்து, புணர்ந்தவர் - கலந்தவர்களாய், இடை ஒரு வெகுளிபொங்கலால் - மத்தியிலே ஒரு கோபம் மிகுந்ததால், ஊடல் - (கொண்ட) ஊடலானது, கனவினும் தீர்ந்திலர் -கனவினுங் கூட நீங்காமலிருந்தார்கள், (அத்தருணத்தில்) கங்குல் நீங்கிட - (இராவணன் ஏவலால்) இராக்காலம் ஒழிய, உணர்ந்திலர் (அதனை) யறியாதவர்களாயினார்கள்.

குறிப்பு — இரண்டு காதுகளிலும் பலகுழை அணிந்தாரென்பதும், அநேக முகங்களையுடைய பெண்கள் தமது அநேகமான காதுகள் தோறும் அநேககுண்டலங்களணிந்தாரென்பதுந்தோன்ற 'கணங்குழை' என்றார். இனி, கணங்குழையெனக்கொள்ளுங்கால் எதுகைநோக்கி னகரம் ணகரமாகத் திரிந்ததெனக் (௧௧௯)

தள்ளுறு முயிரினர் தலைவர் நீங்கலர்
னள்ளிர விடையுறு நடுக்க நீங்கலர்
கொள்ளையி னலர்தரு குவளை நாண்மலர்
கள்ளுகு வனவெனக் கலுழுங் கண்ணினார்.

இ - ள். நள் இரவு இடை - (பகலெனமாறிய) அர்த்தராத்திரியில், தலைவர் - நாயகர்கள், தள் உறும் உயிரினர் - (தம்மைத்) தள்ளுதலுற்ற உயிரையுடையவர்க

ராகி, நீங்கலால் - (தம்மைவிட்டுப்) பிரிந்தகாரணத்தால், உற்ற நடுக்கம் நீங்கலா - உற்ற நடுக்கமானது நீங்காத பெண்கள், கொள்ளையின் - (இரவு பகலாகிய) மிகுதியால், அலர்தருகுவளை நாண்மலர் - அன்றலர்ந்த நீலோற்பலமலர்கள், கள் உகுவன என - தேனைச் சிந்துவனபோல, கலுழும் - நீர்சிந்துகின்ற, கண்ணினர் - கண்களையுடையவர்களாயினார்கள்.

குறிப்பு — நாயகர் தமது நாயகிகளைப்பிரிய மனஞ் சிறிதுமில்லரேயாயினும் ராஜ சமூகத்துக்குக் குறித்தகாலத்திற் செல்லாவிடின் அவர்கள் உயிர்க்குத் தீங்குநேரிடு மாதலின் அவர் உயிர் அவரை ராஜசமூகத்துக்குச் செல்லத்தள்ளிற்று என்னும் பொருள் படமாறு 'தள்ளுற்று முயிரினர்' என்றார். இனி, ஊடலாற் புணர்ச்சிக்கிடங் கொடாது மாதரால் தள்ளுதலுற்ற அம்மாதரின் உயிர்போன்றவர்கள் என்றும் பொருள் கோடலாம். ஊடலுக்கிடங்கொடுத்துப் பயன்பெறாது வீணே பொழுது விடிந்ததென்று சஞ்சலமுற்றுத் தளர்வடைந்ததால் நடுக்கமுற்றாரெனக். கொள்ளையின்கள் எனக்கொண்டு தேனின் மிகுதியைக்கூறுதலுமமையும் (கஉ0)

அணைமலர்ச் சேக்கையு ளாடல் தீர்ந்தனர்
பணைக்கிளைத் தழுவிய பவள வல்லிபோல்
இணைமலர்க் கைகளி னிறுக வின்னுயிர்த்
துணைவரைத் தழுவினர் துயில்கின் றார்சிலர்.

இ - ள் சிலர் அணைமலர் சேக்கையுள் - சிலபெண்கள் (தலையணை முதலிய) அணைகளையுடைய புஷ்பமெத்தையில், ஆடல் தீர்ந்தனர் - விளையாட்டொழிந்தவர்களாயும், பணைக்கிளை தழுவிய பவளவல்லிபோல - மரக்கிளைகளைத்தழுவிய பவளக் கொடிபோல, துணைவரை - (தமது) நாயகர்களை, இணை மலர் கைகளின் - (தமது) மலர்போன்ற இரண்டுகைகளாலும். இறுக தழுவினர் - அழுந்தும்படியாக ஆலிங்கனஞ் செய்தவர்களாயும், துயில்கின்றார் - நித்திரை செய்தார்கள்

குறிப்பு —அணை - அணையப்படுவது செயப்படுபொருள் விகுதி புணர்ந்து கெட்டது. இனி, வினைத்தொகையாகக்கொண்டு கலவிசெய்தற்குரிய படுக்கையென்றும் பொருள்கோடலாம். பணை - அரக்கர் புயங்கட்கும், பவளவல்லி - பெண்கட்கும் உவமை மலர்க்கொடிகளுட் பவளவல்லி யென்றோர் கொடியின்மையால் இல் பொருளுவமை. (கஉக)

அளியினங் கடந்தொறு மார்ப்ப வாய்க்கதி
ரொளிபட வுணர்ந்தில வுறங்கு கின்றன
தெளிவில வின்றுயில் விளையுஞ் சேக்கையுட்
களிகளை நிகர்த்தன களிநல் யானையே

இ - ள் கடம் தொறும் ஆர்ப்ப - கடகுடங்கள்தோறும் ஒலிசெய்கின்றனவாகிய, அளி இனம் - வண்டுக்கூட்டங்கள், வாய்க்கதிர் - (அந்நள்ளிரவில்) வாய்ந்த சூரியனது, ஒளிபட - பிரகாசம் (தம்மேற்) பட, (அதனை), உணர்ந்தில - அறியாதவைகளாய், உறங்குகின்றன - தூங்கின, களிநல் யானை - செருக்குடைய நல்ல யானைகள், தெளிவு இல - (நித்திரைமயக்கத்) தெளியாதவைகளாய், இன்துயில் விளையும் சேக்கையுள் - இனிய நித்திரையுண்டாகும் படுக்கையின்கண், களிகளை நிகர்த்தன - கள்ளுண்டு வெறியேறினவர்களை ஒத்திருந்தன,

குறிப்பு—இன்றியில் என்பதை இடைநிலைத் தீவகமாகக்கொண்டு தெளிவில வென்பதொடுங் கூட்டலாம். (௧௨௨)

விரிந்துறை துறைதொறும் விளக்கம் யாவையு
மெரிந்திழு தஃகல வொளியி ழந்தன
வருந்துறை நிரம்பிய வுயிரி னன்பரைப்
பிரிந்துறை தருங்குலப் பேதை மாரினே.

இ - ள். அருந்துறை நிரம்பிய - அரியதுறை நிரம்புகலுற்ற, உயிரின் அன்பரை - (தமது) உயிர்போன்ற நாயகர்களை, பிரிந்து உறைதரும் - பிரிந்து (தனித்துத்) தங்கியிருக்கிற, குலம் பேதைமாரின் - குலஸ்திரீகளைப்போல, விரிந்து உறை துறைதொறும் - விரிவாயிருக்கின்ற இடங்கடோறுமுள்ள, விளக்கம் யாவையும் - தீபங்கள் அனைத்தும், எரிந்து—, இழுது அஃகல- நெய்யிற்குறையாதனவாய், ஒளி இழந்தன - பிரகாசத்தை இழந்திருந்தன.

குறிப்பு —அருந்துறை நிரம்பிய என்றது - மணஞ்செய்து கொண்ட தலைவன் அறம்பொருளின்பங்களின் பொருட்டுத் தலைவியைப் பிரிதலுற்றதை இது அகப்பொருட்டுறைப் பாற்படும் பிரிதற்குச்சிறிது மனமில்லாத தலைவன் பிரிந்தானென்பதும், "இன்று நின்னிலுறா வாழ்த லதனினு, மின்று இனியாப் பிரிவு" என்றவாறு கற்புடைத்தலைவிக்குத் தலைவன் பிரிவு தனியினனல் தருமாதலால் அப்பிரிவு அடிக்கடி நிகழ்தற்பாலதன்றென்பதுந் தோன்ற 'அருமை' என்னும் அடைமொழிதந்து கூறினார். "விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன், முயக்கற்றம் பார்க்கும் பசப்பு" என்றவாறு தலைவிக்குத்தலைவனது பிரிவாற்றாமையால் விளக்கம் என்னும் நாயகி மங்கலயஸ்திரீயென்னுந் தன்மைக்குக் குறைவில்லாமலிருந்தும் ஒளியிழந்தாள் என்பது கருத்து. வழக்கம்போல இராக்காலம் சென்று சூரியோதயமாயிருக்கும்பட்சத்தில் இக்கற்பனை கூறுரென்பதும் தலைவியைப் பிரிந்ததலைவன் தலைவி வருந்துவாளென்னும் எண்ணங்கொண்டு விரைந்து வந்து அவளைக்கூடுதல் போல பிரிந்த இரவு உடனே வந்து சேருமென்பதும் விளங்குதலறிக. (௧௨௩)

புனைந்த முரிஞ்சுறு பொழுது புல்லியும்
வனைந்தில வைகறை மலரு மாமலர்
நனந்தலை யமளியிற் றுயிலு நங்கைமா
ரனந்தரி னெடுங்கணோ டொத்த வாமரோ.

இ - ள். வைகறைமலரும் மாமலர் - விடியற்காலத்தில் மலர்கின்ற சிறப்புப் பொருந்திய மலர்கள், இதழ் - இதழ்களை, புனைந்து உரிஞ்சு - அழகுசெய்து விரியும்படி, உறு - சேர்கின்ற, பொழுது - சூரியோதயகாலம், புல்லியும் - புணர்ந்தும் [அடுத்தும்], வனைந்தில - மலர்தல் செய்யாதனவாய், நனந்தலை அமளியில் - அகன்ற இடத்தினையுடைய படுக்கையின்கண், துயிலும் நங்கைமார் - தூங்குகின்ற பெண்களினுடைய, அனந்தரின் நெடுங்கண் ஓடு ஒத்த - நித்திரையையுடைய நீண்ட கண்களோடு ஒத்திருந்தன.

குறிப்பு —புனைதல் - அழகுசெய்தல், "பொன்னணியற்புனை தோட்டியால்" என்புழி இப்பொருட்டாதல் காண்க [புறநானூறு, 14-வது பாட்டு] உரிஞ்சு - உரிந்து என்பதன்போலி, உரிய என்னுஞ்செயவெனெச்சத்திரிபு உரிதல்-கழலுதல்.

# ஆரணியகாண்டம்.

இச்சையிற் றுயிலவந்த கியாவர் கண்களு
நிச்சயம் பகலுந்த மிமைக ணீக்கலா
பிச்சையு மிடுதுமென் றுணாவு பேணலா
வச்சையர் நெடுமனை வாயி லானவே

இ - ள். இச்சையில் - (தமது) விருப்பத்தினாலே, துயில்வந்தற்கு - தூங்கும் நிமித்தமாக, நிச்சயம் பகலும் - உண்மையான பகற்காலத்திலும், தம் இமைகள் நீக்கலா - (யாவரும்) தங்களுடைய கண்ணிமைகளை நீக்கமாட்டார்கள் [பகற்காலத்திலும் செம்மையாகத் தூங்குவார்கள்], (ஆதலால்), யாவர்கண்களும் - எல்லாருடைய கண்களும், பிச்சையும் இடுதும் என்று உணாவுபேணலா - பிச்சையும் இடுவோம் என்று நினைத்தலை விரும்பாதவர்களாகிய, வச்சையர் நெடுமனைவாயில் ஆன - உலுத்தர்களுடைய பெரிய வீட்டின் வாசல் (போலடைபட்டிருப்பது) ஆயின

குறிப்பு — உண்மையான பகற்காலத்தில் தூங்கவேண்டும் என்னும் விருப்பங்கொண்டு தூங்குவோர்கள் தமக்கு எத்தனை வேலைகளிருந்தாலும் அவற்றை மதியாமலே தூங்குவார்கள், ஆதலின் தூக்கத்தி னின்பப்பெருக்கைச் சொல்ல முடியாது ஆகையால், தாம் தூங்கிக்கொண்டிருக்கும் இரவிற்றோன்றிய அசம்பாவிதமான இப்பகற்காலத்தில் யாரும் நித்திரை செய்யாதிரார் ஆதலால் எல்லாரும் தூங்கிக்கொண்டே யிருந்தார்கள் என்பதாம் (கஉடு)

நஞ்சுறு பிரிவினை நாளி னீளமோர்
தஞ்சுற விடுவதோர் தயாவு தாங்கலால்
வெஞ்சிறை நீங்கிய வினையி னாரென
நெஞ்சுறக் களித்தன நேமிப் புள்ளெலாம்.

இ - ள். ஓர் நாளின் நீளம் - ஒருபகல் முழுதும், தஞ்சு உற - இன்பமுண்டாக, நஞ்சு உறு பிரிவினை - விடம்போன்ற பிரிவினை, விடுவதோர் தயாவு தாங்கலால் - விடுவதாகிய ஒரு தயவைப்பெறுதலால், நேமிப்புள் எலாம் - சக்கரவாளப்பறவைகளெல்லாம், வெம் சிறை நீங்கிய வினையினார் என - வெவ்விய சிறைச்சாலையினின்று நீங்கிய செயல்வினையுடையார் போல, நெஞ்சு உற களித்தன - மனம் மிகவுங்களிப்புற்றன

குறிப்பு — நள்ளிரவில் இராக்காலந் தொலைந்து பகற்கால முற்றமையால் பகற்காலத்தின் பிரிவை யாற்றியிருந்த நேமிப்புட்கள் இரவென்னுஞ் சிறைச்சாலையினின்றும் விடுபட்டு மகிழ்ந்தனவென்பது கருத்து பிரிவின் கொடுமையைக் குறிப்பிக்க நஞ்சைப் பிரிவுக்கு உவமை கூறினார் உறு - உவமவாசகம் இனி, நஞ்சனைய இரவெலாம் நைந்த எனப்பொருள் கூறுதலுமாம் தஞ்சம் - துணை. துணையாகும் இணைப்புட்களைக் காணப்புழியடைதல் மகிழ்ச்சியேயாதலின் மென்றும் பொருள் கூறினும், தயாவு, உகரம் - சாரியை. (கஉசு)

காணதிக் கல்லது நடுவ ணெய்திய
வானையி னீக்கலா வலரிற் பாயவன்
மாணவினை பயன்படா மாந்தர் வாயில்சேர்
பாணரிற் றளர்ந்தன பாடற் றும்பியே.

இ - ள் பாடல் தும்பி - பாடுகின்ற வண்டுகள், நாள் அன்று, மதிக்கு அல்லது - சந்திரனுக்கல்லாமல், நடுவண் எய்திய ஆணையின் - மத்தியில் அடைந்த ஆக்கினையினாலே [இராவணன் ஆக்கினையால் உள்ளிரவிற்போந்த சூரியனால்] நீக்கு அலா - நீக்குதற்கல்லாத [மலராத], அலரில் பாய்வன - மது வுண்ணும்பொருட்டுப் புஷ்பங்களிற் பாய்வனவாகி, மாண்வினை - பெருமையைத்தருவனவாகிய செயல்கள், பயன்படா - பலன்படாத, மாந்தர்வாயில் சேர் - மனிதர்களுடைய வாசல் சேர்ந்த, பாணரில் - பாடகர்களைப்போல, தளர்ந்தன - தளர்ச்சியுற்றன

குறிப்பு — மாண்வினை - பாடலின்தன்மையை யுணர்ந்து கேட்டு மகிழ்தலும் பாணர்க்கு வேண்டியபடி கொடுத்துப் பெருமையையடைதலுமாகிய செயல்களாம்.

அருமணிச் சாளர மதனி னூடுபுக்
கெரிக்கதி ரின்றுயி லெழுப்பி யேற்றவு
மருளொடு தெருளுறு நிலையா மங்கையர்
தெருளுற மெய்ப்பொரு டெளிந்தி லாரினே.

இ - ள் எரிக்கதிர் - பிரகாசிக்கின்ற சூரிய கிரணங்கள், அருமணி சாளரம் அதனின் ஊடுபுக்கு - அருமையான இரத்தினங்களாகிய பலகணிக்கிடையே பிரவேசித்து, இன் துயில் எழுப்பி - இனிய தூக்கத்தினின்றும் எழும்பச்செய்து, ஏற்றவும் - (சூரியோதயமாயிற் றென்பதை) உணர்த்தவும், மங்கையர் - பெண்கள், தெருள் உற மெய் பொருள் தெளிந்து இலாரின் - ஞானமுண்டாகும்படி உண்மைப் பொருளைத்தெளிவாய் அறியாதவர்களைப்போல, மருளொடு தெருள் உறு நிலையா - மயக்கமும் தெளிவுமுற்ற நிலைமையை யுடையவர்களாயினார்கள். (௧௨௮)

ஏவலின் வன்மையை யெண்ண றேற்றலா
நாவல ரியற்றிய நாளி னூனூற்
காவலி னினிதுணர் கணித மாக்களுங்
கூவுறு கோழியுந் துயில்வு கொண்டவே

இ - ள் ஏவலின் வன்மையை - (இராவணனது) கட்டளையினது வலிமையை, எண்ணல் தேற்றலா - நினைத்தற்குத் தேறுதலடையாதவர்களாய், நாவலர் இயற்றிய - புலவர்கள் செய்த, நாளின் நாமம் நூல் - நாட்பலவற்றைக் கூறுகின்ற பெருமை பொருந்திய கணித சாத்திரத்தால், காவலின் - காவற்றொழிலினது, இனிது - நன்மையை, உணர் - அறிகின்ற, கணிதமாக்களும் - சோதிட நூல்வல்லோர்களும், கூவு உறு கோழியும் - கூவுகின்ற கோழிகளும், துயில்வுகொண்ட - தூக்கங் கொண்டன

குறிப்பு.—ஏவலின் வன்மையை யெண்ண றேற்றலா என்றது - இராவணனது ஏவலால் இரவு பகலாகிய கொடுமையை அறியாதவர்களாய் என்பொருள் கோடலுமாம். (௧௨௯)

இனையன வுலகினி னிகழ மெல்லையிற்
கனைகழ லரக்கனுங் கண்ணி னேக்கினா
னினைவுறு மனத்தையு நெருப்பிற் றீக்குயா
லனையவத் திங்களே யாகுமா லென்றான.

இ - ள் இனையன - இத்தன்மையானவைகள், உலகினில் - உலகத்தில், நிகழும் - நடக்கின்ற, எல்லையில் - அளவில், கனைகழல் அரக்கனும் கண்ணினன் ஆகின்றான் - ஒலிசெய்கின்ற வீரக்கழலையணிந்த இராவணனும் (அசுரியனைத்தன்) கண்ணுறப்பார்த்து, (இக்கதிர்), நினைவு உறு மனத்தையும் - (இதனை) நினைக்கின்ற மனத்தையும், நெருப்பில் - (தன்னிடத்துள்ள) அக்கினியினால், தீக்கும் - தீய்த்துச்செய்யும், அனைய - அத்தன்மையான, அதிங்களோ - அச்சந்திரனோ, ஆகும் -, என்றான் -,

திங்களோ வன்றிது செல்வ செங்கதிர்
பொங்குளைப் பசுமையம் புரவித் தேரதால்
வெங்கதிர் சுடுவதே யன்றி மெய்யுறத்
தங்குதண் கதிர்சுடத் தகாதென் றாசிலர்

இ - ள் (இராவணன் அங்ஙனங்கூறியகாலையில்), சிலர் - சிலசிலதாதர், செல்வ - அரசே! இது திங்களோ அன்று - இக்கதிர் சந்திரனோ? இல்லை. பொங்கு உளை பசுமையம் புரவி தேரது ஆல் - உயர்ந்த புறமயிரினையும் பசுமை நிறத்தையுமுடைய அழகிய குதிரைகள் பூட்டிய தேரினையுடையதாதலால், செங்கதிர் - சூரியனேயாம், வெங்கதிர் சுடுவதே அன்றி - சூரியன் சுடுவதேயல்லாமல், மெய் உற தங்கு தண்கதிர் - உண்மையாகக் குளிர்ச்சி தங்கிய சந்திரன், சுட தகாது என்றார் - சுடுதன்மைத்தகுதியுடையதன்றென்று கூறினார்

குறிப்பு — செங்கதிர், வெங்கதிர், தண்கதிர் என்பன — அன்மொழித்தொகை. மெய்யுற என்பதை மத்திமதீபமாகக்கொண்டு வெங்கதிர் சுடுவதே என்பதோடுங் கூட்டலாம். இனி, மெய்யுற - உடலில் (வெம்மை) யுறும்படி என்பொருள் கோடலுமாம். (௧௩௧)

வேறு

நீலச் சிகரக் கிரியன்னவ னின்ற வெய்யோ
னாலத்தினும் வெய்ய னகற்றி யரற்று கின்ற
வேலைக் குரலைத் தவிர்கென்று விலக்கி மேலை
மாலைப் பிறைப்பிள் ளையைக்கூவுதிர் வல்லை யென்றான்.

இ - ள் சிகரம் நீலம் கிரி அன்னவன் - சிகரங்களையுடைய நீலமலைபோன்ற அவ்விராவணன், நின்ற - (இங்கு) நின்ற, வெய்யோன் - சூரியனாகிய, ஆலத்தினும் வெய்யன் - விடத்தைப்பார்க்கிலுங் கொடுமையையுடையானை, அகற்றி - துரத்திவிடும், அரற்றுகின்ற - பேரொலிசெய்கின்ற, வேலை குரலை - சமுத்திரகோஷத்தை, தவிர்க என்று விலக்கி - நீக்கிவிடுக என்று கூறி (கடலை) அப்பாற்போகச்செய்தும், மாலை மேலை பிறைப்பிள்ளையை - மாலைப்பொழுதில் மேற்றிசையிற்றோன்றுகின்ற இளம்பிறைச்சந்திரனை, கூவுதிர் - கூப்பிடுங்கள், வல்லை என்றான் - சீக்கிரம் என்று கூறினான்

குறிப்பு — தவிர்கென்று, அகரம் - தொகுத்தல். மேலை, ஐ - சாரியை. இனி மேலையென்றது - பின்பு என்றும் பொருள்கோடலாம். மாலை - அந்திக்கு முற்பட்டபொழுது. செவ்வானத்து வெண்பிறையென்பது தோன்ற 'மேலை மாலைப் பிறைப்பிள்ளை' என்றான். (௧௩௨)

சொன்னானிருதர்க் கிறை யம்மொழி சொல்ல லோடு
மந்நாளி னிரம்பிய வம்மதி யாண்டோர் வேலை
முந்நாளி னிளம்பிறை யாகி முளைத்த தென்றா
லெந்நாளு மருந்தவ மன்றி யியற்ற லாமோ.

இ - ள். சொன்னான் நிருதர்க்கு இறை - (அங்ஙனம்) கூறிய அரக்கர்க்கரசனாகிய இராவணன், அ மொழி சொல்லலோடும் - அந்த வார்த்தைசொல்லிய அளவில், அ நாளில் - அற்றைப்பொழுது, நிரம்பிய - (சோடசகலைகளும்) நிரம்புதலுற்ற, அ மதி - அந்தப்பூரண சந்திரன், ஆண்டு - அப்பொழுது, ஓர் வேலை - (இராவணன் கட்டளையிட்ட) ஒரு வேலையின் நிமித்தமாக மூ நாளின் இளம் பிறை ஆகி - மூன்றாம் பிறைச்சந்திரனாகி, முளைத்தது என்றால் - உதித்தது என்று சொன்னால், எ நாளும் - எந்த நாளிலும், அருந்தவம் - அன்றி - அரியதவத்தையல்லாமல், இயற்றல் ஆமோ - (வேறு செயல்களைச்) செய்யலாமோ? [செய்யலாகாது].

குறிப்பு — சொன்னான் - முற்றுத்திரிந்த பெயரெச்சம்.

கருத்து — இராவணன் தான் தவமியற்றி யடைந்த வரத்தாலெய்திய உரத்தால் அற்றை நாள் உவாமதியை இனி ஒருபட்சத்துக்கு மேற்பட்டுவரும் மூன்றாம் பிறையினுருக்கொள்ளச்செய்தான் என்றால் தவப்பெருமை சாலவும் பெரிது ஆதலின் யாம் அத்தவத்தைப்புரியாது நாட்களை வீணாக்குதல் அறிவுடைமை யன்றென்பதாம்.

குடபாலின் முளைத்தது கண்ட குணங்க டீயோன்
வடவாவன லன்றெனின் மண்பிடர் வைத்த பாம்பின்
விடவாளெயி றன்றெனி னென்னை வெகுண்ட மாலை
யடவாளுரு விக்கொடு தோன்றிய தாகு மன்றே

இ - ள். குடபாலின் முளைத்ததுகண்ட - (அப்பிறை) மேற்குத்திசையி லுதித்ததைப்பார்த்த, குணங்கள் தீயோன் - கெட்டகுணங்களையுடைய இராவணன், (தன் சிலதர்களை நோக்கி), வடவா அனல் அன்று எனின் - (நீங்கள் இதனை) வடவாமுகாக்கினி அன்றென்றாலும், மண்பிடர்வைத்த பாம்பின் விடம் வாள் எயிறு அன்று எனின் - புவியைப் பிடரியில்வைத்துத்தாங்குகின்ற ஆதிசேடனது விஷம் பொருந்திய ஒளியுள்ள பல்லன்றென்றாலும், வெகுண்ட மாலை என்னை அட - (என்மேற்) கோபங்கொண்ட மாலைப்பொழுதானது என்னைக் கொல்வதற்காக, வாள் உருவி கொடு தோன்றியது ஆகும் அன்றே - வாளாயுதத்தை யுருவிக்கொண்டு தோன்றியதாகு மன்றோ?

குறிப்பு — மாலையிற்றோன்றிய பிறையானது - இராவணனைக்கொல்ல மாலைப்பொழுதுகொண்ட வாளாயுதம்போன்றிருந்ததெனக். கீழ்க்கூறியவாறு சந்திரன், தென்றல், கடல் முதலியனபோல மாலைப்பொழுதும் விரகநோய் தணித்தற்கு வகையறிக் காமத்தாற் கருத்தழிவோர்க்குக் கொடியதாகு மாதலின் 'வெகுண்ட மாலை' என்றான் "தாழ்துணை துறந்தோர் தனித்துய ரெய்தக், காதலர்ப் புணர்ந்தோர் களிமகிழ் வெய்த... மாலைவந் திறுத்தென" என்னுஞ் சிலப்பதிகாரச் செய்யுளையும், "திங்களம் பிள்ளை புலம்பத்தன் செங்கோ லரசுபட்ட, செங்களம் பற்றிநின் றெற்குபுன் மாலைத்தென் பாலிலங்கை, வெங்களஞ் செய்தநம் விண்ணோர் பிரானா

தழாய துணையாய, நஙகளை மாமைகொள வானவநது தோனறி நலிகினறதே'' எனற திருவிருததததையும ஈணடு நோககுக (௧௩௪)

தாதுணசடி லததலை வைததது தணட ரஙக
மோதுஙகட லிறகிடை முநது பிறநத போதே
யோதுஙகடு வைததன மிடறறி ஞெளிதத தசகோ
னீதுஙகடு வாமென வெணணிய வெணண மனறே

இ-ள. முநது - முனபாக, தண தரஙகம மோதும கடலிறகு இடை பிறநதபோதே - குளிாசசிபொருநதிய அலைகள மோதுகினற (பாற) கடலுககு மததியில (இசசநதிரன) பிறநதபொழுதே, ஓதும - சொலலபபடுகிற, கடுவை - ஆலாலததை, தன மிடறறின ஒளிதத - தனது கணடததில (வைதது) மறைதத, தசகோன - சிவபிரான, ஈதும - இசசநதிரனையும, கடு என - விடமெனறு, எணணிய எணணம - நினைதத நினைபபினால, அனறே—, தாது உண - (கொனறைமலாகளின) மகரநததையுணட, சடிலம தலை வைததது - சடாபாரததையுடைய (தன) தலையின கண தரிததுககொணடது

கருதது—பாறகடலிற பிறநத கொடிய விஷததோடு பிறநததனமையினால இச்சநதிரன அவவிஷததின தனமையை யடைநதிருககினறானாதலின இவன சுடா தென செயவான, இவன அவவிஷததிறகு முனபு பிறநதோனாதலின அவவிஷததினும இவன கொடியனாயிருபபானெனறு கருதியனறோ இவவிஷயஙகளை யெலலாம வைததததாஙகுததறகுத தகுதியுடைய சிவபெருமான விஷததை மறைதத கணடததினுமுயாநத தானமாகிய தலையில வைததான எனபதாம. (௧௩௫)

உருமொகக வுலைநதுயிா நுஙகிய திஙக ளோடித
திருமிசசிறு மினபிறை தீமை குறைநத திலலை
கருமைககறை நெஞசினி னஞசு கலநத பாமபின
பெருமைசசிறு மைககொரு பெறறி குறைநத துணடோ.

இ-ள. கருமை கறை நெஞசினின - கருமையாகிய (அஞஞான) இருளினையுடைய மனததைபபோனற, நஞசுகலநத பாமபின - (காிய கொடிய) விஷம பொருநதிய பாமபினது, பெருமை சிறுமைககு - பெரிய ரூபததைபபாாககிலும சிறிய ரூபததுககு, ஒரு பெறறி குறைநதது உணடோ - (யாதேனும) ஒருகுணங குறைநதது உணடோ? [இலலை], (அதுபோல), திருமி - திருமபி [பூரணசநதிரன தனது பெரிய வுருவததினினறும வேறுபடடு], சிறுமின இ பிறை - சிறுதத (சிறிய) மினனலபோனற இபபிறையானது, உரும ஒகக உலைநது - இடியைபபோல அலைநது, உயிா நுஙகிய - (எனது) உயிரையுணட, திஙகளோடு - பூரணசநதிரனைபபாாககிலும, தீமைகுறைநதது இலலை - தீமையிற குறைநததாயிலலை

குறிபபு—சிறுமின, சிறுபிறை எனக கொளக; இவை வினைததொகைகள, சிறு - சிறுமையெனனும பணபடியாகபபிறநத சிறுததலெனனும வினையின பகுதி. சிறுகும இளமபிறையெனக கொணடு சிறுகும எனனும செயயுமெனனெசசதது ஈற றுமிசை யுகரமெயயொடுங கெடடே சிறும என நினறதெனறு கூறுவாருமுளா திஙகளானது ஓடித திருமபிச சிறுதத மினபிறை (அததிஙகளைப்போல) தீமை குறைநததிலலை எனறும பொருளகோடலாம. திஙகளோடு - வேறறுமையயககம்.()

கன்னக்கனியு மிருடன்னையுங் காண்டு மன்றே
முன்னைக்கதிர னறிதகற் றுதிர் முன்பு சான்ற
வென்னைச்சுடு மென்னினிவ் வேழுல கத்தும் வாழ்வோர்
பின்னைச்சில ருய்வரென் றங்கொரு பேச்சு முண்டோ

இ - ள். சான்ற என்னை - (எல்லா விஷயத்திலுஞ்) சிறந்தவனான என்னை, சுடும் என்னின் - (இப்பிறையானது) சுடும் என்று கூறினால், பின்னை - பிறகு, இவ் ஏழ் உலகத்தும் வாழ்வோர் - இந்த ஏழுலகங்களிலும் வாழ்பவர்களில், சிலர் உய்வர் என்று ஒரு பேச்சும் உண்டோ - சிலர் பிழைப்பார்கள் என்று ஒரு வார்த்தையும் நிகழ்வதுண்டோ? [இல்லை], முன்னை கதிர் அன்று - (இதனைப்பார்க்கினும்) முன்பு வந்த சூரியன் அன்மையையுடையது, முன்பு - முன்னதாக, இது அகற்றுதிர் - இப்பிறையை நீக்கி விடுங்கள், (பின்பு), கன்னக்கனியும் - மிகவும் முதிர்ச்சியடையும், இருள் தன்னையும் - இருளையும், காண்டும் அன்றே - பார்ப்போம் (என்றான்) அன்று, ஏ, அங்கு - அசைகள்.

குறிப்பு — கன்னக்கனியும் — கனியக்கனியும், "பண்ணப்பணைத்த" என்பது போல [நாலடி] அங்கு — அசை. (கக௭)

ஆண்டப்பிறை நீங்கலு மெய்திய தந்த காரந்
தீண்டற்கெளி தாயப்பல தேய்ப்பன தேய்க்க லாகி
வேண்டிற்கர பத்திரத் தீர்த்து விழுத்த லாகிக்
காண்டற்கினி தாயப்பல கந்து திரட்ட லாகி.

இ - ள். ஆண்டு - அப்பொழுது, அப் பிறை நீங்கலும் - அவ்விளஞ்சந்திரன் நீங்கிய அளவில், பல தேய்ப்பன - (இருளைத்) தேய்த்தொழிப்பனவாகிய தீபங்கள் அநேகம், தீண்டற்கு எளிது ஆய - (அவ்விருளால்) தீண்டப்படுதற்கு எளியனவாய், தேய்க்கல் ஆகி - (அதனால்) ஒளி குன்றுவிக்கப்படுதலுண்டாகவும், காண்டற்கு வேண்டின் - (ஒன்றைப்) பார்த்தற்கு விரும்பினால், கரபத்திரத்து - வாளாயுதத்தால், ஈர்த்து விழுத்தல் ஆகி - (விறகுகள்) பிளந்து வீழச் செய்யப்படுதலாகி, இனிது ஆய பல கந்து திரட்டல் ஆகி - (அப்பிளவைகளைத் தீவட்டியின் பொருட்டு) மகிழ்ச்சியாய பல தூண்களாக ஒன்றுசேர்த்தல் நிகழவும், அந்தகாரம் எய்தியது - இருள்வந்து சேர்ந்தது.

கருத்து — இருளை விலக்கும் வல்லமையையுடைய தீபங்கள் அன்று தோன்றிய பேரிருளை விலக்க வல்லமையில்லாதவைகளாய் மழுங்கிப்போனதால் விறகுகளைப் பிளந்து அப்பிளவைகளைப் பல தூண்களென்னும்படி ஒன்றுசேர்த்துத் தீவட்டிகள் பிடித்துத் தாம் விரும்பியபொருளைத் தேடிப்பார்க்கும்படி நேரிட்டதென்பதாம். இச்செய்யுளுக்கு அந்தகாரம் (கர்த்தா) தீண்டற்கெளிதாய, தேய்ப்பனவாகிய பலவற்றையுந் தேய்க்கலாகி, வேண்டுமாயின் வாளாலறுத்து விழுத்தலாகி, பார்த்தலுக்கினிதாய பல தூண்கள் திரட்டலாகி, எய்தியது என்று பொருள் கூறினருமுளர். ஆகியென்னு மெச்சங்கள் ஆகவென்னும் பொருட்டாய் நின்றன. (கக௮)

முருடூர்ந் துருட்டற் கெளிதென்பதென முற்று முற்றிய
பொருடுங்கில கேள்விச் சுடர்புக்கு வழங்க வின்றிக

குருடுஙகி தென்னக குறிக்கொண்டுகண் ணோட்டங் குன்றி
யருடீாநத நெஞசிற கரிதெனபதவ வநத காரம

இ - ள. முருடு - (கீழ்ககூறியபடி) விறகுகளை, ஈாநது - பிளநது, உருட்ட றகு - (அவவிருளிற பலகாநதுசளாகத) திரடடுதறகு, முறறும முறறி - முழுதும முறறுபபெறறு, தீங்கு இல - கெடுதலிலலாத பொருள கேளவி சுடா - பொருட கேளவியாகிய ஒளி, புககு - புகுநது, வழஙகல இனறி - (அறிவைத) தருதல் இல லாமல, இது குருடு எனன குறி கொணடு - இது குருடு என்று கூறுமபடியாக மதிததலையடைநது, கணணோட்டம குனறி - கணணோட்டமிலலாமல, அருள தீா நதநெஞசில - அருள நீஙகிய மனததைககாட்டிலும, கரிது எனபது அ அநதகாரம- கரியது எனபதாகிய அவவிருளில, எளிது எனபது என - எளிதென்று சொலவது யாது?

குறிபபு—ஈஙகு - அசை கண்ணோட்டம - கணணால் நோககியறிதல என— இசுழசசிககுறிப்பு முருள தீாநது—முடககததை நீககி, உருட்டறகு எளிதென்று சொலவதெனனே என முதலடிககுப பொருள கூறினுருமுளா (௧௩௯)

விளளாது செறிநதிடை மேலுறவோஙகி யெஙகு
நளளாதிரு ளநதகன ஞாலம விழுஙக லோடு
மெளளாதுல கியாவையும யாவரும வீயு மெனப
துளளா துமிழநதான விடமுணட வொருதத னெனருன.

இ - ள இருள அநதகன - இருளாகிய யமன், விளளாது - வேறுபடாமல, இடை செறிநது - புவியினிடததுப பொருநதி, மேல உற ஓஙகி- ஆகாயததையடை டவுயர்நது, எஙகும - எவவிடததையும, நளளாது - நேசியாமல, ஞாலம விழுஙக லோடும் - பூமியை விழுஙகினவளவில, விடம உணட ஒருததன - விஷததையுண ட ஒருவனுகிய சிவபெருமான, எளளாது - இகழாமலும, உலகு - உலகிலுளள, யாவையும - எலலாப்பொருளகளும, யாவரும - எலலாரும, வீயும எனபது - இற நதுபோகுமெனபதை, உளளாது - நினையாமலும, உமிழநதான எனருன - (தான உணட அவவிஷததை) உமிழநதான என்று (இராவணன) கூறினன

குறிப்பு.—இருளினமுழுக கருமைககுச சிறிதுங குறைவிலலை யெனபது விளளாதெனபதின பொருள உலகததில அவவிருளசேராத இடமேயிலலை யென பான 'எஙகும நளளாது, எனருன காரணமிலலா துமிழநதானெனபது தோனற எள்ளாதெனருன் இறபபவரில தன அடியாரும சோநதிருகக அதனைச சிறிதுங கருதாமற போனுனே யெனபான 'யாவரும வீயும எனபதுளளாது' எனருன (௧௪௦)

வேலைத்தலை வநதொரு வனவலி யாலவி ழுஙகு
மாலததி னடஙகுவ தனறி தறிநது ணாநதேன
ஞாலததொடு விணமுதல யாவையு நாவி னக்குங
காலககனல காாவிட முணடு கறுதத தனறே

இ - ள் ஒருவன - ஒபபறற சிவபிரான வேலைததலை வநது - கடலினிடதது வநது, வலியால - (தனது) வலிமையினுல், விழுங்கும - விழுங்குகின்ற, ஆலததின

விஷத்தில், இது - (அவ்விஷத்தினும் பெரிய கரிய கொடிய) இவ்வடிவம், அடங்குவது அன்று - அடங்குவதில்லை, ஞாலத்தொடு விண்முதல் யாவையும் - பூமியும் விண்ணுலகமும் முதலாகிய உலகங்களெல்லாவற்றையும், நாவில் கொளும் - (தனது) நாவினால் உண்கின்ற, காலம் கனல் - ஊழிகாலத்துத் தீயானது, கார் விடம் உண்டு கறுத்தது - கரிய விஷத்தையுண்டு கரிய நிறமுள்ளதென்பதை, அறிந்து உணர்ந்தேன் - அறிந்து தெளிவடைந்தேன்.

குறிப்பு — தலை - ஏழனுருபு அன்று, ஏ — அசை. (௧௪௧)

அம்பும்மன லுநுழை யாக்கண வந்த காரத்
தும்பர்மழை கொண்டய லொப்பரி தாய துப்பின்
கொம்பர்குரும் பைக்குலங் கொண்டது திங்கட் டாங்கி
வெம்புந்தமி யேன்முன் விளக்கெனத் தோன்று மன்றே

இ - ள். அம்பும் அனலும் நுழையா - அம்புகளும் நெருப்பும் நுழையாத, கனம் அந்தகாரத்து - நிறைவான இருளில், வெம்பும் தமியேன் முன் - தனித்துக் கலங்குகின்ற என் முன்பு, உம்பர் மழைகொண்டு - மேலே மேகத்தைப்பெற்று, அயல் ஒப்பு அரிது ஆய - வேறு உவமையில்லாதது ஆகிய [தனக்குத்தானே உவமையாய] துப்பின் கொம்பர் - ஒரு பவளக்கொம்பானது, குரும்பை குலம் கொண்டது - தெங்கிளங்காயின் கூட்டத்தைக்கொண்டதாகி, திங்கள் தாங்கி - ஒரு சந்திரனைத் தாங்கிக்கொண்டு, விளக்கு என - (ஓர்) விளக்கைப்போல, தோன்றும் - தோன்றுகின்றது.

குறிப்பு — அம்பும் அனலு, மகரவொற்று - விரித்தல் விகாரம். பிரகாசம்பொருந்திய அக்கினிச்சுவாலைகளையுடைய உயர்ந்த தேவாஸ்திரங்களாலும் நீக்கரிய இருளென்பதும், உடைத்தற்கரிதான கனத்தமலை முதலியவற்றையெல்லாந் தகர்த்து ஊடுருவிச் செல்லவல்ல அம்பு கனத்த இவ்விருளை யூடுருவிச் செல்லற்குத் தக்க கூர்மையுள்ளதன்றென்பதும் தோன்ற 'அம்புமன லுநுழையா' என்றான். அம்பும் அதன் அனலும் எனக் கொள்க. அவ்விருளிலக்கு மோர் விளக்காக மழைபோலக் கூந்தலும் குரும்பைக் குலம்போல முலைகளும் திங்கள்போல முகமுங்கொண்ட பவளக்கொம்புபோன்ற சீதாபிராட்டியின் உருவமானது உருவெளித் தோற்றமாகக் காணப்பட்டது என்பது கருத்து. (௧௪௨)

மருளூடு வந்த மயக்கோமதி மற்று முண்டோ
தெருளாது தென்னே திணிமை யிழைத்தாலு மொவ்வா
விருளூடிரு குண்டலங் கொண்டு மிருண்ட நீலச்
சுருளோடும் வந்தோர் சுடர்மாமதி தோன்று மன்றே

இ - ள். திணிமை இழைத்தாலும் - வல்லமையைச் செய்து காட்டினாலும், ஒவ்வா - (தான் புகுந்து வெளிச்சந்தருதற்கு) இயலாத, இருள் ஊடு - இவ்விருளில், இருகுண்டலம் கொண்டு - இருகுண்டலங்களைக் (காதில் அணிந்து) கொண்டு, இருண்ட நீலம் சுருளோடும் - இருண்ட நீலத்தினது சுருளுடனே, ஓர் சுடர்மாமதி வந்து தோன்றும் - ஒரு பிரகாசம் பொருந்திய அழகிய சந்திரன் வந்து தோன்றுகின்றது; (இது - இத்தோற்றம்), மருள் ஊடு வந்த மயக்கோ - என் மயக்கத்துக்கு

மதியிலேவந்த மற்றொரு மயக்கமோ? மதி மற்றும் உண்டோ - வேறொரு சந்திரனும் உண்டோ? தெருளாது இது என்னோ - தெளிந்து கொள்ளமுடியாததாகிய இந்த தோற்றம் யாதோ?

குறிப்பு.—தான் நினைத்துக்கொண்டிருந்த சீதையின் உருவோ என்பான் 'மருளுவந்த மயக்கோ' என்றான்; தான் தூரத்திவிட்ட சந்திரன் திரும்பிவரக்காணவில்லையே என்பான் 'மதிமற்று முண்டோ' என்றான். இருண்ட நீலச்சுருள்—சீதாபிராட்டியின் கூந்தலின் சுருளுக்கும், மதி—அவள் முகத்துக்கும் உவமை. (கசக)

புடைகொண்டெழு கொங்கையு மல்குலும் புலங்கி நிற்கு
மிடைகண்டில மல்லதெல் லாவுரு வுந்தெ ரிந்தாம
விடநுங்கிய கண்ணுடை யாரிவர் மெல்ல மெல்ல
மடமங்கைய ராயென மனத்தவ ராயி னாரே.

இ-ள் புடைகொண்டு எழு கொங்கையும்-பக்கத்திலுள்ள இடமுழுதும் தன்னதாக்கொண்டு கிளம்பிய முலைகளும், அல்குலும்—, புலங்கி நிற்கும் - புணர்ந்து நிற்கிற, இடை - இடத்தையும், (இடை) - (அவற்றினிடையே யுள்ள) இடையையும், கண்டிலம் அல்லது-பார்த்தேமில்லை யல்லாமல், எல்லாம் உருவும் தெரிந்தாம் - மற்றை யவயவங்களெல்லாவற்றையும் அறிந்தேம், விடம் நுங்கியகண் உடையார் இவர் - விஷம்போன்ற கண்களையுடையாராகிய இவர், மெல்லமெல்ல—, மடமங்கையராய் - மடமையையுடைய மங்கையராகி, என் மனத்தவர் ஆயினார்- என் மனத்திலிருப்பவராகிய ஜானகியாராயினார்.

குறிப்பு—புடை - திரட்சியுமாம். நிற்கும் என்றதைப் படர்க்கைப்பலவின் முற்றாக்கொண்டு கொங்கையும் அல்குலும் புலங்கிநிற்கின்றன என்ப பொருள்கோடலாமாயினும், அவைகள் எம்பிரானலலா மற்றவர்காணத் தகையனவல்லவாகலின் அதனை ஒழித்துச் செய்யுமென் னெச்சமாக்கக் கோடலே சிறப்புடைத்து. இடை - இரட்டுறமொழிதல். மழை கொம்பு திங்கள் முதலியனபோல ஒவ்வோரவயவமும் தனித்தனியாய்க் காணப்பட்டுப் பின்னர் எல்லாஞ்சேர்ந்து பெண்ணுருவேயாகத் தோன்றினமையால், 'மெல்லமெல்ல மடமங்கையராய்' என்றான். நுங்கிய - உண்ட, உவமவாசகம். "சேலுண்ட வொண்கணாரிற் றிரிகின்ற செங்கா லன்னம்" என்றது காண்க [பாலகாண்டம், நாட்டுப்படலம்]. (கசச)

பண்டேயுல கேழினு முள்ள படைக்க ணாரைக்
கண்டேனிவர் போலவதோர் பெண்ணுருக் கண்டி லேனா
லுண்டேயெனின் வேறினி யெங்கையு ணர்த்தி நின்ற
வண்டேறு கோதை மடவாரிவ ராகு மன்றே.

இ-ள் பண்டே - வெகு நாட்கு முன்னேயே, உலகு ஏழினும் உள்ள -ஏழுலகங்களிலுமிருக்கிற, படை கணாரை - (வேல்) ஆயுதம் போன்ற கண்களையுடைய பெண்களை, கண்டேன் - பார்த்தேன், இவர்போலவது ஓர் பெண் உருக்கண்டிலேன்- இவரை ஒப்பதாகிய ஒரு பெண்ணினுடைய ரூபத்தைப்பார்த்தேனில்லை, உண்டே எனின் - (இத்தகைய உருவம்) இருக்கின்றதே என்று (தெளிவாயக்) கூறுவாயானால், இனி—, வேறு எங்கை-(இவ்வேழுலகல்லாத) மற்றெவ்விடத்தில்? (எவ்விடத்தும் இல்லை

ஆதலால) (எஙகை) - எனது தஙகை, உணாததி நினற - ஙனறுயறியுமபடியாகச சொலலி முடிதத, வணடு எறு கோதை - வணடுகள ஏறுகினற கூநதலையுடைய, மடவாா - மடமையையுடையாா, இவரே—,

குறிப்பு —உணடே, ஏகாரம - தேறறம எஙகு எனனுமவினை ஐ எனனும சாரியை பெறறு எஙகை யென நினறது ஆகும, அனறு அசைகள. எஙகையெனறு ஒரு சொல வருவிததுககூறுக (௧௪௫)

பூணடிபபிணி யானுறு கினறது தானபொருதா
டேணடிககொடு வநதனள செயவதொா மாறு முணடோ
காணடறகினி யாளுருக கணடவட கேடகு மாறறு
வீணடிபபொழு தேவிரைந தெஙகையைக கூவு கெனறுன

இ - ள யான இ பிணி பூணடு உறுகினறது பொருதாள - நான இநதக காம நோயடைநது அடைகினற துனபஙகளைச சகியாதவளாகிய, தேணடி கொடு வநதனள - (இபபெணணைத) தேடிககொணடுவநத சூாபபநகை, செயவது - செயயததககது, ஓா மாறும உணடோ - ஒரு வேறுபாடுமுளளதோ? ஆறறுல - (அவள சொன்ன) ஒழுககததில, ஈணடு - நெருஙகுகினற, காணடறகு இனியாள - காணபதறகு இனியவளாகிய இபபெணணினது, உரு - உருவததை, கணடவள - பாாததிருபபவளை, கேடகும - கேடபாம, இ பொழுதே விரைநது - இப்போதே வேகமாயச சென்று, எஙகையை - எனது தஙகையை, கூவுக எனறுன - கூபபிடுக என்று கூறினன

குறிபபு —தேடி - தேணடி என விகாரம ஆறறுல எனறது நோவழியாக எனறேனும தலைககடைவாயில வழியாக எனறேனும பொருளகொணடு வழியாக இபபொழுதே விரைநது கூவுக என்று பொருள கூறலுமாம, ஆறு - வழி, ஆறறு - தலைககடைவாயில (௧௪௬)

என்றுனென லுஙகடி தேகினா கூவு மெலலை
வனறுணிரு தககுலம வேரற மாயததல செயவா
ளொனறுத காமக கனலுடறெற லோடு நாசி
பொனறுழகுழை தனனெடும போககினள போயபபு குநதாள.

இ - ள என்றுன எனலும - என்று சொனனனென்ற அளவில, கடிது ஏகினா - விரைநது சென்ற சிலதாகள, கூவும எலலை - கூபபிடுகினற அளவில வல - வலிய, தாழ - தாழநத, நிருதா குலம - இராககதா கூடடததை, வோ அற மாயததல செயவாள - அடியோடு தொலைபபவளாகிய, ஒனறுத காமம கனலுள தெறலோடு - பொருநதாத காமமாகிய தீயில அழிதலுடனே, நாசி - மூககையும, பொன தாழ குழைதனனெடும பொனனுலாகிய தாழநத குணடலததையணிநத காதையும, போககினள - இழநத சூாபபநகை, போய புகுநதாள - (இராவணனிருககுமிடததிற) போயபபிரவேசிததாள.

குறிபபு —தாழ நிருதநகுலம-கனநடககையிற றுழவுறற நிருதககுலம. பொனறுழ, தாழ - கனததால தாழநத இனி, பொனபோனற குழை என்று கூறி உலோகஙகளில பொன சிறநததுபோலக குழைகளுள இககுழை சிறநத தெனபதுமாம. இப்பொருட்குத தாழ உவமவாசகம. தாழ குழை - அனமொழிததொகை. (௧௪௭)

பொயநின்ற நெஞ்சிற கொடியாள்புகுந தாளை நோககி
நெயநின்ற கூரவா ளவனேறுற நோககு நஙகாய
மைநினற வாடகண மயிலினறெனன வநதென முனன
ரிநினறவ ளாஙகொ லியமபிய சீதை யெனறுன

இ - ள செய நினற கூரவாளவன - (பகைவரது) நிணநதோயநத கூரிய வாளினையுடைய இராவணன, பொய நினற நெஞ்சில - பொயயெனபது நிலைததுளள மனததைப பாாககிலும, கொடியாள - கொடியவளாகி, புகுநதாளை - (ஆஙகுப) புகுநத சூரப்பநகையை, நோககி - பாாதது, நஙகாய - நஙகையே! மை நினற வாள கண - அஞ்சனந்திட்டியுளள வாளபோனற கணணினையுடைய, மயில நினறெனன - ஒரு மயில நினறுறபோல, வநது—, என முனனா - என முனனே, இ நினறவள கொல - நினறவளாகிய இவளதானே? இயமபிய சீதை - (நீ) சொனன சீதையென பவள, கோ உற நோககு எனறுன - நேராகப பாாபபாயாக வெனறுகூறினன. ()

செநதாமரைக கணணொடுஞ செஙகனி வாயி னேடுஞ
சநதாாதட நதோளொடுந தாழதடக கைக ளோடு
மநதாரக லததொடு மஞ்சனக குனற மெனன
வநதானிவ னுகுமவ வலவி லிராம னெனறுள

இ - ள செநதாமரை கணணொடும - செநதாமரை மலாபோனற கணகளுட னேயும, செஙகனி வாயினேடும்-செயயகனியாகிய கோவைககனிபோனற வாயுட னேயும, சநது ஆா தடம தோளொடும - அழகு பொருநதிய பெரிய புயஙகளுட னேயும, தாழ தடம கைகளோடும -(முழநதாளளவுந) தாழநத பெரியகைகளுடனே யும, அம தாா அகலததொடும - அழகிய மாலையையணிநத மாாபினுடனேயும, அஞ்சனம குனறம எனன வநதான இவன - கரியமலைபோல வநதவனுகிய இவன தான, அ வலவில இராமன எனறுள - வலியவிலலினையுடைய அநத இராமன எனறு கூறினள

குறிபபு —சநதம-சநதென விகாரம. ஆகும - அசை. (௩௪௧)

பெணபாலுரு நானிது கணடது பேதை நீயிண
டெணபாலு மிலாததொ ராணுரு வெனறி யெனனே
கணபாலுறு மாயை கவறறுதல கறற நமமை
மணபாலவ ரேகொல விளைபபவா மாயை யெனறுன

இ - ள. நான கணடது இது பெணபால உரு - நான பாாதத இவ்வுருவம பெண உருவமாயிருககிறது, பேதை நீ - பேதையாகிய நீ, ஈணடு - இபபொழுது, எணபாலும இலாதது ஒா ஆண உரு எனறி எனனே - எட்டுததிககிலு மிலலாததாகிய ஒரு ஆணினுடைய உருவம எனறு கூறினுய எனன ஆசசரியம்? கண்பால் உறு மாயை கவறறுதல் கறற நமமை - கணணிடததுறற [கணணுககுத தெரியும்படியான] மாயைசசெயலினுலே வருததனுஞ செயலைககறற நமமிடததில, மணபாலவரே - மணணுலகததி லிருப்பவாகளாகிய மனிதாகளதாமா? மாயைவிளைப்பவா - மாயையைசசெய்பவாகள, என்றுன - என்று (அவ்விராவணன) கூறினன.

குறிப்பு —இராவணன் தான் கண்டது பெண்ணுருவாயிருக்கச் சூர்ப்பணகை ஆணுரு வென்றமையால் அவளைப் பேதையென்றான். எங்கு நோக்கினும் அப்பெண்ணுருவாகவே தோன்றக் கண்டமையால் 'எண்பாலு மிலாதது' என்றான். இனி, எங்குமில்லாத பேரழகினையுடைய ஒப்பற்ற ஆண் உரு என்று கோடலுமாம். நம்மை - உருபுமயக்கம். (௧௫௦)

ஊன்று முணர்வப் புறமொன்றினு மோட லின்றி
யான்று முள்ள நெடி தாசை கன்றற நின்றுயக்
கேன்று னெதிரே விழிநோக்கு மிடங்க டோறுந்
தோன்று மனையா ளிதுதொன்னெறித் தாகு மென்றாள்.

இ - ள் ஊன்றும் உணர்வு - (சீதையினழகினிடத்தே) பதிந்திருக்கிற அறிவானது, அப்புறம் - அப்பால், ஒன்றினும் - வேறொன்றினும், ஓடல் இன்றி - செல்லுதலில்லாமலும், ஆன்றும் உள்ள நெடித்து ஆசை கன்றற - மிகுந்தும் இருக்கிற பெரிதாகிய ஆசையானது வருத்தவும், நின்றுயக்கு - நின்றவுனக்கு, விழிநோக்கும் இடங்கள் தோறும் - கண்ணுறப்பார்க்கும் இடங்கள் தோறும், அனையாள் - அவள், உன் எதிரே - உனக்குமுன்னே, என்று - பொருந்தி, தோன்றும் - காணப்படுவாள், இது - இப்படிக்காணப்படுதல், தொல் நெறித்து ஆகும் என்றாள் - பழைய முறைமையையுடையதாகும் என்று கூறினாள் [வழக்கம் என்று கூறினாள்]

குறிப்பு —நீ கேள்வியுற்ற அழகிற் சிறிதுங்குறையாதபடி அழகு நிரம்பலுற்று என்பாள் 'என்று' என்றாள் இராவணன் மகிழுமாறு 'தோன்றும் மனையாள்' என்று கூறினாளென்னலுமாம் (௧௫௧)

அன்னாளது கூற வரக்கனு மன்ன தாக
நின்னாலவ் விராமனைக் காணுறு நீரென் னென்று
னெந்நாளவ னென்னை யித்தீவரு மின்னல் செய்தா
னந்நாண்முதல் யானு மயாத்தில னுகு மென்றாள்

இ - ள் அன்னாள் அது கூற - அச்சூர்ப்பணகை அம்மொழியைச் சொல்ல, அரக்கனும் - இராவணனும், அன்னது ஆக - அத்தன்மையதேயாக, நின்னால் - நீ, அவ் இராமனைக் காணுறும் - அந்த இராமனைக்காண்கின்ற, நீர் என் என்றான் - நீர்மை யாது? என்று கூறினான், அவன் என்னை இத்தீவரும் இன்னல் எந்நாள் செய்தான் - அவ்விராமன் எனக்கு நீங்காத இத்துன்பம் எந்தநாள் செய்தானோ, அந்நாள் முதல் - அந்த நாள் முதலாக, யானும் அயாத்திலன் என்றான் - நானும் (அவனை) மறந்தேனில்லையென்று கூறினாள்

குறிப்பு —அன்னதாக, ஆக என்பதை வியங்கோள் வினைமுற்றாக்கொண்டு அன்னது ஆகுக என்றும், மற்றும் உவமவுருபாகக்கொண்டு அன்னதுபோல என்றும் இருவகையானும் பொருள் கோடலாம் நின்னால் - வேற்றுமைமயக்கம். (௧௫௨)

ஆமாம் தடுக்குமெ னுக்கையொ டாவி னைய
வேமாலவினை யேற்கினி யெனவிடி வாகு மென்னக்
கோமானுலகுக் கொருநீகுறை கின்றதென்னே
பூமாண்குழ லாடனை வெள்வுதி போதி யென்றாள்.

இ - ள். ஆம ஆம—, அது அமேகும—, என ஆக்கையொடு ஆவிநைய - எனது உடலும உயிரும மெலியுமபடியாக, வேம மாலவினையேறகு- வேகினற வேடகைசசெயலினை யுடையேனுகிய எனககு, இனி—, என விடிவு ஆகும என்ன - யாது அனுகூலமுணடாகுமெனறு சொல்ல, கோமான - அரசனும, உலகுககு ஒரு நீ - உலகததுககு ஒருவனுமாகிய நீ, குறைகினறது எனனே - சிறுமையடைகின்றது என்ன ஆசசரியம? பூ - மலாகளையணிநத, மாணகுழலாள தனை - பெருமைபொருநதிய கூநதலையுடைய அசசீதையை, வெளவுதிபோதி என்றாள - எடுததுவரசசெலவாய என்று கூறினாள, (௪௫௩)

என்றா ளகனறாள வரககனு மீட ழிநதா
னென்றனு முணாநதில னாகி யுலைநது சோாநதா
னின்றரு நடுஙகினா நினறுள நாளி னுலே
பொன்றுதுள னாயின னததுணை போலு மனறே.

இ - ள என்றாள - என்று சொனன சூாபபநகை, அகன்றாள - (அவவிடதநதை விடடு) நீஙகினாள, அரககனும - இராவணனும, ஈடு அழிநதான - வலியிழநது, ஒன்றனும உணாநதிலன -பாதொனறினும உணாசசியடையாதவனாய, ஆவி உலைநது சோாநதான - உயிரழிநது சோாவடைநதான [மூாசசிததுப பிரேதமபோ லிருநதான], நின்றரும நடுஙகினா - (அதைககணடு ஆஙகு) நினற சிலதாகளும நடுககங கொணடாாகள, அதுணை - அவவளவில, நினறு உளநாளினுலே - (தான வரததாற பெறற ஆயுளிறசெனற நாள போக) நினறிருககிற நாடகளினுலே, பொன்றுது உளன ஆயினன - சாகாமலிருககினறவனானன (௪௫௪)

இறநதா பிறநதா ரெனவினனுயிா பெறற மனனன
மறநதா னுணாநதா னவணமாடுநின றாரை நோககிக
கறநதாலென நீாதரு சநதிர காநதத தாலே
சிறநதாாமணி மணடபஞ செயகெனச செபபு கென்றான

இ - ள இறநதாா பிறநதாரென - இறநதுபோனவா உயிாகொணடெழுநதாா என்று சொலலுமபடி, இன உயிாபெறற மனனன - (தனது) இனிய உயிரையடைநத மனனனாகிய இராவணன, மறம உணாநதான - (தனது) வலிமையையறிநதானாகி, அவண-அவவிடததில, மாடு நின்றாரைநோககி - பககததில நினறவாகளைப்பாாதது, கறநதால என - கறநதாறபோல, நீாதரு - நீரைததருகினற, சநதிர காநதத்தாலே - சநதிரகாநதக கறகளினுலேயே, சிறநது - சிறபபடைநது, ஆா மணி - நிறைநத அழகுபொருநதிய, மணடபம - ஓா மாடததை, செயக என - செயவாயாகவெனறு, செபபுக என்றான - சொல்லுக என்று சொலலினான.

குறிபபு —மனனனுந தனனை மறநதானுமாகிய இராவணன உணாநதானெனறு பொருள கோடலுமாம. கறததல - பிதுககுதல தானே நீரையுமிழாது சநதிரப பிரகாசததால நீரையுமிழ்வது எனபான 'கறநதாலென' என்றான, "இநது காநதததினீா நெடுஙகலும" எனக கீழ்ககூறியதை யீணடு நோககுக. மணி - இரததினஙகளுமாம (௪௫௫)

வநதாளெடு வானுறை தசசன் மனதது ணாநதான
சிநதாவினை யனறியுஞ செயவினை யாலுஞ செயதா

ணந்தாம நெடுந்தறி யாயிரத் தாலமைத்த
சந்தாமணி மண்டபந் தாமரை யோனு நாண.

இ-ள். வந்தான் - (இராவணனது கட்டளையைக்கேள்வியுற்று) வந்தவனாகிய, நெடுவான் உறை தச்சன் - நெடியவானுலகில் வசிக்கின்ற தச்சனாகிய மயனென்பவன், தாமரையோனும் நாண - தாமரைமலரிலிருக்கிற பிரமதேவனும் வெட்குறும்படியாக, சிந்தாவினை - குறைவற்ற வேலையை, மனத்து உணர்ந்தான் - மனத்தில் நினைத்தான், அன்றியும் - அல்லாமலும், செய்வினையானும் - கைசெய்வேலையானும், அம் தாமம் நெடுந்தறி ஆயிரத்தால் அமைத்த - அழகிய ஒளியினையுடைய நெடிய தூண்கள் ஆயிரத்தால் அமையச்செய்த, சந்து ஆர்மணி மண்டபம் - அழகு பொருந்திய இரத்தினமயமான மண்டபத்தை, செய்தான் —,

குறிப்பு — செய் — கை. தாமம் — ஒழுங்கும், மாலைமாலையாகச் சித்திரவேலை செய்யப்பட்டதென்பதுமாம். (௧௫௬)

காந்த மமுதின் றுளிகாலவன கால மீனின்
வேந்த னொளியன்றியு மேலொடு கீழ்விரித்தான்
பூந்தென்றல் புகுந்துறை சாளர மும்பு னைந்தா
னேந்து மணிக்கற் பகச்சீதளக் காவிழைத்தான்.

இ-ள். காலம் - அக்காலத்துக்குரிய, மீனின் வேந்தன் - உடுபதியாகிய சந்திரனது, ஒளி அன்றியும் - பிரகாசம் அல்லாமலும், அமுதின் துளி காலவன - அமிர்த பிந்துக்களைப்போல நீர்த்துளிகளைச் சிந்துவனவாகிய, காந்தம் - சந்திரகாந்தக் கற்களை, மேலொடு கீழ் விரித்தான் - (அம்மண்டபத்தின்) மேலுங்கீழும் பரப்பினான், பூ தென்றல் - பூவின் மணத்தையுடைய தென்றற்காற்று, புகுந்து - பிரவேசித்து, உறை - தங்குகின்ற, சாளரமும் - பலகணிவாயில்களும், புனைந்தான் - செய்தான், ஏந்தும் மணி - (கேட்டபோதைக்கு நல்கும்பொருட்டு) தாங்கிக்கொண்டிருக்கிற இரத்தினங்களையுடைய, கற்பகம் - கற்பகமாகிய, சீதளம் - குளிர்ச்சிபொருந்திய, கா - சோலையை, இழைத்தான் - செய்தான்.

குறிப்பு — ஏந்து மணி - தாங்கிய அழகுமாம். (௧௫௭)

ஆணிக்கமை பொற்கைக மணிச்சுட ராவிளக்கஞ்
சேணுற்றிருள் சீப்பவத் தெய்வ மடந்தை மார்கள்
பூணிற்பொலி வார்புடை யேந்திடப் பொங்கு தோளான்
மாணிக்க மானத் திடைமண்டபங் காண வந்தான்.

இ-ள். ஆணிக்கு அமைபொன் - உரையாணிக்காக அமைந்த (மாற்றுயர்ந்த) பொன்னாலாகிய, மணிசுடர் ஆர் - மாணிக்கமணியினது சுடர் பொருந்திய, கைவிளக்கம் - கைவிளக்குக்கள், சேண் உற்ற இருள் சீப்ப - ஆகாயத்தையடைந்த இருளை நீக்கினதாலும், அ தெய்வமடந்தை மார்கள் பூணில் - (விளக்கமேந்திய) அந்த அரம்பாஸ்திரிகளுடைய ஆபரணங்களால், ஆர் புடை - மிகுதியான பக்கத்தின் இடங்களெல்லாம், பொலிவு ஏந்திட - அழகினைத்தாங்கினதாலும், பொங்குதோளான் - உயர்ந்த தோளினையுடையானாகி, (அவ்விராவணன்), மாணிக்கம் மானத்திடை -

மாணிக்க விமானத்தின்மேல், மண்டபம் காண வந்தான் - அம்மண்டபத்தைப்பார்க்க வந்தான் (௧௫௮)

அல்லாயிர கோடி யடுக்கிய தொத்த தேனு
நல்லார்முக மாகளிர வானில வீன்ற நாமப
பல்லாயிர கோடி பனிச்சுட ரீன்ற திங்க
ளெல்லாமுட னாயிரு ளோடி யிரிந்த தன்றே.

இ - ள் ஆயிரம் கோடி அல் அடுக்கியது ஒத்ததேனும் - (அன்றி ராத்திரியினிருளானது) ஆயிரங்கோடி இருளை அடுக்கிவைத்ததை ஒப்பாயிருப்பினும், வானமகத்துவமபொருந்திய, களிர் நிலவு ஈன்ற - குளிர்ந்த சந்திரப்பிரபையை அளித்த, நல்லார்முகம் ஆம் - பெண்களது முகங்களாகிய, நாமம் - பெருமைபொருந்திய, பனி சுடர் ஈன்ற - குளிர்ச்சியையுடைய பிரகாசத்தை அளித்த, பல ஆயிரம் கோடி திங்கள் எல்லாம் - அநேகவாயிரங்கோடி சந்திரன்கள் முழுதும், உடன் ஆய - ஒன்றுசேர, இருள் ஓடி இரிந்தது - அவ்விருள் ஓடி யழிந்தது,

குறிப்பு — 'ஆய' என்னும் எச்சம் 'ஆக' வென்னு மெச்சத்திரிபு. (௧௫௯)

பொற்புற்றன மாமணி யொன்பதும பூவி னின்ற
கற்பத்தரு வின்கதிர் நாணிழற் கற்றை நூற
வற்பற்றழி யப்பக லாக்கிய தால ருக்க
னிற்பத்தெளி கின்றது நீள்சுடர் மேன்மை யன்றே.

இ - ள் பொற்பு உற்றனமாமணி ஒன்பதும் - அழகு பொருந்திய பெருமையையுடைய நவரத்தினங்களும், பூவில் நின்ற கற்பம் தருவின் - பூமியில் நின்ற கற்பகவிருட்சத்தினது, கதிர் - பிரகாசமானது, நாண - வெட்கப்படுகின்ற, நிழல் கற்றை - (தம) பிரகாசத்திரளினாலே, அல் பற்று அழிய - இருளின் பற்றுதலானது அழியவும், பகல் நூற - பகற்காலம் விளங்கவும், ஆக்கியதால் - ஆக்கியகாரணத்தால், அருக்கன் நிறப - சூரியன் ஒழிய, தெளிகின்றது - தெளிவடைகின்றன, நீள் சுடர் - மிகுந்த அப்பிரகாசமானது, மேன்மை அன்றே - மேன்மையையுடையதன்றோ ?

குறிப்பு — மயக்கு மைக்கப்பட்ட அக்காவென்பது தோன்ற 'பூவினின்ற' என்றார், கற்பகம்—கற்பமென் விகாரம் கற்பத்தருவின் கதிரென்றது - சந்திராதித்தரொளியினையடக்கு மொளியினையுடைய சோதிரங்கமென்னும் கற்பகத்தருவின் சோதியை இனி, கற்பகம் நிலக்கதிரத்திரளைக் கழிப்பதுபோல நவமணிகளின் நிழற்கற்றை அற்பற்றை ஒழித்ததால் கற்பகத்தருவின் கதிர்நாணிற் றெனவுங் கூறலாம். "நறும்புகை நான நாவிக் குழமபொடும் பளிதச் சுண்ணம், மறிந்தவ ராயத்த மாலை யணிந்தபைங் கூந்த லாயபொ,னிறந்தரு கொம்பு நீலக் கதிர்க்கற்றை யுமிழவ வேபோற, செறிந்திருந் துகுத்துச செய்பொற் குணக்கொடி யாயி னாரே" என்றார் சிந்தாமணியினும் அருக்கன் நிறப என்றற்கு சூரியனைப்போல் விளங்க என்றும் பொருள் கோடலாம். (௧௬௦)

ஊன்றேசை முதற்பொறி யாவையு மொன்றி னொன்று
தேன்றுங்லை யுற்றதொர் சிந்தையன் செய்கை யோரான

வேருய பிறபபிடை வேடகை விசிதத தீரபப
மாறேருட லுறறென மணடபம வநது புககான.

இ - ள் ஊறு - பரிசம, ஓசை - சபதம, முதல முதலாகிய, பொறியாவை யும - (மெய, வாய, கண, மூககு, செவியெனனும) பொறிகளெலலாம, ஒனறின ஒனறு - ஒனருெலொனறை, தேருநிலை உறறது ஓா சிநதையன - தெளிநது அறிந துகொளளாத நிலைமையை யடைநததாகிய ஒரு மனததினையுடையானும, செயகை ஓரான - செயலை யுணாநதுகொளளாதவனுமாகிய இராவணன, வேறு ஆய பிறப பிடை-வேருன பிறவியில, விசிததது வேடகை - கடடுணடிருநததாகிய ஆவாவான து, ஈாபப - இழுகக, (அதனுல), மாறு ஓா உடல உறறென - (ஒருயிரானது) மற ரேருடலை யடைநதாறபோல, மணடபம வநது புககான - (அம) மணடபததில வநது புகுநதான.

கருதது — ஐமபொறிகளும அதனதன செயலை யுணராவாறு பிரேதமபோலி ருநது தனனைச சோலையிலிருநது மணடபததிறகுக கொணடுவநத செயகையைய றியாத இராவணனை, "அவாவெனப வெலலா வுயிாககுமெஞ ஞானறும, தவாஅப பி றபபீனும விதது" எனறவாறு ஒருவன அடைநத அவாவினுல வேறு பிறவியை யடைநது அவவவாவை நிறைவேறறிககொளவதுபோலப புதியநிலைமையை யடை நது தானு பழையநிலைமையில விருமபிய மணடபததை யடைநதான எனபதாம. பழையநிலைமை - மூாசசிததுப பிரேதமபோலிருநதது புதிபநிலைமை - அமமூா சசை தெளிவுறறது (௧௬௧)

வேறு

தணடலி றவஞசெய வோாதாம வேணடிய தரவே நலகு
மணடல மகர வேலை யமுதொடு வநத தெனனப
பணடரு சுருமபு சேரும பசுமர முயிாதத பைமபொற
றணடளிா மலரிற செயத சீதளச சேககை சாாநதான.

இ - ள தணடல இல - கெடுதலிலலாத, தவம செயவோா -தவததைச செய பவாகள, வேணடிய - விருமபியவைகளை, தரவே - (அவாககுக) கொடுபபதறகா கவே, நலகும - (மழையைத) தருகினற, மணடலம - மேகமணடலமானது, மகரம வேலை அமுதொடு வநதது எனன - மசசஙகளநிறைநத கடலினது நீரோடு வநதது போல, பணதரு சுருமபுசேரும - இசைபபாடடினைததருகினற வணடுகளசோகினற, பசுமரம உயிாதத - பசிய மரஙகளீனற, பைமபொன தணதளிா - பசிய பொனபோ னற (நிறததோடு) குளிாசசிபொருநதிய தளிாகளாலும, மலாின - புஷபஙகளினு னும, செயத—, சீதளம சேககை சாாநதான - குளிாசசியையுடைய படுககையைக கிடடினன

குறிபபு —அறமபொரு ளினபஙகளை உலகுககு உளளவாறு உணாததும மு னிவா செயயும தவம நிறைவேறுதறகும, தானம வழஙகுதறகும மழை யேதுவா யிருப்பதாலும, அமமுனிவாககுத தருந தானமே சிறப்புடைததாதலாலும, தரவென புழிப பிரிநிலை யேகாரஙகொடுதது 'தணடலி றவஞசெய வோாதாம வேணடிய த ரவே நலகு மணடலம' எனறுா "தானந தவமிரணடுந தஙகா வியனுலகம, வானம வழஙகாதெனின" என நாயனுா கூறியிருததலானும், வான சிறப்பைக கூறிய அதி

காரத்துக்குப் பின்னே முற்றத்துறந்த முனிவரது பெருமையை அவர் கூறியிருத்தலாலும் மேகமண்டலமென்று கொள்ளப்பட்டது. அமிர்தமுண்டார் சாவாது நிலைபெறுதல்போல உயிர்கள் நிலைபெறுதலையச் செய்தலான மேகங் கடலிலிருந்து கொணர்ந்த நீராகிய மழையை 'அமுது' என்றார் "வானின் றுலகம் வழங்கி வருதலாற், றானமிழ்த மென்றுணரற் பாற்று" என்றார் நாயனாரும். மண்டலம் இராவணனுக்கும், மகரவேலையமுது - அவன் மேனியிற் சேர்ந்த குளிர்ச்சிக்கும் உவமை. (௧௬௨)

நேரிழை மகளிர் கூந்த னிறைநறை வாச நீந்தி
வேரியஞ் சரளச் சோலை வேனிலான் விருந்து செய்ய
வாரகலி யழுவந் தந்த மருந்தென வொருவ ராவி
தீரினு முதவற் கொத்த தென்றலவ் விறுத்த தன்றே

இ - ள். வேரி அம் சரளம் சோலை வேனிலான் - வாசனையையுடைய அழகிய பூந்தாதுக்களை அடர்ந்த சோலையிலிருக்கிற மன்மதன், விருந்துசெய்ய (இராவணனை) விருந்து (உண்டற்குரிய பொருளாகத் தனக்குத்)தர, ஆர்கலி அழுவம் தந்த மருந்து என - நிறைந்த ஒலியினையுடைய கடலானது கொடுத்த அமுதத்தைப்போல, ஒருவர் ஆவி தீரினும்-ஒருவருடைய உயிரானது நீங்கினாலும், உதவற்கு ஒத்த - (அவ்வுயிரை மீட்டுத்) தருதற்குப் பொருந்தியதான, தென்றல்- மந்தமாருதமானது, நேர் இழை மகளிர் கூந்தல் நிறை நறை வாசம் நீந்தி-செவ்வையான ஆபரணங்களையுடைய பெண்களினது கூந்தலில் நிறைந்த தேனினது வாசனையைக்கடந்து, வந்து—, இறுத்தது - சேர்ந்தது (௧௬௩)

சாளரத் தூடு வந்து தவழ்தலுந் தரித்த றேற்றா
னீளரத் தங்கள் சிந்தி நெருப்புக நோக்கு நீரான்
வாழ்மனை புகுந்த தாண்டோர் மாசுணம் வரக்கண் டன்ன
கோளுறக் கொதித்து விம்மி யுழையரைக் கூவிச் சொன்னான்

இ - ள். சாளரத்து ஊடு வந்து தவழ்தலும் - (அத்தென்றல்) பலகணிவாயிலினிடையே வந்து மெல்லெனவுலாவிய வளவில், தரித்தல் தேற்றான் - (அவ்விராவணன் அத்தென்றலை (ஆங்குத்) தங்குதற்குத்துணிவுகொள்ளச் செய்யானாகியும், நீள் அரத்தங்கள் - மிகுந்த அரத்தத்தை, சிந்தி—, நெருப்பு உக -(அதனோடு) அக்கினியுஞ்சிந்தும்படியாக, நோக்கும் நீரான் - (கோபித்துப்) பார்க்கின்ற குணத்தையுடையானாகியும், வாழ் மனை புகுந்தது ஓர் மாசுணம் - (தான்) வாழ்கின்ற வீட்டிற் புகுந்ததாகிய ஒரு பாம்பானது, ஆண்டு வரக் கண்டன்ன - (தன் படுக்கையிருக்கும்) அவ்விடத்துக்கு வருவதைப்பார்த்தாற்போல, கோள் உற - கொலை சம்பவிப்பதால் கொதித்து - கொதிப்புற்று [பதைபதைத்து], விம்மி -அழுதும், உழையரை - ஏவல் செய்வோரை, கூவி - அழைத்து, சொன்னான் - (தென்றலின் கொடுமையைக் கூறினான் (௧௬௪)

கூவலி னுயிர்த்த சின்னீ ருலகினைக் குப்புற் றென்னத்
தேவரி னொருவ னென்னை யினனலுஞ் செய்யத் தக்கா
னேவலி னன்றி வந்திங் கிவ்வழி யெய்திற் றென்னுக்
காவலி னுழைபா ரம்மைக் கொன்றுதீர் கடிதி னென்றான்

இ - ள். கூவலின் - கிணற்றில், உயிர்த்த - ஊறிய, சில் நீர் - கொஞ்சநீரானது, உலகினைக் குப்புற்றென்ன - உலகத்தைக் கடந்து சென்றாற்போல, தேவரின் ஒருவன் - தேவர்களுள் (மிகவும் கேவலமாகிய) ஒருவன், என்னை —, இன்னலும் செய்யத் தக்கான் - துன்பமுஞ் செய்யத்தக்கவனாயினான், ஏவலின் அன்றி - (இத்தென்றலானது என்னுடைய) கட்டளையில்லாமல், வந்து —, இ வழி - இவ்விடத்தில், எய்திற்று - அடைந்தது, என்று - என்று சொல்லி, காவலின் உழையர் தம்மை - காவற்றொழிலையுடைய ஏவலாளர்களை, (நோக்கி), கடிதின் கொணர்திர் என்றான் - (வாயுதேவனை) விரைவிற் கொண்டுவாருங்கள் என்று கூறினான் (௧௬௫)

அவ்வழி யுழைய ரோடி யாண்டவற் கொணர்த லோடும்
வெவ்வழி யமைந்த செங்கண் வெருவுற நோக்கி வெய்யோன்
செவ்வழித் தென்ற லோற்குத் திருத்தினை நீகொ லென்னா
விவ்வழி யிருந்த காலைத் தடையவற் கில்லை யென்றான்.

இ - ள். அ வழி உழையர் ஓடி - அவ்விடத்தின் ஏவலாளர்கள் விரைந்து சென்று, ஆண்டு - அவ்விடத்திற்கு அவன் கொணர்தலோடும் - அவ்வாயுதேவனைக் கொண்டு வந்தவளவில், வெய்யோன் - கொடியவனாகிய இராவணன், வெவ்வழி அமைந்த செங்கண் - வெய்யதன்மையிலடங்கிய சிவந்த கண்களினாலே, வெருவு உற நோக்கி - (அவ்வாயுதேவன்) அச்சம் அடையும்படியாகப் பார்த்து, நீ —, தென்றலோற்கு - தென்றலுக்கு, செவ்வழி - செம்மைவழியை [சன்மார்க்கத்தை], திருத்தினைகொல் - வேறுபடுத்தி விட்டாயோ? என்னா - என்றுசொல்ல, இ வழி இருந்த காலை - (நீவிர்) இவ்விடத்திலிருந்த பொழுது, அவற்கு - அத்தென்றற்கு தடை இல்லை - (யாதொரு) தடையும் இல்லை [அஞ்சாமல் தாராளமாய் வரும்படியே சமுகத்தின் கட்டளை], என்றான் - என்று (அவ்வாயுதேவன்) கூறினான் (௧௬௬)

குறிப்பு — நான்காமடியில், நீ யிவ்வாறு காமமுற்றிருந்தபொழுது அத்தென்றலின் குணத்தை மாறுபடுத்தற்கு வேறொரு கருவிவேண்டா தானே தன் குணம் மாறிவரும் என்னுமோருரையும் அடங்கியிருத்தல் காண்க

காற்றினோன் றன்னை வாளா முனிதலிற் கண்ட தில்லை
கூற்றுவந் தென்னை யின்னே குறுகுமாற் குறித்த வாற்றால்
வேற்றருங் கருங்கட் சீதை மெய்யருள் புனையே னென்றா
லாற்றலா லடுத்த தெண்ணு மமைச்சரைக் கொணர்தி ரென்றான்

இ - ள். காற்றினோன்றன்னை - வாயுதேவனை, வாளா - வீணேயாக, முனிதலின் - (நான்) கோபிப்பதுபோல், கண்டது இல்லை - (கோபித்தோரைப்) பார்த்ததில்லை, குறித்த ஆற்றால் - (இன்னவாறு செய்துகொள்ளுதல் வேண்டுமென முன்னமே தீர்மானித்தவழியால், வேல்தரும் கருங்கண் சீதை - வேல்போன்ற கரியகண்ணினையுடைய சீதையினது, மெய் அருள்புனையேன் என்றால் - உண்மையான அருளையணியேனென்றால், இன்னே - இப்பொழுதே, கூற்றுவந்து - யமன்வந்து, என்னை குறுகும் - என்னை யணுகுவான், ஆல் - ஆதலால், ஆற்றலால் - (தமது) அறிவினாலே, அடுத்தது எண்ணும் - (ஆகவேண்டிய காரியத்திற்குத்) தகுதியானதை நினைக்கும், அமைச்சரை கொணர்திர் என்றான் - மந்திரிகளை (அழைத்துக்) கொண்டு வாருங்கள் என்று (இராவணன்) கூறினான்.

குறிப்பு — "குறில் செறியாலள" என்னும் நன்னூற் சூத்திரத்துப் 'ப்ற' என்ற விதியானே 'வேற்றரும்' என நின்றது கூற்றுவந்து குறுகும், மெய்யருள்

புனேயேன்; என்று - என்று கூறி, ஆல ஆற்றலால் - அசைகின்ற ஞானத்தினாலே, அமைச்சர் எணணும் - அமைச்சருவருகின்ற கேகோலத்துக்கு(த் தக்கபடி) ஆலோசனை சொல்லும்) என மற்றுமோர் உரையும் கூறலாம். (௧௬௭)

ஏவின சிலதர் ரோடி யேயெனுந் துணையி னெங்கும்
கூவினர் கூவ லோடுங் குறுகினர் கொடித்திண் டேரர்
மாவினர் சிவிகை மேலர் மும்மதக் களிற்றர் வையத்
தேவரும் வானந் தன்னிற் றேவருஞ் சிந்தை சிந்த.

இ - ள். ஏவின சிலதர் - (இராவணன்) அனுப்பிய ஏவலாளர்கள், ஏ எனும் துணையின் - ஏ யென்று கூறுமளவில், எங்கும் ஓடி - எல்லா இடங்களுக்கும் விரைந்து சென்று, கூவினர் - (மந்திரிகளை அரசன் அழைப்பதாகக்) கூவினார்கள், கூவலோடும் - (அங்ஙனம் அவர்கள்) கூவிய அளவில், வையம் தேவரும் - பூமியிலிருக்கிற தேவர்களும், வானம் தன்னில் தேவரும் - விண்ணுலகிலிருக்கிற தேவர்களும், சிந்தை சிந்த - மனநிலைமாறும்படியாக, (அம்மந்திரிமார்கள்), கொடி திண் தேரர் - துவசத்தினையுடைய வலிய தேர்மேல்வரும், மாவினர் - குதிரைமேல்வரும், சிவிகைமேலர் - தண்டிகைமேல்வரும், மும்மதம் களிற்றர் - மும்மதம்பொருந்திய யானைமேல்வருமாக, குறுகினர் - வந்து சேர்ந்தார்கள். (௧௬௮)

வந்தமந் திரிய ரோடு மாசற மனத்தி னெண்ணிச்
சிந்தையி னினைந்த செய்யுஞ் செய்கையன் றெளிவி னெஞ்சன்
னந்தரஞ் செல்வ தாண்டோர் விமானத்தி லாரு மின்றி
யிந்திய மடக்கி நின்ற மாரீச னிருக்கை சேர்ந்தான்.

இ - ள். வந்த மந்திரியரோடு -(அவ்வாறு) வந்த மந்திரிமார்களுடனே, மாசு அற - குற்றம் நீங்க, மனத்தின் - மனத்தால், எண்ணி - ஆலோசனை செய்து, சிந்தையின் நினைந்த செய்யும் செய்கையன் - மனத்தில் நினைத்தவைகளைச் செய்கின்ற செயலினையுடையவனும், தெளிவு இல் நெஞ்சன் - தெளிவில்லாத நெஞ்சினையுடையனுமாகிய இராவணன், அந்தரம் செல்வது - ஆகாயத்திற்செல்வதாகிய, ஆண்டு - அவ்விடத்திலிருக்கிற, ஓர் விமானத்தில் - ஒரு விமானத்தின்மேல், ஆரும் இன்றி - யாருமில்லாமல் [தான் ஒன்றியாக], இந்தியம் அடக்கி நின்ற - பஞ்சேந்திரியங்களை அடக்கியிருந்த, மாரீசன் இருக்கை சேர்ந்தான் - மாரீசனுடைய இருப்பிடத்தைச் சேர்ந்தான்.

குறிப்பு —இந்தியம் - இந்திரியம், பொறிகள், "கண்முதல் இந்தியங்களையும் பராரத்தத்திற் சாதித்து" என்பது மணிமேகலை. (௧௬௯)

இருந்தமா ரீச னந்த விராவண னெய்த லோடும்
பொருந்திய பயத்தன் சிந்தை பொருமுற்று வெருவு கின்றான்
கருந்தட மலையன் னானை யெதிர்கொண்டு கடன்கள் யாவுந்
திருந்திய செய்து செவ்வித் திருமுக நோக்கிச் செப்பும்.

இ - ள் இருந்த மாரீசன் - (ஆங்கு) இருந்த மாரீசன், அந்த இராவணன் எய்தலோடும் - அந்த இராவணன் வந்தவளவில், சிந்தை பொருந்திய பயத்தன்-மனத

திறபொருந்திய பயத்தையுடையவனும், பொருமுற்று - (சுவாசமிகுந்ததால்) வீங்குதலுற்று, வெருவுகின்றான் - அஞ்சுகின்றவனுமாகி, கரும தடம் மலை அனானை - கரிய பெரியமலைபோன்ற அவ்விராவணனை, எதிர்கொண்டு - எதிர்கொண்டு (போய் அழைத்து வந்து), கடன்கள் யாவும் - (அவனுக்குச்செய்யவேண்டிய) மரியாதைகள் அனைத்தும், திருந்திய செய்து - செம்மையுற்றனவாகச்செய்து, செவ்வி திருமுகம் நோக்கி - அழகுபொருந்திய (அவ்விராவணனது) திருமுகத்தைப்பார்த்து, செப்பும் - கூறுவான். (கஎ0)

வேறு

சந்த மலர்த்தண் கற்பக நீழற் றலைவற்கு
மந்தக னுக்கு மஞ்ச வடுக்கு மரசாள்வா
யிந்த வனத்தென் னின்ன லிருக்கைக் கெளியோரின்
வந்த கருத்தென் சொல்லுதி யென்றான் மருள்கின்றான்

இ - ள் மருள்கின்றான் - (இவன் வந்த காரணம் யாதோஎன) மயங்குகின்ற மாரீசன், (இராவணனைநோக்கி), சந்தம் மலர் தண் கற்பகம் நீழல் தலைவற்கும் - அழகிய மலர்களையுடைய குளிர்ச்சி பொருந்திய கற்பகத்தின் நிழலில் வீற்றிருக்கின்ற (விண்ணவர்) தலைவனாகிய இந்திரனுக்கும், அந்தகனுக்கும் - யமனுக்கும், அஞ்ச - அச்சத்தைச்செய்யும்படி, அடுக்கும் - சேர்கின்ற, அரசு ஆள்வாய் - அரசாட்சிசெய்கின்றவனே! இந்தவனத்து - இந்த வனத்திலிருக்கிற, என் - எனது, இன்னல் இருக்கைக்கு - துன்பத்தைத்தருவதான இருப்பிடத்துக்கு, எளியோரின் வந்த - ஏழைகளைப்போல வந்த, கருத்து என் - எண்ணமியாது? சொல்லுதி என்றான்—;

குறிப்பு—நிழல் - நீழலெனவிகாரம் அஞ்ச எனபது பிறவினைப்பொருள்பட்டினறது. இனி, தலைவற்கும் அந்தகற்கும் நீ அஞ்சும்படி சேரும் அரசையாள்பவனே என ஓர் அறவுரையும் பொருந்தக் கூறினான் என்னலுமாம் (கஎக)

ஆன தனைத்து மாவி தரித்தே னயாகின்றேன்
போனது பொற்பும் மேன்மையு மற்றென் புகழோடும்
யான் துனக்கின் றெங்ங னுரைக்கே னினிதென்று
வானவ ருக்கு நாண் தடுக்கும் வசைமன்றோ

இ - ள் அனைத்தும் ஆனது - எல்லாம் ஆயின, ஆவி தரித்தேன் அயாகின்றேன் - உயிர் தங்கப்பெற்றுச் சோர்வடைகின்றேன், என் புகழோடும் - எனது புகழுடனே, பொற்பும் - அழகும், மேன்மையும் - மேலான தன்மையும், போனது - போயின, வானவருக்கு நாண் அது - தேவர்களுக்கு வெட்கப்படுவது, அடுக்கும் - சேர்கின்ற, வசை - இகழ்ச்சிச்சொல்லை, இனிது என்று - இனியது என்று, அது - அதனை, இன்று - இப்பொழுது, யான் - நான், உனக்கு—, எங்ஙன் உரைக்கேன் - எவ்வாறு கூறுவேன்.

குறிப்பு—அரக்கர்க்கு ஊனுகிய மனிதர் அரக்கரை யஞ்சாமையும், அவர்ற பழியுங்கொலையும் தோன்றமையு முளப்படுத்தி 'ஆன தனைத்தும்' என்றான். ஆன தனைத்தும் - ஒருமை பன்மைமயக்கம் எங்ஙனம் - எங்ஙன் என விகாரம், நாணது, நாண் - முதனிலை, அது - பகுதிப்பொருள் விகுதி. (கஎஉ)

வன்மை தரித்தோர் மானுடர் மற்றவர் வாளா
லின்மரு கிக்கு நாசி யிழக்கு நிலைநேர்ந்தா
ரென்மர புக்கு நின்மர புக்கு மிதன்மேலோர்
புன்மை தெரிப்பின் வேறினி யென்றே புகல்வேலோய்.

இ - ள். வேலோய் - வேலினையுடையாய்! வன்மைதரித்தோர் மானுடர் அவர் வாளால் - வலிமையைப் பூண்டவர்களாகிய மனிதர்கள் அவர்களுடைய வாளினாலே, நின் மருகிக்கு - உன் மருமகளாகிய சூர்ப்பநகைக்கு, நாசி இழக்கும் நிலை நேர்ந்தார் - மூக்கினை இழந்து விடுகிற நிலைமையை யீந்தார்கள், இனி—, தெரிப்பின் - தெரியப்படுத்தினால், இதன் மேல் ஓர் புன்மை - இதற்குமேலாகிய ஒரு இழிவானது, என் மரபுக்கும் நின் மரபுக்கும் - எனது வமிசத்துக்கும் உனது வமிசத்துக்கும், வேறு என்றே - வேறு என்ன இருக்கிறது, புகல் - சொல்லுவாயாக

குறிப்பு —என்றே - இரங்கற் குறிப்புப்பட மொழி மாறு, அங்கு அசைகள இயற்கைவலியில்லா மானிடர் புதிதாக வலிமையையுடைய ராயினா ரென்பான் 'தரித்தோர்' என்ற வினைதந்து கூறினான் (௧௭௫)

இருகு சினத்தார் முதிர மலைந்தார் சிறியோர்நாள்
பருகினா ரென்றால் வென்ற நலத்தின் பழியன்றோ
இருகை சுமந்தா யினிதி னிருந்தா யிகல்வேலுன்
மருகர் உலந்தா ரொருவன் மலைந்தான் வரிவில்லால்.

இ - ள் இருகை சுமந்தாய் இனிதின் இருந்தாய் - இரண்டு கைகளையும் (தலைமேற்) சுமந்துகொண்டு யோக நிஷ்டையிலிருந்தவனே? சிறியோர் - சிறியவர்கள் [மனிதர்கள்], திருகு சினத்தார் - திரும்புகின்ற [மேன்மேலு மதிகரிக்கின்ற] கோபத்தையுடையார்களாகி, முதிர மலைந்தார் - முற்றவுமாச்செய்த இராக்கதர்களுடைய, நாள் - ஆயுள் நாளை, பருகினார் என்றால் - உண்டு விட்டார்கள் என்று கூறினால், வென்ற நலத்தின் - வெற்றிகொண்ட (அவர்களுடைய) நன்மையினால், பழி அன்றோ - (நமக்குப்) பழியன்றோ? ஒருவன் - ஒருமானிடன், வரிவில்லால் - கட்டமைந்த வில்லினாலே, மலைந்தான் - போர்செய்தான், (அதனால்), இகல்வேல - போர்க்குரிய வேலினையேந்திய, உன் மருகர் - உனது மருமக்களாகிய கரதூஷணர்கள், உலந்தார் - இறந்தார்கள்

குறிப்பு —கீழே 'இந்திய மடக்கி நின்ற' என்றதாலும 'ஈண்டு வாளா இனிதினிருந்தா'யென்னாது 'இருகை சுமந்தா யினிதி னிருந்தாய்' என்றதாலும் இனிது என்றது யோக நிஷ்டையென்றும் (௧௭௬)

வெப்பழி யாதென் னெஞ்சு முலந்தேன் விளிகின்றே
னொப்பழி வென்றே போர்செய் லொல்லே னுடன்வாழ்ந்
துப்பழி செவ்வாய் வஞ்சியை வெள்வத் துணைகொண்டிட்
டிப்பழி நின்னுற் றீரிய வந்தே னிவணென்றான்.

இ - ள் வெப்பு அழியாது என் நெஞ்சும் உலந்தேன் - வெப்பம் அழியாமல் எனது மனமும் அழிதலுற்று, விளிகின்றேன் - சாகின்றேனாகிய நான், ஒப்பு அழிவு

என்றே - (அம்மனிதர்கள் எனக்கு) ஈடில்லையென்று எண்ணியே, போர்செயல் ஒல்லேன் - (அவரோடு) போர்செய்தற்குச் சம்மதிக்கமாட்டேன், உடன் வாழும் - அவர்களுடன் வாழ்கின்ற, துப்பு அழி செவ்வாயவளை - பவளம்போன்ற செய்ய வாயினையுடைய பெண்ணை, வெளவ - கவர்ந்து எடுத்துவர, துணைகொண்டு - (உன்னைத்) துணையாகக்கொண்டு, இ பழி - இந்தப்பழியை, நின்னால் - உன்னால், தீர்ய் - தீர்த்துக்கொள்ள, இவண் வந்தேன் என்றான் - இவ்விடத்திற்கு வந்தேன் என்று (அவ்விராவணன்) கூறினான்.

குறிப்பு — வெப்பம் - ஆசை, மனத்துயர், வெம்மையென்ப பலபொருள் குறிக்கும் ஒருசொல்லாகலின், நேரிட்ட பழியால் மனத்துய ரழியாதென்றேனும், சீதைமேற்கொண்ட ஆசை யழியாதென்றேனும் பொருள் கூறிக்கொள்க. துப்பழி, அழி - உவமவாசகம். கொண்டிட்டு, இட்டு - அசை. (௧௭)

இச்சொ லனைத்தும் சொல்லி யரக்க னெரிகின்ற
கிச்சி னுருக்கிட் டுய்த்தன னென்னக் கிளராமுன்
சிச்சி யெனத்தன் மெய்ச்செவி பொத்தித் தெருமந்தா
னச்ச மகற்றிச் செற்ற மனத்தோ டறைகின்றான்.

இ - ள். அரக்கன் இ சொல் அனைத்தும் சொல்லி - அவ்விராவணன் இந்த வார்த்தைகள் முழுவதுஞ் சொல்லி, எரிகின்ற கிச்சின் - எரிகின்ற நெருப்பில், உருக்கு இட்டு - இரும்பைவைத்து, உய்த்தனன் என்ன - செலுத்தினை போல [இரும்பைக்காய்ச்சிச் சூடு போட்டாற்போல], கிளராமுன் - கிண்டாதமுன்பு [சொல்லத்தகாத அவ்வார்த்தைக் குப்பையைக்கிளறித்தனக்கு வேதனையுண்டாக்காதமுன்பு], சிச்சி என - சீச்சீ என்று, தன் மெய் செவி பொத்தி - தனது உண்மையான காதுகளைமூடி, தெருமந்தான் - (மனஞ்) சுழலுதலுற்று (பின்னர்), அச்சம் அகற்றி - பயத்தை விலக்கி, செற்ற - கோபித்த, மனத்தோடு - மனத்துடன், அறைகின்றான் - சொல்லுகின்றான்.

குறிப்பு — உருக்கு - உருக்கப்படுவது, செயப்படுபொருள் விகுதி புணர்ந்து கெட்டது. சிச்சி - சீச்சீ, இகழ்ச்சிக்குறிப்பு. உண்மையாகவே அந்தக்கொடுஞ் சொற்களைக் கேட்க மாரீசனுக்கு விருப்பமில்லையாதலின் 'மெய்ச்செவி' என்றார். இனி, மெய்ச்செவி - சரீரத்திலுள்ள செவியென்றே கொண்டு, இராவணனது தீயவுரைகளை மனத்தால் கிரஹிக்காதிருப்பினும், அவை மெய்ச்செவிகளையுற்று ஆண்டுத் தங்குதலுங்கூடுமே, அதனையுந் தடுத்தலே நெறியென்றெண்ணித் தன் காதுகளைப் பொத்தினான் என்று பொருள் கோடலுஞ் சிறப்புடைத்து. "ஆங்கது கேட்டாங் கருப்புண் ணகவயிற், றீத்துறு செங்கோல் சென்றுசுட் டாங்குக், கொதித்த வுள்ளமொடு குரம்புகொண் டேறி, விதுப்புறு நெஞ்சினள் .." என்னும் (மணிமேகலை, உதயகுமரன் அம்பலம் புக்க காதைச்) செய்யுளடிகளிரண்டாமடியோ டொப்பு நோக்குக.

மன்னா நீநின் வாழ்வை முடித்தாய் மதியற்றா
யுன்னா னன்றீ தூழ்வினை யென்றே யுணர்கின்றே
னின்னா நெஞ்ச னேனு முரைப்ப விதமென்னாச்
சொன்னா னன்றே யன்னவ னுக்குத் துணிவெல்லாம்.

இ - ள். மன்னா - அரசனே! நீ —, நின் வாழ்வை முடித்தாய் - உனது வாழ்வை முடித்துவிட்டாய், மதி அற்றாய் - அறிவற்றுப்போயினை, ஈது - இவ்வெண்ணம், உன்னின் அன்று - உன்னால் (உண்டானது) அன்று, ஊழ்வினை என்றே உணர்கின்றேன் - விதியின் செயலென்றே அறிகின்றேன், இன்னா நெஞ்சனேனும் - (நான்) கெட்ட மனத்தையுடையவனாயிருந்தாலும், இதம் உரைப்பல் என்னா - நன்மையைச் சொல்வேன் என்று, அன்னவனுக்கு - அவ்விராவணனுக்கு, துணிவு எல்லாம் சொன்னான் - நல்லவிஷயங்கள் முழுதும் கூறுவானாயினான்.

குறிப்பு — "விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில், தீமை புரிந்தொழுகுவார்" "எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந், தேரான் பிறனில் புகல்" என்றவாறு பிறன் மனைவியை விரும்பினோன் இறந்தவனும் பெருமை யிழந்தவனுமாவானாதலின், 'நின்வாழ்வை முடித்தாய்' என்றான். நீ வேதங்களை நன்குணர்ந்த புத்திமானாதலின் இக்கொடிய நினைப்பைக் கொள்ளத்தக்கவனல்லை யென்பான் 'உன்னின் அன்று' என்றான், ஈண்டு 'இன்' ஐந்தனுருபு. இனி, (இச்செயல் கொடியதென்று நீ) உன்னுதவன் அன்று என்னும் பொருள் கோடலாம். இன்னா - ஆகாமை, தீமை, துன்பம். துணிவு - ஆன்றோர்கள் துணிந்து செய்யத்தக்கதெனக் கொண்ட செயல், நல்விஷயமாம். (௧௭௭)

அற்ற கரத்தோ டுன்றலை தீயே யனன்முன்றிற்
பற்றினை யுய்த்தாய் பற்பல காலம் பசிகூர
வுற்றுயி ருள்ளே தேய வுலந்தா யுழையன்றோ
பெற்றனை செல்வம் பின்ன திகழ்ந்தாற் பெறலாமோ.

இ - ள். அற்ற (உன்) கரத்தோடு - அறுபட்ட உனது கரங்களையும், (அற்ற) உன் தலை - அறுபட்ட உனது தலைகளையும், பற்றினை - (அறுபடா மற்றைக் கரங்களாற்) பிடித்து, தீ எய் அனல் இல் முன் உய்த்தாய் — அக்கினி பொருந்திய ஓமகுண்டத்தின் முன் செலுத்தி, பல் பலகாலம் - அநேககாலம், பசி கூர உற்று - பசி மிகுதியாகவடைந்து, உள்ளே - உடலுக்குள்ளே, உயிர் தேய - உயிர் தேயும்படி, உலந்தாய் - (உடலின்வலி) அழிந்தாய், உழை அன்றோ - (அப்படி வலியழிந்த) இடத்தில் அன்றோ? செல்வம் பெற்றனை - செல்வத்தைப் பெற்றாய், இகழ்ந்தால் - (உலகத்தோர் நின்னை) இகழ்வாராகவேயானால், பின் - அதன் பிறகு, அது - அச்செல்வத்தை, பெறல் ஆமோ - அடைதற்குக் கூடுமோ?

குறிப்பு — இல்முன் - முன்றிலென மருஉ, "முன்னென் கிளவி முன்னர்த் தோன்று, மில்லென் கிளவிமிசை றகர மொற்றத், தோன்றிய மருங்கின் மரீஇய மரபே" என்றார் தொல்காப்பியத்தில். "ஓரா யிரமாண் டுபவசித்துக் கழிந்தா லோரோர் தலையாகச், சீரார் சிரமொன் பதுந்தடிந்து செந்தீ யிடையோ மம்பண்ணப், போர்வுபவா சத்தினையப் பின்புமோரா யிரத்தாண்டிற், றூரார் மற்றைத் தலைதடிய லுற்றான் பற்றித் தசக்கிரிவன்" எனும் உத்தரகாண்டச் செய்யுளால் இராவணன் செய்த தவநிலைமையறிக. நீ அரியதவஞ்செய்ததால் இப்பெருஞ்செல்வத்தை யடைந்தாயென்றான். "நற்றவஞ் செய்த வீரருளவழி நயந்து நாடும், பொற்றதா மரையினாளில." என்றார் திருத்தக்கதேவரும். பிறனில் விழைவார்க்குச் சேரும் பகை, பழி, பாவம், அச்சம் என்பவற்றுள் பழியொன்றே இராவணனது நிலைமைக்கு முதன்மையாதல்பற்றி 'இகழ்ந்தால்' என்றான். "அறம்புகழ் கேண்மை பெருமை

யிக்கானகும, பிறனாறா நசசுவாச சோா—, பிறன்றா, நசசுவாச சேரும பகைபழி பாவமெண, றசசததோ டிநநாற பொருள" எனறா நாலடியாரிலும் அரிய பெரிய தவஞசெயது அடைநத இபபெருஞசெலவததைப பிறனிலவிழைநது பழிகொணடு வீணே இழககபபோகிறாயே யெனபான 'பினனிகழநதாற பெறலாமோ' எனறான. பகையே பழியே பாவமே பயமே நான்கு தினஙகொடுககும, தகையாா பெருமை முழுதழிக்குஞ சாாநத பிறனில விழைவொழிநதோா, தொகையா ரறமே பொருளினபந தோலாப பெருமை யுடனவாழவாா, நகையா லதனைக கனவிடதது நவிறறி யிடினுந தீஙகாமே" எனறா விநாயகபுராணததும (௧௭௮)

திறததிற ஞலோ செயதவ முறறுத திருவுறறாய
மறததிற ஞலோ சொலலுதி சொலலாய மறைவலலோ
யறததிற ஞலே யெயதினை யனறோ வதுநீயும
புறததிற ஞலே பினனு மிழககப புகுவாயோ

இ - ள சொல ஆய மறைவலலோய - மறையினது சொறகளையாயகினற வலலவனே! [இராவணனே!] திறம திறஞலோ - மேலான குணததிஞலேயோ, மறம திறஞலே - பாபகுணததிஞலேயோ, (இவவிரணடுகுணததில எககுணததால), செயதவம முறறி-செயததவம நிறைவேறறி, திரு உறறாய - செலவததையடைநதாய, சொலலுதி-சொலலுவாய, அறம திறஞலே யெயதினை அனறோ - (இசசெலவததை) தருமகுணததிஞலே அடைநதாயனறோ? நீயும- (தருமகுணததிஞலே அரியதவமுறறிச செலவததையடைநத சிலாககியவாஞகிய) நீயும, புறம திறஞலே - (உனனிடததிலிலலாத) கெடடகுணததிஞலே, பினனும—, இழகக புகுவாயோ - (அடைநத செலவததை) இழநதுவிட கோதலுறுவாயோ? [இழநதுவிடமாடடாய]

குறிபபு —திறன - திறம. நீ யடைநதபயன அறததிஞலெனறே உனககு நனறாயத தெரியுமானதால நீ சொலல மயஙகமாடடாய எனபான 'சொலலுதி சொலலாய' எனறான இனி, சொலலுதி சொலலாயெனபதை அடுககெனபாருமுளா, மறையில வலலவஞதலானும, மறையோனகுலததில வநதவ ஞதலானும 'மறைவலலோய' என விளிததான. (௧௭௯)

நாரங கொணடாா நாடு கவாநதாா நடையலலா
வாரங கொணடாா மறறொருவ ராககாய மனைவாழுந
தாரங கொணடா ரெனறிவா தமமைத தருமநதா
னீருங கணடாய கணடக ருயநதா ரெவரையா

இ - ள நாரம கொணடாா நாடு கவாநதாா - அனபுகொணட நணபாகளுடைய நாடடைக கொளளைகொணடவாகள, நடை அலலா வாரம கொணடாா - நடபபலலாத உரிமைபபொருளைக கொணடவாகள, மறறு ஒருவாககாய மனைவாழும தாரம கொணடார் - வேறொருவாககாக (அவா) மனையில் வாழகினற மனைவியை(த் தமவசப்படுததிக) கொணடவாகள, எனற இவா தமமை - எனறு சொலலபபடட இவாகளை, தருமம ஈரும கணடாய - தருமமெனபது கொனறுவிடும, ஐயா—! கணடகா எவா உயந்தாா - துஷடாகளில யாா பிழைததவாகள் ? (௧௮௦)

குறிப்பு —மறறொருவாககாய், ஆய - ஆகி யெனபதனறிரிபு இனி, மறறொருவர்ககாய மனைவாழும - மறறொருவரைககாயநது அவாது மனையிலவாழும, எனப்

பொருள் கோடலுமாம் இப்பொருட்டே, காய் - காயநது எனபது 'வரிப்புனை பந்து' எனபுழிப்போல நினறது.

அநதர முற்ரு னகலிகை பொறபா லழிவுறரு
னிநதிர ஞெபபா ரெததனை யோரதா மிழிபுறரூா
செநதிரு வொபபா ரெததனை யோரினை றிருவுணபாா
மநதிர மறரு ருறற துரைததாய மதியறருய்.

இ - ள அநதரம உறருன - வானுலகிலிருக்கிற இநதிரன, அகலிகை பொற பால அழிவு உறருன் - அகலிகையினுடைய அழகினுலே கெடடைநதான, இநதிரன ஒபபாா-அவவிநதிரனை யொததவாகள, எததனையோாதாம- எவவளவுபோகள, இழிபு உறரூா - (காமததால) இழிவை அடைநதாாகள, செநதிரு ஒபபாா - இலக குமிதேவியை யொததவாகள, எததனையோா - எவவளவு போகள, நினறிரு உண பாா - உனதுசெலவததை யுணகினருாகள, மநதிரம அறரூா உறறது உரைததாய மதி அறருய - ஆலோசனையறறவாகளுககுத தோனறுவதாகிய கெடட விஷயத தைச சொலலிப் புததியறறவனுயினுய. (௧௮௧)

செயதா யேனுந தீவினை யோடிம பழியலலா
லெயதா தெயதா தெய்தி னிராம னுலகீனருன
வைதா லனன வாளிகள கொணடும வழியோடுங
கொயதா னனறே கொறற முடிததுன குழுவெலலாம

இ - ள செயதாயேனும - (நீ நினைதத காரியததைச) செயதுவிடடா யாயினும, (அசசெயலால), தீவினையோடும பழி அலலால எயதாது எயதாது - பாவமும பழியு மலலாமல (நனமை யாதும) சேரவே சேராது, எயதின - (பயனொருககால) அடைநதால, உலகு ஈனருன இராமன - உலகஙகளையெலலாம படைததவனுகிய இராமன, வைதால அனன வாளிகள கொணடும - திடடினுறபோல அமபுகளைக கொணடும, வழியோடும - (நியாயமான) காரணததோடும, கொறறம முடிதது - (உனது) அரசியலைபபோககி, உன குழு எலலாம - உனது கூடடம முழுவதையும, கொயதான - கொயவான. (௧௮௨)

எனருலெனனே யெணணலை யேநீ கரனெனபா
னினருனைக்கு மேலுள னெனனு நிலையமமா
தனருனைககுற ருரொடு மாளத தனுவொனரு
கொனருன முறறுங கொலல மனததிற குறிகொணடான

இ - ள. எனருல - எனறு சொனனுல, எனனே - எனன ஆசசரியம, நீ எணணலையே- (சறறும் அவன பெருமையை) நீ எணணுமலிருககினருய, அமமா-ஐயோ, நினதானைககும மேல் உளன எனனும நிலை கரன எனபான - உனது சேனைககும மேலான சேனையையுள்ளவன் எனறு கூறும நிலைமையையுடைய கரன எனபவன, தன தானைககு உற்ரு ரொடும மாள - தனது சேனைககு(த தலைவாகளாய்)ச சோநதவாகளோடும இறககும்படி, தனு ஒனருல கொனருன் - வில ஒன்றினுற கொனற வனுகிய இராமன், முற்றும கொல்ல - (இராக்கதா கூடடம) முழுவதையுங் கொலவதறகாக, மனததில் குறிகொணடான - (தன) மனததிற கருதியிருக்கிருன.

குறிப்பு:—என்னே - அதிசய விரக்கச்சொல் அம்மா என்பது-ஈண்டு ஐயோ என்னும் இரக்கக் குறிப்புப்பொருளில் நின்றது, "வெறும்பொருள் தம்மா விடுத்திடுமி னென்றாள்" என்புழி இரக்கக் குறிப்பாக நின்றதுபோல், [சிந்தாமணி, முத்தியிலம்பகம், 24]. (௧௮௩)

வெய்யோர் யாரே வீர விராதன் றுணைவெய்யோ
ரையோ போனா னம்பொடு மும்பாக் கவனென்று
லுய்வார் யாரே நம்மி னெனக்கொண் டுணர்தோறு
மையா நின்றே னீயி துரைத்து நலிவாயோ.

இ - ள். வீரன் விராதன் - வீரனாகிய விராதனைப்பார்க்கிலும், துணைவெய்யோர் - (உனது) சகோதரர்களாகிய கும்பகருணன் முதலிய கொடியவர்களுள், வெய்யோர் யாரே - கொடியவர்கள் எவர்கள் ? அவன் - அவ்விராதன், உம்பர்க்கு - விண்ணுலகுக்கு, அம்பொடும் - (இராமனுடைய) அம்பினுடனே, ஐயோ போனான் என்றால் - ஐயோ போனான் என்று கூறினால், நம்மில் உய்வார்யாரே என கொண்டு உணர்தோறும் - நம்மில் பிழைப்பவர்கள் எவரோ ? என்று (ஐயங்) கொண்டு ஆலோசிக்கும் பொழுதெல்லாம், மையாநின்றேன் - மைகின்றேன் [தளர்வடைகின்றேன்]; நீ—, இது உரைத்து - இவ்வார்த்தையைச்சொல்லி, நலிவாயோ - கெடுவாயோ ?

குறிப்பு —விராதன் றுணை வெய்யோர் என்றது, விராதனளவு கொடியவர்கள் என்பது மொன்று துணை உவம உருபுமாம். (௧௮௪)

மாண்டார் மாண்டார் நீயினி மாள்வார் தொழில்செய்ய
வேண்டா வேண்டா செய்கெனி னுய்வான் விதியுண்டோ
வாண்டா ராண்டா ரெத்தனை யென்கோ வறநோனா
ரீண்டா ரீண்டார் நின்றவ ரெல்லா மிலரன்றே.

இ - ள் மாண்டார் - (உன்னைவிட) மாட்சிமைப்பட்டவரும், மாண்டார் - (தீவினைசெய்ததமையால்) இறந்தார்கள், மாள்வார்தொழில் - (அங்ஙனம்) இறப்பார்களுக்குரிய செய்கையை, நீ இனி செய்யவேண்டா - (நெடுங்காலம் வாழ்தற்குரிய) நீ இனிமேல் செய்யவேண்டாம், வேண்டா செய்கு எனின் - விரும்பத்தகாத காரியங்களைச் செய்வேன் என்பாயாயின், உய்வான் விதி உண்டோ - பிழைத்தற்கு வழியுண்டோ? (இல்லை), ஆண்டார் - (பல) வருஷங்களையுடையாராக, ஆண்டார் - அரசுபுரிந்தவர்கள், எத்தனை என்கோ - எவ்வளவு என்று சொல்வேனோ? (சொல்லமுடியாது), அறம் நோனார் - (அவர்களில்) தருமவழியில் தவஞ்செய்யாராகிய, ஈண்டார் - இவ்விடத்திலுள்ள நம்மவரில், ஈண்டு - இப்பொழுது, ஆர் நின்றவர் - எவர் நிலையடைந்தார், எல்லாம் இலர் அன்றே - அவர் அனைவரும் இல்லாதவரேயன்றோ ?

குறிப்பு —செய்கு என்கு' தன்மை யொருமை வினைமுற்றுகள் முறையே, செய்வேன், என்பேன் என்னும் பொருளன. தருமவழியிற் றவஞ்செய்தலாவது, "அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ னான்கு, மிழுக்கா வியன்ற தறம்" என்றவாறு செய்தலாம். இங்ஙனமன்றிப் பொறுமை முதலிய கொண்டு செய்யுந் தருமம் பயனில்லையாம்; "தக்கனார் வேள்வித் தவத்தைமேற் கொண்டிருந்தும், தொக்க வறமாயிற்றன்றோ" என்பதனாலறிக. இதற்குமுன் கரன் விராதன் என்னும், இராவணனினுந் தாழ்ந்தோர்கள் தன்மையை யறிவித்து, இக்கவியில் மாண்டார் (மாட்சிமைப்பட்டார்) என இரணியன் சூரபத்மன் முதலிய மிக்கோர் தன்மையைக் கூறினான் எனக் காண்க. இனி, 'செய்கெனில்' செய்க எனின் எனப் பிரித்து செய் என்று சொல்வாயாயின், எனப்பொருள்கூறுவாரு முளர். இப்பொருட்கு அகரம் தொகுத்தல். 'நோனார் ஈண்டார் ஈண்டார் நின்றவர் எல்லாம் இலர்' என்றது நோனார் - தவஞ்செய்யாதவர்கள், ஈண்டார் - உயர்வடையார், ஈண்டு ஆர் நின்றவர்

எலலாம இலா, எனக்கூறுதலுமொனறு ஈணடுதல - ஒருங்குதல் என்னும பொருள தருதலே, புறநானூறு 25-வது கவியில, "ஈணடுசெலன மரபில" எனபதற்கு வரைநத வுரையாற றெறிக. (௧௬௫)

எமபிக குமமென னனனே தனக்கு மிறுதிககோ
ரமபுயக குமபோா விலலி தனககு மயனிறகுந
தமபிக குநநம மாணமை தவிாநதே சயநிறகுங
கமபிக குமமென னெஞசவ னெனறே கவலகினறேன.

இ - ள. எமபிககும் - எனது தமபியாகிய சுபாகுவினுடையவும், என அனனே தனககும - எனது தாயாகிய தாடகையினுடையவும், இறுதிககு - முடிவின பொருட்டாக, ஓா அமபு உயககும - ஒரு அமபைச செலுததும, போாவிலலி தனககும - போரைசசெயத விலலியையுடைய இராமனுககும, அயல நிறகும தமபிககும - அவன பககததில நிறகினற (அவனுடைய) தமபியாகிய இலககுமணனுககும, நம ஆணமை தவிாநது - நமது ஆணமையானது நீஙக, சயம நிறகும - (அவாகளபால) வெறறி நிறகும, அவன எனறே எனனெஞசு கமபிககும - அததனமையுடைய இராமனெனறே எனனுடைய இருதயம நடுஙகும, கவலகினறேன - (ஆதலால) துயருறுகினறேன ஏ - அசை

குறிபபு — தவிாநது-'இருணீஙகி யினபம பயககும்' எனபுழிபபோல நினறது.

நினறுஞ சென்றும வாழவன யாவு நிலையாவால
பொனறும மெனறும மெய்மமை யுணாநதாம புலையாடற
கொனறும முனனு யெனனுரை கொளளா யுயாசெலவத
தெனறும மெனறும வைகுதி யையா வினியெனறுன

இ - ள நினறும செனறும வாழ்வன யாவும - (அசையாமல) நினறும (அசைநது) செனறும வாழபவை யெவையும [சராசரஙகளெலலாம], நிலையா - நிலைதநிருககமாட்டா, பொனறும எனற மெயமமை உணாநதாம - (அவையனைததும) இறநதுபோமெனற உணமையை யறிநதுகொணடோம, இனி—, ஐயா— புலையாடறகு ஒனறும உனனு - (நீ) பொல்லாஙகுசெயதறகு ஒரு விஷயததையும நினைககமாட்டாய, எனறும உயா செலவதது வைகுதி - எநநாளும உயாநத செலவததில இருநதுவாழவாயாக, (ஆதலால), என உரை கொளளாய -எனது வாாததையை அஙகீகரிததுககொள, எனறுன—, (௧௬௭)

வேறு.

கஙகைசடை வைததவ னெடுஙகைலை வெறபோ
ரஙகையி னெடுததவென தாடெழின மணிததோ
ளிஙகொர்மனி தறகெளிய வெனறனை யெனததன
வெஙகணெரி யபபுருவ மீதுற விடைததான.

இ - ள கஙகைசடை வைததவனெடுமே - கஙகையைச சடையில வைதத சிவபிரானேடுமே, கைலை வெறபு - கைலாச மலையை, ஓா அஙகையின எடுதத - ஒரு அஙகையினுலே யெடுதத, எனது - எனனுடைய, ஆடு எழில - வெறறியாகிய அழகும, மணி - (இயறகையாகிய) அழகும பொருநதிய, தோள - புயஙகள இஙகு - இவவிடததில, ஓா மனிதறகு - ஒரு மனிதனுககு, எளிய எனறனை - எளியன எனறு கூறினுய, என - எனறு, வெஙகண எரிய - (தனது) வெவ்விய கணகள (நெருபபைபபோல்) எரியவும, புருவம மீது உற - புருவமானது மேலே சேரவும, விடைததான - (இராவணன) கோபிததான.

குறிபபு — ஆடு - அடுதல; தொழிலாகுபெயராய் வெற்றிமேல் நின்றது, "ஆடு, கொளக குழைநத" எனறுா புறப்பாட்டினும. (௧௬௮)

நிகழநததை நினைததிலையெ னெஞசினிலை யஞசா
திகழநதனை யெனககிளைய நஙகைமுக மெஙகு
மகழநதனைய தொபபுற வமைததவரை யையா
புகழநதனை தனிபபிழை பொறுததனெ னிதெனறுன.

இ - ள ஐயா—! நிகழநததை நினைததிலை - நடநதகாரியததை நினைததாயி ல்லை என னெஞசின நிலை அஞசாது இகழநதனை- எனது மனததினது நிலைமையை அஞசாமல இகழநதாய, எனககு இளையநஙகை முகம எஙகும அகழநதனையது ஒபபு உற அமைததவரை புகழநதனை - எனககு இளையநஙகையாகிய சூபபநகையி னது முகமுழுவதும தோணடுதலசெயது அததனமையானது ஒபபாகுமபடி செயத வாகளைப் புகழ்நதாய, இது தனி பிழை பொறுததனென எனறுன- இநத ஒருகுறற ததைப பொறுததேனென்று (அவவிராவணன) கூறினுன (௧௮௯)

தனனைமுனி வுறறதறு கடடகவி லோனைப
பினனைமுனி வுறறிடு மெனத்தவிாதல பேணு
துனனைமுனி வுறறுன குலததைமுனி வுறறு
யெனனைமுனி வுறறிலைபி தெனனென விசைததான.

இ - ள. தனனை முனிவு உறற - (மாரீசன) தனனைக கோபிதத, தறுகண தகவு இலோனை - அஞசாமையில (தனககு) உவமையிலலாத இராவணனை, பின னை - பினனும, முனிவு உறறிடுமெ என - கோபிபபானெனறு, தவிாதல பேணுது - (தான நீதிசொலவதினினறும) ஒழிதலை விரும்பாமல, எனனை முனிவு உறறிலை - (நீ) எனனைக கோபிததாயிலலை, உனனை முனிவு உறறு - (முதலில) உனனை (நீயே) கோபிதது, உனகுலததை முனிவு உறறுய - (பினனா) உனனுடைய குல ததையெலலாங கோபிததாய, இது என என இசைததான - இபபடிக கோபிப்பது யாது? எனறு கூறினுன (௧௯0)

எடுததமலை யெநினையி னீசனிகல விலலாய
வடிததமலை யெயிது வலிததியென வாரிப
பிடிததமலை நாணிடை பிடிததொருவன மேனு
ளொடிததமலை யுமபாமுக டுறறமலை யனறே.

இ - ள. மேல நாள - முனனுள, இது வலிததி என - இவவிலலை வளைபபா யாகவெனறு (மிதிலையாகோன) கூற, ஒருவன - ஒப்பறற இராமன, வாரி பிடிதத மலை - எடுததுப பிடிததமலையும, நாண இடைபிடிதது ஒடிததமலை - நாணியின நடு வேபிடிதது (இழுதது வளைதது) ஒடிதத மலையுமாகிய விலலெனனும மலையானது, நினையின - நினைககுமிடதது, எடுததமலையே - (நீ) எடுதத கைலை மலையோ? [அனறு] ஈசன இகல விலலாய வடிததமலையே - சிவபெருமான் போாககுரிய விலலாய வசப படுததிய(பொன) மலையோ? [அனறு] (பினனை யாதெனின) உமபாமுகடு உறறம லை அனறே - ஆகாயததின முகட்டையடைநத (நிநத) மலையனறே?

குறிப்பு — வலித்தி என வரிப் பிடித்தமலை - பரசுராமன் கலைவென்றுகூற வரிப்பிடித்த வில்லெனப் பொருள்கோடலுமாம். இப்பொருள் கொள்ளுங்கால் பிடித்த வில்லும் ஒடித்த வில்லுமாக விறகளிரண்டும் வெள்ளிமலை பொன்மலையெனும் இரண்டுமலையுமாமோ? ஆகாது அவ்விரண்டும் இரண்டு விந்தமலைகளாகுமன்றோ எனப் பொருள்விரித்துக் கொள்க. (௧௧௩)

யாதுமறி யாயுரைகொ ளாயிக லிராமன்
கோதைபுனை யாமுனுயிர் கொள்ளைபடு மன்றே
பேதைமதி யாலிஃதொர் பெண்ணுருவ மென்றாய்
சீதையுரு வோநிருதர் தீவினைய தன்றோ

இ - ள் யாதும் அறியாய் - (இராமனது ஆற்றலில்) யாதும் (நீ) அறியாய், உரை கொளாய் - (நான் சொல்லும்) வார்த்தைகளையும் (ஏற்றுக்) கொள்ளமாட்டாய், இகல் இராமன் கோதைபுனையாமுன் - வலிமையையுடைய இராமன் (போர்க்குச் செல்லுமுன் பூணும்) மாலையை அணியாத முன்பே, உயிர் கொள்ளைபடும் - உயிர்கள் கவரப்படுமே; பேதைமதியால் - மடமைபொருந்திய புத்தியாலே, இஃது - இது, ஓர் பெண் உருவம் என்றாய் - (சாதாரணமான) ஒரு (மானிடப்) பெண்ணினது உருவம் என்று கூறினாய், சீதை உருவோ - சீதையினது உருவமோ, நிருதர் தீவினையது அன்றோ - இராக்கதர்களுடைய பாவத்தினின்றுந்தோன்றியது அன்றோ.

உஞ்சுபிழை யாயுறவி னோடுமென வுன்னு
நெஞ்சுபறை போதுமது நீநினைய கில்லாய்
யஞ்சுமென தாருயி ரறிந்தருகு நின்றார்
நஞ்சுநுகர் வாரையிது நன்றெனலு நன்றோ.

இ - ள் உறவினோடும் - (நீ) சுற்றத்தாரோடும், உஞ்சு - ஈடேறுதலுற்று, பிழையாய் என உன்னு - பிழைக்கமாட்டாய் என்று கருதி, நெஞ்சு பறைபோதும் அது - (என்) மனம் பறைகொட்டுதல்போலத் துடிக்கின்றதை, நீ நினையகில்லாய் - நீ (சிறிதும்) அறியாய், எனது ஆர் உயிர் அஞ்சும் - எனது அரிய உயிர் அஞ்சுகின்றது, நஞ்சுநுகர்வாரை அறிந்து அருகு நின்றார் - விஷத்தையுண்பவர்களை அறிந்து (அவர்) பக்கத்தே நின்றவர்கள், இது - (விஷத்தையுண்ணும்) இச்செயல், நன்று எனலும் நன்றோ - நல்லது என்று கூறுதலும் நன்மையுடையதோ? (௧௧௪)

ஈசன்முதன் மற்றுமிமை யோருலகு மற்றைத்
தேசமுதன் முற்றுமொ ரிமைப்பினுயிர் தின்பக்
கோசிக னமைத்தகட வுட்படை கொதிப்போ
டாசில கணிப்பில விராமனரு ணிற்ப

இ - ள் கோசிகன் அமைத்த கடவுள் படை - விசுவாமித்திரன் (இராமன்பால்) அமையச்செய்த தெய்வத்தன்மை பொருந்திய ஆயுதங்களானவை, ஈசன்

முதல் - சிவபிரான் முதலாயுள்ள, (முற்றும்) - (தேவகூட்டம்) முழுவதையும், மற்றும் —, இமையோர் உலகும் மற்றை தேசம் முதல முற்றும் - தேவலோகமும் மற்றைத் தேசங்களாகிய பூமியும் பாதலமும் முதலாகிய உலகங்கள் முழுவதையும், ஓர் இமைப்பின் - ஓரிமைப்பொழுதில், தின்ப - தின்பன, கொதிப்பபோடு ஆசு இல் - கோபமும் குற்றமுமில்லாதன, இராமன் அருளாகிற்ப - இராமனது கருணையால் நிற்பன, கணிப்பு இல - அளவில்லாதனவாயின,

குறிப்பு — மற்று - வினைமாற்று. மற்றை - சுட்டியதற்கினம். கோசிகன் - கௌசிகன். இராமபிரானபாலுள்ள கோபமின்மையையும் குற்றமற்ற தன்மையையும் அவன் படைமேலேற்றிக் கூறினன். உலகமனைத்தையும் அழிக்கும், தன் அம்புகளைத் தான் கருணைசெய்து தானே விலக்கினாலன்றிப் பிறகணையால் விலக்கமுடியாதென்பான் 'அருணிற்ப' என்றான். (௧௬௪)

ஆயிர மடற்கையுடை யானைமழு வாளா
லேயெனு மிமைப்பினுயிர் செற்றவெதி ரிலோன
மேயவிறன் முற்றுவரி வெஞ்சிலையி னோடுந்
தாயகன் வலித்தகையை யாமுறு தகைத்தோ

இ - ள் அடல் ஆயிரம் கையையுடையானை - வெற்றிபொருந்திய ஆயிரம் கைகளையுடைய கார்த்தவீரியார்ச்சுனனை, ஏ எனும் இமைப்பின் - ஏ யென்று கூறும்பொழுதுக்குள், மழுவாளால் - மழுவாகிய வாளினாலே, உயிர் செற்ற - உயிரைக் கொன்ற, எதிர் இலோன் - இணையில்லாத பரசுராமன், மேய - மேவிய [விரும்பிய] விறல்முற்று - வெற்றிநிறைந்த, வரி - கட்டமைந்த, வெம் சிலையினோடும் - வெவ்விய வில்லினோடும், வலித்த - வளைத்த, தாயகன் கையை - ஸ்ரீராமனது கையின் வலிமை, யாம் உறு தகைத்தோ - நாம் அடையுந்தன்மையதோ?

குறிப்பு —ஒவ்வோர் கையும் ஒவ்வோர் வெற்றியையுடையது என்பது விளங்க 'அடல்' என்பதை ஆயிரங்கை என்பதற்கிடையே வைத்தான். இமைப்பென்றது - கணப்பொழுது மாத்திரையாய் நின்றது. மழுவினவாய வாள்போன்றிருந்தலபற்றி 'மழுவாள்' என்றான், "மன்மருங் கறுத்த மழுவா ணெடியோன்" என்றார் மணிமேகலையினும் [மணி, சிறைசெய், 25-வது வரி]. ஓடும், உம்மை - எச்சமாதலின் தயத்தையும் வளைத்த என்று வருவித்துக்கொள்க. தாயகன் - உலகுக்கோர் தாயவீடு போன்றவன். வலித்தகையை எனக்கொண்டு வலித்த என்பது வலியென விகாரப்பட்டதெனலு மமையும். (௧௬௫)

வேதனைசெய் காமவிட மேலிட மெலிந்தாய்
நீதுரைசெய் தாயினைய செய்கைசிதை வன்றோ
மாதுலனு மாயமரபின் முந்தையுற வந்தே
னீதுரைசெய் தேனதனை யெந்தைதவி ரென்றான்

இ - ள் எந்தை - எந்தாய்! வேதனை செய் காமம் விடம் மேலிட மெலிந்தாய் - துன்பத்தைச் செய்கின்ற காமமாகிய விஷமானது அதிகரிக்க (நீ) மெலிவடைந்து, தீது உரை செய்தாய் - கொடிய வார்த்தையைக் கூறினாய், இனைய செய்கை சிதைவு அன்றோ - இத்தகைய (தீய) செயல் கெடுதியன்றோ? மாதுலனுமாய் -

மாமனுமாகி, மரபின் முறைமை உற வந்தேன் - (உனது) குலத்தில் முதன்மையுற்ற தலைபொருந்த வந்தவனுகிய நான், ஈது உரை செய்தேன் - இத்தகைமொழிகளைக் கூறினேன், அதனை தவிர்க என்றான் - (கொடிதாகிய) அவ்வெண்ணத்தை நீக்கி விடுக என்று கூறினான் (௧௧௬)

என்னவுரை யத்தனையு மெத்தனையு மெண்ணச்
சொன்னவனை யேசின வரக்கர்பதி சொன்னா
னன்னையுயிர் செற்றவனை யஞ்சியுறை கின்றா
யுன்னையொரு வற்கொருவ னென்றுணர்கை நன்றோ

இ - ள் என்ன-என்று, உரை - சொல்லிய, அத்தனையும் - கடவுளாகிய ஸ்ரீராமபிரானையும், எத்தனையும் - (விஷயங்கள்) எவ்வளவையும், எண்ணச்சொன்னவனை - நினைக்கும்படி சொன்ன மாரீசனை, ஏசின - இகழ்ந்த, அரக்கர்பதி - இராவணன் சொன்னான் - சொல்வானாயினன் — அன்னை உயிர் செற்றவனை அஞ்சி உறைகின்றாய - (தாடகையென்னும் உனது) தாயினுடைய உயிரைக்கொன்றவனை அஞ்சி வாழ்கின்றாய், உன்னை —, ஒருவற்கு ஒருவன் என்று உணர்கை நன்றோ - ஒருவனுக்கொருவன் என்று நினைத்தல் நன்மையுடையதோ?

குறிப்பு — ஒருவற் கொருவன் - அறிவு, வீரம், பெருமை முதலியன பொருந்தியவர்களில் ஒருவன் என்பதாம். (௧௧௭)

திக்கய மொளிப்பநிலை தேவர்கெட வானம்
புக்கவ ரிருக்கைபுகை வித்துலகம் யாவுஞ்
சக்கர நடத்துமெனை யோதயர தன்றன்
மக்கணலி கிற்பரிது நன்றுவலி யன்றோ.

இ - ள் திக்கயம் ஒளிப்ப - திக்கியானைகள் ஒளிந்துகொள்ளவும், தேவர் நிலை கெட - தேவர்களுடைய நிலையழியவும், வானம் புக்கவர் - விண்ணுலகிற் புகுந்தவர்களாகிய தேவர்களது, இருக்கை புகைவித்து - இருப்பிடங்களை(க் கொளுத்தி)ப் புகையும்படி செய்து, உலகம் யாவும் - எல்லா வுலகங்களிலும், சக்கரம் நடத்தும் எனையோ - ஆணை செலுத்துகின்ற என்னையுமோ? தயரதன் தன் மக்கள் - தசரதனது குமாரர்கள், நலிகிற்பர் - நலியச் செய்வார்கள், இது நன்றுவலி அன்றோ - இது நல்ல சாமர்த்தியமன்றோ? (௧௧௮)

மூவுல கினுக்குமொரு நாயக முடித்தேன்
மேவலர் கிடைக்கினிதன் மேலினிய துண்டோ
ஏவல்செய கிற்றியென தாணைவழி யெண்ணிக்
காவல்செ யமைச்சர்கட னீகடவ துண்டோ.

இ - ள். மூவுலகினுக்கும் - திரிலோகங்களுக்கும், ஒரு நாயகம் முடித்தேன் - ஒரு தலைமையைச்சூடினேன், மேவலர் கிடைக்கின் - பகைவர்கள் கிடைத்தால், இதன்மேல் இனியது உண்டோ - இதற்குமேல் மகிழ்ச்சியைத்தருவது முளதோ? எனது ஆணைவழி எண்ணி காவல்செய் அமைச்சர்கடன் - எனது ஆக்கினையினது மார்க்கத்தைக் கருதிக் காத்தலைச்செய்கின்ற மந்திரிகளுடைய கடமையை, நீ கட

வது உணடோ - நீ கடப்பது(கருச சுதநதிர முனககு) உளதோ? [இலலை], (ஆத லால), ஏவல செயகிறறி - (நான) ஏவிய தொழிலைச செயவாயாக, (௧௯௯)

மறுததனை யெனபபெறினு நினனைவடி வாளா
லொறுததெனை மனககுறை முடிபபதொழி கலலேன
வெறுபபன கிளததலுறு மிததொழிலை விடடென
குறிபபினவழி நிறறியுயிர கொணடுழலி னெனறான.

இ - ள மறுததனை என பெறினும - (எனனேவலை) மறுததுவிடடாயென று சொலலப பெறறாலும, நினனை - உனனை, வடிவாளால - கூரமைபொருநதிய வாளினாலே, ஒறுதது குறைதது [வெடடி], என - எனனுடைய, மனம குறை முடிபபது ஒழிகு அலலேன - மனததினது குறைகளை முடிபபதினினறும நீஙகு வேனலலேன, உயிரகொணடு உழலின - உயிரை (நிலைததிருககக) கொணடு திரிய வேணடுமானால, வெறுபபன கிளததல உறும இ தொழிலைவிடடு - வெறுககத தகக வாரததைகளைச சொலலுதலுறுகினற இசசெயலை யொழிதது, என குறிபபின வழிநிறறி - எனது எணணததினபடி நிறபாயாக (௨௦௦)

வேறு

அரககனஃ துரைதத லோடு மறிநதன னடஙகி நெஞசந
தருககினா கெடுவ ரனறே தததுவ நிலையிற றனறே
செருககினிற றீாது மெனபாா தமமினா செருகக ரெனறு
வுருககிய செமபி னுறற நீரென வுரைகக லுறறான

இ - ள அரககன அஃது உரைததலோடும - இராவணன அவவாரததை கூறியவளவில, அறிநதனன அடஙகி - (அமமாரீசன கேடுவருமெனபதை) அறிநது அடஙகி, நெஞசம தருககினா மனததில அகஙகாரததைககொணடவாகள, கெடுவா அனறே - கெடுவாாகளனறோ? தததுவம நிலையிறறு அனறோ - (இது) உணமை யிடததது அனறோ? தமமின ஆா செருககா - தமககுளளே நிறைநத அகஙகாரத தையுடையவாகள, செருககினில தீாதும எனபாா - (தமமுடைய) அகஙகாரததினா லே (மனககுறை) தீாவோமெனறு கூறுவாாகள, எனறு - எனறு கருதி, உருககிய செமபின உறற நீா என - உருககிய செமபினகடசோநத நீரைபபோல, உரைககல உறறான - சொலலலுறறான

குறிபபு — உருககிய செமபு - வெமமைததனமைகொணட இராவணனுககும, நீா - தணமைத தனமையையுடைய மாரீசனுககும உவமையாககக கொளக உருக கிய செமபினுறற நீா அசசெமபினுககுளளே கொதிபபுறறு அடஙகிவிடுவதுபோல மாரீசன தன நிலைமை வேறுபடடு இராவணனது கோபததால அடஙகிப பேசுத லுறறான எனபது ஈறறடியின கருதது (௨௦௧)

உனவயி னுறுதி நொககி யுணமையி னுணாததி னேனமற
றெனவயி னுறுதி நோககி யசசததா லிசைததே னலலே
னனமையுந தீமை யனறோ நாசமவந துறற போது
புனமையி னுற்ற நீராய் செய்வது புகறி யென்றான.

இ-ள். உன் வயின் உறுதி நோக்கி - உன்னிடத்திலுற்ற காரியத்தைப் பார்த்து, உண்மையின் உணர்த்தினேன் - உள்ள தன்மையில் தெரியப்படுத்தினேன், என் வயின் உறுதி நோக்கி - என்னிடத்திலுற்ற காரியத்தைப் பார்த்து, அச்சத்தால் இசைத்தேன் அல்லேன் - பயத்தினால் கூறினேன் அல்லேன், நாசம் வந்து உற்றபோது - கேடுவந்து சம்பவித்தகாலத்தில், நன்மையும் தீமை அன்றோ - நல்லதும் கெட்டதன்றோ? புன்மையின் உற்ற நீராய் - அற்பத்தன்மையிற் பொருந்திய குணத்தையுடையவனே! செய்வது புகறி என்றான் - (யான்) செய்யவேண்டிய செயலைச் சொல்வாயாகவென்று கூறினான்.

குறிப்பு—உறுதி-உற்றகாரியம், "தாமறிகுவர் தமக்குறுதி" என்புழிக் காண்க [புறநானூறு] இனி, வயின் என்னும் ஏழனுருபை ஆறனுருபின் மயக்கமாகக் கொண்டு உனது நன்மையை விரும்பி எனது நன்மையை விரும்பி எனப் பொருள் கூறிக் கோடலுமாம். (௨0௨)

என்றலு மெழுந்து புல்லி யேறிய வெகுளி நீங்கிக்
குன்றெனக் குவிந்த தோளாய் மாரவேள் கொதிக்கு மம்பாற்
பொன்றலி னிராம னம்பாற் பொன்றலே புகழுண் டன்றோ
தென்றலைப் பகையைச் செய்த சீதையைத் தருதி யென்றான்

இ-ள். என்றலும் - என்று (மாரீசன்) கூறியவளவில், எழுந்து—, புல்லி - (இராவணன் அம்மாரீசனைத்) தழுவி, ஏறிய வெகுளி நீங்கி - அதிகரித்த கோபமானது நீங்கப்பெற்று, குன்று என குவிந்த தோளாய் - மலைபோலக் குவிந்த தோளினையுடையாய்! மாரன் வேள் - மன்மதனுடைய, கொதிக்கும் அம்பால் - கோபிக்கின்ற அம்புகளாலே, பொன்றலின் - இறத்தலைப் பார்க்கிலும், இராமன் அம்பால்—, பொன்றலே - இறப்பதுவே, புகழ் உண்டு அன்றோ - புகழுள்ளதன்றோ? தென்றலை பகையை செய்த - தென்றலினது பகையையுண்டாக்கிய, சீதையை தருதி என்றான் - சீதையைத் தருவாயாகவென்று கூறினான். (௨0௩)

ஆண்டையா னனைய கூற வரக்கரோ ரிருவ ரோடும்
பூண்டவென் மானந் தீரத் தவவனம் புக்க போழ்திற்
றூண்டிய சரங்கள் பாயத் துணைவர்பட் டுருள வஞ்சி
மீண்டயான் சென்று செய்யும் வினையென்கொல் விளம்பு கென்றான்.

இ-ள். ஆண்டையான் - எசமானனாகிய இராவணன், அனைய கூற - அத்தகைய மொழிகளைச் சொல்ல, பூண்ட என் மானம் தீர - (மனத்திற்) பொருந்திய எனது வெட்கம் ஒழியும்படி, தவம் வனம் - (முனிவர்) தவத்தைச் செய்யும் வனத்தின்கண், அரக்கர் ஓர் இருவரோடும் - இராக்கதர் ஒருவரிருவருடனே, புக்க போழ்தில் - புகுந்த பொழுதில், தூண்டிய சரங்கள் பாய - (இராமன்) ஏவிய அம்புகள் பாய்ந்ததாலும், துணைவர் பட்டு உருள - துணைவர்கள் இறந்ததாலும், அஞ்சி - பயந்து, மீண்ட யான் - திரும்பி வந்த நான், சென்று - (மறுபடியும்) போய், செய்யும் வினை என்கொல் - செய்யும் தொழிலானது யாதோ? விளம்புக என்றான் - கூறுக என்று கூறினான்

குறிப்பு—சற்று நேரத்துக்கு முன் கோபத்தால் விகாரமாகத் தோன்றியவன் இப்போது மகிழ்வுற்றமையால் விகாரத்தோற்றம் நீங்கினான் என்பது விளங்குமாறு

'ஆண்டையான' என்றார் என்னலு மமையும். இங்கே ஆண்டையான் என்றது - அக்காலத்தானெனக். தன் சேனையின் குறைவு தோன்ற 'ஒரிருவர்' என்றான். மாரீசன் எய்திய மானம் தாடகை யிறந்ததால் நேர்ந்ததெனக் தனது சகோதரனாகிய சுபாகுவையும் தனக்குத் துணையாய வந்தவர்களையும் உளப்படுத்தி 'துணைவர்' என்பன்மையாகக் கூறினான். (உ0௪)

ஆயதாங் கனைய கூற வரக்கர்கோ னைய நொய்துன்
ருயையா ருயிருண் டானை யானகொலச் சமைந்து நின்றேன்
போயையா புணர்ப்ப தென்னே யென்பது பொருந்திற் றன்றே
மாயையால் வஞ்சித் தன்றே வெள்வுத லவனை யென்றான்.

இ - ள். ஆயதாங்கு - (சுபாகுமுதலினோர் மரணமும் தன் தோல்வியும் அப்போது தான்) ஆனதுபோல, அனையகூற - அத்தகைய வார்த்தைகளை (மாரீசன்) சொல்ல, அரக்கர்கோன் - (இராவணன்) ஐய - வியக்குமபடி, நொய்து - விரைவில், உன் தாயை ஆர் உயிர் உண்டானை - உனது தாயினது அரிய உயிரையுண்டவனாகிய இராமனை, கொல - கொல்ல, யான் சமைந்து நின்றேன் - நான் பக்குவப்பட்டிருக்கின்றேன், ஐயா—! போய் புணர்ப்பது என்னே - (நீ) போய்ப் பொருந்தச் செய்வது யாது? மாயையால் - மாயைச் செயலினால், வஞ்சித்து - வஞ்சனைசெய்து, அவனை - அச்சீதையை, வெள்வுதல் என்பது அன்றே - திருடுதலென்று கூறுவதன்றோ? பொருந்திற்று - பொருந்தியதாயிற்று, என்றான் - என்று (அவ்விராவணன்) கூறினான்.

குறிப்பு —நின்று, அன்று ஒ,—அசைகள் புணர்தல் - பொருந்துதல் (உ0௫)

புறத்தினி யுரைப்ப தென்னே புரவலன் றேவி தன்னைத்
திறத்துழி யன்றி வஞ்சித் தெய்துதல் சிறுமைத் தாகு
மறத்துள தொக்கு மன்றே யமாத்தலை வென்று கொண்டே
மறத்துறை வளர்த்தி மன்ன வென்னமா ரீசன் சொன்னான்.

இ - ள் மன்ன - அரசனே! இனி—, புறத்து உரைப்பது என்னே - பின்பக்கத்தில் சொல்வது யாது? புரவலன் தேவிதன்னை - காவலனாகிய இராமனது மனைவியை, திறத்துழி அன்றி - வலிமையால் (போர்புரிந்து) அல்லாமல், வஞ்சித்து எய்துதல் - வஞ்சனைசெய்து அடைதல், சிறுமைத்து ஆகும்- சிறுமையையுடையது ஆகும், அறத்து உளது ஒக்கும் அன்றே - (அது) தருமத்தினகணுள்ள நியாயத்தை ஒக்கும் அன்றே? அமர் தலை வென்று - போரில் (அம்மனிதர்களை) வென்று, கொண்டு - (அச்சீதையைக் கவர்ந்து) கொண்டு, உன் மறம் துறை வளர்த்தி என்ன மாரீசன் சொன்னான் - உனது வீரத்துறைகளை வளர்ப்பாயாகவென்று மாரீசன் கூறினான்.

குறிப்பு —புறம் - முதுகு. திறத்துழி - உருபுமயக்கம். மறத்துறை - வாகைத்துறை முதலிய துறைகள் (உ0௬)

ஆனவ னுரைக்க நக்க வரக்கர்கோ னவரை வெல்லத்
தானையும் வேண்டு மோவென் றடக்கைவா டக்க தன்றே

வேனைய ரிறக்கிற ரூனுந் தமியளா யிறக்கு மனறே
மானவ ளாத லாலே மாயையின வலிதது மெனறான.

இ - ள. ஆனவன - ஆனவனுகிய மாரீசன, உரைகக - கூற, நகக - சிரிதத, அரககாசோன - இராவணன, அவரைவெலல - அம்மனிதரை வெலலுதறகு, தானே யும வேணடுமோ-சேனையும வேணடுமோ? என தடம கை வாள தககது அனறோ - எனது பெரிய கைவாளானது தகுதியையுடையது அனறோ? ஏனையா இறககில- மறறவாகளிறநதால, தானும - அவளும, தமியளாய - தனிததவளாய, இறககும அனறே - இறநதுபோவாளனறோ? மானவள ஆதலாலே - மானிடப்பெண ஆகை யாலே, மாயையின - மாயையால, வலிததும-கைபபறறிககொளளுவாம எனறான.

குறிப்பு — ஆனவன - (இராவணனது எணணபபடி நடததறகுத தககவன) ஆ யினவன, ஆன போலும சாதுததனமையை யுடையவன, நல்லவன (ஆனு - நன மை), பொருநதியவன, மிககோன (ஆனறல - பொருநதல, மிகுதி), நமது ராக்ஷஸ ரூபததைககாட்டினால பயபபடுவாள எனபான 'மானவளாதலாலே' எனறான, மான வள - மறுவறறதோனறியவள இனி, மானதலையுடையவ ளெனவும மானபோ னறவளெனவுங கூறலாம. மானபோனறவ ளெனனுங்கால மானை மான விருமபு மாதலின மாயையால மானுருககொணடு வலிததும எனறு னெனபது விளஙகும வலிததல - இழுததல (௨௦௭)

தேவியைத் தீணடா முனன மிவனறலை சரததிற சிநதிப
போமவகை புணாபபெ னெனறு புநதியாற புகலகின றேறகு
மாமவகை யாயிற றிலலை யாரவிதி விளைவை யோராவா
ரேவது செயவ தலலா லிலலைவே றொனறென றெணணு,

இ - ள தேவியை தீணடா முனனம - சீதாபிராட்டியை (இவன) தீணடா தமுனபே, இவன தலை - இவனுடைய தலைகள, சரததில - (ஸ்ரீராமபிரான) அமபி னுலே, சிநதி போம வகை-சிதறிபபோகும விதததை, புணாபபென எனறு - பொரு நதச செயவேனெனறு, புநதியால-புததியால, புகலகினறேறகும - சொலலுகினற எனககும, ஆம வகை ஆயிறறு இலலை - (பிழைபபதறகு) ஆகுங காரணமான தில்லை, விதிவிளைவை - ஊழினது சமபவிபபை, யாா ஓராவா - யாரறிவாாகள? ஏவது செயவது அலலால - (இனி) ஏவலைச செயவதை யலலாமல், வேறு ஒனறு இலலை - வேறு (யோசனை) ஒனறும இலலை, எனறு எணணு - எனறு நினைதது ()

எனனமா மாயம யானமற றியறறுவ தியமபு கென்றான
பொனனினமா னாகிப் புகுபு பொனனைமால புணாத்து கெனன
வன்னது செய்வெ னெனனு மாரீச னமைநது போனான
மினனுமவே லரக்கா கோனும வேறொரு நெறியிற போனான.

இ - ள். யான் மாயம இயறறுவது எனன இயமபுக எனறான - நான மாயஞ செயவது யாது? கூறுக எனறு கூறினான, பொனனின மான் ஆகி புகுபு - பொன போன்ற (நிறததினையுடைய) மான (உருவம) ஆகிப் புகுநது, பொனனை - இலக்கு மிபோன்ற சீதையை, மால புணாததுக எனன - ஆசைபொருநதச செய்க என்று கூற, மாரீசன —, அனனது செயவென எனனு - அததன்மையானதைச் செய

வேன என்று கூறி, அமைந்து போனன - (மானுருவம்) பொருந்திச் சென்றான், மின்னும் வேல் அரக்கர்கோனும் வேறு ஒரு நெறியில் போனன் - பிரகாசிக்கின்ற வேலினையுடைய ராக்ஷஸராஜனாகிய இராவணனும் வேறொரு வழியிற் சென்றான்

குறிப்பு —மா, மற்று - அசைகள் என்னமா மாயம் - எத்தன்மையான சிறந்த மாயம் எனக் கோடலுமாம் மற்று - வினைமாற்றெனக் கொள்ளுங்கால் போர் வினை நீக்கினமைகொள்க (௨௦௯)

வேறு

மேனாளவன் வில்வலி கண்டமையாற்
றானாக வமைந்து சமைந்திலனன்
மானாகுதி யென்றவன் வாய்மொழியாற்
போனான்மன முஞ்செய லும்புகல்வாம்.

இ - ள். மேல் நாள் - முன்னாளில், அவன் - அந்த ஸ்ரீராமபிரானது, வில்வலி கண்டமையால் - வில்லினது வல்லமையைப்பார்த்ததினாலே, தான் ஆக அமைந்து சமைந்திலன் - தானாகச் சம்மதித்து (மானுருவம்) உண்டாக்கிக் கொண்டானில்லை, மான் ஆகுதி என்றவன் வாய்மொழியால் போனான் - மானாகுவாய் என்று கூறிய இராவணனது வாய்மொழியின்படி (அவ்வுருவங்கொண்டு) சென்ற மாரீசனது, மனமும் செயலும் புகல்வாம் - மனத்தின் நிலைமையையும் செய்கையையும் கூறுவாம்

வெஞ்சுற்ற நினைந்துகும் வீரரைவே
றஞ்சுற்று மறுக்குறு மாழ்குழிநீ
ரஞ்சுற்றுறு மீனி னடுக்குறுமா
னெஞ்சுற்றதொ ரா பெற்றி நினைப்பரிதால்

இ - ள். வெஞ்சுற்றம் - (தனது) விருப்பமான சுற்றத்தாரையும், உகும் வீரரை - (இனி) இறக்கப்போகின்ற வீரர்களையும், நினைந்து - நினைத்து, வேறு அஞ்சு உற்று - வேறே அச்சமொன்றடைந்து, மறுக்குறும் - மனஞ் சுழல்வானாகி ஆழ்குழி நீர் - ஆழ்ந்த குழியிலிருக்கிற நீரில், நஞ்சு உற்று உறு மீனின் நடுக்குறும் - விஷம் பொருந்தி (அதிற்) சோர்ந்த மீனைப்போல நடுக்கமுறுகின்றான், நெஞ்சு உற்றது ஓர் பெற்றி நினைப்ப அரிது - (அவன்) மனமடைந்ததாகிய ஒரு தன்மை நினைத்தற் கரியதாயிற்று. (௨௧௧)

அக்காலமும் வேள்வியி னன்றிவனோ
டெக்காலு நலிந்துமொ ரீறுபெறான்
முக்காலின் முடிந்திடு வான் முயல்வான்
புக்கானவ ணிராகவன் வைகுபுனம்.

இ - ள். இவன் - இவ்விராமபிரானால், அக்காலமும் - அந்தக் காலத்திலும், வேள்வியின் அன்றோடு எக்காலும் - (விசுவாமித்திரர்) யாகஞ்செய்த அந்நாளுடன் எப்பொழுதும், நலிந்தும் - வருந்தியும், ஓர் ஈறுபெறான் - ஒருமுடிவு பெறாதானும், முக்காலின் - மூன்றாம் முறையில், முடிந்திடுவான் முயல்வான் - இறந்துவிட

முயற்சிகொள்பவனுமாகி, அ இராகவன் வைகுபுனம் - அந்த ரகு மரபிற்றோன்றிய ஸ்ரீராமபிரான் தங்கியிருக்கின்ற வனத்தில், புக்கான் - புகுந்தான்.

குறிப்பு — ஸ்ரீராமனாகத் திருவவதரித்தருளிய எம்பிரானே இம்மாரீசனை முன்னாளினும் வருத்தினான் என்பது விளங்க நான்காமடியில் ராகவனை அகரச்சுட்டுத் தந்து கூறியவா முதலடியில் இகரச்சுட்டிட்டுக் கூறினார். (௨௧௨)

தன்மான மிலாத தயங்கொளிசான்
மின்வானமு மண்ணும் விளங்குவதோர்
பொன்மானுரு வங்கொடு போயினனு
னன்மானனை யாடனை நாடுறுவான்.

இ - ள். மின் வானமும் மண்ணும் விளங்குவது - மின்னலானது ஆகாயத்திலும் புவியிலும் பிரகாசித்துத் தோன்றுவதுபோல, தன் மானம் இலாத - தனது அபிமானம் இல்லாத, தயங்கு ஒளி சால் - பிரகாசிக்கின்ற ஒளிமிகுந்த, ஓர் பொன் மான் உருவம் கொடு - ஒரு பொன்போன்ற மானின் உருவத்தைக்கொண்டு, நல் மான் அனையாள் தனை - நல்ல மான்போன்றவளாகிய சீதாபிராட்டியை, நாடுறுவான் - தேடுவோனாகி, போயினன் - சென்றான்,

குறிப்பு — தனக்கு விருப்பமில்லாதிருந்தும் இராவணனது கொடுங்கோன்மைக்கஞ்சி மாரீசன் மானினுருவங்கொள்ள எண்ணமுற்றானென்பார் 'தன்மான மிலாத' என்றார். இனி, தான்கொண்ட மானுருவுக்கு ஏற்பத் தனக்கு இனமாகும் மான்கள் "கலைமான் முதலாயின கண்டவெலாம், அலைமானுறு மாசையின் வந்தனவால்" என மேல்வருங் கவிக்கருத்தின்படி தன்னைத் தொடர்ந்துவந்தும் அவற்றை விரும்பிலான் எனப்பொருள்கொள்ளுமாறு கூறினாரென்னலுமாம். விளங்குவது எனபுழி உவமவுருபு தொகுத்தல். மின்வானமு மண்ணும் விளங்குவது - இல்பொருளுவமம், இம்மான் வானிற்பாய்தலும் புவியில் இறங்கலுமாக வந்தமைபற்றி இவ்வுவமை கூறினார். (௨௧௩)

கலைமான்முத லாயின கண்டவெலா
மலைமானுறு மாசையின் வந்தனவா
னிலையாமன வஞ்சனை நேயமிலா
விலைமாதர்கண் யாரும் விழுந்தெனவே

இ - ள். கலைமான் முதல் ஆயின கண்ட எலாம் - கலைமான் முதலாகிய மான் வகைகளில் (இப்பொன்மானைப்) பார்த்தவைகள் எல்லாம், அலைமான் உறும் ஆசையின் - (பிராட்டியைத் தேடி) அலைகின்ற (பொன்) மானினுலே அடைகின்ற ஆசையாலே, நிலையா மனம் - பற்றுதலில்லாத மனமும், வஞ்சனை - வஞ்சகமுமுடைய, நேயம் இலா - அன்பில்லாத, விலைமாதர்கண் - விலைமாதர்களுடைய பார்வையில், யாரும் - எவரும், விழுந்தென - விழுந்தாற்போல, வந்தன - (மால்கொண்டு அப்பொன்மானைப் பின்தொடர்ந்து) வந்தன.

குறிப்பு — கலை - ஆண்மான். இப்பொன்மான் தன்னைத் தொடர்ந்து வந்த கலைமான்கள்மேல் சிறிதும் நேயம்வையாது பொன்னின்மேல் [இலக்குமிமேல்] நாட்டமாகத் திரிந்தமையால், தம்மை விரும்பும் ஆடவர்மேல் நேயம் வையாது பொன்னையே விரும்புகின்ற வேசையை அம்மானுக்கு உவமைகூறினார். நேயமில்லா விலை

மாதரின் தன்மையைப்பற்றி "உள்ளூற விலாவெளி யுறவு செய்துதான், றெள்ளூறு மின்னோதர் திருவெ லாங்கவார், தெள்ளூறு நரகினு மிடுதெ லாலவெறுங், கள்ளிற கொடியவர் கணிகை மாதரே" எனச் சீகாளத்திப் புராணத்தினும், "ஆணமி னெஞ்சத் தணிநீலக் கண்ணாரக்குக், காணமில லாதார் கடுவனையார்— காணவே, செக்கூர்ந்து கொண்டாருஞ் செய்த பொருளுடையார், ரக்கார மன்னூர் வாகரு" என நாலடியாரினுங் கூறினமை காண்க (௨௧௪)

பொய்யாமென் வோது புறஞ்சொலினூ
னையாவிடை நோவ நடந்தனள்ளால
வைதேகிதன் வாலவளை மென்கையெனுங்
கொய்யாமல ரானமலர் கொய்துறுவாள்

இ - ள். புறம் - பக்கத்திலுள்ளவர்கள், பொய் ஆம் என ஓது சொலினால் - (இது) பொய்யேயாகும் என்று கூறுகின்ற சொல்லினாலே, இடை - இடையானது, நையா - மெலிந்து, நோவ - துன்புறும்படி, நடந்தனள் - நடந்து, வைதேகி - சீதாபிராட்டி, தன் - தனது, வால - தூய்மைபொருந்திய, வளை - வளையல்களையுடைய, மெல - மெல்லிய, கை எனும் - கைகளென்று கூறுகிற, கொய்யாமலரான - பறியாதமலர்களால், மலர் கொய்து உறுவாள் - மலர்களைப் பறித்துவருவாளாயினள்.

குறிப்பு—வைதேகி - விதேகராஜன்மகள், விதேகம் - மிதிலை புறம் - ஆகு பெயர் (௨௧௫)

உண்டாகிய கேடுடை யார்துயிலவா
யெண்டானு மியைந்திலை யாவுருவங்
கண்டாரென லாம்வகை கண்டனளால
பண்டாரு முறாவிடா பாடுறுவாள

இ - ள் உண்டாகிய - வளர்தலுற்ற, கேடு உடையார் - கெடுதியையுடையராகிய இராவண மாரீசர்கள், துயில்வாய் - நித்திரையின்கண், எண்தானும் இயைந்து - எண்ணத்தில் எவ்வளவு அழகுமட்டும் பொருந்தி, இயையா - (மற்றை யழகினைத்தும்) பொருந்தாத, உருவம் - (சீதாபிராட்டியின்) உருவத்தை, கண்டார் எனல் ஆம் வகை -(கண்கொண்டு) தரிசித்தார்கள் என்று கூறுதற்காகிய விதத்தில், பண்டு - பூர்வகாலத்தில், ஆரும் - எவரும், உறா - அடையாத, இடர் பாடு உறுவாள் - துன்பப்படுதலை யடைபவளாகிய சீதாபிராட்டி, கண்டனள் - (அப்பொன்மானைப்) பார்த்தாள்,

குறிப்பு—மாரீசன் குற்றமற்றவனாயினும், தனது எண்ணத்தில் பிராட்டியின் உருவெளித்தோற்றத்தைக் காமுற்றுக்கண்ட மகாபாதகனாகிய இராவணனோடு சேர்ந்தமைபற்றி அவனையும் உடன்படுத்திப் பன்மையாகக் கூறினர். துயில்வாய்த்தோன்றிய தோற்றம் நேரேகண்ட தோற்றத்துக்குச் சிறிதும் இணையன்று என்பது இரண்டாம் அடியின் கருத்து எண் - எண்ணம், எள் மாரீசன் மானுருக்கொண்டும இராவணன் மாயையால் மறைந்துநின்றும் பிராட்டியைக் கண்டனரெனக் பிராட்டியின் அழகைச் சூர்ப்பநகை ஒருவாறு தெரிவித்தபடி உருவெளித்தோற்றங் காணப்பட்டமையால் சற்றே பொருந்தியிருந்ததெனப்பார் 'எண்டானு மியைந்து' என்றார். (௨௧௬)

காணுவிது கைதவ மென்றுணராள்
பேணாத நலஙகொடு பேணினளால
வாணாளை யிராவணன மாளுதலால
வீணாளி னறமபுவி மேவுதலால

இ - ள இராவணன வாழ நாளைமாளுதலால - இராவணனும (அவனது) செலவமும நாளை இறததலாலும, வீழநாளின அறம் - விருமபததகுநத நாடகளிற செயயும தருமமானது, புவி மேவுதலால - புவியிற பொருநதலாலும, காணு இது- (எனறும) பாாததிராத இமமானுருவம, கைதவம எனறு உணராள - வஞசனையெ னறு அறியாதவளாகிய சீதாபிராட்டி, பேணாத நலமகொடு - விருமபாத விருபபங கொணடு, பேணினள - விருமபினள

குறிபபு —வாழ - முதனிலை இனி, வாழநாளோடு இராவணன மாளுதலால எனனும பொருளகொளளலாம, இபபொருடகு நாளை - உருபுமயககம வீழநாளும இன அறமும என உமமைத தொகையாககிக கூறலுமாம, இன - இனிமை வீண நாள எனப பிரிதது அறம எனபதைத தொழிறபெயராககொணடு வீணநாளின நீககம எனபபொருள கோடலுமமையும யாகாதி கிாததியஙக ளியறறு நாள நன னாளெனவும மறறைநாள வீணாளெனவுங கூறுக. (உகள)

நெறறிபபிறை யாளமுன னினறிடனு
முறறிபபொழி காதலின முநதுறுவாள
பறறிததரு கெனபெ னெனபபதையா
வெறறிசசிலை வீரனை மேவினளால

இ - ள நெற்றி பிறையாள முனம னினறிடலும - நெறறியாகிய இளஞசநதிரனையுடைய [பிறைபோலும நெறறியினையுடைய] சீதாபிராடடிககு முனனே (அபபொனமான வநது) நினறவளவில, முறறி பொழிகாதலின முநதுறுவாள - முதிாநது பொழிகினற ஆசையினாலே முறபடடுச செலபவளாய, பறறி தருக என பென என பதையா- பிடிததுத தருகவெனறு கூறுவேன எனறு பதைதது, வெறறி சிலை வீரனை மேவினள - (சீதாபிராடடி) வெறறிபொருநதிய விலலினையுடைய வீர னாகிய ஸ்ரீராமபிரானைச சோநதாள.

குறிபபு—பொழிதல - ஈதல, பெயதல் பதைததல - பதறுதல, விரைதல. ()

ஆணிபபொனி னாகிய தாயகதிராற
சேணிறசுடா கினறது திணசெவிகான
மாணிககம யததொரு மானுளதால
காணததகு மெனறனள கைதொழுவாள.

இ - ள மாணிககம யதது - மாணிககமெனனும இரததினததின திறத தில், திணசெவி கால - வலிய காதையும காலையுமுடைய, ஒருமான உளது - ஒரு மானிருககிறது, ஆணி பொனின ஆகியது - (அதனமேனி) ஆணிப்பொன்னாலான

டாகியது, ஆய கதிரால் - (இருளை) ஆராய்கின்ற பிரகாசத்தினால், சேணில் சுடா நின்றது - ஆகாயத்தில் ஒளிவீசுகின்றது, காண் தரும் என்றனள் - பார்க்கத் தகுதியானது என்று கூறி, கைதொழுவாள் -(அவள்) கைகுவித்துக் கும்பிடுவாளாயினாள்

இம்மானி நிலத்தினி லில்லையென்
றெம்மானி தெனச்சிறி தெண்ணலசெய்யான்
செம்மானவள் சொற்கொடு தேமலரோ
னம்மானு மருத்திய னாயினனால்

இ - ள் செம்மானவள் சொல்கொடு - நல்ல மானபோன்ற சீதாபிராட்டியின் து சொல்லினால், தேம மலரோன அம்மானும் - வாசனைபொருந்திய தாமரைமலரி லிருப்பவனாகிய பிரமதேவனுக்குத் தகப்பனாகிய ஸ்ரீராமபிரானும், இ மான இ நிலத்தினில் இல்லை என - இந்த மான இந்தப் பூமியில் இல்லை என்றும், இது எ மான என - இம்மான எந்த (வகுப்பைச்சேர்ந்த) மான என்றும், சிறிது - சற்றே, எண்ணல் செய்யான - ஆலோசனை செய்யாதவனாகி, அருத்தியன ஆயினன - (அம்மானைப்பார்க்க) ஆசையை யுடையவனாயினான

குறிப்பு —அம்மானும், உம்மை - உயர்வு சிறப்பு. சராசரங்களையெல்லாம் படைத்த பிரமதேவனை யீன்றவனாகிய இவன இம்மான மெய்ம்மானென்றும் பொய்ம்மான என்றும் உணர்கிலாமற் போனது வியப்பே என்பார் 'தேமலரோ னம்மானும்' என்றார். ஒன்றை நிதானித்து யூகித்து அறிந்துகொள்ளுதற்கு மருண்ட பார் வையை யுடையாளுக்குச் சக்தியேது என்பது தோன்ற 'செம்மானவள்' என்றார். எம்பிரான பிராட்டிமேற்கொண்ட காதல் மிகுதியினாலே அவளுடைய இச்சை யைப் பூர்த்திசெய்வதே பெரிதெனக்கருதி அருத்தியனாயினான் என்பதுதோன்ற 'சொற்கொடு' என்றார் "வாம மேகலை மங்கைய ராலவருவ, காம மில்லை யெனிற்கடுங் கேடுணு. நாம மில்லை" [இராமாயணம்] "தையலார் மயலிற் பட்டோர் தமக்கொரு மதியுண் டாமோ" [திருவிளையாடற்புராணம்], "இமையா ரினவாழினும் பாடிலரே யிலரா, லமையாரதோ ளஞ்சு பவர்" [திருக்குறள்]என்பன ஈண்டு நோக்கற்குரியன (௨௨௦)

ஆண்டங்கிளை யோனுரை யாடினனால்
வேண்டும்மென லாலவிளை வன்றிதென்னா
பூண்டுஞ்சு பொலங்கொடியோ யதுநாங்
காண்டும்மெனும் வள்ளல் கருத்துணர்வான்.

இ - ள் ஆண்டு - அப்பொழுது, அங்கு - அவ்விடத்தில், இளையோன - இளையபெருமாள், வேண்டும் எனலால - (சீதாபிராட்டி அம்மான தனக்கு) வேண்டுமென்று கூறுதலால், இது - இந்தமான, விளைவு அன்று என்னா - (எல்லாச் சீவராசிகளைப்போல) உற்பத்தியானது அல்லதென்று கூறுதவனும், பூண் துஞ்சும் -மேகலாபரணம் நிலைபெற்ற, பொலம் கொடியோய் - பொற்கொடிபோலும் இடையை யுடையவளே! அது - அம்மானை, நாம் காண்டும் எனும் - நாம் (போய்) பார்ப்போமென்று கூறுவானுமாகிய, வள்ளல் - ஸ்ரீராமபிரானது, கருத்து உணர்வான - கருத்தையறியும்பொருட்டு, உரையாடினன - சில சொற்களைக் கூறுவானாயினான்:—,

குறிப்பு — தலைவனும் தலைவியும் உரையாடும் தனியிடம் என்பது தோன்ற 'அங்கு' என்ற ஓர் சொல்லுஞ் சேர்த்தனர். இனி, அங்கு - அசையுமாம். கொடி - இடைக்கு ஆகுபெயர். பூண்கிளைச்சு பொலங்கொடி போன்றவளாகிய வாமனையை யுடையவனே? அது நாம் காண்டும் என்று (தன்னைப்பார்த்துக்) கூறுகின்றவனுமாகிய என்பப் பொருள்கோடலுமாம். இப்படி யிருவகையிற் பொருள் விளங்கற் காகவே 'கொடியே' என்னலையொழித்துக் 'கொடியோய்' என்று கூறினர். (௨௨௧)

காயங்கனகம் மணி கால்செவிவால்
பாயுமுருவோடிது பண்பெனலான்
மாயமென்னலன்றி மனக்கொளவே
யேயுமிறை யையுற வென்றளவே

இ - ள். காயம் - உடலானது, கனகம் - பொன்போலவும், கால் செவி வால் - காலுங் காதும் வாலும், மணி - (மாணிக்கமென்னும்) இரத்தினம்போலவும், பாயும் - பாய்கின்ற [ஒளிவீசுகின்ற], உருவோடு - நிறத்துடன், இது பண்பு எனலால் - இது குணமென்று கூறுதலால், மாயம் எனல் அன்றி - மாயம் என்று கூறுதலல்லாமல், இறை - சற்றே, ஐயுறவு என்று அளவே - சந்தேகமென்ற மாத்திரமே, மனம் கொளவே - மனத்தால் (ஆராய்ச்சி) கொள்ளவே, ஏயும் - பொருந்தும், (௨௨௨)

நில்லாவுல கின்னிலை நேர்மையினால்
வல்லாருமுணர்ந்திலர் மன்னுயிர்தாம்
பல்லாயிர கோடி பரந்துளவா
லில்லாதன வில்லை யிளங்குமரா.

இ - ள். இளங்குமரா - இளமைபொருந்திய இராசபுத்திரனே! உலகின் - உலகத்தினது, நில்லா நிலை - (ஓர் நிலையில்) நில்லாதநிலையினது, நேர்மையினால் - இணக்கத்தினால் [சேர்மானத்தால்], வல்லாரும் - (கற்றுணர்ந்த) வல்லவர்களும், உணர்ந்திலர் - அறிந்தாரில்லை, மன்னுயிர்தாம் - நிலைபெற்ற உயிர்கள், பல ஆயிரம் கோடி பரந்து உள - அநேகவாயிரங்கோடி பரவியிருக்கின்றன, ஆல் - ஆதலால், இல்லாதன இல்லை - இல்லாதவை இல்லை.

குறிப்பு — உலகிலுள்ள சராசரங்களெல்லாம் ஓர் நிலையில் இல்லாமற் பலவகையாயுள்ளன என்பது முதலடியின் கருத்து, "நிலையிலா வுலகினிடை நிற்பனவு நடப்பனவு நெறியி னீந்த" என்றார் கீழும். உலகின்னிலை - விரிதல் விகாரம் நிலை - நிற்பது, நிலைமை (௨௨௩)

என்னென்று நினைத்த திழைத்துளநங்
கன்னங்களின் வேறுள காணுதுமால்
பொன்னினொளி மேனி பொருந்தியவே
முன்னங்கள் பிறந்த தறிந்திலையோ.

இ - ள். என் என்று நினைத்தது - (உன்மனம்) யாதென்று நினைத்துவிட்டது; இழைத்து உள - (ஒரேமாதிரியாய்ச்) செய்துள்ள, நம் - நமது, கன்னங்க

ளின் - கனனஙகளிலே, வேறு உள - மாறுபடடுளளவைகளை, காணுதும - காணு வோம, பொனனின ஒளி மேனிபொருநதிய - பொனனினைபபோலப் பிரகாசததை யுடைய உடல பொருநதிய, ஏழ அனனஙகள பிறநதது - ஏழனனபபுட்கள உறபத தியானதை, அறிநதிலேயோ—,

குறிபபு —கனனம - கதுபபு. இரணடாம் அடிககு (நமது) காதுகளால் வேறு ளளவறறைக கேடகுதும எனப பொருளகூறினரு முளா (உ௨௪)

முறையுமமுடி வுமமிலே மொயயுயிரென
றிறைவனினிளை யாஞெ டியமபினஞல
பறையுநதுணை யனனது பனனெறிபோய
மறையுமமென வேழை வருநதினளால

இ - ள. மொய் உயிர - நெருஙகலுறற பிராணிகளுககு, முறையும - ஒழுங கும, முடிவும - ஈறும, இலே எனறு - இலலையெனறு, இறைவன - ஸ்ரீராமபிரான, இளையானெடு - இளையபெருமாளோடு, இயமபினன - கூறினன, ஏழை - சீதாபிரா டடி, அனனது - அமமான, பறையும துணை - வாரததைசொலலும அளவில, பல நெறிபோய மறையும என வருநதினள - பலவழியிற சென்று மறைநதுபோம எனறு வருததமுறறாள. (உ௨௫)

வேறு

அனையவள கருத்தை யுனஞு வஞசனக குனறமனஞன
புனையிழை காடட தெனறு போயினன பொருத சிநதைக்
கனைகழற றமபி பினபு சென்றனன கடகக வொணணு
வினையென வநது நினற மானெதிர விழிதத தனறே.

இ - ள. அனையவள கருததை உனஞு - அஙஙனம வருநதிய சீதாபிராடடியி னது கருததை நினைததது, அஞசனம குனறம அனஞன - மைமமலைபோனற ஸ்ரீரா மபிரான, புனை இழை - அலஙகரிதத ஆபரணஙகளையுடையாய்! அது - அமமானை, காடடு எனறு - காடடுவாய எனறு கூறி, போயினன - சென்றான், பொருத சிந தை - தரியா மனததையுடையவனும, கனைகழல - ஒலிசெயகின்ற வீரககழலையு டையவனுமாகிய, தமபி - இளையபெருமாள, பினபு சென்றனன - (அவாகளுககுப்) பினனேசென்றான, கடகக ஒணணு - கடககமுடியாத, வினை என - ஊழ்வினையை பபோல, வநது நினற—,மான - அபபொனமானனது, எதிர விழிததது - எதிரே பாரததது

குறிபபு —புனையிழை - அனமொழிததொகை தீஙகுநேருமென நினைததமை யால பிராடையும பிராடடியையுந தனியேயனுப்ப மனமபொருதவனுயபபோககோ லஙகொணடு பினசென்றான எனபார 'பொருத சிநதைக கனைகழற றமபி பினபு சென்றனன' என்றார கடகக வொணணு வினையெனவே ஊழவினையாயிறறு; ''ஊழிற பெருவலி யாவுள மறறொனறு, சூழினுந தானமுந துறும'' எனபவாகலின. இவாகள அமமானை எற இறஙகப்பாரததுபோல அமமானும இவாகளைப் பாரதத தெனபார 'எதிரவிழிததது' என்றார. (உ௨௬)

நோக்கிய மானை நோககி நுதியிழை மதியி ஞெனறுந
தூககிலை னனறி தெனறு னதனபொருள சொலல லாகுஞ
சேககையி னரவு நீஙகிப பிறநதது தேவா செயத
பாககிய முடைமை யன்றோ வனனது பழுது போமோ,

இ - ள், நோக்கிய மானை நோக்கி - (அங்ஙனம்) பார்த்த மானைப் பார்த்து (தன்னைப்பார்த்த மானைப்போன்றவளைப் பார்த்து), நுதி இழை - முனைபொருந்திய ஆபரணங்களை யுடையாய்! மதியின் ஒன்றும் தூங்கிலன் - (என்) புத்தியிலொன்றும் தூங்கினேனில்லை [இம்மான் சிருஷ்டிக்குள் அடங்கியதோ அல்லதோ என்று என் புத்திக்கு ஒன்றும் தோன்றவில்லை], இது நன்று என்றான் - இது நல்லது என்று (ஸ்ரீராமபிரான்) கூறினான், அதன்பொருள் சொல்லல் ஆகும் - (எல்லாம் வல்ல கடவுளாகிய எம்பிரான் தன் புத்திக்கு ஒன்றுந் தோன்றவில்லையென்று கூறிய) அச்சொல்லினது ஆத்தத்தைக் கூறுதற்கு முடியும், (அஃதென்னையெனின்) சேக்கையின் அரவு நீங்கி - சாப்பசயனத்தினின்றும் நீங்கி, பிறந்தது - (புவியில்) அவதரித்தருளியது, தேவர்செய்த பாக்கியம் உடைமை அன்றே - தேவர்கள்செய்த அதிஷ்டமுடைய தன்மையாலன்றே? அன்னது பழுதுபோமோ - (அரக்கரை யொழித்துச் சுரர்களைப் புரக்கப்பிறந்த) அப்பிறவியின் பயனானது பொய்யாய்ப் போகுமோ? [போகாது], (ஆனதால் மதியிலொன்றுந் தூங்கிலனாய் இது நன்று என்று கூறும்படி நேரிட்டது) (௨௨௭)

என்னொக்கு மென்ன லாகு மிளையவ விதனை நோக்காய்
தன்னொக்கு முவமை யல்லாற் றனையொக்கு முவமை யுண்டோ
பன்னக்க தரள மொக்கும் பசும்புன்மேற் படரு மென்னா
மின்னொக்குஞ் செம்பொன் மேனி வெள்ளியின் விளங்கும் புள்ளி

இ - ள் இளையவ - இலக்குமணா! இதனை நோக்காய் - இம்மானைப் பார்ப்பாய், என் ஒக்கும் என்னல் ஆகும் - எதை யொப்பாகுமென்று சொல்லக்கூடும்? தன் ஒக்கும் உவமை அல்லால் - தன்னையொப்பாகும் உவமைப்பொருள் (தானே) அல்லாமல், தனை ஒக்கும் உவமை உண்டோ - தன்னையொப்பாகும் (பிறிதொரு) உவமைப்பொருளுண்டோ? (இல்லை), பல் - பற்களை, நக்க தரளம் ஒக்கும் - ஒளிவிடுகின்ற முத்துக்களொப்பாகும், பசும் புல் மேல் படரும் மெல் நா - பசிய புல்லின்மீது செல்லுகின்ற மெல்லிய நாக்கை, மின் ஒக்கும் - மின்னலானது ஒப்பாகும், மேனி - உடலை, செம்பொன் - செவ்வியபொன் (ஒப்பாகும்), புள்ளியின் - (அம்மேனியிலுள்ள) புள்ளியைப்போல, வெள்ளி விளங்கும் - வெள்ளிமீன் (சுக்கிரன்) பிரகாசிக்கும்

குறிப்பு —'தன்னொக்கு முவமை யல்லாற் றனையொக்கு முவமை யுண்டோ' என்றமையால் பின்னிரண்டடிகளிலுள்ள உவமானப் பொருள்களையெல்லாம் உவமேயப்பொருள்களாக்கிக் கூறவேண்டியிருத்தலின், புள்ளியின், என வேற்றுமை பிரித்துக் கூட்டியுரைத்தாம். உவமேயத்தினும் உவமானம் நூறுபங்கு உயர்ந்தது என்பது வடநூலார் கொள்கை. நக்கபல் - எனக் கூட்டியுரைப்பாரு முளர் 'என்னொக்கு மென்ன லாகு மிளையவ' என்றற்கு என்னை யொப்பானென்று சொல்லற்கேற்ற இளையவனே எனப் பொருள்கோடலு மமையும், இங்ஙனம் கொள்ளுங்கால் ஸ்ரீராமபிரான் தானே தன்னை யொப்பாவானென்று கூறுதல் பொருந்துமோ எனின், பொருந்தும், என்னை? முனிவர் முதலிய பெரியோர்களும் அரசர்களும் ஏவலோரிடத்துத் தமமைத்தாமே இவ்வாறு கூறுதல் மரபெனக். இதனை "என்னை யனைய முனிவரரும்" என விசுவாமித்திரர் சக்கரவர்த்தியிடங் கூறியதாகவும்,

" காணி னன்றிகற் கரன்படை படுத்தவக் கரியோன்
றூணு மிந்திரன் றனையோர் தனுவலந் தன்னால்
வானின் வென்றவென் மதலையும் வரிசிலை பிடித்த
யானு மல்லவர் யாருனக் கெதிரென்று மிசைத்தான்." என

இளையபெருமாளிடம் இராவணன் கூறியதாகவும் இந்நூலுள் பாலகாண்டத்தும் உயுத்தகாண்டத்தும் வருதல்காலறிக (௨௨௮)

வரிசிலை மறைவ லோனே மானிதன் வடிவை யுற்ற
வரிவையா மைந்தா யாரே யாதரங் கூரா திருந்தார்
ருருகிய மனத்த வாகி யூர்வன பறப்ப யாவும்
விரிசுடர் விளக்கங் கண்ட விட்டில்போல் வீழ்வ காணாய்.

இ - ள். வ சிலை மறைவலோனே - கட்டமைந்த தநுர்வேதத்தில் வல்ல வனாகிய இலக்குமணா! மான இதன் வடிவை-இந்த மானினது வடிவழகை, உற்ற-உற்று நோக்கிய, அரிவையா மைந்தா - பெண்களா புருடர்களில், ஆதரம் கூராதார் யாரே - ஆசை மிகுதி கொள்ளாதவர்கள் எவர்? (ஒருவருமில்லை), ஊர்வன பறப்பயாவும் - நகர்ந்து செல்வனவும் பறந்து செல்வனவும் முதலாகிய எல்லாப்பிராணிகளும், உருகிய மனத்த ஆகி - (இம்மானைக்கண்டளவில்) மனவுருக்கங்கொண்டனவாகி, விரிசுடர் விளக்கம் கண்ட - மிகுந்த ஒளியையுடைய விளக்கைப்பார்த்த, விட்டில்போல் வீழ்வ - விட்டிலைப்போல விரும்புவன, காணாய்- (இதைநீ) பார்

குறிப்பு — விட்டில் விளக்கைக்கண்டு இஃதோர் கனியெனக்கருதி விருப்பங்கொண்டு வருதல்போல எல்லாப்பிராணிகளும் விரும்பின் என்பது கருத்து "தாம வீழ்வார் மென்றோள்" என்புழிப் பரிமேலழகர் வரைந்த உரையால் வீழ்தல்-விரும்புதல் என்னும் பொருள் தருதலறிக இனி, வீழ்தல் என்றதற்கு விழுதல் என்பொருள்கோட லேண்டுப் பொருந்தாதேனும் விளக்கைக் கனியெனக்கருதி வீழ்ந்த விட்டில் துன்புறுதல்போல இதனையும் மானெனக்கருதித் துன்புறுகின்றன என்றோர் அறவுரைதொனித்து நிற்றலுமறிக. (உ௧)

ஆரிய னனைய கூற வன்னது தன்னை நோக்கிச்
சீரிய தன்றி தென்று சிந்தையிற் றெளிந்த தம்பி
காரிய மென்னை யீண்டுக் கண்டது கனக மானுல்
வேரியந் தெரியல் வீர மீள்வதே மேன்மை யென்றான்.

இ - ள் ஆரியன் - ஸ்ரீராமபிரான், அனைய கூற -அத்தகைய வார்த்தைகளைச் சொல்ல, அன்னது தன்னை நோக்கி - அத்தகைய மானைப்பார்த்து, இது சீரியது அன்று என்று - இம்மான் சிறந்தது அன்றென்று, சிந்தையில் -(தன) மனத்தில், தெளிந்த - ஆராய்ந்தறிந்துகொண்ட, தம்பி - இளையபெருமான், வேரி அம் தெரியல்வீர - வாசனைபொருந்திய அழகிய மாலையையணிந்த வீரத்தன்மையையுடையீர்! ஈண்டு - இவ்விடத்தில், கண்டது - (நாம) பார்த்ததாகிய, கனகம் மானுல் - பொன்மானினால், காரியம் என்னை - காரியம் யாது? [பயன் ஒன்றும் இல்லை], மீள்வதே - திரும்பிச்செல்வதே, மேன்மை என்றான் - மேலானதன்மை யென்று கூறினான்.

குறிப்பு.—ஆரியன் - அறிவுடையோன், ஐயன் இனி, இமயமலைக்கும் பொதியமலைக்கும் நடுத்தேசமாகிய ஆரிய தேசத்தானெனினும் பொருந்தும் (உ௨)

அற்றவன் பகரா முன்ன மக்கனே யழகி யாளுங்
கொற்றவன் மைந்த மற்றைக் குழைவுடை யுழையை வல்லை
பற்றினை தருதி யாயிற் பதியிடை யவதி யெய்தப்
பெற்றுழி யினிதுண் டாடப் பெறற்கருந் தகைமைத் தென்றாள்.

இ - ள். அற்று - அத்தன்மையை வார்த்தையை, அவன் - அவ்விளையபெருமான், பகராமுன்னம் - சொல்லாமுன்னமே, அக்கனே - ஸ்ரீராமபிரானை, அழகியாள்

னும் - அழகினையுடையாளாகிய சீதாபிராட்டியும், கொற்றவன்மைந்த - ராஜபுத்திரனே! மற்றை—, குழைவு உடை - உருக்கம் உடைய, உழையை - மானை, வல்லே பற்றினைதருதி ஆயின் - விரைவாய்ப் பிடித்துத் தருவீரானால், பதி இடை - (அயோத்தியா) புரியில், அவதி எய்த பெற்றுழி - வருத்தம் அடையப்பெற்ற காலத்தில், இனிது உண்டாட - சந்தோஷமாக விளையாட, பெறற்கு அரும் தகைமைத்து - பெறுதற்கு அருமையான தன்மையையுடையது, என்றாள்—,

குறிப்பு—அநகன் - பாவமில்லாதவன், மாசற்றவன், கடவுள். உண்டாடல் - மகளிர் விளையாட்டு. அவதி - நாயகன் பிரிவாற்றாமையால் நிகழும் வருத்தம். இனி, அவதி-எல்லையெனக்கொண்டு அயோத்தியாபுரியிற் செல்லுங் காலவரையறை எய்தப் பெற்றவிடத்து என்றும் பொருள் கூறலாம். மற்றை - சுட்டியதற்கினம். மனைவியின் சொற்படி கேட்டு நடந்தவன் என்று குற்றங் கூறுதற்குப் பாத்திரனல்லன், தேவர்க்கீந்த வரத்தின்படி ராக்ஷஸ சம்மாரஞ் செய்தற்குக் காரணமாதற் பொருட்டு அருத்தியனாயினவன் என்பது தோன்ற 'அநகன்' என்றார். பெண்டாட்டியின் சொற்படி நடந்த சக்கரவர்த்தியின் குமாரராதலின் நீர் என் சொல்லைத் தடுக்கமாட்டீர் என்பாள் 'கொற்றவன் மைந்த' என்றாள். (௨௯௧)

ஐயநுண் மருங்கு நங்கை யஃதுரை செய்ய வையன்
செய்வெனென் றமைய நோக்கித் தெளிவுடைச் செம்மல் செப்பும்
வெய்யவல் லரக்கர் வஞ்சம் விரும்பினார் வினையிற் செய்த
கைதவ மானென் றண்ணல் காணுதி கடையி னென்றான்

இ-ள். ஐய - வியக்கத்தக்க, நுண் - நுட்பமான, மருங்கு - இடையினையுடைய, நங்கை - சீதாபிராட்டி, அஃது உரைசெய்ய - இவ்வார்த்தையைக் கூற, ஐயன் - ஸ்ரீராமபிரான், செய்வென் என்று அமைய நோக்கி - (அம்மானைப் பிடித்துத்தருஞ்செயலைச்) செய்வேன் என்று சம்மதிக்கப்பார்த்து, தெளிவு உடை செம்மல் செப்பும் - ஆராய்ந்து தேறுதலையுடைய பெருமையிற் சிறந்த இளையபெருமாள் கூறுவான், வெய்யவல் அரக்கர் - கொடிய வலிய இராக்கதர்களுக்குள், வஞ்சம் விரும்பினார் - வஞ்சித்தலை விரும்பினவர்கள், வினையில் செய்த - (அவர்களுக்குரிய) மாயச்செயலால் செய்த, கைதவம் மான் என்று - பொய்ம்மானென்று, அண்ணல் - அண்ணலே! கடையின் - முடிவில், காணுதி என்றான் - காணுவீர் என்று கூறினன்.

குறிப்பு—ஐயம் - சந்தேகமுமாம். ஐயன் - அழகன். அண்ணல் - அண்மை விளி இயல்பாயிற்று. (௨௯௨)

மாயமேன் மடிவா மன்றே வாளியின் மடிந்த போது
காய்சினத் தவரைக் கொன்று கடன்கழித் தோமு மாதுந்
தூயதேற் பற்றிக் கோடுஞ் சொல்லிய விரண்டி னொன்றுந்
தீயதே யுரைத்தி யென்றான் றேவரை யிடுக்கண் டீர்ப்பான்.

இ-ள். தேவரை இடுக்கண் தீர்ப்பான் - தேவர்களைத் துன்பத்தினின்றும் நீக்கும் ஸ்ரீராமபிரான், மாயமேல் மடிவு ஆம் அன்றே - (இம்மான்) மாயமானால் இறத்தலாகுமன்றோ? வாளியின் மடிந்தபோது (இது) அம்பினால் இறந்தகாலத்து, காய சினத்தவரை கொன்று - எரிகின்ற கோபத்தையுடைய அரக்கர்களைக்கொன்று, கடன் கழித்தோமும் ஆதும் - கடனைத் தீர்த்துவிட்டவர்களுமாவோம், தூயதேல் பற்றிக்கோடும் - பரிசுத்த முள்ளதானால் பிடித்துக்கொள்ளுவோம், சொல்லிய இரண்டின் - (கொல்லுதல் பிடித்துக்கொள்ளுதல் என்று) கூறிய இரண்டு விஷயத்தில், ஒன்றும் - பொருந்திய, தீயது - தீமையை, உரைத்தி - கூறுவாய், என்றான் - என்று கூறினான். ஏ - அசை. (௨௯௩)

பின்னின்றா ரினைய ரென்று முணர்கிலம் பிடித்த மாய
மென்னென்று தெளிக் தேற்றும் யாவதீ தென்று மோரா
முன்னின்றார் முறையி னின்றார் முனிந்துள வேட்ட முற்றல்
பொன்னின்ற வயிரத் தோளாய் புகழுடைத் தாமன் றென்றான்.

இ - ள். பின் நின்றார் இனையர் என்றும் உணர்கிலம் - (இம்மானை முன்னே யேவிவிடப்) பின்னே நின்றவர்கள் இத்தன்மையாரென்றும் அறிந்தோமில்லை, பிடித்த மாயம் என் என்றும் தெளிதல் தேற்றும் - பற்றிய மாயமானது யாதென்று தெரிந்துகொள்ளுதற்கு அறிவித்துக்கொள்ளமாட்டோம், ஈது யாவது என்றும் ஓராம் - இது யாது என்று கருதமாட்டோம், பொன் நின்ற வயிரம் தோளாய் - வீரலட்சுமிதங்கிய வலிபொருந்திய தோள்களையுடையாய்! முறையில் நின்றார் - ஒழுங்கில் நின்றவர்களாகிய, முன் நின்றார் - முன்னேயிருந்த நம்பெரியோர்கள், முனிந்து உள - வெறுத்து (நீக்கி)யுள்ள, வேட்டம் முற்றல் - வேட்டையாடுதல், புகழ் உடைத்து அன்று என்றான் - புகழுடையது அன்றென்று கூறினான்.

குறிப்பு — பிடித்த மாயம் - நம்மனத்துக்குப் பிடித்தமான மாயமெனலுமாம். பொன் - அழகுமாம். ஆம் - அசை. (௨௩௪)

பகையுடை யரக்க ரென்றும் பலரென்றும் பயிலு மாய
மிகையுடைத் தென்றும் பூண்ட விரதத்தை விடுது மென்ற
னகையுடைத் தாகு மன்றே யாதலி னன்றீ தென்னாத்
தகையுடைத் தம்பிக் கந்நாட் சதுர்முகன் றாதை சொன்னான்.

இ - ள். பகை உடை அரக்கர் என்றும் - பகை உடைய ராக்ஷஸர்களென்றும், பலர் என்றும் - அநேகரென்றும், பயிலும் மாயம் மிகை உடைத்து என்றும் - பிடிக்கின்ற மாயம் மிகுதியாயுடையதென்றும் (கூறி), பூண்ட விரதத்தை விடுதும் என்றல் - (நாம்) கொண்ட விரதத்தை விடுவோம் என்று கூறல் நகை உடைத்து ஆகும் அன்றே - சிரிப்புடையதாகும் அன்றோ, ஆதலின் - ஆகையால், ஈது நன்று என்னா - இது நல்லது என்று, தகை உடை தம்பிக்கு - தகுதியுடைய தம்பிக்கு, அந்நாள் - அத்தினம், சதுர்முகன் தாதை சொன்னான் - நான்கு முகங்களையுடைய பிரமதேவனுக்குத் தகப்பனான ஸ்ரீராமபிரான் கூறினான்.

குறிப்பு — நன்று ஈது என்னா என்பதற்கு நல்லது இது என்று கூறாத என் மற்றும் ஓர் பொருள் கூறித் தம்பியொடு கூட்டுக. (௨௩௫)

அடுத்தவு மெண்ணிச் செய்த லண்ணலே யமைதி யன்றோ
விடுத்ததின் பின்னின் றார்கள் பலருள ரெனினும் வில்லாற்
றொடுத்தவெம் பகழி தூவித் தொடர்ந்தெனை விரைந்து சென்று
படுக்குவெ னதுவன் றாயிற் பற்றினென் கொணர்வெ னென்றான்.

இ - ள். அண்ணலே —, அடுத்தவும் - நெருங்கிய காரியங்களையும், எண்ணிச் செய்தல் - ஆலோசித்துச்செய்தல், அமைதி அன்றோ — பொருத்தமன்றோ? விடுத்தது - (இம்மானை) அனுப்பி, இதன்பின் நின்றார்கள் - இம்மானின் பின்னே நின்றவர்கள், பலர் உளர் எனினும் - அநேகர் இருக்கின்றார்கள் என்றாலும்,

வில்லால் - வில்லினால், தொலைத்த - (ஓன்றனபின் ஒன்ருயச்) சோகக்கப்பட்ட, வெம பகழி - கொடியபாணங்களை, தூவி - சிந்தி, தொடாந்தனென விரைந்து சென்று - தொடாந்து விரைவாயச்சென்று, பகெருவென-கொலலுவேன, அது அன்று ஆயின - அப்படியில்லையானால, பறறினென கொணாவென என்ருன - பிடித்துக்கொண்டு வருவேனென்று (இளையவன) கூறினன (௨௩௬)

ஆயிடை யன்ன மனனு ளமுதுகுத தனைய செயய
வாயிடை மழலை யினசொற கிளியினிற குழறி மாழகி
நாயக நீயே பறறி நலகலை போலு மெனனுச
சேயரிக குவளை முத்தஞ சிந்துபு சிதறிப போனுள.

இ - ள ஆயிடை - அவவிடத்தில, அனனம அனனுள - (நடையில) அன னப்புளளை ஒத்தாளாகிய சீதாபிராட்டி, அமுது உகுத்தனைய - அமிர்தத்தைச சிந்தி னறபோல, செயய வாய இடை - சிவந்த வாயினிடத்தே, மழலை - குதலைச சொல லாகிய, இனசொல - இனிய வார்த்தைகளையுடைய, கிளியினில - கிளியைபபோல, குழறி - உளறி [தடுமாறிப்பேசி], மாழகி - மயங்கி, நாயக - தலைவரே! நீயே - நீரே, பறறி - பிடித்து, நலகலைபோலும - தரமாட்டீாபோலும, எனனு - என்று கூறி, சே அரி - சிவந்த வரிகளையுடைய, குவளை - குவளைமலாபோலும கணகளிலிருந்து, முத்தம - முத்துப்போலும நீரத்துளிகள, சிதறி சிந்துபு போனுள - சிதறிச சிந்தும படி சென்ருள.

குறிப்பு —கோபத்தாலும துககத்தாலும ஆங்கு நிறகக கால தரிககாது பிணங் கிச செலலததொடங்கினு ளெனபது விளங்க 'அன்ன மனனுள' என்ருா. குழறி - குளறி (௨௩௭)

போனவள புலவி நோககிப புரவலன பொலனகொ டாராய்
மானிது நானே பறறி வலலையின வருவெ னனறே
கானியன மயிலனனுளைக காததனை யிருததி யெனனு
வேனகு சரமும விலலும வாஙகினன விரைய லுறருன

இ - ள போனவள புலவி நோககி - (அவவாறு) சென்ற சீதாபிராட்டியின து பிணககைப்பாாத்து, புரவலன - காவலனுகிய ஸ்ரீராமபிரான, பொலன கொள தாராய - பொனகொண்ட மாலையையுடையாய! மான இது - இம்மானை, நானே பறறி வலலையின வருவென - நானே(போயப)பிடித்துச சீக்கிரத்தில வருவேன, கா ன இயல மயில அனனுளை - கானகத்துப் பொருந்திய மயிலை ஒத்தவளாகிய சீதை யை, காததனை இருததி எனனு - காத்துககொண்டிருப்பாயென்று கூறி, வேல நகு சரமும - வேலபோனற கணைகளும, விலலும - கோதண்டமும, வாஙகினன - எற றுககொணடு, விரையல உறருன - விரைந்து செலலுதலை யடைந்தான.

குறிபபு.—காரமேகம்போனற தன்னைககண்டபின் மகிழுந்தனமையான என பான 'கானியன மயிலனனுள' என்ருன. நகு - உவமவாசகம். (௨௩௮)

முனனமு மகவாய வநத மூவரி னொருவன போனு
னன்னமா ரீச னெனறே யயிர்த்தனெ னிதனை யைய

பின்னமுங் காண்டி வாழி யேகென விருகை கூபபி
பொன்னனுள புககசாலே காததனன் புறததுநினறே.

இ - ள். முன்னமும் - முற்காலததும, மகம வாய்வநத - வேள்வியின்கண் வநத, மூவரின் - (தாடகையோடு சுபாகு மாரீசன் என்னும) மூவருள், ஒருவன போனன - ஒருவன (மடியாமல ஓடிச) சென்றான, அன்ன மாரீசன என்றே - அப படிசசென்ற மாரீசன எனவே, அயிர்ததனென - சநதேகிததேன, ஐய—! இதனை - இசசநதேகததை, இன்னமும காணடி - இன்னமும பாரப்பீர், ஏகு என - செலலும என்று, இருகைகூபபி - இரணடு கைகளையும குவிதது, பொன அனுள - இலககுமி தேவியை ஒதத சீதாபிராட்டி, புககசாலே - புகுநத பனனசாலையை, புறததுநின்று - வெளியே நின்றுகொணடு, காததனன் - காவல செயதான

குறிப்பு:—வாழி - முன்னிலையசை (௨௬௯)

மநதிரத திளையோன சொன்ன வாயமொழி மனததுக கொளளான
சநதிரற குவமை சான்ற வதனததாள சலததை நோககிச
சிநதுரப பவளச செவவாய முறுவலன சிகரச செவவிச
சுநதரத தோளி னுனம மானினைத தொடர லுறறான.

இ - ள். மநதிரதது இளையோன சொன்ன - ஆலோசனையால (அறிநது) இளையபெருமான கூறிய, வாயமொழி - வாயவார்ததையை, மனததுககொளளான - மனததிற கொளளாதவனாகிய ஸ்ரீராமபிரான, சநதிரறகு உவமை சான்ற வதனததாள - சநதிரனுககு உவமானததில மேலான முகததையுடைய சீதாபிராட்டியினது, சலததைநோககி - கோபததைபபாரதது, சிநதுரம பவளம செவவாய முறுவலன் - சிவப்பான பவளமபோன்ற சிவநதவாயோடு நகைப்பையுடையோனாகி [பறகள வெளியே தோன்றாது புன்னகை புரிநதானாகி], சிகரம - மலைசசிகரமபோன்ற, செவவி சுநதரம் தோளினுன - அழகிய புயஙகளையுடைய ஸ்ரீராமபிரான, அ மானினை தொடரல உறறான - அநத மானைத தொடாநது சென்றான

குறிப்பு—வாயமொழி - வாயின மொழி, வாயமைமொழி, வாயககும மொழி செவவி சுநதரம - ஒருபொருடபன மொழி. (௨௭௦)

மிதிததது மெலல மெலல வெறிததது வெருவி மீதிற
குதிததது செவியை நீட்டிக குரபத முரததைக கூட்டி
யுதிததெழு மூதை யுளள மென்றிவை யுருவச செலலுங
கதிககொரு கலவி வேறே காட்டிய தொதத தன்றே.

இ - ள மிதிசசது - (அமமான நிலததில) அடிவைததது, மெலல மெல்ல - மெளள மெளள, வெறிததது - ஆவேசமுறறது, வெருவி - அசசமுறறு, மீதில குதிததது - மேலே குதிததது, செவியை நீட்டி - காதுகளை நீட்டியும, குரம பதம - குளமபினையுடைய பாதஙகளில, உரததை கூட்டி - மாரபைச சோததியும, உதிதது எழும - பருததுக கிளமபுகின்ற, ஊதை - காறறு, உள்ளம் - மனம, என்ற இவை - என்று சொல்லிய இவைகள, உருவ செல்லும் கதிககு - உருவுமபடி செலகின்ற

வேகததிறகு, வேறே ஒரு கல்வி காட்டியது ஒததது - வேறே ஒரு (நூதனமான) படிபபைக காட்டியதையும போனறது (௨௬௧)

நீட்டினு னுலக மூனறு நின்றெடுத தளநத பாத
மீடமொ முரைததற கமமா வேறுமோ ரணட முண்டோ
வோடடினு றொடாநத தனனை யொழிவற நிறைந்த தனமை
காட்டினு னனறி யனறக கடமையாா கணிககற பாலாா.

இ - ள. நீடடினன நினறு - நீடடினவனுகி நின்று [நெடியோனுகி நினறு], எடுதது - தூககி, உலகம மூனறும - திரிலோகஙகளையும, அளநத பாதம - அளவிடட திருவடிகளை, மீடடும நாம உரைததறகு - திருமபவும நாம கூறுதறகு, அமமா—, வேறும ஓா அணடம உணடோ - மறறுமொரு அணடம இருககினறதோ? ஓடடினன - (அமமானைத) துரததினன, தொடாநத தனனை - (அமமானபின) தொடாநது சென்ற தனனை, ஒழிவு அற நிறைநததனமை - ஒழிவிலலாதபடி பூாததியாயத தொடாநததனமையில, காட்டினன—, அனறி - அலலாமல, அனறு - அநநாள அ கடமை - அநதவேகததை, யாா - எவா? கணிககறபாலாா - மதிததறகுரியாா

குறிபபு —அமமா - வியபபிடைச்சொல (௨௬௨)

குனறிடை யிவரு மேகக குழுவிடைக குதிககுங கூடச
செனறிடி னகலுந தாழிற நீணடலாந தகைமைத தாகு
நினறதே போல நீஙகு நிதிவழி நேய நீடடு
மனறலங கோதை மாதா மனமெனப போயிற றமமா

இ - ள. குனறிடை இவரும - மலையின்கண் ஏறும, மேகம குழுவிடை குதிககும - மேககூடடததினகண பாயும, கூட செனறிடின அகலும - அதனகூடவே தொடாநதுபோனுல பிரிநதுபோம, தாழின - தாமதிததால, நீணடல ஆம தகைமைதது ஆகும - நீணடுதறகாகிய தனமையையுடையது ஆகும, நினறதேபோல நீஙகும - நினறதைபபோலவேயிருநது விலகிபபோம, நிதிவழி - திரவியததினகண, நேயம நீட்டும - அனபை நீளச்செயகினற, மனறல அம கோதை மாதா - வாசனைபொருநதிய அழகிய கூநதலையுடைய (விலை) மாதாகளது, மனம என - மனததைபபோல, போயிறறு - போயினது

குறிபபு —அமமா - வியப்பிடைசசொல் (௨௬௩)

காயமவே ருகிச செய்யுங கருமமவே ருகிற றனறே
யேயுமே யெனனின மூனன மெணணமே யிளவற குணடே
யாயுமே லுறுதல செலலா மரககரா னவாகள் செயத
மாயமே யாய தேநாம வருநதிய தென்ருண வள்ளல.

இ - ள வளளல - ஸ்ரீராமபிரான, காயம வேறு ஆகி - உடலானது (செயலுககுத்தககதாகாத) வேறு (விததில) ஆகி, செயயும கருமம் வேறு ஆகிற்று அனறே - செய்கினற தொழில் (மானுருவத்துக குரியதல்லாத) வேறு (விதத்தில்) ஆயி

னதன்றே? ஏயுமே என்னின் - (மாயச்செயலுக்கு இது) பொருந்துமே யென்றால், முன்னமே—, இளவற்கு - இளையவனுக்கு, எண்ணமே - (அப்படிப் பொருந்தும் என்ற) நினைப்பே, உண்டே - உள்ளதே, உறுதல் - சம்பவிப்பதை, ஆயுமேல் - (நம் மனம்) ஆராயுமானால், செல்லாம் - (இப்படிவருத்தமுறும்படி) செல்லமாட்டோம், நாம் வருந்தியது - நாம் வருத்தமுற்றது, அரக்கரானவர்கள் செய்த மாயமே ஆயதே - அரக்கர்கள்செய்த மாயத்தாலேயே யாயிற்றே, என்றான் - என்று கூறினான்

குறிப்பு —செல்லாவரக்கர் என்றும் நான் வருந்தியது என்றும் பாடபேதமுண்டு அப்பாடத்திற்கு ஆயு - ஆயுள், மேல் உறுதல்செல்லா - நீடித்திருத்தற்காக வழியிற் செல்லாத அரக்கர் என்று பொருள்கூறுக. (உ௪௪)

வேறு

பற்று வானினி யல்லன பகழியாற்
செற்று வானிற் செலுத்தலுற் றானென
மற்ற மாய வரக்கன் மனக்கொளா
வுற்ற வேகத்தி னும்பரி னோங்கினான்

இ - ள் இனி—, பற்றுவான் அல்லன் - பிடிப்பவனல்லன், பகழியால் செற்று - பாணத்தால் கொன்று, வானில் செலுத்துதல் உற்றான் என - விண்ணிற் செல்லச் செய்தற்குப் பொருந்தினான் என்று, மனம் கொளா - மனத்திற்கொண்டு, மற்ற மாயம் அரக்கன் - வேறான மாயம்பொருந்திய அவ்விராக்கதன், உற்றவேகத்தின் - மிகுந்த வேகத்தால், உம்பரின் ஓங்கினான் - ஆகாயத்தில் உயரச் சென்றான்.

அக்க ணத்தினி லையனும் வெய்யதன்
சக்க ரத்திற் றகைவரி தாயதோர்
செக்கர் மேனிப் பகழி செலுத்தினான்
புக்க தேயம்புக் கின்னுயிர் போக்கென.

இ - ள். ஐயனும் - ஸ்ரீராமபிரானும், அக்கணத்தினில் - அந்தக் க்ஷணத்தில், வெய்ய - கொடிதாகிய, தன் சக்கரத்தில் - தனது சக்கராயுதம்போல, தகைவு அரிது ஆயது - தடைபடுத்தற் கரியதாகிய, ஓர் - ஒரு, செக்கர்மேனி பகழி - செய்ய நிறத்தையுடைய பாணத்தை, புக்க தேயம்புக்கு - (இவ்வரக்கன்) புகுந்த தேசத்திற் புகுந்து, இன் உயிர் போக்கு என - (இவனது) இனிய உயிரைப்போக்குவாய் என்று கூறி, செலுத்தினான் - அனுப்பினான்,

குறிப்பு —செக்கர்மேனிப் பகழி - அக்கினிமுகாஸ்திரமாம் (உ௪௫)

நெட்டி லைச்சரம் வஞ்சனை நெஞ்சுறப்
பட்ட தப்பொழு தேபகு வாயினால்
வட்ட திக்கினு மப்புற மும்புக
விட்ட ழைத்தொருங் குன்றென வீழ்ந்தனன்.

இ - ள். நெடு இலை சரம் - நெடிய இலை வடிவாயுள்ள அந்தப் பகழியானது, வஞ்சனை நெஞ்சு உற பட்டது - வஞ்சகம்பொருந்திய (அவ்வரக்கனது) நெஞ்சிற

பொருந்தத் தாக்கியது; அப்பொழுதே - அப்படித்தாக்கிய பொழுதிலேயே, பகுவாயினால் - பிளந்த வாயினாலே, அட்டதிக்கினும் - எட்டுத் திசைகளிலும், அப்புறமும் - (அத்திக்குக்களுக்கு) அப்பாலும், புக - பிரவேசிக்கும்படி, விட்டு அழைத்து - (சப்தத்தை) விடுத்துக் கூப்பிட்டு, ஒரு குன்று என வீழ்ந்தனன் - ஒரு மலைபோல வீழ்ந்தான்

குறிப்பு — விட்டழைத்தல் - தனக்கு இடமாகையாயுள்ள தொனியை விடுத்து வேறுதொனிகொண்டு கூப்பிடுதலுமாம். (உ௪எ)

வெய்ய வன்ற னுருவொடு வீழ்தலுஞ்
செய்ய தன்றெனச் செப்பிய தம்பியை
யைய னல்லனென் னாருயி ரல்லனு
னுய்ய வந்தவ னல்லனென் றுன்னினான்.

இ - ள். வெய்யவன் - கொடிய அவ்வரக்கன், தன் உருவொடு வீழ்தலும் - தனது (உண்மையான) உருவத்தோடு வீழ்ந்தவளவில், செய்யது அன்று என செப்பிய தம்பியை - நல்லது அன்றென்று கூறிய (தனது) தம்பியை, ஐயன் வல்லன் - (எனது) ஐயன் வல்லவனாயினன், என் ஆர் உயிர் வல்லன் - எனது அரிய உயிர் போன்றவன் வல்லவனாயினன், நான் உய்ய வந்தவன் வல்லன் - நான் ஈடேறும்படி (என்பின்) வந்தவன் வல்லவனாயினன், என்று உன்னினன் - என்று நினைத்தான்

குறிப்பு — ஐயன் - மூத்தோன், தந்தை முதலிய உறவினரை இளையானை ஐயன் என்றது மரபுவழுவமைதி. ஆருயிர் - அன்மொழித்தொகை (உ௪அ)

ஆசை நீளத் தரற்றினன் வீழ்ந்தவ
னீசன் மேனியை நின்றுட னோக்கினன்
மாசின் மாதவன் வேள்வியின் வந்தமா
ரீச னேயிவ னென்பது தேறினன்.

இ - ள். ஆசை நீளத்து அரற்றினன் - திசையினது நீளம் வரையிற் (செல்லுமாறு) பேரொலிசெய்து, வீழ்ந்த - விழுந்த, அ நீசன் மேனியை - அந்தக் கீழ்மகனது உடலை, உடன் - உடனே, நின்று நோக்கினன் - நின்று பார்த்து, மாசில் - குற்றமில்லாத, மாதவன் - மகாதவத்தையுடைய விசுவாமித்திர முனிவரது, வேள்வியின் வந்த - வேள்வியினிடத்து வந்த, மாரீசனே இவன் என்பது தேறினன் - மாரீசன் என்பவனே இவ்விராக்கதன் என்று சொல்வதிலுந் துணிவுகொண்டான்.(உ௪க)

உழைத்த வாளி யுரம்புகப் புலவியோ
னிழைத்த மாயையி னென்குர லாலிசைத்
தழைத்த துண்டது கேட்டயா வெய்துமான்
மழைக்க ணேழையென் றுள்ளம் வருந்தினான்.

இ - ள். உழைத்த - பிரயாசைப்பட்ட, வாளி - பாணமானது, உரம்புக - (தன்) மார்பிற் புகுந்ததால், புலவியோன் - அறப்பகைவரான அவ்வரக்கன், இழைத்த மாயையின் - செய்த மாயையில், என் குரலால் இசைத்து அழைத்தது உண்டு - எனது

(குரல போல) குரலகொணடு பேசிக கூபபிடடது உணடு, அதுகேடடு - அககுரலை கேடடு, மழைககண ஏழை - சீதை, அயாவு எயதும எனறு - தளாவடைவாளெனறு, உளளம வருநதினுன - மனம வருநதலுறறுன

குறிபபு —மழைககண ஏழை - மேகமபோல நீரசொரியுங கணகளையுடைய பேதைபபெண தனது ஆறறலின தனமையை யறியாது வீணே யழுவாள எனனுங குறிபபு விளஙக 'மழைககணேழை' எனறா. (உ௫0)

மாறற மினனது மாயமா ரீசனென
றேறற முனனுணாந தானெனி னெனனுடை
யாறற றேருந மறிவின ருதலாற
றேறறு மாலிளை யோனெனத தேறினுன.

இ - ள இனனது மாறறம- இததனமைய வாாததையானது, மாயம (எனறு)- வஞசகம எனறும, மாரீசன எனறு - (இதைச சொனனவன) மாரீசனெனறும, ஏறறம - அதிகமாக, முன - முனனம, உணாநதான எனின - அறிநதானேயாஞல, என உடை ஆறறல தேரும அறிவினன ஆதலால - எனனுடைய வலிமையை யறியும அறிவினையுடையா ஞகையால, இளையோன - (எனது) தமபி, தேறறும என தேறினுன- (சீதையைத துயரததினினறும) தேறசசெயவானெனறு தேறுதலடைநதான. (உ௫௧)

மாளவ தேபொரு ளாகவந தானலன
சூழவ தோாபொரு ளுணடிவன சொலலினுன
மூளவ தேதத மதுமுடி யாமுன
மீளவ தேநல மெனறவன மீணடனன

இ - ள மாளவதே பொருள ஆகவநதான அலன - இறபபதே உணமையாகுமபடி வநதவனலலன, இவன சொலலினுன - (எனகுரலகொணடு பேசிய) இவனுடைய வாாததையால, சூழவது ஓா பொருள உணடு - ஆலோசனை செய்வதாகிய ஒரு அாததமிருககினறது, மூளவது - (இனிக) கூடுவதாகிய, ஏதம அது - கெடுதியானது, முடியா முனம - (பகைவா செயது) முடிதது விடாத முனபு, மீளவதே நலன எனறு - திருமபிவிடுவதே நனமையானது எனறுகூறி, அவன மீணடனன - அவவிராமபிரான திருமபிவநதான (உ௫உ)

## ஏழாவது மாரீசனவதைப் படலம

முறறிறறு.

ஆகபபடலம எ௩கு விருததம அக0

---

## எட்டாவது சடாயுவுயிர்நீதத படலம்.

சஙக டுதத தனிககடன மேனியாற
கஙக டுதத நிலைமை யறைநதனங
கொஙகடுதத மலாககுழற கொமபனுட
கிஙக டுதத தகைமை யியமபுவாம

இ - ள. சஙகு - சஙகுகள, அடுதத - சோநத, தனி கடல - ஒபபறற கடல போனற, மேனியாறகு - திருமேனியையுடைய ஸ்ரீராமபிரானுககு, அஙகு அடுதத நிலைமை அறைநதனம - அவவிடததில சமபவிதத தனமையைக கூறினேம, கொஙகு அடுதத மலா குழல கொமபு அனுடகு - வாசனைசோநத மலாகளையணிநத கூநதலையுடைய கொமபுபோனறவளாகிய சீதாபிராடடிககு, இஙகு அடுதத தகைமை இயமபுவாம - இவவிடததிற சமபவிதத தனமையை (இனிக) கூறுவாம.

குறிபபு—குழற கொமபு - இல்பொருளுவமை (க)

எயிற லைததது முழைதிறந தேஙகிய
செயிாத லைககொணட சொறசெவி சோதலுங
குயிற லததிடை யுறறதொா கொளகையாள
வயிற லைததது விழுநது மயஙகினுள

இ - ள எயிறு அலைததது-பறகளை (நெறுநெறெனத) திருகி, முழை திறநது-குகைபோனற வாயைததிறநது, எஙகிய - அழுத, செயிாதலை கொணட - துனபத தினைக கொணட, சொல - வாாததையானது, செவி சோதலும - (தன) செவியைசசோநதவளவில, குயில தலததிடை உறறது ஓா கொளகையாள - (ஒரு) குயிலானது (மாததினினறுந தவறிவிழுநது) நிலததிறசோநததாகிய ஒரு செயலைகயை யுடையாளாய, வயிறு அலைதது - வயிறறிலடிததுககொணடு, விழுநது —, மயஙகினுள - (சீதாபிராடடி) மயஙகுதலுறறாள.

குறிபபு—முழை - அதுபோனற வாய்ககு ஆகுபெயா தலை - எழனுருபு (உ)

பிடிதது நலகிவ வுழையெனப பேதையென
முடிகத தெனமுதல வாழவென மொயகுழல
கொடிபப டிநத தெனநெடுங கோளரா
விடிககு டைநத தெனபபுரண டேஙகினுள.

இ - ள. மொயகுழல - அடாநத கூநதலையுடையாளாகிய சீதாபிராடடியான வள, பேதையென - அறிவிலலாத நான, இ உழை - இநத மானை, பிடிதது நலகு என - பறறிததருவீராகவெனறு கூறி, முதல வாழவு முடிததெனன என - முதனமையான வாழககையைத தீாததுவிடடேன என்று, கொடி படிநதது என-(கொழு கொம்பிழநது) பூஙகொடி (நிலததில) வீழநததுபோலவும, நெடுஙகோள அரா இடிககு உடைநதது என - நீணட கொலைததொழிலையுடைய பாமபானது இடியால

மனத்தளர்வடைந்தது போலவும், புரண்டு - (கீழேவிழுந்து) புரளுதலுற்று, ஏங்கினள் - அழுதாள்.

குறிப்பு — நாயகனோடு கூடிவாழும் வாழ்க்கையே சிறப்புடைத்தாதலின் அச்சிறப்பு விளங்க 'முதல்வாழ்வு' என்றாள். மொய்குழல் - அன்மொழித்தொகை. இடிக்கு - உருபுமயக்கம். தலைவிரிகோலமாய் அழுதனள் என்பது தோன்ற 'மொய்குழல்' என்றார். (௩)

குற்றம் வீந்த குணத்தினெங் கோமகன்
மற்றை வாளரக் கன்புரி மாயையால்
இற்று வீந்தன னென்னவு மென்னய
னிற்றி யோவிளை யோயொரு நீயென்றாள்.

இ - ள். இளையோய் - இளையவனாகிய இலட்சுமணனே! ஒரு நீ - ஒருவனாகிய நீ, குற்றம் வீந்த - குற்றமில்லாத, குணத்தின் - நற்குணங்களையுடைய, எம் கோமகன் - எமது நாயகன், மற்றை வாள் அரக்கன்புரி மாயையால் - மற்றை வாளாயுதத்தையுடைய (ஒரு) இராக்கதன் செய்த மாயையாலே, இற்று வீந்தனன் என்னவும் - அறுபட்டிறந்தானென்று கூறவும், என் அயல் நிற்றியோ - எனது பக்கத்தே நிற்பாயோ? என்றாள் —,

குறிப்பு — கோமகன் - அரசனாகிய எமது நாயகன் என்க. இனித் தன்னைப் புரப்பவர் இல்லையென்பது தோன்ற 'கோமகன்' என்றாள். மற்றை - சுட்டியதற்கு இனமாகலின் வாட்போர் மகனென்னக் கொள்க. போர்செய்யாமை குறிப்பிக்க 'வாளரக்கன்' என்றும், 'இற்றுவீந்தனன்' என்றும் கூறினாள். ஒரு நீ என்றது - வீரர்க்குள்ளொருவனாகிய நீயெனவும் தம்பிமார்களுள் ஒருவனாகிய நீ எனவும் ஏகோ ஒருதன்மையாயிருக்கிற நீயெனவும் கூறலாம். (௪)

## வேறு

எண்மையா ருலகினி னிராமற் கேற்றமோர்
திண்மையா ருளரெனச் செப்பற் பாலதோ
பெண்மையா லுரைசெயப் பெறுதி ராலெனா
வுண்மையா னிளையவ னுணரக் கூறினான்.

இ - ள். உண்மையான் - சத்தியவாசகனாகிய இளையபெருமாள், எண்மையார் உலகினின் - எளிமைபொருந்திய இவ்வுலகத்தின்கண், இராமற்கு - ஸ்ரீராமபிரானைக்காட்டிலும், ஏற்றம் - மிகுதியான, ஓர் திண்மையார் - ஒப்பற்ற வலிமையையுடையவர்கள், உளர் என - இருக்கின்றார்களென்று, செப்பல் பாலதோ - (வார்த்தை) சொல்லுதற்குரியதோ? பெண்மையால் - பெண்தன்மையால், உரை செய பெறுதிர் என - (இத்தகைய) வார்த்தைகூற (மனம்) பொராவீரென்று, அவட்கு - அச்சீதாபிராட்டிக்கு, உணர கூறினான் - அறியும்படியாகச் சொன்னான்.

குறிப்பு — ஸ்ரீராமபிரானது ஆற்றலினும் சிறந்த ஆற்றலையுடையது இவ்வுலகில் யாதும் இல்லையாதலால் 'எண்மையார் உலகு' என்றான். இனி, எண்மை என்றதற்கு மதிப்பு எனப் பொருள்கொண்டு ஆருலகென்றதற்கு ஆரும் உலகு என எதிர்காலத

தை விரித்தும் அரக்கர்தீத்தொழிலான முனிவர் தீத்தொழின் மாறிய பெருமைகு ணறிந்திறகு மிவ்வுலகம் இனி நன்னிலைமை பெறுமென விரித்தலு மமையும் உலகம் என்லை உயர்திணையாகக்கொண்டு மதிப்புத்தக்கிய உயர்ந்தவர்தம்மில் என்ப பொருள்கோடலுங் கூடும் "நுண்ணுணர் வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே" என்பவாகலின் 'பெண்மையா லுரை செய்ய பெறுதிர்' என்றுன உண்மையான்—உண்மையால் என்பொருள்கோடலுமாம். (ரு)

ஏழுமே கடலுல கேழு மேழுமே
சூழுமேழ் மலையவை தொடர்ந்த சூழலவாய்
வாழுமே ழையாசிறு வலிக்கு வாளமா
தாழுமே ராகவன் றனிமை தையலீர்.

இ - ள் தையலீர் - அழகுடையவரே! கடல் ஏழுமே - கடல்கள் ஏழினுடையவும், உலகு ஏழும் ஏழுமே - உலகங்கள் பதினான்கினுடையவும், சூழும் ஏழ் மலை - சூழ்ந்திருக்கின்ற சப்தகுலாசலங்களினுடையவும், அவை - அவற்றை, தொடர்ந்த - தொடர்ந்துள்ள, சூழலவாய் - இடங்களில், வாழும் - வாழுகின்ற, ஏழையா- அறிவிலார்களுடையவும், சிறுவலிக்கு - அற்ப பலத்துக்கும், வாள் அமா - வாள் முதலியவற்றுற செய்யும் போர்க்கும், ராகவன் தனிமை - ஸ்ரீராமபிரானது ஒப்பற்றதன்மையானது, தாழுமே - தாழ்வடையுமோ?

குறிப்பு.—ஏழுமே ஏழுமே, ஏகாரங்கள் - எண்ணுப்பொருளன தாழுமே, ஏகாரம் - எதிர்மறை வாள் - மற்றை யாயுதங்களுக்கும் உபலக்கணம் தனிமை - தனித்து ஒருவனாயிருக்குந் தன்மையுமாம் (சு)

பாரெனக் கனலெனப் புனலெ னப்பகர்
பேரெனத் திசையென முனியிற் பேருமால்
காரெனக் கரியவக் கமலக் கண்ணனை
யாரெனக் கருதியிவ் விடரி னாழ்கின்றீர்.

இ - ள். பார் என - புவியென்றும், கனல் என - நெருப்பென்றும், புனல் என - நீரென்றும், பகர் - (மற்றும்) சொல்லப்படுகிற, பேர் என - பெயர்கள் என்றும், திசை என - திக்குக்களென்றும், முனியின் - கோபித்தால், பேரும் -(அவை) பெயர்ந்துபோம், (இங்ஙனமிருக்க) கார் என கரிய - மேகம்போலக் கரியநிறத்தையுடைய, அ கமலம் கண்ணனை - அந்தப் புண்டரீகாக்ஷனை, யார் என கருதி - யார் என்று நினைத்து, இ இடரின் ஆழ்கின்றீர் - இந்தத் துன்பத்தில் விழுந்துகின்றீர்?

குறிப்பு—பார் கனல் புனல் எனக் கூறிய பின் பகர்பே ரென்றமையால் அப்போ பஞ்சபூதங்களிற் கூறுதொழிந்த வாயுவும் ஆகாயமுமாம் எம்பிரானை ஸ்ரீமகா விஷ்ணுவென்று கருதக் கடவீர் சாமானிய மானிடரூபமென்று கருதன்மின் என்பது ஈற்றிரண்டடியின் கருத்து. (எ)

இடைந்துபோய் நிசிசரர் கிராம னெவ்வமவந்
தடைந்தபோ தழைக்குமே யழைக்கு மாமெனின்

மிடைந்தபே ரண்டங்கள் மேல்கீ ழென்
வுடைந்துபோ மயன்முத லுயிருந் தீயுமால்

இ - ள் இராமன் - ஸ்ரீராமபிரான், நிசிசரற்கு இடைந்துபோய் - இராக்கதனுக்குத் தோற்றுப்போய், எவ்வம் வந்து அடைந்தபோது - துன்பம் வந்து உற்றகாலத்தில், அழைக்குமே - (பிறர்துணையைவிரும்பிக்) கூப்பிடுவாரோ? [கூப்பிடார்], அழைக்கும் எனின் - (அப்படிக்) கூப்பிடுவாரேயானால், மேல் கீழ் என் - மேலுங் கீழும் உள்ளனவாகிய, மிடைந்த - நெருங்கிய, பேர் அண்டங்கள் - பெரிய வுலகங்கள் (பதினான்கும்), உடைந்துபோம் - தகர்ந்து அழிந்துபோகும், அயன்முதல் உயிரும் தீயும் - பிரமன் முதலாகிய ஜீவராசிகளும் நாசமடையும் (அ)

மாற்றமென் பகர்வது மண்ணும் வானமும்
போற்றவன் றிரிபுர மெரித்த புங்கவ
னேற்றிநின் றெய்தவில் லிற்ற தெம்பிரா
னாற்றலி னமைவதோ ராற்ற லுண்மையோ

இ - ள் மாற்றம் பகர்வது என் - வார்த்தை சொல்வது யாது? மண்ணும் வானமும் போற்ற - மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் போற்றும்படியாக, வல்திரிபுரம் எரித்தபுங்கவன் - வலிய முப்புரங்களை யெரித்தருளிய சிவபிரான், ஏற்றி நின்று எய்தவில் - (நாண்) ஏற்றி நின்று (அம்பினை) எய்த வில்லானது, இற்றது - முறிபட்டது, (ஆதலால்), எம்பிரான் ஆற்றலின் - எமது பெருமானுடைய வல்லமையைப்போல, அமைவது - பொருந்துவதாகிய, ஓர் ஆற்றல் உண்மையோ - ஒருவல்லமையும் உள்ளதோ?

குறிப்பு—மண், வான் - இடவாகுபெயர்கள் நின்று - அசையுமாம். பிரான் - எப்பொருட்கு மிறைவன், கடவுள் (௯)

காவல னீண்டுநீ கருதிற் றெய்துமேன்
மூவகை யுலகமு முடியு முந்துள
தேவரு முனிவரு முதல செவ்வியோ
ரேவரும் வீந்துளா ரறமு மெஞ்சுமால்.

இ - ள் காவலன் ஈண்டும் - புரவலராகிய ஸ்ரீராமர் (யாதொரு தீங்குமின்றி விரைந்துவந்து) சேர்வார், நீ கருதிற்று எய்தும் மேல் - நீ எண்ணியது சம்பவிக்குமானால், மூவகை உலகமும் முடியும் - திரிலோகங்களும் நாசமடையும், முந்து உள - முற்படத்துள்ள, தேவரும் —, முனிவரும் —, முதல - முதலாகிய, செவ்வியோர் எவரும் - சிறப்புப்பெற்றோர் எவர்களும், வீந்து உளார் - இறந்திருக்கின்றார்கள், அறமும் எஞ்சும் - தருமமும் அற்றுப்போகும்

குறிப்பு—காவலன் - இரட்சிக்குந்தொழிலில் வல்லவன் காப்பவனாகிய அவனே இறப்பானாகில் மறைமையோர் காப்பவரின்றித் தாமே இறப்பார் என்பது கருத்து ஈண்டு - இப்பொழுது, நீ கருதிற்று - நீ கருதினதை, காவலன் எய்துமேல் - காவலன் அடைவானானால் என முதலடிக்குப் பொருள்கூறுதலும் அமையும். (௰)

பரக்கவென் பகாவது பகழி பணணவன
றரககவங் கதுபடட தொலைநது சோாகின்ற
வரக்கனவ வுரையெடுத தாறறி ஞனதற
கிரககமுற றிரஙகலி ரிருததி ரீணடெனறுன.

இ - ள பரகக பகாவது என - விரிததுசசொலவது யாது? பணணவன - ஸ்ரீராமபிரான, அஙகு - அவவிடததில, பகழி தூரகக - அமபினை யெய்ய, அது பட - அவவமபு படடதால, தொலைநது சோாகினற அரககன - அழிநது தளாவடைகினற இராககதன, அ உரை எடுதது அாறறினை - அநதவாாததையை யெடுததுசசொல லிக கூவினன, அதறகு - அதனபொருட்டு, ஈணடு - இபபொழுது, இரககம உறறு - துனபமடைநது, இரஙகலிா - வருநதாமல, இருததிா எனறுன - இருபபீாாகவெ னறு கூறினன

குறிபபு — பணணவன - திணணியன, கடவுள. (௧௫)

எனறவ னியமபலு மெடுதத சீறறததள
கொனறன வினனலள கொதிககு முளளதத
ணினறநின னிலையிது நெறியிற றனறென
வனறறு கணணினள வயிாததுக கூறுவாள.

இ ள எனறு - (இரஙகலிா இருததிா) எனறு, அவன இயமபலும - அவ விளையபெருமாள கூறியவளவில, எடுதத சீறறததள - அதிகரிதத கோபததையுடை யவளும, கொனறன இனனலள - கொனறுறபோனற துனபததையுடையவளும, கொதிககும உளளததள - (கோபததினலே) கொதிககினற மனததினையடையா ளும, வல தறு கணணினள - கொடிய குரூரததனமையை யுடையாளுமாகி, (சீதா பிராடடி இளையபெருமாளைநோககி), நினற நின நிலை இது - (பிராணைத தேடிசசெ ல்லாமல ஈஙகு) நினற உனனுடைய இநநிலைமையானது, நெறியிறறு அனறு என - நீதியின பாலது அனறெனறு, வயிாதது கூறுவாள - பகைசாதிதது கூறுவா ளாயினள

குறிபபு — வயிாதது - வயிரிதது எனபதன விகாரம (௧௬)

ஒருபகல பழகினு ருயிரை யீவாால
பெருமக னுலைவுறு பெறறி கேட்டுநீ
வெருவலை நினறனை வேறெ னியானினி
யெரியிடை வீழநதுயி ாிறபப னீணடெனு.

இ - ள ஒருபகல பழகினா - ஒருநாள பழகினவாகள, உயிரை ஈவா - (நே சிததவாககு ஓா துனபம வநதகாலததுத தமது) உயிரையுங கொடுபபாாகள, நீ - (உடனபிறநது வெகுநாள பழகினவனுகிய) நீ, பெருமகன உலைவு உறுபெறறி கேடடும - (நமது) அாசன அழிவுறற தனமையைக கேளவிபபடடும, வெருவலை நினறனை - அஞசாமல நினருய், வேறு என - (எனககுப போககு) வேறு யாதோ? இனி—, யான - நான, எாி இடை ஈணடு வீழநது உயிா இறப்பன எனு - நெருபபிஙகண இபபொழுது வீழ்நது உயிரை யாயபபேன எனறு கூறி. (௧௭)

தாமரை வனத்திடைத் தாவு மன்னம்போற்
றூமவெங் காட்டெரி தொடர்கின் றுழிதனைச்
சேமவிற் குமரனும் விலக்கிச் சீறடிப்
பூமுக நெடுநிலம் புல்லிச் சொல்லுமால்.

இ - ள். தாமரைவனத்து இடை - செந்தாமரைமலர்க் காட்டினிடத்தில், தாவும் அன்னம்போல - தாவுகின்ற அன்னப்புள்ளைப்போல், தூமம் வெம் காடு எரி தொடர்கின்றுழிதனை - புகைபொருந்திய கொடிய காட்டுத்தீயைத் தேடிச் செல்கின்ற சீதாபிராட்டியை, சேமம் வில் குமரனும் - காத்தற்குரிய வில்லினையுடைய இளையபெருமாளும், விலக்கி - தடுத்து, சிறு அடி பூ முகம் நெடு நிலம் புல்லி - (அவளுடைய) சிறியபாதங்களாகிய (தாமரை) மலர்களினிடத்துப் பெரிய பூமியைத் தழுவி [பெரிய பூமியின்கண் வீழ்ந்து கும்பிட்டு], சொல்லும் - கூறுவான்.

குறிப்பு — தாமரைவனம் - காட்டுத்தீக்கும், அன்னம் - பிராட்டிக்கும் உவமை. பூமுகம், முகம் - ஏழனுருபு. சீறடிப்பூவின்கண் நெடுநிலத்தில் முகம் புல்லி எனக் கொண்டு பொருள்கோடலு மமையும். (௧௪)

துஞ்சுவ தென்னைநீ சொன்ன சொல்லையா
னஞ்சுவேன் மறுக்கிலே னவலந் தீர்ந்தினி
யிஞ்சிரு மடியனே னேகு கின்றனன்
வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ.

இ - ள். நீ துஞ்சுவது என்னை - நீ இறப்பது எதன்பொருட்டு? யான் (நீ) சொன்ன சொல்லை அஞ்சுவேன் - நான் நீ சொன்ன வார்த்தையை அஞ்சுவேன், மறுக்கிலேன் - (உமது உத்தரவை) மறுத்துவிடேன், இனி—, அவலம் தீர்ந்து - துன்பம் ஒழிந்து, இஞ்சு இரும் - இங்கே இருக்கக்கடவீர், வெம் சினம் விதியினை - வெவ்விய கோபம் பொருந்திய ஊழ்வினையை, வெல்லவல்லமோ - வென்றுவிடுதற்கு (நாம்) வல்லமையுடையேமோ? [வல்லமையுடையோம் அல்லம்], (ஆதலால்), அடியனேன் - அடிமையாகிய நான், ஏகுகின்றனன் - செல்லுகின்றேன்.

குறிப்பு —சீதாபிராட்டி கூறிய மொழியைத் தன் மனத்தில் நினைக்கும்போதெல்லாம் அஞ்சுதலெய்துமென்பது தோன்ற 'அஞ்சுவேன்' என எதிர்காலத்தாற் கூறினன். இங்கு-இஞ்சு என எதுகைநோக்கித் திரிந்தது. "முதிர்தரு தவமுடை முனிவ ராயினும், பொதுவறு திருவொடு பொலிவ ராயினு, மதியின ராயினும் வலிய ராயினும், விதியினை யாவரே வெல்லு நீர்மையார்" [கந்தபுராணம்] என்பவாகலின் 'விதியினை வெல்ல வல்லமோ' என்றனன். (௧௫)

போகின்றே னடியனேன் பொருந்தி வந்துகே
டாகின்ற தரசன்றன் னாணை நீமறுத்
தேகென்றீ ரிருக்கின்றீர் தமிய ளென்றபின்
வேகின்ற சிந்தையான் விடைகொண் டேகினான்.

இ - ள். அடியனேன் போகின்றேன் - அடிமையாகிய நான் (இதோ) செல்கின்றேன், பொருந்தி வந்து கேடு ஆகின்றது - பொருத்தமாகிவந்து கெடுதி உண்

டாகின்றது, நீர் அரசன்றன் ஆணைமறுத்து வருக என்றீர் - நீர் (நமது) அரசனுடைய ஆக்கினையைத் தடுத்து (காவற்றொழிலபுரியு மெனனைச்) செலவாயென்று கூறி னீர், தமியள் இருக்கின்றீர் - தனித்தவராயிருக்கின்றீர், என்று - என்று கூறி, பின் - பிறகு, வேகின்ற சிந்தையான் - (துயரத்தால்) வெதுப்புறுகின்ற மனத்தினை யுடையானாகி, விடைகொண்டு ஏகினன் - (இளையபெருமாள்) விடைபெற்றுக்கொ ண்டு சென்றான்.

குறிப்பு —அழகியமான வரக்கண்டு ஆசைகொண்ட பிராட்டியை மகிழ்விக்க அம்மானைப் பிடிக்கும்பொருட்டு இராமபிரான் பிரியவும் அம்மான் கூவிய மாயவொ லியால் தன் நாதன் துன்புற்றானெனக் கருதிச் சீதாபிராட்டி இளையபெருமாளைச் சென்று பார்த்துவாவெனக் கட்டளையிட்டபடி செல்லாது மாறுத்தரங் கூறியதால் அவள் இறக்கத்துணிந்ததை யறிந்து காவற்றொழிலைவிடுத்து இளையோன் ஏகவும் நேரிட்ட காரணங்கள் பிராட்டி தனித்திருந்து கேட்டைத்தற்குப் பொருத்தமாயிரு ந்ததைப்பற்றி 'பொருந்தி வந்துகே டாகின்றது' என்றான் (கசு)

இருப்பனே லெரியிடை யிறப்ப ராலிவர்
பொருப்பனை யானிடைப் போவ னேயெனி
லருப்பமில் கேடுவந் தடையு மாருயிர்
விருப்பனேற் கென்செய லென்று விம்மினான்

இ - ள். இருப்பனேல் - (யான் செல்லாம லீங்கு) இருப்பேனானால், இவர் - இச்சீதாபிராட்டியார், எரியிடை இறப்பர் - அக்கினியில் விழுந்து இறந்துபோவார், பொருப்பு அனையான் இடை போவனே எனில் - மலையை ஒத்தவனாகிய ஸ்ரீராம பிரானிடத்துச் செல்வேனே என்றால், அருப்பம் இல் கேடுவந்து அடையும் - அர ண் (காவல்) இல்லாத கெடுதிவந்து சேரும், ஆர் உயிர் விருப்பனேற்கு - அரிய உயிரினிடத்து ஆசையையுடையேனாகிய எனக்கு, செயல் என் என்று விம்மினான் - (இனிச் செய்யவேண்டிய) தொழில் யாது? என்று கூறி அழுதான்.

குறிப்பு —அருப்பம்-அரண், "வீங்கு சிறை வியலருப்பம்" [புறநானூறு 17] இனி, அருப்பம் - அருமையுமாம், "அடிநிலை தளாக்கு மருப்பமு முடைய" [மலைபடு கடாம் 222]. இங்ஙனந் துயருறுதலினும் உயிர்விடுதல் நன்மையாயிருந்தும் உயி ரைமாய்த்துக்கொள்ளா திருக்கின்றே னென்பான் 'ஆருயிர் விருப்பனேன்' என்றான்.

அறந்தனா லழிவிலா தாகி னாக்கலா
மிறந்துபா டிவாக்குறு மிதனி னிவ்வழி
துறந்துபோ மிதனையே துணிவன் றொலவினைப்
பிறந்துபோந் திதுபடும் பேதை யேனென,

இ - ள் அறம் தனால் ஆகின்-தருமத்தினால் (இயலும்) ஆனால், அழிவு இலாது ஆக்கல் ஆம் - கேடிலலாமற் செய்தலாகும், இவாக்கு - இப்பிராட்டியாருக்கு, இறந் துபாடு உறும் இதனின் - இறந்துபடுதல் சம்பவிக்கும் இதனைக் காணுறுதலினும், தொல்வினை - பூர்வகர்மத்தால், பிறந்து - (புவியில்) உற்பவித்து, போந்து - (ஈங் கு) வந்து, இது படும் - இவ்விசாரத்தையடைகின்ற, பேதையேன் - அறிவிலியாகிய நான், இ வழி - இந்த இடத்தை, துறந்துபோம் - நீங்கிச் செல்லுகின்ற, இதனையே- இச்செய்கையே, துணிவன் என - துணிந்துசெய்வேனென்று கூறி.

குறிப்பு — யார் தடுப்பினும் இவர் இறவாதிரார், நாயக னுயிரோடிருக்கும் போழ்து மனைவி தீக்குளித்த லறமன்றாகலின், அவ்வறத்திற்குரிய தெய்வத்தான் இவரைக் காத்தல்வேண்டுமே எனப்பான் 'அறந்தனை வழியிலா தாகி னாக்கலாம்' என்றான் பாடு - முதனிலைதிரிந்த தொழிற்பெயர் (௧௮)

போவது புரிவனேன் புகுந்த துண்டெனிற்
காவல்செய் யெருவையின் றலைவன் கண்ணுறு
மாவது காக்குமென றறிவித் தவ்வழித்
தேவர்செய் தவத்தினாற் செம்மல் லேகினான்.

இ - ள். செம்மல் - பெருமையிற்சிறந்த இளையபெருமான், நான் போவது புரிவன் - யான் செல்லுகின்றேன், புகுந்தது உண்டு எனின் - (ஏதேனுங்கெடுதி) பிரவேசித்தது உண்டு என்றால், காவல்செய - (ஜனகளைக்) காக்குந் தொழில் செய்கின்ற, எருவையின் தலைவன் - கழுகுகளுக்கு அரசாகிய சடாயு என்பவர், கண்ணுறும் - காணுவார், ஆவது காக்கும் - ஆகும் ஆபத்தை (நீக்கி) இரட்சிப்பார், என்று அறிவித்து - என்று தெரிவித்து, அ வழி - (ஸ்ரீராமர் சென்ற) அந்தமார்க்கமாக, தேவர்செய் தவத்தினால் ஏகினான் - தேவர்கள் செய்த தவத்தினாலே சென்றான்

குறிப்பு — சடாயுகாண் படலத்தில், "நீவிரு நனுந்த ருனுமிக, காட்டில் வைகுதிர் காக்குவென் யானென்றான்" எனவும், "பார்ப்பைப் பார்க்கும் பறவை விற பார்க்கின்றான்" எனவுங் கூறியவாறு சடாயு இவர்களைக் காத்துவருவதால் 'காவல்செய் யெருவையின் றலைவன்' என்றான். விடைகொண்டேகிய இளையபெருமான் சற்றுத்தூரஞ் சென்று திரும்பிப்பார்த்துச் சடாயு காப்பார் என்பதைப் பிராட்டிக்கு அறிவித்துச் சென்றானெனக். (௧௯)

இளையவ னேகலு மிறவு பார்க்கின்ற
வளையெயிற் றிராவணன் வஞ்ச முற்றுவான்
முளைவரித் தண்டொரு மூன்று முப்பகைத்
தளையரி தவத்தாதம் வடிவுந் தாங்கினான்.

இ - ள் இறவுபார்க்கின்ற - சமயம் நோக்குகின்ற, வளை எயிறு இராவணன் - வக்கிரதந்தங்களையுடைய இராவணன், இளையவன் ஏகலும் - இளையபெருமான் சென்றவளவில், வஞ்சம் முற்றுவான் - (தான்) வஞ்சிக்குஞ்செயல் முடியும்பொருட்டு, முளை - ஆப்பிளையுடைய, வரி - கட்டமைந்த, தண்டு ஒரு மூன்றும் - ஒரு திரிதண்டமும், முப்பகை தளை அரி தவத்தாதம் வடிவும் - மூன்றுபகையாகிய பந்தத்தை யறுத்தொழித்த தவத்தினையுடைய முனிவர்களினது உருவத்தையும், தாங்கினான் - சுமந்தான்

குறிப்பு — வஞ்சம் உற்று எனப் பிரித்து - மாயம் அடைந்து என்று பொருள் கூறி வான் எனபதைத் தண்டொடுகூட்டி வான் என்றகுப் பெருமைபொருந்திய எனப் பொருள் கூறுதலு மமையும். அரசு, புரசு, மூங்கில் என்னும் மூன்றுவகைக் கோல்களையும் ஒன்றாக முறுக்கிச் சேர்த்தது திரிதண்டமாம், முப்பகை - காமம், வெகுளி, மயக்கம் என்பன. (௨௦)

51

ஊணில னுமென வுலர்ந்த மேனியான்
சேணெறி வந்ததோர் வருத்தச் செய்கையான்
பாணியி னடத்திடைப் படிக்கின் றானென
வீணையி னிசைபட வேதம் பாடுவான்.

இ - ள். ஊண் இலன் என உலர்ந்த மேனியான் - உணவில்லாதவனைப்போல வற்றிய உடலையுடையானாகவும், சேண் நெறிவந்தது ஓர் வருத்தச்செய்கையான் - தூரமான வழியிலிருந்து வந்ததாலாகிய ஒரு துன்பத்தின் செயலினையுடையானாகவும், நடத்திடை - நடனத்தில், பாணியின் - தாளத்தோடு, படிக்கின்றான் என - (இசைப்பாட்டைப்) படிப்பவனைப்போல, வீணையின் இசைபட - வீணையினது நாதமுண்டாகும்படி, வேதம் பாடுவான் - (தன்குரலால்) வேதத்தைப் பாடுவோனாகவும்.

குறிப்பு — ஊண் - உண்ணப்படுவது, செயப்படுபொருள் விகுதி புணர்ந்து கெட்டு முதல் நீண்டது. பாணியின் என்றது - பாட்டை எனப் பொருள்கூறினு மமையும். இசைபட என்றது - இசை தாழ்வுடைய னென்னலுமாம். (உக)

பூப்பொதி யவிழ்ந்தன நடையன பூதலந்
தீப்பொதிந் தாமென மிதிக்குஞ் செய்கையன்
காப்பரு நடுக்குறுங் காலன் கையினன்
மூப்பெனும் பருவமு முனிய முற்றினன்.

இ - ள். பூ பொதி அவிழ்ந்தன நடையன - மலரின் இதழ் (மெல்லமெல்ல) விரிந்தாற்போல நடத்தலையுடையானாகவும், பூதலம் தீ பொதிந்தது ஆம் என மிதிக்கும் செய்கையன - பூமியானது நெருப்புத்திணிந்ததாகுமென்று கருதிக் காலவைக்கின்ற செயலினையுடையானாகவும், காப்பரும் - காத்தற்கருமையான [தடுத்தற்கு முடியாத], நடுக்கு உறும் - நடுக்கமடைகின்ற, காலன் கையினன் - கால்களையுங் கைகளையு முடையவனாகவும், மூப்பு எனும் பருவமும் - முதுமையென்னும் பருவகாலமும், முனிய - வெறுக்கும்படியாக, முற்றினன் - முதிர்ச்சியடைந்தானாகவும்

தாமரைக் கண்ணொடே தவத்தின் மாலைய
னாமையி னிருக்கையன் வளைந்த வாக்கைய
னாமநூன் மார்பின னணுகி னானரோ
தூமனத் தருந்ததி யிருந்த சூழல்வாய்.

இ - ள். தாமரை கண்ணொடு - தாமரைமலர்போன்ற கண்களோடு, ஏ தவத்தின் மாலையன் - அழகிய தவவொழுக்கத்தை யுடையானாகவும், ஆமையின் இருக்கையன் - ஆமை(யானது ஐந்துறுப்பையும் உள்ளடக்கி யிருப்பது)போல (ஐம்புலன்களையும் அடக்கி) இருத்தலை யுடையானாகவும், வளைந்த ஆக்கையன் - வளைவுற்ற உடலையுடையானாகவும் [கூனனாகவும்], நாமம் நூல் மார்பினன் - பெருமைபொருந்திய (முப்புரி) நூலையணிந்த மார்பினையுடையானாகவும், தூமனத்து அருந்ததி இருந்த சூழல்வாய் - பரிசுத்தமான மனத்தினையுடைய அருந்ததிபோலுங் கற்பினையுடையாளாகிய சீதாபிராட்டியிருந்த இடத்தினிடத்தை, அணுகினன் - கிட்டினன்.

குறிப்பு — ஆமை தன் தலைமுதலிய உறுப்புக்களை ஓட்டிக்குள் அடக்கிக்கொள்வதுபோலத் தன் இருபது கைகளையும் பத்துத்தலைகளையும் உள்ளடக்கி முனிவேடங் கொண்டானென்னலுமாம்; அருந்ததி - உவமவாகுபெயர். (௨௩)

தோமறு சாலையின் வாயிற் றுன்னினான்
நாமுதற் குழறிட நடுங்குஞ் சொல்லினன்
யாவரிவ் விருக்கையு ளிருந்து ளீரென்றான்
றேவரு மருள்கொளத் தெரிந்த மேனியான்.

இ - ள். தேவரும் மருள்கொள தெரிந்த மேனியான் - தேவர்களும் மயக்கங் கொள்ளும்படி காணப்பட்ட (முனிவேடங்கொண்ட) உடலினையுடையானாகிய இராவணன், தோம் அறு சாலையின் வாயில் துன்னினான் - குற்றமற்ற பன்னசாலையின் வாசலில் நெருங்கினவனும், நாமுதல் - நாக்குமுதலிய உறுப்புகள், குழறிடக்கும்- குழறும்படி நடுங்குகின்ற, சொல்லினன்- சொல்லினை யுடையவனுமாகி, இ இருக்கையுள் இருந்து உள்ளீர் - இந்த இடத்தில் தங்கியிருக்கிற நீர், யாவர் என்றான் - யார்? என்று வினவினான். (௨௪)

தோகையு மிவ்வழித் தோமில் சிந்தனைச்
சேகறு நோன்பின ரென்னுஞ் சிந்தையாள்
பாகியல் கிளவியாள் பவளக் கொம்பாபோன்
றேகுமின் னீண்டென வெதிர்வந் தெய்தினாள்

இ - ள. தோகையும் - சீதாபிராட்டியும், இ வழி - இந்த இடத்திலிருக்கிற. சிந்தனை சேகு அறு - மனவயிரம் நீங்கிய, தோம் இல் - குற்றமில்லாத, நோன்பினர் - தவத்தினையுடையார், என்னும் - என்று கருதும், சிந்தையாள் - மனத்தினையுடையாளும், பாகு இயல் கிளவியாள் - தேம்பாகு போன்ற சொல்லினையுடையாளுமாகிய சீதாபிராட்டி, பவளம் கொம்பாபோன்று -பவளக்கொம்பை ஒத்து ஏகும் - (விண்ணினகண்) செல்கின்ற, மின் - மின்னல், என - என்று கூறும்படி, ஈண்டு - இவ்விடத்தில், எதிர்வந்து எய்தினாள் - (அக்கள்ளத்தவவேட ராவணனுக்கு) எதிரில் வந்து அடைந்தாள்.

குறிப்பு —தோகை--மயிற்றோகை இது மயிலுக்கு ஆகுபெயராய் மயில் பிராட்டிக்கு ஆகுபெயராயிற்று, இருமடியாகுபெயர். எதிர் வந்தெய்தினாள் என்றதற்கேற்ப மயில்போலும் நடையினையுடையாளென விரித்தல் சிறப்புடைத்தாம் மின் ணீண்டென என்று பிரித்து மின்னல்; படர்ந்ததென்னெனினு மமையும். (௨௫)

வெறபிடை மதமென வியர்க்கு மேனிய
னறபினிற் றிரைபுர ளாசை வேலையன்
பொறபினுக் கணியினைப் புகழின் சேக்கையைக்
கறபினுக் கரசியைக் கண்ணி னோக்கினான்.

இ - ள. வெறபு இடை மதம் என-யானையினிடத்து மதம் ஒழுகினாற்போல, வியர்க்கும் மேனியன் - வியர்வையுண்டாகின்ற உடலினையுடையானும், அறபினில் - அன்பினில், திரை புரள் - அலை புரளுகின்ற, ஆசைவேலையன் - ஆசையா

கிய கடலினையுடையானுமாகிய இராவணன், பொற்பினுக்கு அணியினை - அழகுக்கு அழகானவளை, புகழின் சேக்கையை - புகழுக்கு இருப்பிடமானவளை, கற்பினுக்கு அரசியை - கற்புக்குத்தலைவியை [சீதாபிராட்டியை], கண்ணின் நோக்கினான் - (தன்) கண்களாற்கண்டான்.

குறிப்பு—வெற்பு - உவமவாகுபெயர். அன்பு - அற்பு எனவிகாரம். இராவணனது நிஜரூபத்துக்கு வியர்வையும் ஆசையும் அன்பும் பெருகிற்றென்பது தோன்ற 'வெற்பிடை மதமென' என்றார். அடிக்கடி அன்புண்டாதல் பற்றி அதனைத் திரையாகவும் அதிகரித்த ஆசைக்கு எல்லையில்லாமைபற்றி அதனைக்கடலாகவும் உருவகஞ்செய்தார். அன்பாவது-மனைவியர் கணவன் தாய் தந்தை புதல்வர் முதலிய சுற்றத்தின் கண்ணும் மகிழ்ச்சி நிகழ்தலிற் பிணிப்பித்து நிற்கும் உள்ளநெகிழ்ச்சி. இவ்வழகுக்கு மேலான அழகு இல்லை யென்பதும் இவ்வழகைக்கண்டு காமுற்ற பாதகனால் தீண்டப்பட்டு மாசுபெறுத லில்லாததென்பதும் விளங்க 'பொற்பினுக்கணியினை' என்றார். இனிப்பிராட்டி சிறைவைக்கப் பட்டாலும் தன் உறுதியினால் கற்பு நிலைவழாமலிருந்து மரபுக்குப் புகழையுண்டாக்கு வாளாதலின் 'புகழின் சேக்கையை' என்றார். இராவணன் குலமனைத்தும் நாசமாதற்குப் பிராட்டியின் கற்பே காரணமாயிருக்கின்றதென்பது தோன்ற 'கற்பினுக்கரசியை' என்றார். ஈண்டு, "அரக்கரென்னுங், கான்சுட முளைத்த கற்பின் கனலியைக் கண்ணிற் கண்டான்" எனக்கீழ்க்கூறியது நோக்கற்பாலது. (௨௬)

தூங்கலி னுருவினைச் சொல்லி னும்பரு
மோங்கிய வழகினா ளுருவங் காண்டலு
மேங்கினன் மனநிலை யாதென் றுன்னுவாம்
வீங்கின மெலிந்தன வீரத் தோள்களே.

இ-ள். தூங்கலின் உருவினைச் சொல்லின் - சோம்பலையுடைய ரூபத்தைக்கூறினால், உம்பரும் ஓங்கிய அழகினாள் - தேவலோகப் பெண்களைப்பார்க்கிலும் சிறந்த அழகினையுடையாளாயினாளது, உருவம் காண்டலும் - ரூபத்தைக்கண்டவளவில், ஏங்கினன் - ஏக்கமுற்ற இராவணனது, மனம் நிலையாது என்று உன்னுவாம் - மனத்தின் தன்மையானது எத்தன்மைத்தென்று நினைப்பாம், வீரம் தோள்கள் - (அவனுடைய) வலிமைபொருந்திய புயங்கள், வீங்கின - (முதலிற்) பருத்தன, மெலிந்தன - (பின்னர்) இளைத்தன.

குறிப்பு—விசனத்தால் பிராட்டியின்முகம் வாடியிருந்தமைபற்றி 'தூங்கலினுரு'வென்று கூறப்பட்டது. பிராட்டியினது காட்சிகண்ட சந்தோஷத்தாலும் தடையின்றி யெடுத்துச் செல்லுதற்குத் தனித்திருப்பதா லேய்ந்த மகிழ்ச்சியாலும் வீங்கினபுயங்கள் பின்னாகக் காமவிகாரத்தால் மெலிந்தன எனக். "ஒருகணத் திரண்டு கண்டே னொளிமணி யாழியான்ற, திருமுலைத் தடத்து வைத்தாள் வைத்தலுஞ் செல்வ நின்பால், விரகமென் பதன்கண் வந்த வெங்கொழுந் தீயினால்வெந், துருகி யதுடனே யாறி வலித்தது குளிர்ப்புள் ளூற" என்னுஞ் சுந்தரகாண்டச் செய்யுளை யீண்டு நோக்குக. (௨௭)

புன்மயிர்ச் சாயலி னெழிலிற் பூந்துறைச்
சுனைமடுத் துண்டிசை முரலுந் தும்பியி

னினமெனக் களித்துள தெனப தென்னவன
மனமெனக களித்தது கண்ணின மாலையே.

இ - ள். அவன கண்ணினமாலை - அந்த இராவணனுடைய கண்களின் வரிசையானது, புனம மயில சாயலின எழிலில் - காட்டிலுள்ள மயிலபோன்ற சாயலாளாகிய சீதாபிராட்டியினது அழகினிடத்தே, பூநறை சுனைமடுத்து உண்டு - புஷ்பங்களிலுள்ள தேனினது ஊற்றினிடத்தே வாயவைத்து உண்டு, இசைமுரலும - இராகமபாடுகினற, தும்பியின இனம என - வண்டுக்கூட்டங்களைபபோல, களித்து உளது எனபது என - சந்தோஷித்திருக்கின்றது என்று கூறுவதால யாதுபயன? அவன மனம என களித்தது - அவனது மனங் களிப்புற்றதுபோலக் களிப்பினையடைந்தது,

குறிப்பு.—"சாயன மென்மை" என்த் தொல்காப்பியனார் பொதுப்படச் சூத்திரஞ்செய்தது ஐமபொறியால நுகரு மென்மையெல்லா மடங்கற்கு. "மயிலன்ன சாயல," "சாயன மார்பு" என ஒளிக்கும் ஊற்றிற்கும வந்தன, பிறவுங்காணக. சாயல ஆகுபெயராயப பிராட்டியை யுணர்த்தியது, "எங்கொத திருந்த முலையினனமிர்தன்ன சாயல், வேந்தற் கமுதாய விளையாடுதற கேது வாமே" என்னுஞ் சிந்தாமணியின பதிகச்செய்யுளில சாயல் பெண்ணுக்கு ஆகுபெயரானமை காணக. சுனை-நீருற்று, நீரிருக்குமிடம தேனின மிகுதிதோன்ற 'நறைச்சுனை' எனப்பட்டது. இனி, சுனையிலுள்ள பூநறை மடுத்துண்டு எனக் கோடலுமாம இராவணனுடைய மனமானது ஈண்டு மிகவுங் களிப்புற்றுக் களித்ததனமையி லுயர்ந்தமைபற்றியும எப்போதும் அவவழகைநினைந்து விடாது களிக்குமெனபது பற்றியும அம்மனத்தை உவமைப்பொருளாக்கினார். வண்டினங்கள் மதுவுண்கையினமட்டுஞ் சிறிது களித்துப் பினனா மலரைமறந்தேகுஞ் செயலினவாகலின அவற்றை யிகழ்ந்தார் இனி, சூர்ப்பநகை பிராட்டியினழகை யெடுத்துக் கூறியகாலத்து அவன மன மெவ்வாறு களிப்புற்றதோ அதுபோலக் காட்சிகண்ட கண்களுங் களிப்புற்றன என விரித்தலுமாம. (உஅ)

சேயிதழத தாமரைச் சேக்கை நீங்கிவண
மேயவண மணிநிற மேனி காணுதற
கேயுமே யிருபதிங் கிமைப்பி லாட்டங்க
ளாயிர மிலலையென றலல லெய்தினான.

இ - ள் சே இதழ் தாமரை சேக்கை நீங்கு - சிவந்த இதழ்களையுடைய தாமரைமலராசனத்தை விட்டு, இவண்மேயவள் - இங்கு (வந்து) சேர்ந்தவளது, மணிநிறம மேனிகாணுதற்கு - (செய்ய மாணிக்கமெனனும) இரத்தினம போலும நிறத்தினையுடைய இத்திரு மேனியைப்பார்ப்பதற்கு, இருபது எயுமே- (இமைப்புள்ளனவாகிய கண்கள்) இருபதும பொருந்துமோ ? [பொருந்தா], இமைப்பு இல நாட்டங்கள ஆயிரம் இலலை என்று - இமைத்தலில்லாத கண்கள் ஆயிரம இல்லையே என்று, அலலல எய்தினன - துன்பத்தையடைந்தான

குறிப்பு —எயுமே, ஏகாரம - எதிர்மறை. இங்கு - அசை. (உக)

அரைகடை யிட்டமுக கோடி யாயுவும
புரைதபு தவத்தினயான் படைத்த போதுமே

நிரைவளை முன்கையிற் நின்ற நங்கையின
கரையறு நனனலக கடறகென றுனனினான்.

இ - ள. நிரைவளை முனகை - வரிசைபொருநதிய வளையல்களையணிநத முன் கையினையுடையாளாகிய, இ நினற நஙகையின் - (இஙகே) நினற இரசசிறபபு டைய பெணணினது, கரை அறு - எலலை அற்ற, நல நலம கடறகு - நலல இனப மாகிய கடலைககடககும பொருட்டாக, புரைதபுதவததின - குறறமறறதவததினாலே, யானபடைதத - நான அடைநத, அரைகடை இடட முககோடி ஆயுவும - அரை எனனும எணணைககடையிற சோதத மூனறுகோடி (மூனறரைககோடி) வயதும, போதுமே - போதுமோ? [போதாது], எனறு உன்னினான - எனறு நினைததான.

குறிபபு — நிரைவளை முனகை - அனமொழிததொகை முனகை - முனனங கை, கெலவடககை, முழங்கையின கீழிருககும கை (௫௦)

தேவரு மவுணருந தேவி மாரொடுங
கூவலசெய தொழிலினா குடிமை செயதிட
மூவுல கமுமிவா முறையி னாளயா
னேவலசெ துயகுவெ னினியென றுனனினான.

இ - ள தேவரும - தேவாகளும், அவுணரும் - அசுராகளும, தேவிமாரொ டும - (தம) மனைவிகளோடும, கூவலசெய தொழிலினா - கூபபிடபபடுகினற வே லைககாராகளாய, குடிமை செயதிட - குடிமககளின தொழிலைசசெயது வாழும படி, மூவுலகமும - திரிலோககளையும், இவா —, முறையின ஆள - நீதியாக அர சாடசிசெயய, யான - நான, இனி —, ஏவல செயது உயகுவென - (இவா எனககு) ஏவும வேலையைசசெயது வாழவேன, எனறு உனனினான - எனறு நினைததான. ()

உளைவுறு துயாமுகத தொளியி தாமெனின
முளையெயி றிலஙகிடு முறுவ லெனபடுங
தளையவிழ் குழலிவட கணடு தநதவெ
னிளையவட களிபபெனென னரசென றெணணினான.

இ - ள. உளைவு உறு துயா முகதது ஒளி இது ஆம எனின - மனோவாலுற ற கிலேசமபொருநதிய முகததினது பிரகாசமே இததனைச சிறபபினது ஆகும எனறு கூறினால, முளை எயிறு இலஙகிடும முறுவல எனபடும - தோனறும பறகள ஒளிசெய்கினற நகைப்பு எததனமைததாகுமோ? தளை அவிழ குழல இவள கணடு தநத - கட்டவிழநத கூநதலையுடைய இபபெணணைபபாாதது (வநது எனககுக) கொடுதத, என இளையவடகு - எனது தஙகையாகிய சூாப்பநகைககு, என அரசு - எனது அரசினை, அளிப்பென என்று எணணினான - கொடுபபேன எனறு நினைத தான

குறிப்பு.— உறுதுயர் - மிகக துயாமுமாம். உளைவால துயருறுமுகம் எனககொ ள்ளலுமமையும. முளை எயிறு - மகிழவுவநதகாலதது வெளிபபடும பறகள இனிமு ளைபோலச சிறிது வெளிப்பட்ட பறகளெனறு புனனகைக் குறிபபாககலு மமை யும தளையவிழகுழல எனறது நாயகன் பிரிவைக்குறித்தற்கு. இப்பெண்மணியைக்

கண்டேவந்து சொன்ன உபகாரத்துக்குப் பிரதியுபகாரமாகத் தன் ஆசையைத் தன் தங்கைக்குக்கொடுக்க நினைத்தானென்க. (கஉ)

ஆணுடையா னனையன வுன்னி யாசைமேன்
மூண்டெழு சிந்தனை முறையி லோனறனைக
காண்டலுங் கண்ணினீர் துடைத்த கற்பினா
ளீண்டெழுந் தருளுமென் றினைய கூறினாள்.

இ - ள். ஆணுடையான - அவ்விடத்து முனிவேடங்கொண்டு நின்றவனாகி, அனையன உன்னி - அத்தன்மையான விஷயங்களை நினைத்து, ஆசைமேல மூண்டு எழு சிந்தனை - ஆசையானது மேலே யதிகரித்து எழுகின்ற மனத்தினையுடைய, முறையிலோனதனை - ஒழுங்கற்றராவணனை, காண்டலும - கண்டவளவில், கண்ணின நீர் துடைத்த கற்பினாள - (தன) கண்களிலிருந்தொழுகும் நீரைத்துடைத்துக் கொண்ட கற்பினையுடைய சீதாபிராட்டியார், ஈண்டு எழுந்தருளும் என்று - இவ்விடத்தே (நீவிர்) எழுந்தருளு வீராக என்று, இனைய கூறினாள - இத்தகைய உபசாரவார்த்தைகளைச் சொன்னாள்

குறிப்பு —ஆணுடையான - அவ்விடத்தான (கங)

ஏத்தின ளெய்தலு மிருத்தி ரீண்டென
வேத்திரத் தாசனம விதியி னல்கினாள்
மாத்திரி தண்டயல வைத்த வஞசனும
பூத்தொடா சாலையி னிருந்த போழ்தினே.

இ - ள். ஏத்தினள - இங்ஙனம உபசாரமொழிகளைப் புகன்ற சீதாபிராட்டி, எய்தலும - (சுட்டிய இடத்தை அவன) அடைந்தவளவில், ஈண்டு இருத்திர என - இவ்விடத்தில வீற்றிருக்கக் கடவீர என்று, வேத்திரத்து ஆசனம - பிரம்பாற்செய்யப்பட்ட ஓ ராசனத்தை, விதியின நலகினாள - (முனிவரை உபசரிக்கவேண்டிய) விதியின்படி யளித்தாள, மா திரி தண்டு - பெருமைபொருந்திய திரிதண்டத்தை, அயல்வைத்த - (தான வீற்றிருந்த இடத்துக்குப்) பக்கத்தேவைத்த, வஞசனும் - பொய்வேடத்தானாகிய அவ்விராவணனும, பூ தொடா -மலாகளதொடாநத [புஷபங்களா லலங்கரிக்கப்படாத], சாலையின இருந்த போழ்தின - அந்தப் பனனசாலையில இருந்த பொழுதில. (கச)

நடுங்கின மலைகளு மரனு நாவவிந
தடங்கின பறவையும விலங்கு மஞசின
படங்குறைந தொதுங்கின பாமபும பாதகக
கடுந்தொழி லரக்கனைக காணுங கண்ணினே.

இ - ள். நடுங்கின மலைகளும மரனும் - நடுங்கிய மலைகளும மரங்களும, நா அவிந்து அடங்கின பறவையும விலங்கும - பேசசொழிந்து அடங்கிய பறவைகளும மிருகங்களும், அஞசின - பயந்தன, பாமபும - நாகங்களும, பாதகம - கொடிய பாவமாகிய, கடுந்தொழில - கொடிய செயலையையுடைய, அரக்கனை - இரா

கக்தனாகிய இராவணனை, காணும் கண்ணின - பார்க்கின்ற கண்ணினால், படம் குறைந்து - படத்தைச்சுருக்கிக்கொண்டு, ஒதுங்கின - விலகிப்போயின.

குறிப்பு —இவ்விராவணன் வரும்போது இவனது வேகத்துக்காற்றாமல் மலைகளும் மரங்களும் நடுங்கினவென்றும், காமுகனாயப் பட்சிகளின் தொனியில் வெறுப்புற்றதன்மையாலும், தன்னுயிர்போல் மன்னுயிரைப்பாவிக்கும் தயவில்லாத தறுகண்ணாளனாதலாலும் மாரீசனை மானுருக்கொள்ளச் செய்து மானினத்துக்கு ஓர் பழி யுண்டாக்கியதாலும் பறவையும் விலங்கும் காவவிந்து அடங்கின என்றுங் கூறுக இத்தன்மையாய நடுங்கின மலைகளுமரங்களும் அடங்கிய பறவையும் விலங்கும் இவ்விராவணனது வஞ்சகத்தால் என்னகேடு விளையுமோ வென்றஞ்சின வெனக் கட்செவியாகிய நாகங்கள் இக்கொடியோனைப்பார்த்து வருந்திய கண்களை மீண்டுங் காதெனக்கொண்டு இவன் கூறுங்கொடியவார்த்தைகளைக்கேட்டு இன்னலுறுதலினும் கேளாதொழிதலே நன்றெனக்கருதிச் சென்றனவென்பது தோன்ற 'காணுங்கண்ணின் ஒதுங்கின' என்றார். முதலிரண்டடிகளிற் பெயரெச்சமாகக்கொண்ட நடுங்கின, அடங்கின என்பவற்றை வினைமுற்றாகக்கொண்டு கூறுதல் அமையும் எனினும் அது இத்துணைச்சிறப்பிற்றன்றாம். (௫௫)

இருந்தவன் யாவதிவ் விருக்கை யிங்குறை
யிருந்தவ னியாவனீ ராரை யென்றலும்
விருந்தின ரிவ்வழி விரகி லாரெனப்
பெருந்தடங் கண்ணவள் பேசன் மேயினாள்

இ - ள் இருந்தவன் - (வேதிரத்தாசனத்து வீற்)றிருந்த கள்ளத் தவவேடராவணன், இ இருக்கையாவது -இந்த இருப்பிடமேது? இங்கு உறை இரும் தவன் யாவன் - இவ்விடத்து வசிக்கின்ற பெரிய தவத்தினையுடைய முனிவன் எவன்? நீர் யார் ஐ - நீர் எவருடைய அரசு? என்றலும் - என்று வினவியவளவில், இ வழி விருந்தினர் - இவ்விடத்திலிருக்கிற இப்புதியவர், விரகு இலார் என - அறிவில்லாதவரென்று, பெரும் தடம் கண்ணவள் -பெரிய விசாலமான கண்களையுடைய சீதாபிராட்டி, பேசல்மேயினள் - பேசத்தொடங்கினள்,

குறிப்பு —விரகு இலார் -(தம்மை இத்தன்மையார் என்று) அறிந்திலராதவர், விரகு - அறிவு, "விரகறியாளர்" [புறப்பாட்டு ௨௬௬] அறிவில்லாத மூடனென்பப் பொருள் கொள்ளுமாறும் நின்றது வியக்கற்பாலது. இனி, விரகு விரகம் என்பதன் விகாரமெனக்கொண்டு காமமுதலியவை யில்லாதவர் என்னலுமாம். நாணித் தலைவணங்கி நில்லாது அவனைச் செம்மையாயப் பார்த்துப் பேசினாளென்பார் 'பெருந்தடங் கண்ணவள் பேசன் மேயினாள்' என்றார். நீர் ஆரை என்பதற்கு நீவிர் எவரெனப் பொருள்கூறி ஐ சாரியை யென்றலுமொன்று . (௫௬)

தயரதன் றொல்குலத் தலைவன் றம்பியோ
டியாகுலத் தன்னைசொல் லுச்சி யேந்தினா
னயாவில திவ்வழி யுறையு மன்னவன்
பெயரினைத் தெரிகுதிர் பெருமை யீரென்றாள்.

இ - ள், பெருமையீர் - பெருமை பொருந்தியவரே! தயரதன் தொல்குலம் தலைவன் - தசரதச்சக்கரவர்த்தி யினது பழமையான (சூரிய) குலத்துக்கு முதன்

மையானவர், தம்பியோடு - (தனது) தம்பியாகிய இலட்சுமணனுடனே, உயர் குலத்து அன்னைசொல் - உயர்ந்த (கேகயர்) குலத்திற் பிறந்த (சிறிய) தாயாரின் வார்த்தையை, உச்சி எந்தினன் - தலையில் தாங்கினவர், அயர்வு இலது - சோர்வு இல்லாமல், இ வழி உறையும் - இவ்விடத்தில் தங்கியிருக்கின்ற, அன்னவன் பெயரினை - அத்தன்மையானவரது திருநாமத்தை, தெரிகுதிர் என்றாள் - அறிவீர் என்று கூறினாள்.

குறிப்பு—இவர் தம்மை யறியாதாராயினும் தம்மைச்சரணமடைந்த முனிவர் கூட்டத்தைச்சேர்ந்தவராதலால் தனது நாயகன் பெயரைக் கேள்விப்பட்டிருப்பார் என்னுந்துணிபினாலும், மனைவிதன் கணவன்பெயரை வாய் கூசாது எடுத்துக்கூறுதல் அபசாரமாகலானும் 'அன்னவன் பெயரினைத்தெரிகுதிர்' என்றாள். ()

கேட்டனென் கண்டிலன் கெழுவு கங்கைநீர்
நாட்டிடை யொருமுறை நணணி னேனமலர்
வாட்டடங் கண்ணினீர் யாவன் மாமகள்
காட்டிடை யருமபகல் கழிக்கின் றீரென்றான்.

இ - ள் கேட்டனென் - (நீர் சொன்னவாகளைக்) கேள்வியுற்றேன், கண்டிலன் - பார்த்தேனில்லை, கெழுவு கங்கைநீர் நாடு இடை - நிறைந்த கங்கையாற்றினது நீர் சூழ்ந்த கோசலநாட்டினகண், ஒருமுறை நணணினேன் - ஒருதரம் சேர்ந்தேன், மலர் வாள் தடம் கண்ணினீர் -குவளைமலரும் வாளாயுதமும் போன்ற விசாலமான கண்களையுடையவரே! காடு இடை - காட்டினகண், அருமபகல் கழிக்கின்றீர் - அருமையான நாள்களைக்கழித்து வருகின்றீர், நீர் யாவன் மாமகள் - நீர் எவனுடைய பெருமைபொருந்திய குமாரத்தி? என்றான் - என்று வினவினான்.

குறிப்பு—கீழ்க்கவியிற் பிராட்டி தன்னை ஸ்ரீராமபிரானது மனைவியென்று தன் வாயகொண்டு கூறாததால் அவளை நீர் இவவிருக்கைபி விருப்பவனது மனைவியோ? என்று துணிந்து வினவுதல் கூடாமைபற்றியும், அன்னியனுடைய மனைவியெனபதற்குத் தனமனம் இடங்கொடாமை பற்றியும் அங்ஙனம் வினவுதலை யொழித்து நீர் யாவனமாமகளென்று வினவினான். இவன் இராமாவதாரத்துக்கு முன்னிட்டகாலத்திற் கோசலைநாட்டைக் கண்டானெனபது தோன்றக் கேட்டனென் கண்டிலன் எனபவற்றின் பினனே நணணினேன் எனபதைவைத்துக் கூறினான். ()

அனகமா நெறிபட ரடிக ளும்மலா
னினைவதோர் தெய்வமவே றிலாத நெஞ்சினன்
சனகன்மா மகள்பெயர் சனகி காகுத்தன
மனைவியா னென்றனள் மறுவில கறபினாள்.

இ - ள் மறு இல கறபினாள் - குற்றமில்லாத கற்பினையுடைய சீதாபிராட்டி, அனகம் மா நெறிபடர் அடிகள் - பாவமில்லாத பெருமை பொருந்திய சன்மார்க்கத்தில் நடக்கின்ற முனிவர்களாகிய, நும் அலால - உங்களையல்லாமல், நினைவது ஓர் தெய்வம் வேறு இலாத நெஞ்சினன் - நினைப்பதாகிய ஒப்பற்ற தெய்வம் வேறே இல்லாத மனத்தினையுடையானாகிய, சனகன் மாமகள் - ஜனகமகாராஜனுக்கு (நான்) பெரியமகள், பெயர் சனகி- (எனது) பெயர் ஜானகி, யான் காகுத்தன மனைவி - நான் காகுத்தனுக்குப் பாரி, என்றனள் - என்று கூறினாள்.

குறிப்பு — அனகம் - அகமில்லாமை. அடிகள் - கடவுள், குரு, தலைவன், முனிவர், மூத்தோன் ஜனகமகாராஜனது பெண்மக்கள் நால்வருள் மூத்தாளாதல்பற்றி 'மாமகள்' என்றான். தன்னைப்புகழ்ந்து கூறுளாதலின் யா என்றற்கு அழகு மேன்மை யென்னும் பொருள்களைக் கூறுதல் பொருந்தாது. காகுத்தன் - ககுஸ்தன் என்னும் சூரியகுலத்தரசன் மரபிற்றோன்றியவன், தத்திதாந்தம். (௬௬)

அவ்வழி யனையன வுரைத்த வாயிழை
வெவ்வழி வருந்தினிர் விளைந்த மூப்பினி
ரிவ்வழி யிருவினை கடக்க வெண்ணினி
ரெவ்வழி நின்றுமிங் கெய்தி னீரென்றாள்.

இ - ள். அவ்வழி - அந்த முறைமையில், அனையன உரைத்த - அத்தன்மையான மொழிகளைக் கூறிய, ஆயிழை - ஆராய்ந்த ஆபரணங்களையுடையாளாகிய சீதாபிராட்டி, வெவ்வழிவருந்தினிர் - வெவ்விய (காட்டு)வழியில் (நடந்து) வருந்தமுற்றீர், விளைந்த மூப்பினிர் - முதிர்ந்த மூப்புப் பருவமுடையவராயினீர், இவ்வழி இருவினை கடக்க எண்ணினிர் - இந்தத் தவமார்க்கத்தால் (நல்வினை தீவினை என்னும்) இரண்டு வினைகளையுங் கடப்பதற்கு எண்ணமுற்றீர், எவ்வழி நின்றும் இங்கு எய்தினிர் என்றாள் - நீர் எவ்விடத்திலிருந்து இவ்விடத்தையடைந்தீர் என்று கூறினாள்.

குறிப்பு — ஆயிழை - அன்மொழித்தொகை. இருவினை - பெரியதீவினையுமாம்.

இந்திரற் கிந்திர னெழுத லாகலாச்
சுந்தர னான்முகன் மரபிற் றோன்றினா
னந்தரத் தோடெவ் வுலகு மாள்கின்றான்
மந்திரத் தருமறை வைகு நாவினான்.

இ - ள். இந்திரற்கு இந்திரன் - இந்திரனுக்கு இந்திரனாயினவன்; எழுதல் ஆகலாச் சுந்தரன் - (ஓவியத்துறைகைபோயவராலும்) சித்திரித்தற்கியலாத அழகினையுடையான், நான்முகன் மரபில் தோன்றினான் - நான்கு முகங்களையுடைய பிரமதேவனது வமிசத்திற் பிறந்தவன், அந்தரத்தோடு எ உலகும் ஆள்கின்றான் - தேவலோகத்துடன் எந்தவுலகத்தையும் ஆண்டுவருகின்றவன், மந்திரத்து அருமறை வைகும் நாவினான் - மந்திரங்களோடுகூடிய அரிய வேதங்கள் தங்கியிருக்கின்ற நாவினையுடையான்.

குறிப்பு — "அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க், கிவ்வுலக மில்லாகி யாங்கு" என நாயனார் கூறியவாறு பொருட்செல்வமே இவ்வுலகவின்பத்திற்கு முதன்மையாயிருப்பதாலும், "எண்ணிப்பத் தங்கை யிட்டா லிந்திரன் மகளு மாங்கே, வெண்ணெய்க்குன் றெரியுற் றாற்போன் மெலிந்துபின் னிற்கு மன்றே" என்ற திருத்தக்கதேவர் கூறியவாறு பெண்கள்மனம் பொருளை விரும்புமாதலானும் பிராட்டிக்குப் பொருளாசை விளைவிக்க 'இந்திரற் கிந்திரன்' என்றான். "தந்தையாயினுந் தம்மிற் றகவுடனே யொருவயிற்றிற் சார்ந்தா ரேனு, மைந்தராயினுமிகவும் வனப்புடையா ராமாயின் மடநல்லார்தஞ், சிந்தைகடந்திடுமே" என்றவாறு அயலான் வனப்பினனாயின் அவன்மேல் மடவார்க்குச் சிந்தைசெல்லுமென்று கருதி 'எழுதலாக

லாசகாதான்' என்றான் ராக்ஷஸனென்று இகழாது, தனது உயர்குலத்தானென்று கருதுமாறு 'நான்முகன் மரபிற் றோன்றினான்' என்றான் உள்ளநாட்டைத் தம்பிக்குக் கொடுத்துவிட்டு வறியனாய்க் காட்டில் முனிவேடங்கொண்டு திரிபவனிலும் எல்லாவுலகுக்கும் அரசனாயிருப்பவன் சிறப்புடையானாகு மெனப்படு தோன்ற 'அந்தரத் தோடும்மெவ் வுலகு மாள்கின்றான்' என்றான். இத்தனை பெருமையோடு சிறந்த கல்வியழகுமுடையான் என்பான் 'அருமறை வைகு நாவினான்' என்றான். (௪௧)

ஈசனாண் டிருந்தபே ரிலங்கு மால்வரை
யூசிவே ரொடும்பறித் தெடுக்கு மூற்றத்தா
னாசைகள் சுமந்தபே ரளவில் யானைகள்
பூசல்செய் மருப்பினைப் பொடிசெய் தோளினான்.

இ-ள் ஆண்டு - அக்காலத்தில், ஈசன் இருந்தபோ இலங்கு மால்வரை - சிவபிரான் வீற்றிருந்த பேர் விளங்குகின்ற பெரிய கைலாசகிரியை, ஊசிவேரொடும் - ஊசிபோலுள்ள கூரியவேர்களோடும் [அடியோடு], பறித்து எடுக்கும் ஊற்றத்தான் - பறித்து எடுக்கும் வலிமையையுடையான், ஆசைகள் சுமந்த - திசைகளைச்சுமந்த, பேர் - பெருமையில், அளவு இல் - அளவில்லாத, யானைகள் - யானைகளினுடைய, பூசல் செய்மருப்பினை - போர்செய்த கொம்புகளை, பொடிசெய் தோளினான் - தூளாகச்செய்த புயங்களை யுடையான்

குறிப்பு — ஈசனாண்டிருந்த - சிவபிரான் ஆட்சிசெய்திருந்த என்னலுமமையும். பேர்—பெயர் பேர்—பெருமையின் திரிபு பேரளவில் யானை - மிகப்பெரிய யானை. (௪௨)

சிறப்பவர் கடைத்தலை நிறைந்து தேவரே
சொற்படு மற்றவன் பெருமை சொல்லுங்கால்
கற்பக முதலிய நிதியங் கையன
பொற்பக மானநீ ரிலங்கைப் பொன்னகர்

இ-ள். மற்று - மற்றும், அவன் பெருமைசொல்லுங்கால் - (முன்னாகக்கூறிய) அவனுடைய பெருமையைச் சொல்லுமிடத்து, சொல் படும் - வார்த்தைவிரியும், பொற்பு அகம் ஆனநீர் இலங்கை பொன் நகர் - அழகுக்கு இருப்பிடமாகிய கடல் சூழ்ந்த இலங்கையாகிய செல்வம் பொருந்திய நகரத்தில், கடைத்தலை - (அவனுடைய) கடைவாசலில், நிறைந்து சிறப்பவர் தேவரே - நிறைந்து சிறப்பவர்கள் தேவர்களேதாம், கற்பகம் முதலிய நிதியம் கையன - கற்பகமுதலாகிய நிதிகள் (அவன்) கைவசப்பட்டுள்ளன. (௪௩)

ஏனகை திலோத்தமை முதல வேழையா
வானகந் துறந்துவந் தவன்றன் மாட்சியா
லூனமி லடைப்பைகால் வருட லொண்செருப்
பானவை முதற்றொழி லவர தாகுமே.

இ-ள். ஏனகை திலோத்தமை முதல ஏழையர் - மேனகை திலோத்தமை முதலாகிய (தேவலோகநடனப்) பெண்கள், வானகம் துறந்து வந்து - விண்ணுல

கத்தை நீங்கிவந்து, அவன் தன்மாட்சியால் - அவனுடைய மகத்துவத்தினாலே, ஊனம் இல் - குறைபாடில்லாத, அடைப்பை - அடைப்பை (யேந்திநிற்றலும்), கால் வருடல் - காலைத்தடவிப் பிடித்தலும், ஒண் செருப்பு ஆனவை - அழகிய செருப்பானவைகளைச் சுமத்தலுமாகிய, முதல் தொழில் - முதன்மையாகிய வேலைகள், அவரது ஆகும் - அவர்களுடையன ஆகும்.

குறிப்பு.—ஏனைகை—மேனகை, முதல் ஏழையர் என்றது - அரம்பை உருப்பசியென்னும் இவரை "உருப்பசி யுடைவா ளெடுத்தன டொடர மேனகை வெள்ளடை யுதவச், செருப்பினைத் தாங்கித் திலோத்தமை செல்ல வரம்மையர் குழாம் புடை சுற்ற" என்னும் சுந்தரகாண்டச்செய்யுள் ஈண்டு நோக்கற்பாலது. அடைப்பை - வெற்றிலைப்பை, அடை - இலை அவரதாகும் எனவே ஏனையோரால் செய்யா என்பதாயிற்று. (௪௪)

சந்திர னிரவியென் பவர்க டாமவன்
சிந்தனை வழிநிலை திரிவர் தேசுடை
யிந்திரன் முதலிய வமரர் ஈண்டவன்
கந்தடு கோயிலின் காவ லாளரே.

இ - ள். சந்திரன் இரவி என்பவர்கள் - சோமன் சூரியன் என்னும் இவர்கள், அவன் சிந்தனைவழி - அந்த ராவணனுடைய மனநினைப்பின்பிரகாரம், நிலை திரிவர் - தங்கள் இயற்கைநிலைமை மாறுவார்கள், தேசு உடை - அழகினையுடைய, இந்திரன் முதலிய அமரர் - இந்திராதி தேவர்கள், ஈண்டு - இந்த இலங்காபுரியில், அவன் - அவனது, கம் தடு கோயிலின் காவல் ஆளர் - மேகமண்டலத்தை முட்டுகின்ற (உன்னதமான) ராஜமாளிகையில் காக்கும் தொழிலைச் செய்யும் ஆள்களாவார்கள்.

குறிப்பு.—கந்து அடு கோயில் எனக்கொண்டு - கட்டுத்தறியடுத்த கோயில், என்னலுமாம், [யானைகளைக் கட்டியிருக்கிற இடம்]. கோ + இல் - கோயில், இலக்கணப்போலி. (௪௫)

பொன்னக ரத்தினும் பொலங்கொ ணாகர்தந்
தொன்னக ரத்தினுந் தொடர்ந்த மாநிலத்
தெந்நக ரத்தினு மினிய வீண்டவ
னன்னக ரத்தன நவையி லாதன.

இ - ள். பொன் நகரத்தினும் - பொன்மயமான (தேவர்வசிக்கும்) நகரத்திலும், பொலங்கொள் நாகர்தம் தொல் நகரத்தினும் - அழகுபொருந்திய சர்ப்பசாதியாருடைய பழமையாகிய நகரத்திலும், மாநிலத்து தொடர்ந்த - பெரிய பூமியில் தொடர்ச்சியாயுள்ள, எ நகரத்தினும் - எந்த நகரங்களிலுமுள்ள, இனிய - இனிமையானவைகள் [அபூர்வமான பொருள்கள்], ஈண்டு - இப்பொழுது, அவன் நல் நகரத்தன - அவனுடைய நல்ல நகரமாகிய இலங்கையிலுள்ளன, நவை இலாதன - (அவைகள்) குற்றமில்லாதவைகள்.

குறிப்பு.—நகரம் - பெரிதான பட்டினம், ராஜமாளிகையுமாம். (௪௬)

தாளுடை மலருளான றந்த வந்தமி
ஞளுடை வாழ்க்கைய ஞரி பாகத்தன
வாளுடைத் தடக்கைய்ன வாரி வைத்தவெங்
கோளுடைச் சிறையினன் குணங்கண் மேன்மையான.

இ - ள். தாள் உடை மலர் உளான் தந்த - பூந்தண்டினையுடைய தாமரைமல ரிலிருப்பவனாகிய பிரமதேவன் கொடுத்த, அந்தம் இல் நாள் உடை வாழ்க்கையன் - முடிவில்லாத ஆயுள் நாளினையுடைய வாழ்வினையுடையவன், நாரிபாகத்தன் வாள் உடை தடம் கையன் - உமையவளை யிடப்பாகத்தில் வைத்துள்ளவனாகிய சிவபிரா னது வாளையேந்திய பெரியகையினை யுடையவன், வாரிவைத்த - பிடித்து அடை த்துவைத்த, கோள் உடை - நவக்கிரகங்களையுடைய, வெம் சிறையினன் - கொ டிய சிறைச்சாலையையுடையவன், குணங்கள் மேன்மையான் - சகலநற்குணங்களா லும் மேன்மையையுடையவன்

குறிப்பு — நாரி - பெண் (௬௭)

வெம்மைதீ ரொழுக்கினன் விரிந்த கேள்வியன்
செம்மையோன் மன்மதன் றிகைக்குஞ் செவ்விய
னெம்மையோ ரனைவரு மிறைவ ரென்றெணு
மும்மையோர் பெருமையு முற்றும் பெற்றியான்.

இ - ள். வெம்மைதீர் ஒழுக்கினன் - வெவ்வியதன்மைநீங்கிய ஒழுக்கத்தையு டையவன் [நல்லொழுக்கமுடையவன்], விரிந்த கேள்வியன் - மிகுந்த (தருமநூல் களி னுட்பங்களையெல்லாம்) கேட்டுணர்ந்தவன், செம்மையோன் - நடுவுநிலைமையு டையவன், மன்மதன் திகைக்கும் செவ்வியன் - மன்மதன் மயங்குகின்ற பருவத் தையுடையவன், எம்மையோர் அனைவரும் - எம்மனோர்களாகிய முனிவ ரனைவரும், இறைவர் என்று எணும் - கடவுளர்களென்று கருதுகின்ற, மும்மையோர் - (படைத்தல், அளித்தல், அழித்தல் எனனும்) மூன்று தன்மைகளையுடையாராகிய திரிமூர்த்திகளுடைய, பெருமையும்—, முற்றும்-முடிவாகின்ற, பெற்றியான் -தன் மையையுடையவன்

குறிப்பு.—செம்மை - நடுவுநிலைமை, "ஞெமன்கோ லன்ன செம்மை தாங்கி" [மதுரைக் காஞ்சி 491] அனைவரும் - எல்லாரும் இறைவர் -எப்பொருளினும் தங் கியிருப்பவர் எம்மையோர் - எமது தன்மையையுடையோர். சிவபிரானிடத்துத் தனது வல்லமையைக்காட்டி மன்மத னுருவிழந்தான், இவ்விராவணன் வரங்களை யடைந்தா னாதலால் 'மன்மதன் றிகைக்குஞ் செவ்வியன்' என்றான். (௬௮)

அனைத்துல கினுமழ கமைந்த நங்கைய
ரெனைப்பல ரவன்றன தருளி னிச்சையோர்
நினைத்தவ ருருக்கவு முதவ நோக்கிலன்
மனக்கினி யாளொரு மாதா நாடுவான்

இ - ள் அனைத்து உலகினும் - எல்லாவுலகங்களிலும், அழகு அமைந்த நங் கையர் - இலக்கணம் பொருந்திய சிறந்த பெண்களில், எனை பலர் - எத்தன்மை

யான பலபோ, அவன தனது அருளின் இச்சையோ - அவனுடைய அருளின் மேல விருப்பத்தையுடையாராயினாக்ள, அவா - (அங்ஙனம விருப்பமுடைய) அந நங்கையா, நினைந்து உருகவும - (தனனைக) கருதி மனங்கரையவும, உதவகோனி லன - (அவாகளுக்குத தன்னுலாகும சுகத்தைக) கொடுக்க உடனபடாமலிருக் கினறான, மனககு இனியாள - (தன) மனத்துககு இனியவளாகிய ஒரு பெண்ணி னது, ஒரு - ஒப்பற்ற, மாதா - காதலை, நாவோன - விருமபுவான

குறிப்பு — மனகரு - அததுசசாரியை யொழிந்து நினறது, "மாடக்குச சித்திர மும" எனபுழிப்போல அவன விருமபிய பெண்ணைப்பாாததாலுயினும அவனமேல தான காதலுற்றது போல அவள தன மேறகாதலுறுதலை எதிர்பாாததுககொண்டி ருக்கினறான எனபான 'மனககினி யாளொரு மாதா நாவோன' எனறான. முதன மூன்றடிகளில எலலாவுலகிலுமுளள நஙகையிற சிறந்தவரையெலலாம விருமபி லான எனறமையால மாதாகளுள ஒரு மனககினியாளை நாவோன என நானகாம அடிககுப் பொருள கூறுதல சிறப்பன்றும அங்ஙனங கூறலாமெனின் சற்றே றககுறைய்ப்பிராட்டி போலு மழகினையுடையாா பலருளரெனறேறபடும. அதனுல பிராட்டியினழகு வியப்பிற்றன்றாகு மெனபதறிக. (௪௯)

ஆணடையா னரசுவீற் றிருந்த வநநகா
வேணடியான சிலபக லுறைய வேணடினே
னீணடனெ னிருநதவற பிரிநத நெஞ்சினேன
மீணடனெ னெனறனன் வினைய முன்னுவான.

இ - ள ஆணடையான - எசமானுகிய அவன, அரசு வீற்று இருந்த - இராச சியபாரததை வகிததுப பெருமையுறறிருநத, அ நகா - அந்த இலஙகைபபட்டினத தை, வேணடி - விருமபி, யான - நான, சிலபகல உறைய - (அவவிடத்திற) சிலகா லம வசிபபதறகாக, வேணடினேன - யாசிததேனுகி, நீணடனென இருநது - (அ ஙகு) நெடுங்காலம கழித்தேனுயிருந்து, அவன பிரிநத நெஞசினேன மீணடனென எனறனன - அவனைப்பிரிநத (வலிய) மனத்தினையுடையேனுய்த திருமபினேன எனறு கூறி, வினையம உன்னுவான - (பிராட்டியின) கருத்தைக கருதுவானுயி னன. (௫௦)

வேதமும வேதிய ரருளும வெஃகலாச
சேதனை மனனுயிா தினனுந தீவினைப
பாதக வரககாதம பதியில வைகுதற
கேதுவென னுடலமு மிகையென றெணணுவீா

இ - ள. உடலமும மிகை என்று எண்ணுவீா - (முறறததுறநது) சரீரமும மிகுதி எனறு நினைககும முனிவரரே! வேதமும - வேதஙகளும, வேதியா அருளும - அவவேதஙகளைக கறறுணாநத அநதணாகளுடைய கிருபையும, வெஃகு அலா - வி ருமபுதறகலலாத, சேதனை மன உயிா தினனும - அறிவினையுடைய நிலைபெறற உயிர்களைத்தின்னுகின்ற, தீவினை - கொடியசெயகையையுடைய, பாதகம் அரககா தம பதியில - பாவஙகளிற பயிலும இராககதாகளுடைய ஊரில, வைகுதற்கு - தங குதற்கு, ஏது என - காரணம யாது?

குறிப்பு—முற்றத்துறந்த முனிவர்க்கு உடலும் மிகையென்பது "மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்கல், லுற்றார்க் குடம்பு மிகை" என்னுந் திருக்குறளாலுணர்க. (௫௧)

வனத்திடை மாதவ ரருகு வைகலிர்
புனத்திரு நாட்டிடைப் புனித ரூர்புக
நினைத்திலி ரறநெறி நினைக்கி லாதவ
ரினத்திடை வைகினி ரென்செய் தீரென்றாள்.

இ-ள். வனத்து இடை மாதவர் அருகு வைகலிர் - வனத்தின்கண் மாட்சிமைபொருந்திய தவத்தினையுடையார் பக்கத்தே தங்காதொழிந்தீர், புனம் திருநாடு இடை புனிதர் ஊர்புக நினைத்திலிர் - வயல்சூழ்ந்த சிறப்புப்பொருந்திய (கோசல முதலாகிய) நாடுகளினிடத்தே பரிசுத்தம்பொருந்தியவர்களுடைய ஊர்களினிடத்துப் பிரவேசிக்க நினையாமற்போயினீர், அறம் நெறி நினைக்கிலாதவர் - தருமமார்க்கத்தைக்கருதாதவர்களாகிய இராக்கதர்களுடைய, இனத்து இடை - கூட்டத்தில், வைகினீர் - தங்கினீர், என்செய்தீர் என்றாள் - யாதுகாரியத்தைச்செய்தீர்? என்று கூறினாள். (௫௨)

வேறு.

மங்கையஃ துரைத்தல் கேட்ட வரம்பிலான் மறுவிற் றீர்ந்தார்
வெங்கண்வா ளரக்க ரென்ன வெருவலம் மெய்ம்மை நோக்கிற்
றிங்கள்வாண் முகத்தி னாய்தந் தேவரிற் றீய ரல்ல
ரெங்களைப்போ லியார்க்கு நல்லார் நிருதரே போலு மென்றான்.

இ-ள். மங்கை அஃது உரைத்தல்கேட்ட வரம்பிலான் - சீதாபிராட்டி அவ்வார்த்தையைக் கூறுதலைக்கேட்ட ஒழுங்கில்லாத இராவணமுனிவன், திங்கள்வாள் முகத்தினாய் - சந்திரனைப்போலும் ஒளிபொருந்திய முகத்தினையுடையாய்! மறுவில் தீர்ந்தார் - குற்றமானவழியில் நடந்தவர்கள், வெங்கண்வாள் அரக்கர் - வைராக்கியத்தையும் வாளையுமுடைய இராக்கதர்கள், என்ன வெருவலம் - என்று அஞ்சமாட்டோம், மெய்ம்மைநோக்கின் - உண்மையை ஆலோசித்தால், தேவரில் தீயர் அல்லர் - தேவர்களைப்போலக் கொடியவர்கள் அல்லர், எங்களைப்போலியார்க்கு - எங்களைப்போன்றவர்களுக்கு, நிருதரே - அவ்விராக்கதர்களே, நல்லார் என்றான் - நல்லவர்கள் என்று கூறினான்.

குறிப்பு—முனிவர் வார்த்தையாடும் ஒழுங்குக்கு விரோதமாகப் பேசப் புகுந்தமையால் 'வரம்பிலான்' என்றார். மறுவில் தீர்ந்தார் - (அரக்கர்) குற்றத்தினின்றும் நீங்கினார்கள் எனப் பொருள்கோடலுமமையும். நிருதரே, ஏகாரம் - பிரிநிலை. போலும் - ஒப்பில் போலி. (௫௩)

சேயிழை யன்ன சொல்லத் தீயவர் சோதல் செய்தார்
தூயவ ரல்லர் சொல்லிற் றென்னெறி தொடர்ந்தோ ரென்றாள்
மாயவல் லரக்கர் வல்லார் வேண்டுரு வரிக்க வென்ப
தாயவ ளறிந்த தேற்றா ளாதலி னயலொன் றெண்ணாள்.

இ - ள். அன்னசொல் - (அவன்) அத்தகைய வார்த்தைகளைக் கூற, சேயிழை - செம்மையான ஆபரணங்களையுடையாளாகிய சீதாபிராட்டியானவள், சொல்லின் - சொல்லுமிடத்து, தூயவர் - பரிசுத்தமுடையவர்களாகிய, தொல் நெறி தொடர்ந்தோர் - பழைமையாகிய சன்மார்க்கத்தில் நடப்பவர்கள், தீயவர் சேர்தல் செய்தார் அல்லர் என்றாள் - கொடியவர்களைச் சேர்வுற்றவர்கள் அல்லர் என்று கூறினாள், அவள் - அச்சீதாபிராட்டி, மாயம் வல் அரக்கர் - மாயத்தொழிலில் வல்ல இராக்கதர்கள், வேண்டு உரு வரிக்கவல்லர் என்பதை - (தாம்) விரும்புகின்ற ரூபத்தை நியமிக்கவல்லவர்கள் என்பதாக, அறிதல் - அறிந்து கொள்ளுதலை, தேற்றாள் - தேறப்பண்ணிக்கொள்ளும் நுட்பமில்லாள், ஆதலின் - ஆகையால், அயல் ஒன்று எண்ணாள் - வேறொன்றும் நினையாளாயினாள்.

குறிப்பு — ஆய அவள் எனப்பிரித்து உலகமாதாவாகிய அவள் எனப்பொருள் கொள்ளுமமையும். (௫௪)

அயிர்த்தன ளாகு மென்றோ ரையுற வகத்துட் கொண்டான்
பெயர்த்தது துடைக்க வெண்ணிப் பிறிதுறப் பேச லுற்றான்
மயக்கறு முலக மூன்றின் வாழ்பவர்க் கனைய வல்லோ
ரியற்கையிற் றிரியி னல்லா லியற்றலா நெறியென் னென்றான்.

இ - ள். அயிர்த்தனள் என்று - சந்தேகமுற்றாளென்று, ஓர் ஐயுறவு அகத்துள் கொண்டான் - ஒரு சந்தேகத்தை மனத்திற்கொண்டானாகி, பெயர்த்து - மறுபடியும், அது துடைக்க எண்ணி - அச்சந்தேகத்தை நீக்கிவிடக்கருதி, பிறிது உறப் பேசல் உற்றான் - வேறுவிதமாகப் பேசத்தொடங்கினான், மயக்கு அறும் - மயக்கம் ஒழிவீராக, அனைய வல்லோர் - அத்தகைய வல்லமையையுடைய அரக்கர்கள், இயற்கையின் திரியின் அல்லால் - (யாவரும் தத்தம்) இயல்பில் மாறுபட்டால் அல்லாமல், உலகம் மூன்றின் வாழ்பவர்க்கு - திரிலோகங்களிலும் வாழ்ந்துவருபவர்களுக்கு, இயற்றல் ஆம் நெறி என் என்றான் - (தீங்கு) செய்தற்காகிய வழி யாது? என்று கூறினான். (௫௫)

திறந்தெரி வஞ்ச னச்சொற் செப்பலுஞ் செப்ப மிக்கா
ளறந்தரு வள்ள லீண்டிங் கருந்தவ முயலு நாளுண்
மறந்தலை திரிந்த வாழ்க்கை யரக்கர்தம் வருக்கத் தோடு
மிறந்தனர் முடிவர் பின்ன ரிடரிலை யுலக மென்றாள்.

இ - ள். திறம் தெரி வஞ்சன் - (பிராட்டியின்மன) வலிமையை யறிகின்ற வஞ்சகனாகிய அவ்விராவண முனிவன், அச் சொல் செப்பலும் - அந்த வார்த்தையைக் கூறிய வளவில், செப்பம் மிக்காள் - செவ்விய வழியில் அறிவுடையாளாகிய சீதாபிராட்டி, அறம் தரு வள்ளல் - (உலகோர்க்கு) தருமத்தை (நிலைபெறச்செய்து) தருகின்ற வள்ளன்மையுடையவர் [ஸ்ரீராமபிரான்], ஈண்டு - இவ்விடத்து, அருந்தவம் முயலும் நாளுள் - அரியதவத்தைச் செய்கின்ற நாள்களுக்குள்ளே, மறம் தலைதிரிந்த வாழ்க்கையர் - பாவத்தின்கண் அலைந்த வாழ்வினையுடையாராகிய, அரக்கர் - இராக்கதர்கள், தம் வருக்கத்தோடும் இறந்தனர் முடிவர் - தமது கூட்டத்தோடும் இறந்து தொலைவார்கள், பின்னர் - பின்பு, உலகம் - நன்மக்களுடைய ஒழுக்கத்துக்கு, இடர் இலை என்றாள் - இடைஞ்சலில்லையென்று கூறினாள்.

குறிப்பு —செப்பம் - செவ்வழி, "சேர்ந்த செயலைச் செப்பம் போகி" [மலைபடுகடாம் 160.] பாவத்தைத் தொலைத்துத் தருமத்தை நிலைபெறச்செய்யும் கோட்பாடுடையவர்களாதலின் 'அறந்தருவள்ளல்' என்றான். "ஒன்று நோக்கல் ருணவலி யோநகறன, நின்று நோக்கி நிறுத்து நினைப்பினார்" என்னும் கரன்வதைப்படலச் செய்யுளை யீண்டுநோக்குக. இனி, தரு என்பதை உவமவாசகமாகக்கொண்டு தருமதேவதைபோன்ற வள்ளலென்னலுமாம். இங்கு - அசை. மறந்தலை, தலை - ஏழனுருபு. உலகம் - நன்மக்கள் ஒழுக்கம், "உலகந் திரியா வோங்குயர் விழுச்சீர்" [மணிமேகலை, விழாவறைகாதை, 1] இனி, உலகம் - நன்மக்களுமாம்; "உலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீர்," [திருமுருகாற்றுப்படை 124] மற்றும். உலகம் என்னை இடவாகுபெயராகக்கொண்டு உலகிலுள்ளவர்களுக்கு என்னலுமமையும். ()

மானவ ளுரைத்த லோடு மானிட ரரக்கர் தம்மை
மீனென மிளிருங் கண்ணாய் வேரற வெல்வ ரென்னின்
யானையி னினத்தை யெல்லா மிளமுயல் கொல்லும் பின்னுங்
கூனுகிர் மடங்க லேற்றைக் குருளைமான் கொல்லு மென்றான்.

இ - ள். மானவள் உரைத்தலோடும் - சீதாபிராட்டி (அவ்வாறு) கூறியவளவில், மீன் என மிளிரும் கண்ணாய் - மீன்போல விளங்குகின்ற கண்ணினையுடையாய்! மானிடர் வேர் அற அரக்கர்தம்மை வெல்வர் என்னின் - மனிதர்கள் அடியோடு தொலையும்படியாக இராக்கதர்களை வெல்லுவார்கள் என்று கூறினால், இளமுயல் - முயற்குருளையானது, யானையின் இனத்தை எல்லாம் கொல்லும் - யானையினுடைய கூட்டத்தை முழுதும் கொல்லும், பின்னும் —, குருளைமான் - மான் கன்று, கூன் உகிர் மடங்கல் ஏற்றை - வளைவாகிய நகங்களையுடைய ஆண்சிங்கத்தை, கொல்லும் என்றான் - கொன்றுவிடும் என்று கூறினன்

குறிப்பு —மானவள் என்னும் பதத்திற்கு மாரீசன்வதைப் படலத்தி லுரைகூறியுள்ளாம். மீன் - சேல். "மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பிற், பார்ப்பும் பறழுங் குட்டியுங் குருளையுங், கன்றும் பிள்ளையு மகவு மறியுமென், றொன்பதுங் குழவியோ டிளமைப் பெயரே" "நாயே பன்றி புலிமுய னான்கு, மாயுங் காலைக் குருளை யென்ப" என்ற தொல்காப்பிய மரபியல் விதிகளின்படி 'இளமுயல்' என்றற்கு முயற்குருளை என்று கூறினும் வலிமைபொருந்திய ஆண்சிங்கமென்பது விளங்க 'மடங்கலேறு' எனப்பட்டது, "ஆற்றலொடு புணர்ந்த வாண்பாற் கெல்லா, மேற்றைக் கிளவி யுரித்தென மொழிப" என்றார் தொல்காப்பியனார். மேற்கூறிய 'நாயேபன்றி" என்னுஞ் சூத்திரத்து மானின் இளமைக்குக் குருளைப் பெயர்க்கொடை கொடுத்திலரேனும் அச்சூத்திரத்துள் ஆயுங்காலை என்றமையாலும், "நரியு மற்றே நாடினர் கொளலே" என்னுஞ் சூத்திரத்து நாடினர் கொளலே என்றமையானும், 'குருளைமான்' என்று கூறினார் "குருளையுங் கன்று மானிற் கொளலே" என்றார் பிங்கலந்தையில். (௫௭)

மின்றிரண் டனைய பங்கி விராதனும் வெகுளி பொங்கக்
கன்றிய மனத்து வென்றிக் கரன்முதற் கணக்கி லோரும்
பொன்றிய பூச லொன்றுங் கேட்டிலிர் போலு மென்று
ளன்றவாக் கடுத்த துன்னி மழைக்கண்ணீ ரருவி சோர்வாள்.

இ - ள். மின்திரண்டனைய பங்கி விராதனும் - மின்னல் திரண்டாற்போன்ற செம்பட்டமயிரினையுடைய விராதனும், வெகுளி பொங்க - கோபமிகுந்ததால், கன

நியமனதது - வைாத பனத்திணையுடைய, வெனறி கரனமுதல் கணககு இலோரும- வெறறியையுடைய கரனமுதலாகிய அளவறறபோகளும, பொனறிய - இறநது போன, பூசல ஒனறும கேட்டிலிரபோலும எனருள் - யுத்தசமாசாரம ஒனறும கேளவியுற றறிந்திலீா போலும என்று கூறி, அனறு - அற்றைநாள, அவர்கு - அயவிராமபிரானுககு, அடுததது உனனி - சமபவிதத துனபததைநிணைதது, மழைகண அருவிநீா சோரவாள- (சீதாபிராட்டி தனது) மேகமபோனற கணகளிலிருநது அருவிபோலும நீரைச சிநதுவாளாயினள.

குறிபபு —அனறு எனறது - மான்பினசெனற அந்நாள எனறும, கரனுதியரைக கொனற அககாள எனறும இருவகையிற பொருளகொளளலாம. அவறறுள மானபின செனறநாளென, இததணை வலிய அரககரைக கொனறவா மானவடிவுறறு வநத ஓரரககனுல துனபுறுதறகு நியாயமிலலை யெனப துணராது அவவரககனுல துனபம நோநதமை நிணைததுத தன் நாயகனது பெருமை கூறும இககாலததும அழ நேரிடடது வியககததகுநத அவளது மடமையின பாறறும காணுதிய நிறநத அறறைஞானறெனெ, அன்றடைநத அசசம இனறு முளதென விளககினதாம (௫௮)

வாளரி வளள றனனு லிலஙகைமா நிருத ரெலலாங
கேளொடு மரியு மாறும வானவா கிளரு மாறு
நாளையே காணடி ரனறே நவையிலீ ருணாகி லீரோ
மீளருந தருமந தனனை வெலலுமோ பாவ மெனருள

இ - ள (பினனும அசசீதாபிராட்டி), நவை இலீா - குறறமறறவரே! வாள அரிவளளல தனனுல - வாளாலரியுஞசெயலில வளளனமையுடையவரால (ஸ்ரீராமபிரானுல], இலஙகைமா நிருதா எலலாம - இலஙகையிலுளள பெரிய இராககதாகளனைவரும, கேள ஒடும - (அவாகள) உறவினரோடும, மரியும ஆறும - இறககினற விததததையும, வானவா கிளரும ஆறும - தேவாகள உயாகினற விததததையும, நாளையே காணடிா அனறே - நாளையததினமே பாாபபீரனறே? பாவம - பாவமானது, மீள அரும தருமம தனனை - நீஙகுதறகருமையான தருமததை, வெலலுமோ - வெறறி பெறுமோ? உணாகிலீரோ - (நீா இதனை) அறியீரோ? எனருள - எனறு கூறினள

குறிப்பு —வாள—மறறை வில முதலியவற்றிறகு உபலககணம அரி - முதனிலை இனி, அரிவளளல - வினைததொகையுமாம கொலைததொழில மிகுதிவிளஙக 'வாளரிவளளல' ளெனருள. அரி - ஸ்ரீமகாவிஷ்ணுவுமாம. கேள - உறவினருககு ஆகுபெயா. உடலைவிடடு உயிா நீஙகிசசெலலுஙகாலத்தும தருமமானது அவவுயிரை விடாது தொடாகினறமைபறறி 'மீளருநதருமம' எனருள. "அனறறிவா மெனனு தறஞசெயக மறறது, பொனறுஙகாற பொனருததுணை" எனததிருக்குறளினும, "தரும மேயிணை யிலபொரு டரையிடைத் தகைசா, லொருமை யினபினை யுதவிவிண ணுலகினு முடனபோ, யருமை யினபமுயத் தநதகற செறமெனிலறமே, யிருமை யுநதுணை யாருவ தனறிமற றில்லை" எனததிருக்கூவட்புராணததினுங கூறினமை காணக. (௫௯)

தேனிடை யமுத ளாய வனனமென் சிலசொன மாலை
தானுடைச் செவிக ளூடு தவழுறத தளித்து வீங்கு

மூனுடை யுடமபி ஞனு முருகெழு மான மூனற
மானுடா வலிய ரெனற மாறறததாற சீறறம வைததான்.

இ-ள. தேன இடை அமுது அளாய அன்ன - தேனினிடததே அமிாதத்தைககலநததைப்போல, மெல - மெனமைபொருநதிய, சிலசொலமாலை - (பிராட்டியினது) சில சொறகளின வரிசையானது, தான உடை செவிகள ஊடு - தனனுடைய செவிகளில, தவழ உற - தவழ்தல உற [மெலலமெலல நுழைய], (அதனால) தளிாதது வீஙகும ஊன உடை உடமபினனும - தளிாப்புறறுப பருககினற மாமிசததையுடைய உடமபினனாகிய இராவணமுனிவனும, மானுடா வலியா எனற மாறறதால - மனிதாகள வலிமையை யுடையவாகளென்று கூறிய வாாததையினாலே, உரு கெழு மானம - உருவமபொருநதிய வெடகமானது [குறைவிலலாது நிறைவுறற வெடகமானது], ஊனற - (தனமனததிற) பதிநததால, சீறறமவைததான - (மனததிற) கோபததைவைததான.

குறிபபு—தேன-வாாததையின இனிமைககு உவமை அமிாதம கட இனியதாகிய மெனமையுந தனனை நுகாநதாா பிறிது நுகாாமறறுககு மெனமையு முடைமையின 'அமுதனன மெனமை' எனறாா, "இனனமிா தனன சாயல" எனறாா சிநதாமணியினும. தவழதல் - நகருதல தளிாததல - துளிாததல. உருகெழு, கெழு - இடைசசொல, "வேலகெழு தடககை" எனறறபோல. (௯0)

சீறியா னுரைசெய வானச சிலைவலிய புலவி யோாகட
கீரொரு மனிதன செயதா னெனறெடுத தியமபி னீயேற
றேறுதி நாளை யேயவ விருபது திணடோள வாடை
வீறிய பொழுது பூளை வீயென வீவ னனறே.

இ-ள சீறினன உரைசெய்வான - கோபஙகொணட அவவிராவண முனிவன கூறுவான, அ சிலைவலி புலவியோாகடகு - அநத விலவலலமையிற சிறுமையையுடைய இராககதாகளுககு, ஒரு மனிதன—, ஈறுசெயதான எனறு எடுதது இயமபினாயேல - முடிவினைசசெயதான எனறு எடுததுக கூறுவாயானால, அ இருபது திண தோள வாடை வீறிய பொழுது - இநத (இராவணனுடைய) இருபது வலிய புயஙகளினது காறறானது இழுததபொழுது, பூளை வீ என வீவன - பூளைபபூப போல (நீவீரனெனறு கூறிய மனிதன) இறபபான; நாளையே தேறுதி - (இதனை நீ) நாளையததினமே அறிவாய. (௯௧)

மேருவைப பறிகக வேண்டின் விணணினை யிடிகக வேணடி
னீரினைக கலகக வேணடி னெருபபினை யவிகக வேணடிற
பாரினை யெடுகக வேணடிற பலவினைச சிலசொல லேழா
யாரெனக கருதிச சொனனா யிராவணற கரிதென னென்றான.

இ-ள. பலம வினை - பலமான தொழிலகளில, சிலசொல ஏழாய் - சிலவாற்றைககூறுகினற பெணணே! யாா என கருதி சொனனாய - (இராவணனை) யாா எனறு நினைதது (எளிதாகக) கூறினாய, இராவணறகு - அநத இராவணனுககு, மேருவை பறிக்கவேணடின - மகாமேருவைப் பெயாததெடுகக விருமபினாலும, விணணினை இடிக்கவேண்டின் - ஆகாயத்தை இடித்து விடவிருமபினாலும, நீரினை கல

ககவேணடின் - கடலைக்கலக்கிவிட விருமபினுலும, நெருப்பினை அவிககவேண டின - வடவாமுகாக்கினியை அவிததுவிட விருமபினுலும, பாரினை எடுககவேண டின் - புவியைததூககுமபடி விருமபினுலும, அரிது என - (அசசெயல்களில) அருமையானது யாது? என்ருன் - என்று கூறினன

குறிபபு —நீர கடலுககு இலககணை. பலவினை - அநேக தொழிலுமாம (கூஉ)

ஆரணடரு திரடோள சால வுளவெனி னுறற லுணடோ
கரணடநீ ரிலஙகை வேநதைச சிறைவைதத கழறகால வீரன
றிரணடதோள் வனத்தை யெலலாஞ் சிறியதோர பருவந தனனி
லிரண்டுதோ ளொருவன றனே மழுவின லெறிநதா னெனருள.

இ - ள. ஆரண தரு திரளதோள சால உள எனின - காவலைததருகினற திரணட புயஙகள மிக வுளளன என்றால, ஆறறல உணடோ - வலிமையுணடோ? கரணடம நீர இலஙகைவேநதை - (முனிவ ராறறலுககுக) கமணடல நீரபோனற கடல சூழநத இலஙகைககரசனுகிய இராவணனை, சிறைவைதத - சிறையில்வைதத, கழல கால வீரன-வீரககழலை வீககிய காலினையுடைய ஆணடனமையிற சிறந்த காரததவீரியாரசசுனனது, திரணட - பருதத, தோளவனததை எலலாம - புயஙகளாகிய காடுமுழுவதையும, இரணடுதோள ஒருவனதானே - இரணடு புயஙகளையுடைய ஒரு மனிதனுகிய பரசுராமன தானே, சிறியது ஓர பருவம தனனில் -(தனது) இளமைப பிராயததில, மழுவினுல எறிநதான என்ருள - மழுவாயுததததால வெட்டிததளளினுன என்று கூறினள

குறிபபு —உடமபின பாதுகாப்புககு உபயோகபபடும தோளகள எனபாள 'ஆரணடரு' என்ருள; "மெயசென்று தாககும வியன்கோ லடிதனமேற, கைசென்று தாஙகுங கடிது" எனபவாகலின. இசசெயயுளிறகுறிதத காரததவீரியன இராவணன நருமதையாறறஙகரையிற செயத சிவபூசைககு இடையூறு வருமாறு அவ்வாற்றைத தனது இரணடாயிரங கைகளாலும அணைகட்டித தடுததததுபோலத தடுததகதை விளஙக 'ஆரணடரு திரடோள' என்று ளெனனலுமாம கீழககவியிற கடலைககலகக வலலவனென்று கூறிய பெருமைககோர இழிவுகறபிககவும, தவததின ராறறல பெரிதெனபது தோனறவும 'கரணடநீ ரிலஙகை' என்ருள. காரததவீரியன நருமதையாறறைத தடுததது இராவணனேடு போாபுரிநது அவனை வென்று சிறையில வைததுவிட, அதனையுணாநத வீடணன பிரமதேவனிடஞ்சென்று கூற, அபபிரமனவநது காரததவீரியனை வேணடிச சிறை நீககிவிட்டனன. இராவணனைச சிறையிட்ட வீரனுகிய காரததவீரியன ஒருநாள சமதககினிமுனிவாபாற செலல அவனுககு அமமுனிவா காமதேனுவைககொணடு ஓா விருநது செயவிததனா அவவிருநதுககு மகிழநத வீரியன அககாமதேனுவைக கொணடுசெல்லக் கருதியதறகு முனிவா இணஙகாமையால அவரைக கொனறனன. அதனை அறிநத அமமுனிவா புததிரனுகிய பரசுராமன சினநது தன மழுவாயுததததால் அக காரத்தவீரியனைக கொனறனன இசசரிததிரஙகளைப பாகவததததினும இராமாயணததில உத்தரகாணடததிலுங கணடு தெளிக. (கூகூ)

என்றவ ளுரைதத லோடு மெரிநதன நயனந திக்கிற
சென்றன திரடோள வானந தீணடின மகுடந திணகை

யொன்றொன்றோ னடித்த மேகத் துருமென வெயிற்றி னொளி
மென்றன வெகுளி பொங்க விட்டது மாய வேடம்.

இ - ள். என்று இவன் உரைத்தலோடும் - (மழுவினுலெறிந்தான்) என்று இவன் கூறிய வளவில், நயனம் எரிந்தன - கண்கள் தீப்பறந் எரியலுற்றன, திரள் தோள் திசையிலசென்றன - திரண்ட புயங்கள் திசைகளில் சென்றன, மகுடம் வானம் தீண்டின - கிரீடங்கள் ஆகாயத்தைத் தொட்டன, தீண்கை ஒன்றொடு ஒன்று அடித்த - வலியகைகள் ஒன்றோடு ஒன்று அடித்துக்கொண்டன, எயிற்றின் ஒளி - பற்களின் வரிசையானவை, மேகத்து உரும் என - மேகத்தினது இடியை பபோல, மென்றன - மெல்லுதலுற்றன, வெகுளிபொங்க - கோபமிருந்ததால், மாயம் வேடம் - மாயத்தாற்கொண்ட முனிவேடமானது, விட்டது - நீங்கியது ()

இருவினை துறந்த மேலோ ரல்லனகொ லிவனென் றெண்ணி
யரிவையு மைய மெய்தா வாரிவன் ரூனென் றொன்றுந்
தெரிவரு நிலைய ளாகத் தீவிடத் தரவந் தானே
யுருகெழு சீற்றம் பொங்கிப் பணம்விரித் துயர்ந்த தொத்தான்

இ - ள் அரிவை - (அவ்வுருவத்தைக்கண்ட) சீதாபிராட்டி, இவன் - (முனி வேடமுற்றிருந்த) இவன், இருவினை துறந்த மேலோர் அல்லன் (நல்வினை தீவினையென்னும்) இரண்டு வினைகளையும் நீங்கிய உயர்ந்தோர்களில் ஒருவன் அல்லன், என்று எண்ணி - என்று நினைத்து, ஐயம் எய்தா - சந்தேகமடைந்து, இவன் ஆர் என்று ஒன்றும் தெரிவு அருநிலையள் ஆக - இவன் யாவன் என்று சிறிதும் அறிந்து கொள்ளுதற் கருமையான நிலைமையினையுடையவளாகும்படி, தீவிடத்து அரவம் தானே - கொடிய விஷத்தினையுடைய சாபபமானதுவே, உருகெழுசீற்றம் பொங்கி - மிகுந்தகோபமானது மேன்மேலும் வளர்தலுற்று, பணம் விரித்து - படங்களை விரித்துக்கொண்டு, உயர்ந்தது ஒத்தான் - மேலெழுந்ததை ஒத்தவனுயினுன.

குறிப்பு —கொல், தான்—அசை. (௬௫)

ஆற்றவெந் துயரத் தன்னு ளாண்டுற்ற வலக்க ணோக்கி
னேற்றமென் னினைக்க லாகு மெதிரெடுத் தியம்ப லாகு
மாற்றமொன் றில்லை செய்யும் வினையில்லை வரிக்க லாகாக்
கூற்றமவந் துற்ற காலத் துயிரெனக் குலைவு கொண்டாள்

இ - ள் அன்னுள் - அச்சீதாபிராட்டி, ஆண்டு - அப்பொழுது, வெம் துயரத்து உற்ற - வெவ்விய கிலேசத்தாலடைந்த, அலக்கண் நோக்கின் - துன்பத்தைக் கருதினால், ஆற்ற - (தனக்கு) உதவிசெய்ய, ஏற்றம் என் நினைக்கல் ஆகும் - உயர்ந்ததாக யாது நினைத்தற்காகும்; எதிர் எடுத்து இயம்பல் ஆகும் மாற்றம் ஒன்று இல்லை - (அவனுக்கு) முன்னே (தைரியமாக) எடுத்துப்பேசுதற் காகும் வார்த்தை ஒன்றும் இல்லை, செய்யும் வினை இல்லை - (தான் அவனை விட்டுத்தப்பித்துக் கொள்வதற்குச்) செய்கின்ற (தந்திரச்) செய்கை (சிறிதும்) இல்லை, வரிக்கல் ஆகா - கட்டுதற்காகாத [தடைபடாத], கூற்றம் வந்து உற்ற காலத்து - யமன் வந்தடுத்த பொழுது, உயிர் என - (நடுங்குகின்ற) உயிர்போல, குலைவுகொண்டாள் - நடுக்க முற்றுள.

குறிப்பு—ஸ்ரீராம லட்சுமணர்கள் அவ்விடத்து இன்மையால் அவர்களைப் போல உதவுதற்குத் தக்கவீரர்கள் அவ்விடத்தில் யாரிருக்கிறார்கள் ஒருவருமில்லை யே என்பது தோன்ற 'ஆற்ற ஏற்றம் என்னினைக்கலாகும்' என்றார். ஆற்றுதல்- உதவிசெய்தல்; "ஒருவிரொருவீரகாற்றுதிர்" [புறப்பாட்டு 58] அலக்கணினும் அதிகமானதென்று எதை நினைத்தல் கூடுமெனப் பொருள் கூறுவருவார் ஆற்ற என்பதை ஆன்ற என்பதின் விகாரமாகக் கோடல்வேண்டும், அங்ஙனங்கொள்ளு தல் சிறப்புடைத்தன்றாம். (கசு)

விண்ணவ ரேவல் செய்ய வென்றவென் வீரம் பாராய்
மண்ணிடைப் புழுவின் வாழு மானுடர் வலிய ரென்றாய்
பெண்ணெனப் பிழைத்தா யன்றே லுன்னையான் பிசைந்து தின்ன
வெண்ணுவெ னெண்ணிற் பின்னை யென்னுயி ரிழப்பெ னென்றான்.

இ - ள் விண்ணவர் ஏவல் செய்ய வென்ற என் வீரம் பாராய் - தேவர்கள் (எனக்கு) ஊழியம் செய்யும்படி வெற்றிகொண்ட என்னுடைய வீரத்தைப் பாராம பாயாக, மண் இடை புழுவின்வாழும் மானுடர் வலியர் என்றாய் - நிலத்திற் புழு வைப்போல வாழுகின்ற மனிதர்களை வலிமையை யுடையவர்களென்று கூறினாய், பெண் என பிழைத்தாய் - (இங்ஙன மஞ்சாது கூறிய நீ சிலாக்கியமான) பெண் ணென்று சொல்வதாற் பிழைத்தாய், அன்றேல் - அப்படி யல்லாதிருந்தால், உன் னையான் பிசைந்து தின்ன எண்ணுவென் - உன்னைநான் பிசைந்து தின்னுதற்கு நினைப்பேன், எண்ணில் - (அப்படி பிசைந்துதின்ன) நினைப்பேனானால், பின்னை - பின்பு, என் உயிர் இழப்பென் என்றான் - எனது உயிரை இழந்துவிடுவேன் என்று கூறினான்

குறிப்பு—தன்னை இராவணன் என்று தெரிவிக்க 'விண்ணவ ரேவல்செய்ய வென்றவென்' என்றான் பாராய் - எதிர்மறையுமாம் (கஎ)

குலவுற லன்ன முன்ன மியாரையுங் குமபி டாவென்
றலைமிசை மகுட மென்னத் தனித்தனி யினிது தாங்கி
யலகிலபூ ணரம்பை மாத ரடிமுறை யேவல் செய்ய
வுலகமீ ரேழு மாளு செல்வத்து ளுறைதி யென்றான்

இ - ள். அன்னம் குலவு உறல் - அன்னம்போன்றவளே 'நடுக்கம் அடையா தே, முன்னம் - (இதற்கு) முன்பு, யாரையும் கும்பிடா - எவர்களையும் கும்பிடாத, என் தலைமிசை - எனது தலைகளின்மேலே, மகுடம் என்ன - கிரீடங்களைப்போல, தனி தனி இனிது தாங்கி - (உன்னை) ஒவ்வொருதலையிலும் மகிழ்வாகவைத்துச் சும ந்துகொண்டு, அலகு இல பூண் அரம்பைமாதர் - எண்ணிலலாத ஆபரணங்களை யு டைய தேவஸ்திரிகள், அடி முறை ஏவல் செய்ய - பாதத்தின் கீழ்நின்று தங்கள் தங்கட் கேற்பட்ட பணிவிடைகளைச் செய்யாநிற்ப, உலகம் ஈரேழும் ஆளும் - பதி னன்கு உலகங்களையும் அரசாட்சிசெய்கின்ற, செல்வத்துள் உறைதி என்றான் - (எனது) செல்வத்தின்கண் வசிப்பாயாகவென்று கூறினான்.

குறிப்பு:—அன்னம் - ஆகுபெயர், (கஅ)

செவிகளைத் தளிர்க்கை யாலே சிக்குறச் சேமஞ் செய்தாள
கவினுமவெஞ் சிலைக்கை வென்றிக் காகுத்தன் கற்பி னேனைப்
புவியிடை யொழுக்க நோக்காப் பொங்கெரிப் புனித ரீயு
மவியைநாய் வேட்டதென்ன வென்சொன்ன யரக்க வென்னு.

இ-ள் (அதனைக்கேட்ட பிராட்டி), தளிர் கையால் - மாந்தளிர்போன்ற தனது இரண்டுகைகளாலும், சிக்கு உற - மறைப்புமெப்படியாக, செவிகளை சேமம் செய்தாள் - (தனது) காதுகளைப்புதைத்தவளாகி, அரக்க - அரக்கனே! புவியிடை - பூமியினிடத்து, ஒழுக்கம் நோக்கா - ஒழுக்கத்தைக்கருதி, பொங்கு எரி புனிதர் ஈயும் அவியை - உயர்ந்த வேள்வித்தீயை வளர்க்கும் பரிசுத்தவான்களாகிய முனிவர்கள் ஈகின்ற அவிர்ப்பாகத்தை, நாய் வேட்டது என்ன - நாய் விரும்பினதுபோல, கவினும் - அழகாயிருக்கின்ற, வெம் சிலை கை - கொடிய வில்லினையேந்திய கையினையுடைய, வென்றி - வெற்றி பொருந்திய, காகுத்தன் கற்பினேனை - ககுஸ்தன் மரபிற்றோன்றியவனுக்கு [ஸ்ரீராமபிரானுக்கு] கற்பினையுடைய மனைவியாகிய என்னை, என் சொன்னய் என்னு - என்ன வார்த்தையைக் கூறினாய் என்று.

குறிப்பு — கவினல் - அழகாயிருத்தல் ஒழுக்கம் - உயர்வு, மரியாதை (சூக)

புன்னுனை நீரி னொய்தாயப் போதலே புரிந்து நின்ற
வின்னுயி ரிழத்த லஞ்சி யிறப்பிறப் பழித லுண்டே
மின்னுயிர்த் துருமிற் சீறும் வெங்கணை விரவா முன்ன
முன்னுயிர்க் குறுதி நோக்கி னொளித்தியா லோடி யென்ருள்.

இ-ள் புல் நுனை நீரின் - புல்லினது முனையிலிருக்கிற நீர்த்துளியைப்போல, நொய்தாய - விரைவாய, போதலே புரிந்து நின்ற - (ஒழிந்து)போகுஞ் செயலையே செய்து நின்றுள்ள, இன் உயிர் இழத்தல் அஞ்சி - இனிய உயிரை இழந்துவிடுதற்குப் பயந்து, இல் பிறப்பு அழிதல் உண்டே - குடிப்பிறப்பின் மேன்மை கெடுதலுமுண்டோ? உன் உயிர்க்கு உறுதி நோக்கின் - உனது உயிருக்கு நன்மையைக்கருதினுல், மின் உயிர்த்து - மின்னலைவிடுத்து [மின்னலைப்போல ஒளி வீசி], உருமில் சீறும் - இடியைப்போலக் கோபிக்கின்ற, வெங்கணை - (ஸ்ரீராமபிரானது) கொடிய பாணங்கள், விரவா முன்னம் - (வந்து) கலவாதமுன்பு, ஓடி ஒளித்தி என்ருள் - ஓடி ஒளிப்பாயென்று கூறினுள். (எ0)

என்றவ ளுரைக்க நின்ற விரக்கமி லரக்க னெய்த
வுன்றுணைக் கணவ னம்பவ் வுயர்திசை சுமந்த வோங்கல
வன்றிறன் மருப்பி னுற்றன் மடித்தவென் மார்பின் வந்தாற்
குன்றிடைத் தொடுத்து விட்ட பூங்கணை கொல்லு தென்றுன்.

இ-ள் என்று அவள் உரைக்க நின்ற - (ஓடி ஒளிப்பாய) என்று அசசீதாபிராட்டி சொல்ல(க்கேட்டு) நின்ற, இரக்கம் இல் அரக்கன் - கிருபையில்லாத அவ்விராக்கதன், அ உயர் திசை சுமந்த ஓங்கல் - அந்த உயர்ந்த திக்குகளைச் சுமந்து நின்ற யானைகளினது, வல் திறல் மருப்பின் ஆற்றல் மடித்த - வலிமைபொருந்திய கொம்புகளினது வலிமையை யொழியச்செய்த, என் மார்பின் - எனது மார்பினிடத்து, துணை - (உனக்கு) இணையாகிய, உன் கணவன் எய்த அம்பு - உனது நாய

கன எயத பாணமானது, வந்தால - (பாய) வந்ததேயாயின், அது - அப்பாணம, குனறிடை தொடுதது விட்டபூ கணை எனறுன - மலையினமேல் விலவளைதது விடட புஷபபாணமேயாம எனறு கூறினை.

குறிப்பு.—உனனைப்போலும பெணடன்மை யுடையாளெனபதும, உனககு உதவிசெயபவனெனபதும, உனனழகுககு இணையானவனெனபதும விளஙகு மாறு 'உனறுணை' எனறுன உயாதிசை - செடுந்தூரததுளளதிசை. ஓஙகல - மலை, இது யானைககு உவமவாகுபெயா. வனறிறல் - ஒருபொருடபனமொழி தொகுததல - விலவிறகோததலும, செலுததலுமாம. கொல - அசை மலைமேல எய்த புஷபபாணததால மலைககுக கேடிலலை யெனறுதல்போல இராமபாணததால தனனுடலுககுக கேடுசமபவியாதெனறு கூறினை (எக)

அணஙகினுக கணஙக ளுயஙின ளுசைநோ யகததுட பொஙக
வுணஙகிய வுடமபி னேனுக குயிரினை யுதவி யுமபாக
கணஙகுழை மகளிாக கெலலாம பெருமபதங கைககொ ளெனறு
வணஙகின னுலகந தாஙகு மலையினும வலிய தோளான.

இ - ள உலகம தாஙகும மலையினும வலியதோளான - உலகததைதத தாஙகு கினற மலையைபபாாககினும வலிமைபொருநதிய தோளகளையுடைய ராவணன, அணஙகினுககு அணஙகு அனைய - அழகுககு அழகுபோனறவளே! நின ஆசைநோய - உனமேறகொணட ஆசையாகிய பிணியானது, அகததுள பொஙக - (என) மனததில அதிகரிகக, உணஙகிய உடமபினேனுககு - வாடிப வுடலையுடையேனுகிய எனககு, உயிரினை உதவி - உயிரைககொடுதது [நான இறவாவாறு செயது], உமபா - விணணுலகிலிருககிற, கணம குழை மகளிாககு எலலாம - வட்டமான காதணியை யுடைய பெணகளுககு எலலாம, பெருமபதம - (கிடைததறகரிய) பெரியபதவியை கைகொள எனறு - கைவசபபடுததிககொளவா யெனறு கூறி, வணஙகினன - வணஙகினன.

குறிப்பு —உமபா - உயாவு, இது விணணுலகுககு ஆகுபெயா கணஙகுழை- கூட்டமான குழையெனவுமாம இனி, கனஙகுழையென்பது எதுகைநோககிக கணஙகுழை யெனறுயிற றெனனலுமாம. உலகநதாஙகல எனறது - அரசு புரிதலை இனி, உலகநதாஙகு மலை - மேருமலையுமாம. (எஉ)

## வேறு

தறைவா யவனவந தடிதா ழுதலுங
கறைவாள படவா விகலங கினளபோ
லிறைவா வினையோ யெனவேங கினளாற
பொறைதா னுயிாபோ வதுபோற புகலவாள.

இ - ள. அவண தறைவாய வநது - அவவிராவணன பூமியினிடதது வநது, அடிதாழுதலும - (அவனது) பாதஙகளில் வணஙகிய வளவில, கறைவாள பட - இரததககறை பொருநதிய வாளாயுதததாககினதால, ஆவிகலஙகினள போல - உயிா நிலை கலஙகபபெற்றவள போலவும, பொறை - உடலினினறும, உயிாபோவதுபோல் - உயிா (விலகிப்) போவதுபோல்வும, புகலவாள - பேசுவாளாகி, இறை

வா இளையோய் என எங்கினை - (எனது) தலைவரே! இளையவனே! என்று (அச சீதாபிராட்டி) அழுதாள.

குறிப்பு:—தறை - தரை. பன்னசாலையினின்று வெளியே வந்தான் என்பார 'தறைவாயவந்து' என்றார மிகவுந்துனபுறறமை விளஙகக கறைவாளபட வாவி கல ஙகினவளை உவமைகூறினார. பேசுதறகுசசிறிதுஞ சகதியிலலாமல் ஈனசுரமாகப் பேசினளெனபார 'பொறைதாஙகுயிாபோவதுபோற புகலவாள' என்றார. பொறை-பொறுப்பது, ஐ - வினைமுதறபொருணமை விகுதி உயிரைததாஙகுவதால உட லுககு இபபெயாபோநதது. "பொறையுணீஙகி யுககதாமுயிரள" என்றார சூாபப நகைப்படலததும் தனது கறபினமகிமையால் இவவரககனை நீறுககககருதாது பொறுமையோடிருநதமைபறறி இபபிராடடிககுப பொறை என ஒருபெயரைதத நது கூறினாரெனனுமாம. (௭௩)

ஆணடா யிடைதீ யவனு யிழையைத
தீணடா லெனுமே லுரைசிந தைசெயாத்
தூணடா னெனலா முயாதோள வலியாற
கீணடா னிலமயோ சனைகீ ழொடுமேல.

இ - ள ஆணடு - அபபொழுது, ஆயிடை - அவவிடததில், தீயவன - கொடி யவனுகிய அவவிராவணன, ஆயிழையை தீணடால எனும- பெணணைததொடா தே என்கிற, மேல உரை சிநதை செயா - முனவாாததையை நினைதது, தூணதான எ னல ஆம உயாதோள வலியால - (இவை) தூணகளேதாம என்று கூறுதறகாகும உயாநத புயஙகளினுடைய வலிமையினுல, நிலம பூமியை, கீழ ஒடு மேல - கீழும மேலும, யோசனை கீணடான - ஒரு யோசனை தூரததளவாகப பெயாததெடுததான

குறிப்பு—ஆயிழை - அனமொழிததொகை. தீணடால, ஆல் - அலலெனனும எதிாமறை வியஙகோளவிகுதி சநதோககி நீடடல விகாரம பெறறது. மேலுரை - "வநதி யாகநீ மாநில மாதாதரு, சிநதை யாலனறி யாவரைத தீணடினும, கநத வாாகுழ லாளகற பெரியினுல, வெநது வீழதி" என்று அரமபை கூறிய சாபமொழி, அன்றியும பிரமதேவன இபபடியே கூறிய மறறொரு சாபமுமாம. கீழ ஒடு மே. என்றது - பூமியினது ஆழமும அகலமும விளஙகநகு (௭௪)

கொணடா னுயாதோ மிசைகோல வளையாள
கணடா டனதா ருயிாகண டிலளான
மணடா னுறுமின னின்மயங கினளால
விணடான வழியா வெழுவான விரைவான

இ - ள. உயா தேர்மிசை கொணடான - (பெயாதது எடுதத நிலததைததன து) உயாநத தேரினமே லேறறிக்கொணடான, கோலவளையாள கணடாள - (அச செயலை) வளைநதவளையலையுடையாள பாாததாள, தனது ஆா உயிா கணடிலள-(பினனா அசசீதாபிராட்டி) தனது அரிய உயிரைப்பார்ததாளிலலை, மண உறும மி னனில் மயஙகினள - (அவள) நிலததை அடைகினற மினனலில கலநதாள, விண தானவழிஆ எழுவான - ஆகாயமே மாாககமாககிளமபிச் செல்லும அவவிராவண ன, விரைவான் - விரைநது செல்லும் பொருட்டு.

குறிப்பு—தான் - அசை. இராவணனுடைய உயர்ந்த தேரின்மேல் ஒரு யோசனையளவு உயர்ந்த நிலமானது தேரோடு மேலெழும் அந்நிலத்தை அடைகின்ற மின்னலும் அந்நிலத்திலுள்ள பிராட்டியும் வேற்றுமையின்றி ஒரு தன்மையாகக் காணப்பட்டமையால் 'மண்டோன்றுமின்னின் மயங்கினள்' என்றார். மயங்கல் - கலத்தல். "தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து" புறப்பாட்டு 19] மின்னல் உருவுமத்துக்குத் தோன்றி மறையும் வினை யுவமத்துக்கு மட்டுமே பொருந்துமாகலானும், ஆருயிர் கண்டிலள் என்ற வுடனே மதிமயங்கினள் என்னல் சிறப்புடைத்தன்றாகலானும் மயங்கினள் என்றது மதிமயங்கினள் என்று பொருள் கூறுதலை மறுத்தாம். ஐயோ இனிச்செய்வது என்னே என்றேங்கித் தன்மாபிற கைவைத்து நெரித்துக் கொண்டமை விளங்கக் 'கோல்வளையாள்' என்றார் (௭௫)

விடுதே ரெனவெங் கனல்வந் தழியுங்
கொடிபோற் புரள்வாள் குலைவா ளயர்வா
டுடியா விழுவா டுயரா லெழுவாள்
கடிதா வறனே யிதுகா வெனுமால்.

இ - ள். தேர் விடு என - (சாரதியைநோக்கி விரைவாய்த்) தேரைச்செலுத்து வாயென்று கூற, வெங் கனல் வந்து அழியும் கொடிபோல் புரள்வாள் - கொடிய நெருப்பில் வந்து அழிகின்ற பூங்கொடிபோலப் புரளுவாள், குலைவாள் - நடுங்குவாள், அயர்வாள் - சோர்வடைவாள், துயரால் துடியா விழுவாள் எழுவாள் - துன்பத்தால் துடித்து விழுந்து எழுந்திருப்பாள், அறனே - தருமமே, இது - இவ்வாபத்தினின்றும், கடிது ஆ கா எனும் - (என்னை) விரைவாகக் காப்பாய் என்று கூறுவாள்.

குறிப்பு—ஆ—ஆக என்பதன் விகாரம். அறம் - அறனெனப்போலி (௭௬)

மலையே மரனே மயிலே குயிலே
கலையே பிணையே களிறே பிடியே
நிலையா வுயிரோ நிலைதே றினிர்போ
யுலையா வலியா ருழைநீ ருரையீர்

இ - ள். மலையே—! மரனே - மரமே! மயிலே—! குயிலே—! கலையே - ஆண்மானே! பிணையே - பெண்மானே! களிறே - ஆண்யானையே! பிடியே - பெண்யானையே! நிலையா உயிரோ - நிலைத்திருத்தலில்லாத (என) உயிரே! நிலைதேறினிர் நீர் போய் - (எனது) நிலைமையை யறிந்தவர்களாகிய நீங்கள் சென்று, உலையா வலியார் உழை உரையீர் - கெடாத வலிமையை யுடையாரிடத்தில் [ஸ்ரீராமலட்சுமணர்களிடத்தில்] சொல்வீர்களாக

குறிப்பு —அஃறிணைப் பொருள்களை விளித்து உரையீர் என்றது - "கேட்குந போலவுங் கிளக்குந போலவும், இயங்குந போலவும் இயற்றுந போலவும், அஃறிணை மருங்கினு மறையப் படுமே" எனும் விதியுளடங்கும். [நன்னூல் பொதுவியல்].

சென்றே வகல்வா நிலைநீ தெரிவீர்
மன்றே பொழிலே வனதே வதைகாள்

எஞ்சே லென்னல் குதிரே லடியே
னுஞ்சா லதுதா னிழிபோ வுரையீர்

இ - ள். மஞ்சே - மேகமே! பொழிலே - சோலையே! வனதேவதைகாள் - காட்டிலுறைகின்ற தெய்வங்களே! செம்மை சேவகனார் நிலை நீர் தெரிவீர் - நல்ல வீரத்தன்மை பொருந்திய வருடைய [ஸ்ரீராமபிரானுடைய] நிலைமையை நீங்களறிவீர்கள், (ஆதலினால்), அஞ்சேல் என்னல் குதிரேல் - பயப்படாதேயென்று (எனக்கோர் உறுதிமொழி) கொடுப்பீர்களாயின் (உய்ந்தேன்), அடியேன் - அடியாளாகிய நான், உஞ்சால் - பிழைத்திருத்தல் பெற்றால், அது - நான் அப்படிப்பிழைத்திருக்கப்பெறுவது, இழிபோ - (உங்கள் தன்மைக்கு) குறைவோ? உரையீர் - (அதை யாயினும்) கூறுவீராக.

குறிப்பு — நிலை - ஸ்ரீராமபிரான் தன்னைத்தேடித்தொடராதது வருந்தன்மை. உய்ந்தேன் என ஒரு சொல்வருவித்துக்கூறுக. உஞ்சால் - உய்ந்தால், போலி. (எ௮)

நிருதா தியர்வே ரறநீண் முகில்போற்
சரதா ரைகள்வீ சினர்சா ரகிலரோ
வரதா விளையோய் மறுவே துமிலாப்
பரதா விளையோய் பழிபூ ணுதிரோ

இ - ள். வரதா - (முனிவர் அரக்கரைக் கொன்றருள வேண்டுமென்று விரும்பிய) வரத்தைக் கொடுத்தவரே! [ஸ்ரீராமரே!], இளையோய் - இலட்சுமணனே! மறு ஏதும் இலா பரதா - குற்றம் சிறிதும் இல்லாத பரதனே! இளையோய் - சத்துருக்கனே! நிருதர் ஆதியர் - இராக்கதர் முதலானவர்கள், வேர் அற - அடியோடு தொலையும்படியாக, நீள் முகில்போல் - பெரிய மேகங்களைப்போல், சரம் தாரைகள் - பாணவருஷங்களை, வீசினர் - எறிந்தவர்களாய், சாரகிலரோ - (இங்குவந்து) சேரமாட்டார்களோ?

குறிப்பு — நிருதாதியர் - நிருதரும் அவரைச்சேர்ந்த கொடியவரும் ஆனி, நிருதர்களில் முதன்மையானவர்களுமாம். வீசினர் என்பதைப் பெயரெச்சமாகக் கொண்டு வரதா என்பதொடு கூட்டிக் கரனுகியவரைக் கொன்ற வரதனே என்னலுமாம். இராமபிரான் வனம்புகுதலால் மகிழ்ந்து தனக்குத் தாய் கேட்டுத்த இராச்சியத்தைப் பரிபாலனஞ் செய்வதை யொழித்துத் தான் தமையனைப்போலத் தவவேடமுற்றுத் தமையனை யழைத்துச் செல்லக் கானகம் வந்தமையானும் பின்னர் எம்பிரானது பாதுகையைக் கொடுபோய் அதனைச் சிம்மாசனம் ஏற்றித் தன் தம்பி பாலரசை ஒப்பித்துத் தான் தவம்புரிதலையே பெரிதாகக் கொண்டுள்ளமையானும் பரதாழ்வார் குற்றமற்றவராதலின் 'மறுவே துமிலா' என்றார். (எக)

கோதா வரியே குளிர்வாய் குழைவாய்
மாதா வனையாய் மனனே தெளிவாய்
யோதா துணர்வா ருழையோ டினைபோய்
நீதா னினையே னிலைசொல் லலையோ.

இ - ள். கோதாவரியே - கோதாவரியென்னும் நதியே! குளிர்வாய் - வீறைத்து நிற்பாய் [பிரமித்து நிற்பாய்], குழைவாய் - வாட்டங்கொள்வாய், மாதா அனை

யாய - அன்னையை ஒப்பாய் [சேயைப்பிரிந்த தாயைப்போலக் கதறி ஒலமிடுவோய்], (ஆதலினால்) மனனே - (உன்) மனத்தில் நினைத்திருப்பதையே, ஓதாது - (நீ) சொல்லாமலே, தெளிவாய உணர்வார் உழை - தெளிவாக அறிந்துகொள்ளுபவராகிய எனது நாயகரிடத்தே, நீ ஓடினைபோய் - நீ ஓடிச்சென்று, வினையேன நிலை - தீவினையையுடையேனாகிய என்னுடைய நிலைமையை, சொல்லலையோ - சொல்ல மாட்டாயோ?

குறிப்பு —கோதாவரியே! குளிர்தலும் வளர்தலும ஆனமாகக்களுக்குத் தாயபோன்று உணவுப்பொருள்களைத் தருதலுமாகிய உன இயற்கைச்செயலை விரைத்தலும வாடலும அழுதலுமாகிய செயகை யெனக்கொண்டு எனது நாயகர் உன பக்கத்தே குடியிருந்த நான உன்னை விட்டுப் பிரிந்தமைக்காக நீ வருந்துகின்றாய் என்று நீ சொலலுதற்கு முன்னமே அறிந்துகொள்வார் என்று சிலேடைப்பொருள் வருமாறு கூறினள். "குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள், யாது கொடுத்துங் கொளல்" எனபவாகலின ஓதாதுணர் வாரெனச்சிறப்பித்துக் கூறினள். இனி, கலவிகறகாமல உணர்பவர் எனக்கொள்ளுமிடத்துக் கடவுள் எனலுமாம (அ0)

முந்துறு சுனைகாள் முழைவா ழரிகாள்
ளிந்தநில னோடு மெடுத்த கைநா
லைந்துந தலைபத் துமலைந் துலையச்
சிந்தும படிகண் டுசிரித் திடுவீர்

இ - ள் முந்தும சுனைகாள் - முறபட்டுத்தோனறுகின்ற சுனைகளே! முழை வாழ அரிகாள் - மலைக்குகையிலே வாழகின்ற சிங்கங்களே! இந்த நிலமோடுமெடுத்த - இந்தப்பூமியோடுமே (என்னைத்) தூக்கிய, கை நால ஐந்தும தலைபத்தும - கைகள் இருபதும தலைகள் பத்தும, அலைந்து உலைய சிந்துமபடி - வருந்தித் துன்பமுற்றுச்சிதறி வீழுமபடி, கண்டு - பார்த்து, சிரித்திடுவீர் - சிரிப்பீர்களாக.

குறிப்பு —இந்தநிலம—விரித்தல உலைய - உலைந்து, செயதெனனு மெச்சத்திரிபு (அக)

வேறு.

என்றினன பலவும பன்னி யிரியலுற ரற்று வாளைப
பொனறுன்னு புணர்மென கொஙகைப பொலங்குழாய் போரி லென்ன
கொன்றுன்னை மீட்பர் கொல்லம மானுடர் கொள்க வென்று [னைக
வனறிணகை யெறிந்து நககான் வாழககைநாள வறிது வீழவான.

இ - ள். என்று இன்னபலவும பனனி - என்றிப்படிப்பட்ட பலவார்த்தைகளையுஞ் சொல்லி, இரியல உறறு அரற்றுவாளை - அஞ்சுதலடைந்து அழுவாளாகிய பிராட்டியை (நோக்கி), வாழக்கைநாள வறிது வீழவான - (தனது) வாணாள் வீணாக ஆசைப்பெருக்க முறுபவனாகிய அவ்விராவணன், பொன துன்னு -பொன்னணி விளங்குகின்ற, புணர் - நெருங்கிய, மெல் கொங்கை - மிருதுவான தனங்களையுடைய, பொலங்குழாய் - பொன்னாற் செயயப்பட்ட காதணியை யுடையவளே! அ மானுடர் - அந்த மனிதர்கள், போரில -யுத்தத்தில, என்னை கொன்று—, உன்னை—, மீட்பர் கொல் - திருப்பிக்கொள்வார்களோ? கொள்க என்று -(சமாத

தாகளாயின) திருப்பிககொள்ளக கடவா என்றுகூறி, வல் திண்கை எறிந்து கக கான - வலியகை (யோடு கையை) அறைநது சிரித்தான.

குறிப்பு —இரிதல - ஓடுதலுமாம. பொன் - அழகுமாம. கொல - ஐயம். வன றிண - ஒருபொருட பனமொழி. வீழவான எனறகு - இறநது விழுபவன என்று பொருள கோடலுமாம. (அஉ)

வாககினு லன்னுன சொலல மாயையால வஞ்ச மானுன
ருககினு யாககி யுனனை யாருயி ருணணுங கூறறைப
போககினுய புகுநது கொணடு போகினறுய பொருது நினனைக
காககுமா காணடி யாயிற கடவலுன றேரை யெனறுள.

இ - ள அனனுன வாககினுல சொலல - (வாழநாளை வீழ்நாளாககுகினற) அநதராவணன வாயினுலே (மேறகணடபடி) சொலல, வஞ்சம் மான ஒன்று மாயை யால ஆககினுய - (அதுகேட்ட பிராட்டி இராவணனை நீ) கபடததனமையையு டைய ஓர மானை உனது மாயாசகதியால உணடுபணணினை, ஆககி - அப்படிசசெ ய்து, உனனை ஆர உயிர உணணும கூறறை போககினுய - உனது அருமையா கிய உயிரை உணகினற யமனபோன்ற ஸ்ரீராமபிரானை (அநத மானபினபு) போ கசசெயதாய, புகுநதுகொணடு போகினறுய - (அதனபினபு நான தனிததகாலம பாாததது நீ) நுழைநது (எனனை) எடுததுககொண்டு செலகினறனை, பொருது நின னை காககு மாகாணடி ஆயின - (அவாகளோடு) யுததஞ்செயது உனனைக காபபா றறிககொளளும விததையைககாணபாயாகுல், உன தேரை கடவல எனறுள - உன னுடைய ரததததைச செலுததாதே யெனறு கூறினுள.

குறிப்பு —வாககினுலனனுன சொலல - வாககினுலததனமையனுகிக கூற எனலுமாம ஆறு - ஆவெனவிகாரம. (அகூ)

மீடடுமொன றுரைசெய வாணீ வீரனேல விரைவின மறறுன
கூடடரா மரககா தமமைக கொனறுஙகை கொஙகை மூககும
வாட்டினுா வனததி லுளளாா மானுட ரெனற வாாததை
கேடடுமிம மாயஞ செயத தசசததின கிளாசசி யனறே.

இ - ள மீட்டும ஒனறு உரை செயவாள - மறுபடியும் ஒரு சஙகதி சொல் லுகினறுள, நீ வீரனேல - நீ யுததவீரனுக இருநதால, விரைவில - சீககிரததில, உன கூடடராம - உனனுடைய கூட்டததவராகிய, அரககா தமமை கொனறு - (விராதன கரன முதலாகிய) ராக்ஷதாகளைக கொலைசெயது, உஙகை கொஙகை மூககும வாடடினுா - உன தஙகையாகிய (சூாபபநகை)யினது தனஙகளையும மூக கையும அறுததத தளளியவாகளாகிய, மானுடா - மனிதாகள, வனததின உள ளாா எனற வாாததை கேடடுமே - காடடிலிருககிறுாகள எனகினற சொலலை (நீ) கேளவியுறறும, இ மாயம செயதது - இநத வஞசனை செயதது, அசசததின கிளாசசி அனறே - பயததினது மிகுதியாலனறே? (அச)

மொழிதரு மளவி னஙகை கேளிது முரணி வியாககை
யிழிதரு மனித ரோடே யானசெரு வேறப லென்றல

விழிதரு நெற்றி யான்றன் வெள்ளிவெற் பெடுத்த தோட்குப்
பழிதரு மதனிற் சாலப் பயன்றரும் வஞ்ச மென்றான்.

இ - ள். மொழிதரும் அளவில் - (இப்படிச் சீதாபிராட்டி) சொல்லுமளவில், நங்கை இது கேள் - (இராவணன்) பெண்களிற் சிறந்த ஜானகியே யான் கூறு மிதனை (நீ) கேட்பாயாக, யான் - (தேவர் முதலிய யாவரையும் வென்றியடைந்த) நான், யாக்கை முரண் இல் இழிசரும் மனிதரோடு - சரீரவலிமையில்லாத கேவலத்தையுடைய மானிடர்களுடனே, செரு ஏற்பல் என்றால் - யுத்தத்தை யேற்றுக்கொள்வேனாகில், விழிதரும் நெற்றியான் வெள்ளி வெற்பு - அக்கினிக்கண்ணை யளிக்கும் நெற்றியை யுடைய சிவபெருமானது கயிலாச மலையை, எடுத்த தோட்கு பழிதரும் - தூக்கிய (எனது) புயங்களுக்கு மிகவும் பழிப்பினை அளிக்கும், அதனில் - அப்படி யெதிர்த்துப் பழிப்புப்பெறுவதைப் பார்க்கிலும் வஞ்சம் சால பயன்தரும் என்றான் - (இப்போது நான் செய்த) வஞ்சகமானது மிகவும் பிரயோசனத்தைக் கொடுக்கும் என்று கூறினன் (௮௫)

பாவையு மதனைக் கேளாத் தங்குலப் பகைஞர் தம்பாற்
போவது குற்றம் வாளிற் பொருவது நாணம் போலா
மாவது கற்பினாரை வஞ்சிக்கு மாற்ற லேயா
மேவமென் பழிதா னென்னை யிரக்கமி லரக்கர்க் கென்றாள்.

இ - ள். பாவையும் அதனை கேளா - சித்திரப்பாவை போல்வாளாகிய சீதாபிராட்டியும் அவ்வார்த்தையைக் கேட்டு இரக்கம் இல் அரக்கர்க்கு - இரக்கமில்லாத இராக்கதருக்கு, தம் குலம் பகைஞர் தம்பால் போவது குற்றம் - தமது குலத்துக்குப் பகைவராயினாரிடத்துச் செல்வது குற்றமும், வாளில் பொருவது நாணம் - வாளாற்போர்செய்வது வெட்கமும், போல் ஆம் - போலாகும், கற்பினாரைவஞ்சிக்கும் ஆற்றலே ஆவது ஆம் - கற்புடைப்பெண்டிரை வஞ்சனை செய்கின்ற வல்லமையே (தம்மாற்செய்து முடித்தற்கு) ஆவதாக ஆகும், ஏவம் என் - (இப்பாவிகளுக்குக்) குற்றந்தான் யாது? பழிதான் என்னை - பழிதான் யாது? என்றாள் - என்று கூறினாள்.

குறிப்பு — வீரர்களில் இப்படிப்பேசு வாருமுளரோ? என்று வியப்புற்று அசைவற்று நின்றாளென்பார் 'பாவையும்' என்றார். பாவை - உவமவாகுபெயர். இக்காரியந்தவிர மற்றைக்காரியஞ்செய்ய முடியாது என்பாள் 'ஆவது' என்றாள் (௮௬)

என்னுமவ் வேலை யின்க ணெங்கடா போவ தென்னு
நின்னில்லென் றிடித்த சொல்ல னெருப்பிடைப் பரப்புங் கண்ணன்
மின்னென விளங்கும் வீரத் துண்டத்தன் மேரு வென்னும்
பொன்னெடுங் குன்றம் வானின் வருவதே போலு மெய்யான்.

இ - ள். என்னும் அ வேலையின்கண் - என்று கூறுகின்ற அவ்வேளையில், அடா—! போவது - (நீ) செல்வது, எங்கு என்னு - எவ்விடத்திற்கு என்று, நில் நில் என்று இடித்த சொல்லன் - நில்லு நில்லு என்று இடிபோல் முழக்கிய சொற்களையுடையவன், நெருப்பு இடை பரப்பும் கண்ணன் - அக்கினியை இடையே பரவச்செய்கின்ற கண்களையுடையவன், மின் என விளங்கும் - மின்னல்போல்

ஒளிவிடுகின்ற, வீரம் துண்டத்தன் - வலிமைபொருந்திய மூக்கினையுடையவன், மேரு என்னும் - மகாமேரு என்கின்ற, நெடும் பொன்குன்றம் - பெரிய பொன் மலையானது, வானின் வருவதேபோலும் மெய்யான் - ஆகாயத்தின்கண் (பறந்து) வருகின்றதையே ஒப்பாகின்ற உடலையுடையவன். (௮௭)

பாழிவன் கிரிகளெல்லாம் பறித்தெழுந் தொன்றொ டொன்று
பூழியி னுதிர விண்ணிற் புடையுறக் கிளர்ந்து பொங்கி
யாழியு முலகு மொன்று யழிதர முழுதும் வீசு
மூழிவெங் காற்றி தென்ன விருசிறை யூதை மோத.

இ - ள். பாழி வல் கிரிகள் எல்லாம் - பெரியவலிய மலைகளெல்லாம், பறித்து எழுந்து - பறிக்கப்பட்டு எழுந்து, ஒன்றொடு ஒன்று - ஒரு மலையோடு மற்றொருமலை (தாக்கி), பூழியின் உதிர - புழுதிபோல் (பொடியாய்) சிந்தும்படியாகவும், விண்ணில் - ஆகாயத்தின்கண், புடை உற - புடைத்தல் சேர [பெரிதாக], கிளர்ந்து - எழுந்து, பொங்கி - உயர்தலுற்று, ஆழியும் - கடலும், உலகும் - உலகமும், ஒன்றுய - ஒன்றுபட்டதாகி, அழிதர - அழியும்படியாகவும், முழுதும் வீசும் - முழுதும் வீசுகின்ற [ஒரிடமிதந்தவில்லையென்னுமாறு முற்ற வீசுகின்ற], வெம் ஊழி காற்று இது என்ன - கொடிய ஊழிகாலத்துக்காற்று இதுவே யென்று கூறும்படியாகவும், இரு சிறை ஊதைமோத - (தனது) இரண்டு சிறகுகளின்ற காற்று வந்தடிக்கவும்

குறிப்பு —பறித்து - படுவிகுதி முதலியன குன்றி நின்றன தாக்கி என்று ஒரு சொல்வருவித்துக் கூறுக- கடல்நீரை மேலெழச்செய்து அந்நீரின் குளிர்ச்சியோடு கலந்துவந்தமைபற்றி 'ஊதை' என்றார் . ஊதை - குளிர் காற்று (௮௮)

வேறு.

சாகைவன் றலையொடு மரமுந் தாழமேன்
மேகமும் விண்ணினமீச் செலல் மீமிசை
மாகவெங் கலுழனும் வருகின் றானென
நாகமும் படமொளித் தொதுங்கி நையவே

இ - ள். மரமும் - மரங்களும், சாகைவல் தலையொடுதாழ - இலைகளையுடைய வலிய தலைப்புறத்தோடு கீழே விழவும், மேல் மேகமும் விண்ணினமீ செலல் - (வருகின்ற வழிக்கு) மேலேயுள்ள மேகங்களும் ஆகாயத்தின்மேற் போகவும், மீமிசை வருகின்றான் - மேலே (பறந்து) வருகின்றவன், மாகம் வெங்கலுழன் என - ஆகாயத்திற் பறக்கிற கொடிய கருடன் என்று, நாகமும் - நாகசாபங்களும், படம் ஒளித்து - படங்களை மறைத்துக்கொண்டு, ஒதுங்கி - (புற்றுக்களினிடத்தே) பதுங்கி, நைய - துன்புறவும். (௮௯)

யானையும் யாளியு முதல யாவையுங்
கானொடு மரத்தொடு தூறு கல்லிவை
மேனிறைந் திருசிறை வீச்சி னேற்லால்
வானமுங் கானமு மாறு கொண்டவே.

